உ

முருகன் துணை.

# திருச்செந்தூர்ப்
# பிரபந்தத் திரட்டு,

பாலவனத்தம் ஜமீந்தார் ஸ்ரீமாந்
பாண்டித்துரைச்சாமித் தேவரவர்களது
மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

## மு. ரா. அருணாசலக்கவிராயரால்

இயற்றிய

## அரும்பதவுரையுடன்

மேற்படி

## மு. ரா. அருணாசலக்கவிராயரால்

மதுரைப் புதுமண்டபம் புத்தகஷாப்
இ. ராம.
குருசாமிக்கோனாரவர்களது
மதுரை வடக்குமாசிவீதி
ஸ்ரீ ராமச்சந்திர விலாச அச்சியந்திர சாலையிற்
பதிப்பிக்கப்பெற்றது.

1911.



விலை ரூ. 1—8—0.

உ

குமரன்றுணை.

# இப்புத்தகத்தி லடங்கியவை.

# அத்தியாய அகராதி.

| அத்தியாய எண். | அத்தியாயப் பெயர். | பக்கம். | பாட்டுத் தொகை. |
|---|---|---|---|

சிவமயம்.



குமரன்றுணை.

# முகவுரை.

புராணமென்பது பழையசரிதங்களை யுணர்த்து நூலாம். பழைய சரிதங்களாவன: தேவர் மனிதர் நரகராகிய உயர்திணைப் பொருள்களும் மிருகம் பறவைகளாகிய அஃறிணைப்பொருள்களும் மோக்ஷத்தை யடையும்பொருட்டு, செபம் தியானம் ஓமம் விரதம் தானம் தவம் பூசை தரிசன முதலியவற்றி லியலு மொன்றையும் பலவற்றையுஞ் செய்து, தலம் தீர்த்தம் மூர்த்திகளை வணங்குஞ் செய்கைகளாம்; அச் செய்கைகளைச் செய்து வேண்டுவார் வேண்டிய வரங்களைக் கொடுத் தருளுந் திருச்செந்தூ ரென்பது முன்னொரு கற்பத்திலே, பிரயாகர னென்னு மரசன் மனைவியாகிய சுகுமாரி யென்பவள் ஒருகருவி லிரண்டு பிள்ளைகளையும் அதன்பின் தனித்தனி யொரு கருவி லொரு பிள்ளையாக இரண்டு பிள்ளைகளையும் பெற்றனள்; இந்த நான்கு பிள்ளைகளுக்கும் பிதாவாகிய பிரபாகரன் முறையே சூரன், பன்மன், சிங்கன், தாரக னென்னும் பெயர்களை வைத்து வளர்த்துப் பருவம்வந்தவுடனே தன்னரசாட்சியை அவர்களிடங்கொடுத்துவிட்டுத் தன்மனைவியுடனே காட்டிற் சென்று தவஞ்செய்து கொண்டிருந்தனன். சூரன் முதலிய நான்கு மைந்தரும் பிதாவின் கட்டளைப்படி, சாகத்தீவை யரசாண்டு வருங்காலத்தில் அகத்திய மாமுனிவ ரவ்விடத்துக் கெழுந்துவந்து சூரன், பன்மனென்னு மிருவருக்கு முருகக்கடவு ளற்புத சரிதத்தை யுபதேசித் தருளினர். அவ்வாறே கிரணவிந்திடப முனிவர் வந்து சிங்கன், தாரகனென்னு மிருவருக்கு முறையே துர்க்கை, ஐயனார் சரித்திரங்களை யுபதேசித் தருளினர். உபதேசம் பெற்ற நால்வருள் பன்மன் முருகக் கடவுளுடைய கோழிக் கொடியாகவும் சூரன் அக் கடவுளுடைய வாகனமாகிய மயிலாகவும் சிங்கன் துர்க்கையின் வாகனமாகிய சிங்கமாகவும் தாரகன் ஐயனார் வாகனமாகிய யானையாகவு மிருக்கவேண்டுமென்று சிந்தித்துத் தங்களுடைய புத்திரரைச் சாகத் தீவைக் காக்கும்படி சொல்லிவிட்டுத் திருக்கயிலாச மலைப்பக்கத்திலே போய் நாற்பதினாயிர வருடந் தவஞ்செய்து வசித்தனர்.

அப்போது திருக்கயிலாச பதியாகிய சிவபிரானைத் தரிசிக்கும் பொருட்டு, முருகக்கடவுள் முதலாயினோர் ஆங்குவந்து தங்கள் தங்கள் வாகனங்களை வெளியே நிறுத்திவிட்டு, உள்ளே சென்றாராக. அவ் வாகனங்களுள் முருகக்கடவுள் வாகனமாகிய மயிலும் அவர் கொடியாகிய சேவலும் தார்க்கை, ஐயனார் வாகனங்களாகிய சிங்கமும் யானையும் சூரன் முதலிய நால்வர் தவஞ்செய்யு மபிப்பிராயத்தை யவரிடங் கேட்டுத் தெரிந்து நீங்களெங்கள் பதவியை யபகரிக்க நினைத் திருப்பதால் பூதங்களாகக் கடவீரென்று சபிக்க, உடனே யந்நால்வரும் அவ்வாறே மயில் சேவல் சிங்கம் யானை முகங்களையுடைய பூதங்களாகி அண்டாபரணரென்னும் பூதத்தலைவருக் கேவல்செய் திருப்பாராயினர்.

பின்னுமொரு தினத்தில் முருகக்கடவுள் முதலாயினோர் அவ்விடத்துக்கு வந்து அவரவர் வாகனங்களை வெளியே நிறுத்திவிட்டுச் சிவபிரானைத் தரிசிப்பதற்காக உள்ளே சென்றனர்; அதுகண்டு சூரன் முதலிய பூத வீரர்களாகிய நால்வரு மயிலையுஞ் சேவலையு நோக்கி யுங்களை விஷ்ணு முதலிய தேவர்களது வாகனங்கள் வணங்கவில்லையே யென்று கோபத்தை மூட்டுதலும், அவ்விரண்டும் கருடன் அன்னம் முதலியவற்றோடு போர்செய்து, அவைகளைக் கொன்றன; இவற்றை யெல்லா முருகக்கடவு ளறிந்து, இவ்வளவு தீச்செயலை யுண்டுபண்ணிய அப்பூத வீரர்களை நீங்கள் அசுர குலத்திற்போய்ப் பிறக்கக் கடவீரெனச் சபித்தனர். அச்சாபம் பெற்ற பூதவீரர் நால்வருள் சூரனும் பன்மனு மாகியவிருவருங் காசிப முனிவருக்கு மாயை வயிற்றிலொரு சரீரத்தை யெடுத்துப்பிறந்தனர். மற்றிருவரு மவள்வயிற்றிலே தனித்தனி யொவ்வொரு சரீரத்தை யெடுத்துப் பிறந்தனர். இம்மூவரும் பதினாயிரவருட காலமாகப் பற்பல யாகங்களைச்செய்து சிவபிரானிடத்திலே யுயர்ந்த வரங்களைப்பெற்று, அக்கருவத்தால் பிரமவிஷ்ணுக்கள், அட்டதிக்குப் பாலகர் முதலியோரையும் யுத்தஞ் செய்து சயித்து, அவர்கள் செல்வங்க ளெல்லாவற்றையுங் கவர்ந்து, அசுரர்கள் மனமகிழும்படி கடலினடுவே மகேந்திரபுரி யென்னுமொரு பட்டணமுண்டு பண்ணி, அதிலிருந்து நூற்றெட்டுயுகம் ஆயிரத்தெட்டு அண்டங்களை யரசாட்சி செய்து வாழ்ந்தனர்.

இவர்களிடுக்கண் பொறுக்கமாட்டாமலிந்திரன் முதலிய தேவர்கள் திருக்கயிலாசத்திலே சென்று சிவபிரானிடத்திலே முறையிடுதலும், அவர் தமது ஆறு திருமுகங்களிலுள்ள ஆறு நெற்றிக் கண்களிலும் ஆறு தீப்பொறிகளைப் பிறப்பித்துச் சரவணப் பொய்கையிலே விடுத்துக் கந்தசுவாமி யென்னுந் திருக்குமாரரை யுண்டாக்கினர்; அக்குமாரக்கடவுள் நவவீரராகிய ஒன்பது தம்பிமாரும் இரண்டாயிர வெள்ளம் பூதசேனையுஞ் சூழ எழுந்தருளிவந்து யுத்தஞ்செய்து மாமரமாகிய சூரபன்மனைத் தமது சத்திவேலா லிரண்டு கூறுக்கிக் கொன்றருளுதலும், அவ்விரண்டுகூறும் பண்டைத்தவத்தால் சேவலுமயிலுமாகத் தம்முன்னே வந்துநிற்க, அவற்றைக் கொடியாகவும் வாகனமாகவுந் தரித்துக்கொண்டு இந்திரன் முதலாயின தேவருக்குப் பெருவாழ்வளித்தருளி மகிழ்ந்து வீற்றிருக்கப் பெற்ற திவ்ய க்ஷேத்திரமாம். இதற்குச் சான்றாக மாமரமாகிய சூரனைப்படுத்த (கொன்ற) இடமானது இன்றும் மாப்பாடு என இத்தலத்தில் வழங்கப்பட்டுள்ளது. அருணகிரிநாதர் திருப்புகழன்றி, மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவருள் நடுநாயகமாக வீற்றிருந்த நக்கீர தேவரால் திருமுருகாற்றுப்படையிலிரண்டாவது தலமாகவும், தமிழ்த்தெய்வ நிலையமாகிய திருவாவடுதுறையாதீனம் சாமிநாத தேசிகரால் கலம்பகமும், பத்திவடிவாகிய பகழிக்கூத்தரால் பிள்ளைத்தமிழும், இன்னும் பல வித்துவான்களாற் பல பல பிரபந்தங்களும் பாடப்பெற்ற மான்மியமுமுள்ளது. பிரதானமான இருபத்துநான்கு தீர்த்தங்களுமுடையது. குமாரக்கடவுளாலே பூசிக்கப்பட்ட சிவலிங்கப் பெருமானையும் தன்னுட்கொண்டது.

இத்தகைய தலந், தீர்த்தம், மூர்த்தியாகிய மூவகையினுஞ்சிறந்த திருச்செந்தூர்த் தலபுராணத்தைக் குமாரக்கடவுள் தமதுதிருவாக்கால் நீ பாடுவாயென்று கட்டளையிட்டருள, அக்கட்டளைப்படியருள்வாக்குப் பெற்று வென்றிமாலைக் கவிராசரென்பவர் செயந்தி மான்மியமென்னும் வடமொழியினின்றுந் தமிழில் மொழிபெயர்த்து விருத்தப்பாவினாலே பாடியருளினரென்பது இந்நூற்சிறப்புப்பாயிரத்தால் விளங்குகின்றது. இன்ன காலத்திற் பாடியருளினரென்ப தொருவகையாலுந் தெரியவில்லை. தெரியாமைக்குக் காரணம் பண்டைத்தமிழ் நூலாசிரியர்கள் தாம் பாடிய காலத்தைக் கணக்கிட்டுக் கூறும் பெருவழக்கமின்மையேயாம். தமிழ்நாடாகிய தென்னாட்டிலுள்ள சாதாரண வித்துவான்கள் வாக்குகளும் மோனை, எதுகை, கற்பனை, யமகம், திரிபு, சிலேடையாதிய வளங்களமையப்பெற்றுள்ளனவானால் திருவருள்பெற்ற இந்நூ

லாசிரியரது வாக்குகளவ்விசேடங்க ளமையப்பெறுதலோ ரரியதன்று. இவருடைய அற்புதசரிதம் சிறப்புப் பாயிரத்துள்ளே நன்கு விளங்குதலா லிங்கு விரித்துக் கூறவில்லை.

இவ்வருமை பெருமையுடைய இப்புராணம் (18) சருக்கங்களும் (899) செய்யுட்களுந் தனக்கங்கமாகக் கொண்டிருக்கின்றது. இப்புத்தகம் நீண்டநாளைக்குமுன் அச்சிற் பதிப்பிக்கப்பெற்றதால் இப்போது படிப்பவர்கட்குக் கிடைப்ப தரிதா யிருக்கின்றதை யுத்தேசித்துத் தமிழபிமானமுந் தெய்வ பத்தியு மிக்க மதுரைப் புதுமண்டபம் புத்தகக்கடை மகா-ள-ள-ஸ்ரீ இ. ராம. குருசாமிக் கோனா ரவர்கள் தமது ஸ்ரீ ராமச்சந்திர விலாசம் பிரசில் இரண்டாம் பதிப்பாகப் பதிப்பிக்கத் தொடங்கி, கற்பவருக் கெளிதிலே பொருள் விளங்கும்பொருட்டு, அரும்பதவுரை யெழுதித் தரல் வேண்டுமென்று, என்னை வேண்டிக் கொண்டனர். அவ்வேண்டுகோளுக் கிணங்கி, முன் பதிப்பித்த புத்தகத்தையும் பழைய ஓலைச்சுவடிகளையும் பார்வையிட்டு நல்ல பாடங்களைக் கைக்கொண்டு, அரும்பதவுரை யென்னறிவிற் கெட்டியமட்டு மாராய்ந் தெழுதிக் கொடுத்தனன். முற்றக் கற்றவருக்குச் சாமானியமாகத்தோன்றும் பதங்களெல்லாம் ஏனையருக்குத்தமிழ்ப்பயிற்சி சுருங்கிய இக்காலத்தி லரும்பதங்களாகக் காணப்படுதலா லவைகட்கும் உரையெழுதியுள்ளேன். பரோபகார தருமமாகத் திருச்செந்தூர்ப் புராணத்தை யிங்ஙனம் அச்சிட்டுதவிய நமது கோனாரவர்களுக்குக் கலியுக வரதராகிய குமாரக்கடவுளது திருவருளாற் சகல சம்பத்துந் தழைத்தோங்குக. சுபம்! சுபம்!! சுபம்!!!

இங்ஙனம்

மதுரைத்தமிழ்ச்சங்க வித்துவான்

மு. ரா. அருணாசலக்கவிராயர்.

குமரன்றுணை.

# முகவுரை அநுபந்தம்.

முகவுரையிற் கூறியவாறு திருச்செந்தூர்ப்புராணமும் அரும்பதவுரையும் பதிப்பித்து முடிந்தபின்னர், அன்புமிக்க நமது கனந்தங்கிய புத்தகக்கடை இ. ராம. குருசாமிக்கோனு ரவர்கள் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், திருச்செந்தி னிரோட்டக யமகவந்தாதி, திருச்செந்திற் கலம்பகம், திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, திருச்செந்தூர்த் திருப்புகழாகிய இப்பிரபந்தங்களையும் திருச்செந்தூர்ப் புராணத்துடன் ஒன்றுசேர்த்து அச்சிற் பதிப்பிக்க வேண்டுமென் றெண்ணி இவைகளுக்கும் அரும்பதவுரை யெழுதித்தரல்வேண்டுமென்று கேட்டனர். அவர்களுடைய நல்லெண்ணத்தைக்கண்டு பெருமகிழ்ச்சியுற்று, அவ்வாறே தெரிந்தமட்டும் அரும்பதவுரை எழுதிக் கொடுத்தனன்.

இவற்றோடு கந்தவருக்கச் சந்தவெண்பா வென்னு நூலினருமையை நோக்கி அதனையும் இப்பிரபந்தத் திரட்டுடன் சேர்க்கவேண்டுமென்று அதற்கும் அரும்பதவுரை யெழுதுவித்து, அந்தந்த நூலாசிரியர் சரித்திரத்தையு மந்தந்த நூலினிறுதியிலே சேர்த்து, திருச்செந்தூர்ப் பிரபந்தத் திரட்டெனப் பெயரிட்டு, அச்சிற் பதிப்பித்து முடித்தனர். இவரது முயற்சி "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும்,. வரிசை வரிசையா நந்தும்" என்றதற் கிலக்கியமாக மேன்மேலும் வளர்ந்து வளம்பெறமுடிந்தது நம்பெருமானாகிய குமாரக்கடவுள் திருவருளென்றே கொள்ளல்வேண்டும்.

திருச்செந்தூர்ப்புராண நூலாசிரியர் சரித்திரம் பாயிரத்துள்ளே தெளிவாகக் கூறியிருத்தலால் நூலிறுதியிலெழுதிச் சேர்க்கவில்லை.

இப்புத்தகம் டிம்மி 420 பக்கங்கொண்ட 52¼ பாரம் ஆகஇருந்தும், இக்காலத்தில் தமிழருமையறிந்த வித்துவான்களும் பிரபுக்களும் ஆங்காங்குச் சிற்சிலராயிருத்தலால் அவர்களன்றி யேனையர்கள் தக்கவிலை கொடுத்து வாங்கிப் படிப்பதற்குப் பின்னிடுவாரென்றஞ்சி

இலாபத்தைக் கருதாது காயிதவிலையும் அச்சுக்கூலி முதலியவையுங் கிடைத்தாற்போதுமென்று புத்தகம் 1-க்கு விலை ரூ. 1—8—0 ஆக ற்படுத்தியிருக்கின்றனர்.

புத்தக வியாபாரஞ் செய்வாருள் நமது கோனா ரவர்களைப்போ லுலகோபகாரம் செய்பவர் யாரையுங் காணோம். இவருக்குத் தமிழபிமானிகளாகிய நாமெல்லாரும் நன்றிபாராட்டுங் கடமையுற்றுள் ளோமாக. சுபம்! சுபம்!! சுபம்!!!

---

இங்ஙனம்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

☞ மு. ரா. அருணாசலக் கவிராயர்.

குமரன்றுணை.

# முகவுரை அநுபந்தம்.

முகவுரையிற் கூறியவாறு திருச்செந்தூர்ப்புராணமும் அரும்பதவுரையும் பதிப்பித்து முடிந்தபின்னர், அன்புமிக்க நமது கனந்தங்கிய புத்தகக்கடை இ. ராம. குருசாமிக்கோனாரவர்கள் திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ், திருச்செந்தினிரோட்டக யமகவந்தாதி, திருச்செந்திற் கலம்பகம், திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா, திருச்செந்தூர்த் திருப்புகழாகிய இப்பிரபந்தங்களையும் திருச்செந்தூர்ப் புராணத்துடன் ஒன்றுசேர்த்து அச்சிற் பதிப்பிக்க வேண்டுமென்றெண்ணி இவைகளுக்கும் அரும்பதவுரை யெழுதித்தரல்வேண்டுமென்று கேட்டனர். அவர்களுடைய நல்லெண்ணத்தைக்கண்டு பெருமகிழ்ச்சியுற்று, அவ்வாறே தெரிந்தமட்டும் அரும்பதவுரை எழுதிக் கொடுத்தனன்.

இவற்றோடு கந்தவருக்கச் சந்தவெண்பா வென்னு நூலினருமையை நோக்கி அதனையும் இப்பிரபந்தத் திரட்டுடன் சேர்க்கவேண்டுமென்று அதற்கும் அரும்பதவுரை யெழுதுவித்து, அந்தந்த நூலாசிரியர் சரித்திரத்தையு மந்தந்த நூலினிறுதியிலே சேர்த்து, திருச்செந்தூர்ப் பிரபந்தத் திரட்டெனப் பெயரிட்டு, அச்சிற் பதிப்பித்து முடித்தனர். இவரது முயற்சி "பெரியவர் கேண்மை பிறைபோல நாளும், வரிசை வரிசையா நந்தும்" என்றதற் கிலக்கியமாக மேன்மேலும் வளர்ந்து வளம்பெறமுடிந்தது நம்பெருமானாகிய குமாரக்கடவுள் திருவருளென்றே கொள்ளல்வேண்டும்.

திருச்செந்தூர்ப்புராண நூலாசிரியர் சரித்திரம் பாயிரத்துள்ளே தெளிவாகக் கூறியிருத்தலால் நூலிறுதியிலெழுதிச் சேர்க்கவில்லை.

இப்புத்தகம் டிம்மி 420 பக்கங்கொண்ட $52\frac{1}{4}$ பாரம் ஆகஇருந்தும், இக்காலத்தில் தமிழருமையறிந்த வித்துவான்களும் பிரபுக்களும் ஆங்காங்குச் சிற்சிலராயிருத்தலால் அவர்களன்றி யேனையர்கள் தக்கவிலை கொடுத்து வாங்கிப் படிப்பதற்குப் பின்னிடுவாரென்றஞ்சி

இலாபத்தைக் கருதாது காயிதவிலையும் அச்சுக்கூலி முதலியவைவயுங் கிடைத்தாற்போதுமென்று புத்தகம் 1-க்கு விலை ரூ. 1—8—0 ஆக ஏற்படுத்தியிருக்கின்றனர்.

புத்தக வியாபாரஞ் செய்வாருள் நமது கோனு ரவர்களைப்போலும் உலகோபகாரம் செய்பவர் யாரையுங் காணோம். இவருக்குத் தமிழபிமானிகளாகிய நாமெல்லாரும் நன்றிபாராட்டுங் கடமையுற்றுள்ளோமாக. சுபம்! சுபம்!! சுபம்!!!

---

இங்ஙனம்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

☞ மு. ரா. அருணசலக் கவிராயர்.

உ

குமரன் றுணை.

# சி[illegible]யிரம்



திருநெல்வேலியிலிருக்கும் தச்சநல்லூர்
மகா-ள-ள-ஸ்ரீ
வன்னியப்பபிள்ளையவர்கள் குமாரர்
அழகிய சொக்கநாதபிள்ளையவர்கள்
இயற்றியது.

---

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பொன்னகர்க் கிறையோ னாதிய வானோர் புகழ்தரு செயந்தி மா புரத்துண், மன்னுசெங் கதிர்வேற் பன்னிரு தடங்தோள் வள்ள லார்க் கற்புத மாக, மின்னவிர் கோயின் மடைத்தொழில் புரியும் விப் பிரன் முப்புரி நூலார், வன்னமற் புயத்தா னவன்பெயர் வென்றி மாலையென் றுலகெலாம் வழுத்தும். (க)

உவமையி லவ்வே தியன்மடைத் தொழில்செய் தொழுகுநாட் டெய்வவே துவினோர், திவசத்திற் சற்றே பூசைக்கு நைவேத் தியம் வைக்க நேரஞ்சென் றிடலா, லவனைமுன் வருத்தியின்றுபூ சைகளுன் னலட்டிப் பட்டதிவ் வாறு, தவறுதலிழைத்த தென்கொலா மென்று தண்டித்தார் தானத்தார் தலத்தார். (உ)

அப்படி யவர்தண் டித்ததி லய்ய னவ்வடி பொறுக்கமாட் டாம, லிப்படி வயிறு வளர்ப்பதை விடநா மிறப்பதே நலமென வெண்ணி, மைப்படி நெடுங்கண் வள்ளிதெய் வானை மணாளனை மனத்தகம் வைத் துத், துப்படி யிமைக்குங் கடலில்வீழ்ந் திறக்கத் துணிந்துவந் திறங் கிடு மேல்வை. (ங)

கந்தவே ளோடி வந்துவே தியனைக் கைப்பிடித் தொன்றுக்கு மஞ்சே, லந்தண வவுணர் குலத்தைவே ரறுத்தே யமரரைப் புரந்து செந்தூரா, மிந்தமா தலத்தை யுற்றன மதனை லித்தல மகிமையாம் வ டநூல், செந்தமி ழானுஞ் சிறக்கநீ யினிது செப்புவா யென்றுரை செய்தான். (ச)

தேடரும் பொருளே சிந்தித்த வடிவே சிறியனேற் கெளிவந் தாய் கொஞ்சங், கூடநா னெழுதப்படிக்கறி யேனுன் கோயிலின் ம டைத்தொழில் புரிந்தேன், பாடவாக் கெனினும் படைத்திலேன் சுத் தப் பாமப ஞகுநா னுன்ற, ஞடலே யெவ்வா றுரைத்திடத் துணிவே னையவென் றடிபணிந் தனனல். (௫)

இவ்வண நவின்ற வென்றிமாலையைப்பார்த் திறையவ னறைகு வா ஞதி, சைவர்தங் குலத்தி லுதித்துளா ஞெருவன் சகலசாஸ் தி ரத்திலும் வல்லோன், செவ்வலன் னவனூர் பெயர்கிருஷ்ட்ண சாஸ் த்ரி திருத்தகு மித்தலமகிமை, யவ்வள வுந்தேர்ந் தவனம்பா னண்ப னன்னவன் றன்னைநீ யடைந்தால், (௬)

முறையுட னுனக்கு விளங்கிடத் தமிழின் மொழிபெயர்த் தின் னமு தென்ன, வறைகுவான் கதியை யளிக்குநங் காதை யாதியோ டந்தமா யந்த, மறையவன் வாக்காற் கேட்டமாத் திரத்தில் வாக்குண் டா மதனைநீ கொண்டு, குறைவிலித் தலமான் மியம்வழுத் தென்று கூறியே கினன்வைவேற் குமரன். (எ)

சேயுரை தலைமேற் கொண்டன னுடனே செவ்வலிற் கிருஷ்ட் ணசாஸ் திரிபாற், போயுரி மையுடன் வணங்கியே முருகன் புகன்ற வெ லாமெடுத் துரைத்துத், தீயுறை மெழுகி னுருகியென் குருவே செயந்தியம் பதியின்மான் மியத்தை, நீயுரை செய்ய வேண்டுமென் றிறைஞ்சி நின்றிரந் தனன்வென்றி மாலை. (அ)

தடையற யாவுந் தெளிந்ததோர் கிருஷ்ட்ண சாஸ்திரி மகிழ்ந்த னன் கதிர்வே, லுடையவன் றன்பான் மொழிந்தமாற் றமுநன் கொத் திருப் பதுகண்டு வியந்தே, யிடைவிடா திருந்து செந்தின்மான் மியத் தை யியம்பியே முடித்தபின் கடலின், மடைதிறந் திட்ட வெள்ளம் போல் வென்றி மாலைக்கு வந்தன வாக்கு. (௯)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கலவமயி லேறியசெந் தூர்க்குமரன் மீதளவில் கனிந்த பாடல், சொலவதுகண் டியர்கிருஷ்ட்ண சாஸ்திரியு மகிழ்ந்துசிரந் துளக்கி நீ யே, வெலவரிய செந்தமிழ்க்கு வேந்தனென மிகவாழ்த்த வென்றி மாலைப், புலவர்சிகா மணியதனைக் கேட்டவுட ஞனந்தப் புணரி யாழ் ந்து. (௰)

பரிபுரங்க ளொலிடுந்தண் டைக்கழலோன் றடுத்தாட்கொள் பரிசிதோமுன், புரிபுண்ணி யப்பலனோ வெனப்புலம்பி நடித்தருவி போலுங் கண்ணீர், சொரிபுநின்று தொழுதேத்தி நெக்குநெக்கா மனதுருகித் தோத்திரத்தால், விரிபுனலார் கலிக்கரைவாழ் செந்திலான் கருணையினை வியந்து போற்றி. (௰க)

பாலுந்தே னுங்கலந்த பாகமோ வடித்தசெழும் பாகோ வென்றெக், காலுந்தே டுஞ்சுவையிற் சொற்சுவையும் பொருட்சுவையுங் கனிந்து பாரின், மேலுந்தே சொன்றும்வைவேற் குமரர்திரு விளையாட்டை விளக்கிச் செய்யு, ளாலுந்தே ரும்புலவோர் தஞ்செவிக்கா ரமுதாகி நலம்பெற் றோங்க. (௰உ)

சந்தவரைக் குகன்றிருவாய் மலர்ந்தவண்ணந் திருச்செந்தூர்த் தலபுராணஞ், செந்தமிழாற் பாடிமுடித் தரங்கேற்ற வருகின்ற செய்தி கேளா, வந்தனையில் லாத்தொழில்செய் மடைப்பள்ளி காறனுக்கென் மதியீ தென்றே, நிந்தனைசெய் தார்பெருமைத் திரிசுதந்த ரத்தரெனு நீர்மை யோரே. (௰௩)

இன்னகுறிப் புணர்ந்துபெரி தாகுலித்து மனவருத்த மெய்தலோடு, முன்னருமவ் வேடதனை யலைகடலில் வீசியெறிந் தோடிப் போனான், பின்னரவ்வே டலையொதுக்குண் டுழத்துத் துறைசேரப் பெற்ற தந்த, நன்னகரு ளானொருவன் காண்டலுங்கைக் கொண்டில்ல நண்ணி னானால். (௰௪)

ஏடுவந்து சேர்ந்திடுமந் நகர்க்குட்சக் கரஸ்வாச மெழும்பி யேயாட்
பாடுவந்து சேர்ந்திடுதல் பெருவழக்க மாகியிருப் பதிலவ் வேடோர்
வீடுவந்து சேர்ந்திடுநாண் முதலாக வுலவையந்த வீடார் வீதி
யூடுவந்து சேர்ந்திடுதன் மாத்திரமில் லாமைகண்டா ரூருள் ளாரே. ()

பூரணமா வூர்முழுதும் புகுங்காற்றீண் டம்மறுகு புகாமை யென்ன
காரணமென் றலமரும்போ தயில்வேல னவ்வூரார் கனவிற் றோன்றி
யாரணநந் தலபுரா ணந்தனைப்பூ சியுங்கள்சுக மடைவீ ரென்று
தாரணமா வேடுறையு மறுகுமதன் வரன்முறையுஞ்சாற்றிப்போனான்.

புலர்ந்தபின்வே லன்றிருவாய் மலர்ந்தபடி யம்மறுகிற் புராணந்தன்னை
யலர்ந்தமல ராலருச்சித் திடுமவனில் லந்தனிற்கண் டதிச யித்தா
ருலர்ந்தவா யமுதூற முகமனவ னுக்களித்தா ருருகி யுள்ள
மலர்ந்தனரவ் வூரரதை யுடனெழுதிப் பூசைசெய்து வரலுற் றாரே.

தாமத்தை யணிந்தன்னோர் பூசிக்கப் பெற்றசெந்தூர்த் தல்பு ராணம், வாமத்தை யுறுநகரோர் தொல்லைவெங்காற் றுலழியா மாண்புஞ் செவ்வே, ஞமத்தை பொருக்கா லு மறவாமெய்ப் பத்திமையு நல்கி நாளுஞ், சேமத்தை நணியருளிப் பூதலத்துண் மூதன்மைபதாய்ச் சிறந்த தன்றே. (௧௮)

கேள்வியிலே வாய்பாடோன் றஃதெழுதி னவனேட்டைக் கெடுத்தா னென்னு, நீள்வசன மிப்புரா ணத்தினுஞ்சில் லடிகுறைந்து நீண்டும்போக, நாள்வழியாப் பற்பலர்பா வினந்தேர்ந்தி டாதெழுது நவையா லுற்ற, கோள்விலக்கி யிதனையச்சுப் புத்தகமாச் செயவுளத்திற் குறிப்புக் கொண்டே. (௧௯)

படத்தினர வணிந்தநெல்லை நாதருக்குங் காந்திமதித் தாய்க்கும் பார்மேற், றடத்தினிமிர் கற்பகப்பைந் தாருவா கனகமலா சனம் வெண் பொன்னாற், றிடத்தினினி தமைத்துவரு டாவருடந் தொறுமிரண்டாந் திருவி ழாவை, நடத்திவரு வோன்கவிஞர் பெருமான்சுந் தரமூர்த்தி நாவ லோனே. (௨0)

எத்திக்கும் புகழ்பெருகு மித்தகையோன் மெய்த்தமய னென்ன வந்த, முத்துக்கு மாரசுவா மிக்கவிரா சன றவத்தின் முளைத்த பாலன், வித்தைக்குக் களஞ்சியமாய் முன்னோர்தம் புகழ்ச்சீரா விளக்குஞ் சீலன், மத்தக்குஞ் சரமனையான் மருப்பொலிபுந் தண்குவளை மாலை மார்பன். (௨௧)

கல்விதனைக் கரைகண்ட வித்தகனம் பலவாணக் கவிஞன் றம்பி
செல்வியக லாதிருக்கு முகவசியன் கங்கைகுல திலக மானோன்
பல்விளைவி னுக்குமுதற் காரணமா முயர்மேழிப் பதாகை யுள்ளான்
வில்விசய னெழிற்றிருநெல் வேலிநகர் மேலரத வீதி வாழ்வோன். ()

சரபமதாய் நரமடங்கற் றடிந்தவரா னருள்குமரர் சரணம் போற்றும்
பிரபலவான் கவிராச நெல்லையப்ப மகிபனெனும் பெயர்பெற் றோனு
மரபணியு மாலைகொடி மற்றையசீர் முற்கூறும் வண்ண முள்ளா
னரபதிக ளபிமானி தெய்வபத்தி யிற்சிறந்த நண்பி னோனே. (௨௩)

செயங்கொடிரு நெல்வேலி தனில்வடுகக் குடிமுடுக்குத் தெருவில் வாழ்வோ, னயங்கொள்வச னன்பொறைய னன்னெறியே யநவரத நாடு கின்றோன், வயங்கொள்சிவ பூசைபுரிந் தருணலஞ்சேர் பழனிக்கு மாரு மைந்தன், கயங்கொளறி வாகரன்சுப் பிரமணிய னெனும் பெயர்கொள் கனம்பெற் றோனும். (௨௪)

நேசித்தா ரணியருள்செந் தூர்க்குகவேட் கன்புவளர் நெறியா லன்னோன்
மாசித்தா ரணிபெருகுந் தலமகிமை துலங்கவிரு வருமாக் கூடிப்
பேசித்தா ரணியிலெழு தாவெழுத்தி னமைந்திடவுட் பிரிய முற்று
லோசித்தா ரணிபிகவா விலக்கணத்தின் வழுவதனி லுற்றி டாதே. ()

உரவோன்முன் கடல்பருகு மொருமுனியின் றமிழ்க்கடலை யுறிஞ்சுங் கொண்மூ, கரவோடர் வேணுவன நாதருக்கும் வடிவாட்குங் கன்ன பாகந், தரவோதி னாடோறுஞ் சாரங்கிப் பணிவிடைசெய் சாலி வாடீ, சுரவோது வாமூர்த்தி யெனுமருமைத் திருநாமஞ் சூடி னோனால். (உரு)

எதிர்கொள்பல பிரதிதனைக் கொண்டுதிருத் திப்பார்வை யிட்ட தற்பி, னிதிபதியை யனையசெல்வர் மூவர்களா னடாத்திவரு நிலைசேர் நெல்லைப், பதியுறையு முத்தமிழா கரவச்சுக் கூடமதிற் பதித்தல் செய்து, மதிபரிதி யுள்ளவரை மாநிலமேற் புகழ்ப்பயிரை வளர்த்தார் மன்னோ. (உசு)

முற்றிற்று.

குமரன்றுணை.





உ

சிவமயம்.

குமரகுருபரன்றுணை.

# திருச்செந்தூர்த்தலபுராணம்.

## காப்பு.

ஊற்றெ டுத்துவண் டோலிடு மும்மதத்
தாற்றொ ழுக்கி னருவியஞ் சாரல்வா
யேற்று கைக்கு மிறைவற்கு முந்திய
மாற்றி லாக்களி யானையை வாழ்த்துவாம்.

## கடவுள் வாழ்த்து.



### சிவபெருமான்.

வேறு.

இருப்பதப் பிரணவத் தியல்பென் றூலமே
சருப்பதச் செய்கைய தாக்கித் தங்கவான்
பருப்பதச் சிலைக்கரப் பரமன் றாமரைத்
திருப்பதத் துணைமலர் சென்னி சேர்த்துவாம். (க)

### பார்வதி.

வேறு.

ஊடலி னுடைந்த சங்க மொளிர்சடைப் பிறைவெண் கீற்றின்
மாடுறப் பொருத்தும் போழ்து மகிழ்நருட் குறித்து நோக்க
வேடுறு தளவப் போதி னிளநிலா முறுவல் பூத்துப்
பீடுறு மதியிற் செய்த பெண்ணடி வணக்கஞ் செய்வாம். (உ)

### விநாயகக்கடவுள்.

எழுத்துஞ் சொல்லும் பொருளு மிணக்குற
வழுத்துஞ் சீர்ச்செயந் திப்பதி மான்மியம்
விழுத்த குந்தமி ழாற்சொல வேதமே
பழுத்த குஞ்சரன் பாதங்கள் போற்றுவாம். (௩)

### வயிரவர்.

கிஞ்சு கந்தரு வாய்க்கலைக் கிள்ளையா
னஞ்சு கம்மிலொன் றற்றிடக் கிள்ளியே
மிஞ்சு கந்தொறு மிக்குறுங் கார்நிறக்
கஞ்சு கன்பொற் கழலிணை போற்றுவாம். (ச)

### வீரபத்திரர்.

ஆளு டைத்தனி யாதியை நீத்தொரு
வேள்வி முற்ற விரும்பிய தக்கனார்
நீள்சி ரத்தை நிலத்திடை வீட்டிய
வாள்ப டைத்த மதலையைப் போற்றுவாம். (ரு)

### சுப்பிரமணியக் கடவுள்.

வேறு.

வண்டடை கிடந்தின் னிசைமுரன் றெழுதேன் வாய்மடுத் துண்டுகா லுழக்க, விண்டுடைடங் தலருங் கடம்பணி தடந்தோள் வெற் பெலாம் பொற்புலாஞ் சுடர்வேற், கெண்டையங் தடங்கட் குறக்கொடி களபக் கிளரொளி முலைவனப் பெழுதக், கண்டுகண் டுள்ளங் களிப்ப ருச் செந்தூர்க் கந்தனை வந்தனை புரிவாம். (சு)

### வேலாயுதம்.

வேறு.

†அரம டங்கலுந் தழைசெல மூலமே லாயுத்
தரம டங்கலும் பொருவுசூர் மாமுத றடிந்தே
நரம டங்கலுந் துதிப்பருங் குமரனுட் கமலக்
கரம டங்கலுங் கலஞ்செய்வே லென்கவிக் கருத்து. (எ)

### ஐயனார்.

வேறு.

அரிய பூரணை புட்கலை யாமிரு
தெரிவை மார்முலைச் செங்கள பத்தொளி
விரவு சுந்தர மேருவொப் பாம்புயக்
குரிசி றண்டைக் குரைகழல் போற்றுவாம். (அ)

### வீரவாகுமூர்த்தி.

வேறு.

வடுத்தமா விருபிள வாகச் சோதிவேல்
விடுத்தவா னவனடி விடாது போற்றியே
யடுத்தவா னவர்சிறை யகற்றச் செம்மணி
தொடுத்தவாள் வீரவா குவைவ ழுத்துவாம். (கூ)

## திருஞானசம்பந்த மூர்த்திநாயனார்.

வேறு.

அறுகா லுழக்கச் சிறுமுகைத்தே னூறு பாயுஞ் சோணாட்டி
லுறுகா ழியில்வந் தவதரித்தெ னுள்ளத் திருந்து சமணரெனுங் [றுஞ்
குறுகார் தமைக்கட் டழித்துமையாள் கோமான் சரணந் தனைப்போற்
சிறுகான் முளையி னிருசரணச் செந்தா மரைவந் தனைபுரிவாம்.

## திருநாவுக்கரசுநாயனார்.

கலக மிடும்பொய்ச் சமணர்குழாங் கட்டிக் கடலி னிடைப்புகுத்த
வுலகம் பரவ விடுத்தகல்லே யுயரும் புணையாக் கரையேறி
யிலவ விதழோர் பங்கமைத்த வெம்மான் கமலத் தாள்பழிச்சுஞ்
சொலவின் புணையாப் பவக்கடலுங் கடந்தான் சரணத் துணை துதிப்பாம். ()

## சுந்தரமூர்த்திநாயனார்.

அரவக் கடலி னிடைப்பாம்பி னமளி படுத்த துழாய்முகிலும்
விரைகொப் புளிக்குஞ் செழுங்கமல வீட்டுக் கிறையு மினுங்காணு
விருபொற் சரணஞ் சிவப்பூர விரவிற் பரவைக் கிருந்தூது
பரவப் பணித்த கவிராசன் பாத மெமது தலைக்கொள்வாம். (யஉ)

## மாணிக்கவாசக சுவாமிகள்.

வேறு.

கொள்ளைவண் டிருந்து விருந்துணச் செழுந்தேன் கொப்புளித் தலர்ந்தபூங் கொன்றை, துள்ளுதெண் டிரைநீர் முடித்தசெஞ் சடிலச் சோதிசெங் கரம்பிடித் தெழுதத், தெள்ளுசெந் தமிழிற் கோவைநா னூறுஞ் செப்பிய நற்கவி ராசப், பிள்ளைசெஞ் சரணக் கிரணவா ரீசப் பிரசநாண் மலரிணை துதிப்பாம். (யந)

## சரசுவதி.

வேறு.

ஒருதனித் திகிரிக் கதிர்நிறங் கவின வொளிர்செய்பொன் னுடைமருங் கிலங்கக், குருமணி மௌலி யிலகிவில் லிமைப்பக் குறுநகை முறுவன்முத் தரும்ப, மருமலர்க் கழுநீர் புத்தகம் வரத மணிவட மலர்க் கரம் வயங்கத், திருவரு ணிறைந்தென் னுளங்குடி புகுந்த செல்விபொற் சேவடி பணிவாம். (யச)

கடவுள்வாழ்த்து முற்றிற்று.

ஆகு திருவிருத்தம்—யச.



# பதிகம்.



‡ நயிமிசா ரணியவனஞ் சூதமுனி சென்றதுவு நவையில் சூத னியல்பினன் முனிவர்முகம் பார்த்துயர்வி யாதமுனி யினிமை சார்ந் த, வுயர்வினு லருஞ்சுகற்குள் ளன்பொழுகக் கங்கைநதி யோங்கு மூல த், தயர்வுறு திருந்துசிந்து புரவளமை யனைத்தினையு மடைவிற் ரூ மூா. (க)

முறையினுற் சுகமுனிக்கு வியாதமுனி யுபதேச மொழிந்த வா று, மறையுலாஞ் செயந்திபுர வைபவமுன் சொற்றதுவும் வைவேற் கந்தன், பிறையுலாஞ் சடைக்கடவுள் கவுரியுடன் றேய்ந்தபெரும் போகந் தன்னி, னிறைவினு லவதரித்துக் கடவுளர்தம் முகநோக்கி நிகரி லாத. (உ)

பாரதகண் டத்தினிடை மலைவளனு நதிச்சிறப்பும் பரம்புந் தெ ண்ணீர், வாரிதியின் பெருவளனும் பெற்றநக ரொன்று நம்முன் வகுப் பீ ரென்ன, வாரருளி னிறைகேட்ட வந்நகர முன்னரெமக் கலக்க ணீந்த, சூரனுயிர் குடித்தருளா லிருந்தசிந்து புரமெனமுன் சொற்ற வாறும். (ங)

தண்ணளியிற் குமரேசன் செயந்திபுரம் போந்துலகந் தழைக்க மாயோன், கண்ணிடத்துத் தோன்றுமிரு கன்னியர்பா லினிதிருக்கு ங் காலை யானைப், பெண்ணமுதை மானளித்த பேதையிகழ்ந் திருந்தத னைப் பிரானு ரோர்ந்து, மண்ணளந்துண் டுடன்காத்த மாதவன்றன் வலக்கணவ தரித்து வந்தாள். (ச)

தன்னையெதி ருறவழைத்து நீயிடப்பா லிருக்குமருந் தார மான மின்னையவ மதித்திருந்த செய்கையினுற் கொடுஞ்சாப மேற்கொண் டோர்மான், மன்னுதரத் துற்பவித்து வேடரிடத் திருத்தியவண் மறையின் வாய்ப்ப, வுன்னையழல் சான்றுக யாம்வதுவை யாற்றுவமெ ன் றுரைத்த வாறும். (டு)

உரைத்தகொடு மொழிதாங்கி மானிடத்திற் பிறந்தெயின ரொ ருவா விந்தை, வரைப்புனத்தி லிருந்துதினை காத்ததுவு மம்மலையில் வயங்குங் கூர்வேற், கரத்திறைவன் கண்டதுவும் வேடன்முனம் போயுந்து கன்னி தன்பால், விரைத்தொடையல் யான்சூட்ட வேண் டுமெனக் கருணையுடன் விளம்பு மாறும். (சா)

---

‡ நைமிசாரணியம்-நயிமிசாரணியமெனப்போலியாயிற்று.

கானவருக் கரசனவ னுடன்படா திருந்ததுவுங் கன்னி முன்போய், வானளவுந் தருவாகி நின்றதுவுங் கானவர்கோன் மலைப்பால்ன்பிற், போனதுவு மித்தருநம் புனத்தினிடை வரலாறு புதுமைத்தாகு, மானதருக் குறைமினெனச் சொற்றதுவுஞ் சொற்றதுகேட்டைய னுங்கே. (எ)

தாருவுருக் கரந்துதுணைக் குஞ்சரத்தி னிருசரணந் தாழ நோக்கி வாரணத்தி னுருவாகி மாதினிடஞ் சென்றதுவு மாது சோர்ந்து, வேரிமலர்க் கடம்பமணி மார்பிறுகப் புல்லியதும் விருப்பாய் வேடன் சீரருளிற் கன்னிகையை யுனக்களிப்ப னென்றுரைத்துச் சென்றவாறும். (அ)

குறவனிடத் தமரர்தொழுங் குமரேசன் சென்றதுவுங் குறவன் வாஞ்சைப், பிறைநுதலை யளித்ததுவு முருகேசன் மேவட்டுமனப் பெட்பி னோடு, நறவமலர்த் தேரேறிச் செயந்திபுரத் துற்றதுவு நவையி லாத, பொறைபடைத்த யானைமக ளெதிர்போந்து பரவவவண் பொருந்து மாறும். (கூ)

பொருந்தியவண் குமரேச னிருந்துழிநான் முகம்படைத்த புத்தேள் போற்றி, வரந்தனைப்பெற் றிடுமாறுந் திரிசுதந்தி ரத்தரெனு மறைவல் லோரா, மருந்தவத்தர் வரலாறும் பனிருமா தப்பூசை யவைவ ழாது, திருந்துறச்செய் திடுமாறுங் குமரன்விழா திச்செயலுஞ் சிறப்பு வாய்ந்த. (ய)

வயம்புனையுந் தோள்வீர வாகுவுக்காத் திருக்கோல வாய்ப்புக் காட்டி, நயம்பெறவாங் குதித்ததுவு மச்செயலை நாரதன்போய் நறைத்து ழாய்சூழ், புயஞ்சிறந்தார்க் குரைத்ததுவு முரைத்தமுனி புலந்தேறப் புயல்போன் மேனிச், சுயம்பிரகா சக்கடவுள் குமரேசன் சீரனைத்துஞ் சொற்ற வாறும். (யக)

இந்திரனைத் தாங்கயிரா வதப்பகடு நாரதன்மு னிறைஞ்சி யேத்த, வந்தமுனி வரனியானைக் குபதேசப் பொருள்சிறக்க வளித்த வாறுஞ், சிந்துபுரச் சிறப்பதனை விதிமுறையா ராய்ந்தயிற்கைச் செவ்வேளன்பாய், வந்தநம னுளந்தேறக் கருணையுட னுங்கவன்பால் வகுத்த வாறும். (யஉ)

கடவுளர்க ளியாவருக்கு மெண்ணிறந்த முனிவரர்க்குங் கமலப் புத்தே, ளூடனிருந்து செயந்திபுரச் செய்கைதனை யுரைத்ததுவு மூடற்று மாயைத், தொடரகற்றுஞ் சுகமுனிவன் சிந்துபுரந் தனிற் போந்து சுடர்வேற் செங்கை, விடலைதுணைத் தாள்போற்றி யற்புத வான் கடன்மூழ்கி வியந்த வாறும். (௰௩)

வெண்டிரைப்பாற் கடலிடத்துக் கருங்கடல்போற் றுயினெடு மால் வியப்பொவ் வாது, பண்டுசனற் குமரனுக்குப் பகர்காதை யக் காதைப் பண்பு வேத, முண்டுபடுத் தியசீர்த்தி வியாதமுனி சுகமுனி வற் குரைத்த காதை, யெண்டகைய சூதமுனி நயிமிசா ரணியர்தமக் கிசைத்த காதை. (௰௪)

விரிதருசீர்ப் புகழ்ச்செவ்வற் கிருட்டிணசாஸ் திரியெனுநால் வே தன் வேதங், கருதரிய வடகலையை யாராய்ந்து சொலவதனைக் கருதிச் செவ்வேள், சரிதையென வுணர்ந்துணராப் புல்லறிவி னூலினிய தமிழே போலத், தெரிதரத்தென் செயந்திபுர மான்மியமா மெனவு லகிற் செப்பி னேனால். (௰௫)

வேறு.

நறைகமழுஞ் செயந்திபுரத் தலபு ராண நால்வேதம் பயில்கிரு ட்ண சாஸ்த்ரி கூறப், பொறையினொடு தமிழிசையாற் புலவர் கேட் கப் புத்தமுதஞ் செவிக்கென்னப் புனைதல் செய்தா, னிறைவட நூற் கடலையெல்லாந் தாமே நீந்தி நின்றளவி னெஞ்சகத்தி னிலையே கண் ட, மறையவர்க டிலகனெங்கள் செந்தூர் வென்றி மாலைகவி ராஜகலை வாணி யானே. (௰௬)

கடலள்ளு படப்பருகு மெழிலி போலுங் கனபிரபந்த மழை சொரியுங் கவிதை மேகம், வடவரையொப் பெனுமதுர கவிஞன் வெ ன்றி மாலைகல்விக் கடலினிறை மதியால் வந்த, திடமுறமாங் கனிசெ ழுந்தே னொழுகு பாடற் செந்தமிழி னமுதையுண்டு தேவ லோகத் திடமுடைய புலவர்தமக் கிணையாய் ஞாலத் திருப்பவரும் புலவர்க ளா யிருக்கின் றாரே. (௰௭)

பதிகமுற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௩௧.

## முதலாவது: நைமிசாரணியத்திற் சூதமுனிசென்ற அத்தியாயம்.

கோதமன் வசிட்டன் மங்கணன் மலையக் குறுமுனி சத்தியன் வேத, வாதிய ஞபத் தம்பன்மாண் டவியன் வாமதே வன்விரூ பாக்ஷ ன், காதிசேய் பிருகு சருக்ஷரன் சரபங் கன்காத்தி யாயனன் கற்க னேதிலாக் கவண்டன் றாம்பிர * னணிமாண் டவியனென் றிருந்தவ முனிவன். (க)

வசுமனு மௌன போசனன் பன்னு சனன்மதங் கசன்பரா சரன் சீர், வசுதவு மியன்க ணாதிபன் பரத்து வாசனுங் கிரதன் சிலாத னிசைதகு ருசிய சிருங்கன்சா பாலி யத்திரி வித்துவா னெழில்சேர் சுசிநிக ராஞ்ச மதக்கினி சனியார்க் குவதன்கா சிபனெனுந் தொல் லோன். (உ)

திருந்துமா ணாக்க ரந்தமா ணாக்கர் சீரடி பரவுமா ணாக்க, ரருந்த திக் கற்பின் பன்னியர் தெக்க ணாக்கினி முதலமுத் தீகள், விருந்தினர் தங்கண் மரபினி லுதித்த மேலவர் நான்மறைக் கிழவர், பொருந்து மன் பினர்கள் சூழ்வர ஞானம் பூத்துயர் முனிவர ரடைந்தார். (ங)

அரியமா தவத்து முனிவரர் வரலு மவர்தமைக் காண்டலு மன் பு, பெருகிமா தவர்க்கு மேன்மைசான் மறைகள் பேசிய சவுனக னெ ன்பான், வரிசையான் முகம னெடுத்தெடுத் துரைத்து வாலிய தருப் பையா சனத்தி, லிருமென விருத்தி யருக்கிய முதல வினிதளித் தரு ளுமேல் வையினில். (ச)

கண்டிகை நீறு மெய்யிடைக் கவினக் கட்டுசெஞ் சடையொளி வாய்ப்பப், பண்டருஞ் சுருதிக் கடலெலாங் கடந்த பராசரன் மீதலே ஞாட் கமலத், தொண்டரின் றலைமைச் சூதனென் றோதுந் தோமறு புராணவா லயமாய், விண்டுவின் வடிவாய் வந்தவற் பழிச்சி மெய்ம்ம யிர் புளகுற நின்றான். (ரு)

வேறு.

நின்ற சூதமா முனிவனைக் கண்டுநெஞ் சகத்தி
லொன்று மன்பினு லருக்கிய முதலன வுதவித்
துன்று காதலின் முனிவர ரியாவருந் தொடர்பா
லின்று நீவரப் பெற்றன மினிதென விசைத்தார். (சா)

---

† அணிமாண்டவியன்-ஆணிமாண்டவியனென்பதன் குறுக்கல்விகாரம்.

உரைத்த பின்னரு மூவறு புராணத்தி னூடு
பரித்த மான்மியத் தலங்களு மவணுறு பலனும்
விரித்த தீர்த்தத்தி னுண்மையு மேன்மையும் விளம்பத்
தரித்து ளோமின்னும் வேண்டுவ துளதுசாற் றுதுமால். (எ)

சொற்ற காதையிற் றருக ளேடெழுஞ் சூரைச்
செற்ற தன்மையுஞ் செயந்திநன் னகரிடைச் சேயோ
னுற்ற செய்கையுங் கந்தமா தனப்பெய ருடைய
பொற்றை யவ்விடைப் போந்ததுந் தொகைப்படப் புகன்றாய். ()

என்ன மும்மலக் குறும்பெறி சூதனுங் கெழுந்து
பன்னி ரண்டுகைக் குருபரன் றணைப்பதம் பழிச்சித்
தன்னி ரண்டுக ணூடுமா னந்தநீர் ததும்பச்
சென்னி மேற்கரங் குவித்தன னன்றெனத் தெளிந்தான். (கூ)

வேறு.

பொலன்மலைத் தலைநீ டருவிநீர் படிந்து புழைக்கையான் பசித்தழு மென்றே, யுலகளித் தவள்போங் காலையி லிறைவ னுவந்தவட் புணர்தலு நீறறு, நிலவினிற் கபோல வாடியிற் றிகழு நிழலினைக் கண்டுளஞ் சீறி, முலைசுவைத் துயிர்ப்பு வீங்குழும் மதத்து மூரிமால் யானைதா டுதித்தே. (௰)

வேறு.

தோகைநிழற் குடைக்கவிப்பும் பசுஞ்சூட்டின் மணிக்கொடியுந் துண்டத் தேந்து, நாகமணிச் சுடர்விளக்கு முடன்விளக்கு மரகதப் பொன் னாக மானுங், கேகயத்திற் கதிர்விரிக்கு மிளம்பரிதி போற்குலவுங் கிரண வேல்வி, சாகனகத் தியற்குரைக்கு மொருகுமர னிருசரணந் தலைக்கொண் டேத்தி. (௰க)

வேறு.

சூதமா முனிவ னைமிசா ரணியத் தொன்முனி வரர்முக நோக்கி
யாதரம் பெருக விருகையுங் குவித்துள் ளன்பொடு செயந்திநன் னகர
மேதகுங் காதை சுகமுனி வினவ வியாதன்முன் புகன்றது நுங்கட்
கோதுவன் கவற்சி வேறிலா தனைரு மென்றுளம்புலப்படவுரைப்பான்

நைமிசாரணியத்திற் சூதமுனிசென்ற
வத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் சரு.



# இரண்டாவது: வியாதர் சுகருக்குப்தேசித்த அத்தியாயம்.



மரக தத்தனித் தாபர நீற்றொளி வயங்கப்
புரிச டைக்குலம் விழுதென வெரிங்கிடைப் பொலிய
விருவி னைத்தொடர் பகற்றிய வியாதனென் றிசைக்கு
மொருவன் மெய்க்கதிக் கங்கைமூ லத்துவந் துற்றான். (க)

தலைம யங்கிய வேதங்க டம்மைநான் காக
நிலைமை பெற்றிடப் பதஞ்சடைக் கிரமத்தி னெறியா
வுலக மேழுக்கு நிறுத்தியே யுமாபதி சரணக்
கலைப யிற்சியா வியாவையு மகத்திடைக் காண்பான். (உ)

அன்ன வன்சர ணத்தினை யஞ்சலி செலுத்தித்
துன்னு நான்மறைச் சுகனெனுந் தவமுனி தொழுது
சென்னி மேற்கரங் குவித்துமுன் பொருநையின் றென்பான்
மன்னு கின்றதோர் செயந்திநன் னகரென வகுத்தாய். (௩)

சிந்து நன்னக ரத்துள சீர்மையுஞ் செவ்வேள்
வந்த தன்மையுந் தொகைப்பட வுணர்த்தினை மதலைக்
கெந்தை நின்சொலி னாமு தத்தினை யினிதா
வுய்ந்தி டும்படி செப்புதி யாலென வுரைப்பான். (௪)

குற்ற † மூன்றகற் றியசுக முனிவனைக் குறிப்பா
லுற்று நோக்கிநின் னெண்ணநன் றாலென வொளிகூர்
கற்றை யஞ்சுடர் வேலவன் காதைக ளனைத்து
முற்ற வோதுவன் சோர்வற வுணர்குதி முறையால். (௫)

ஞான வீட்டுக்கோர் திறவுகோல் கடாவுடை நடுவன்
மான சோத்திரக் கதவெட்டி யோகத்தின் மதிப்பா
ரான நெஞ்சகத் திருஞ்சுடர் விளக்கதா மமரர்
சேனை காவலற் குரியதாஞ் செயந்திநன் னகரம். (௬)

உடைந்த தெண்டிரை முகாரம்ப தீர்த்தத்தோர் பொழுது
படிந்து மும்முறை குமரநா யகன்பதம் பணிவார்
மிடைந்த தேவரு முனிவர ரியாவரும் விரைவி
னடைந்தன் னார்பதம் பரவவீற் றிருந்தருள் புரிவார். (௭)

† ஐயம் - திரிபு - அறியாமை.

மூன்று வைகலின் முகாரம்ப மூழ்கிவேன் முருகற்
கான்றசோட்ச விதியினு லருச்சிக்கு மவர்கள்
கான்ற மும்மத வெண்களிற் றிந்திரக் கடவு
ளென்று வந்தனை புரிந்திட வினிதுவீற் றிருப்பார். (அ)

பரியின் வேள்வியி லாயிர கோடியின் பலமு
முரிய நான்முறை யுஞற்றுமெய்க் கதிகளு முலவா
வரிய மாதவப் பயன்களும் வேதவா கமத்துச்
சுருதி யாய்ந்திடு கடவுளர் தருங்கதித் தொகையும். (கூ)

சங்கை யேமுத லாகிய நதிகளின் கதியுந்
திங்க ளஞ்சடை யரன்கயி லாயத்தின் சிறப்பும்
பொங்கு மந்திர நிலைதருங் கதிகளும் போர்வே
லங்கை யானெழுத் தாறிலொன் றேத்திட வமையும். (௰)

வேறு.

மறைகொழிக்குஞ் செயந்திபுரத் தெல்லைநீங் காதிருந்து வாழு மாந்தர், குறைவிறவச் செயலாள ரவர்புரியுந் தருமமொன்று கோடி யாமா, லறுமுகனைச் சேவைசெயுங் கண்ணுடையார் கண்ணுடையா ரன்னன் சீர்த்தி, முறையுரைக்கு நன்னுவே நன்னுவென் றேசுருதி மொழியு மாதோ. (௰க)

வேறு.

வேதாவுமவ் வேதாவினை வியனுபியி னமைத்த
தாதார்பசுந் துளவத்தனுந் தவத்தோர்களுஞ் சுரருங்
காதார்விழி யுமையாடரு கந்தன்சிந்து புரத்தோ
ரோதார்நமை யென்றேவியந் துரைப்பாரிவை யுணர்நீ. (௰உ)

எவராகிலுஞ் செனனம்முத லீறுமள வும்மா
தவமாற்றினுஞ் சருகாரினுந் தானம்பல செயினு
முவமானமில் செயந்திப்பதி யொருநாளுப வசியார்க்
கவமாமவர் செனனம்பசு வாமாமிவை யறிநீ. (௰௩)

உரைக்குஞ்சிந்து புரமேயம ருலகம்மவ ணுறுவோர்
பரிக்குஞ்சுர ரவரோடுரை பகர்வார்த்தைக ளனைத்து
மிருக்கின்பெரு மிதமந்திர மவரோடினி திருக்கிற்
பெருக்குங்கதி பெறுகின்றதிற் பெரிதாமிவை யுணர்நீ. (௰௪)

நாராயணன் முனமேமுன நவைதீர்சனற் குமர
ஞராவமு தெனவேசிந்து புரமான்மிய மனைத்தும்
பேராதர வுடன்பேசிய பெருங்காதையி னுட்பஞ்
சோரா துனக் குரைக்கேனிது துணிவாகவுந் துணிநீ. (௰ரு)

‡ இருமூவகைக் களைவேரறுத் தின்பம்பெற வேண்டி
ஞெருமூவைகன் முருகேசனை யுள்ளன்பொடு பரவித்
திரையார்வத ஞரம்பமெ னுந்தீர்த்தமும் படிந்து
கரையேறுதி பெருநான்மறை கரைகண்டுயர் கருத்தாய். (௰சு)

உனக்கேசொ லும் பொருளாமிந்த வுண்மைச்சரித் திரத்தை
நினைத்தேட்டினி லெழுதித்தினம் படிப்போர்கிக ரில்லா
மனத்தேசர வணத்தெம்மிறை வாழ்வானெனச் சுகற்குக்
கனைத்தோலிடு மறைநான்கெனக் கண்டான்முனம் விண்டான்.

வியாதர் சுகருக் குபதேசித்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் சுய.

# செயந்திபுரவைபவமுரைத்த

## அத்தியாயம்.

ஆங்காரக் குறும்பகற்றி யாதிவே தாகமத்திற் காதியான, வோங்காரத் திருவடிவாங் குமரேசன் செயந்திபுரத் துற்ற காதை, நீங்காதைம் புலனுமொன்றாய்ப் பரபோகத் துண்மையென நினைத்து நீயென், பாங்காக வுணர்தியென வியாதமுனி சுகன்கேட்கப் பகர்ந்தான் மாதோ. (க)

சிந்துபுர மெய்ப்புரத்துஞ் சிரபுரமா மப்புரத்திற் சிறந்த தீர்த்த முந்துநதி பலகோடி யவற்றினுக்கு மேலாகு முதியோர் வைகு, மந்தநக ரிடையிருந்து தனித்தொருமந் திரஞ்செபிக்கி னலகி லாத, மந்திரத்தின் கதியுதவு மனைத்துயிர்க்கும் போகமுத்தி வழங்கு மாதோ. (உ)

‡ காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம்.

காசியினிற் புனன்மூழ்கிக் களித்தகொல்லா புரியிருந்து கரதியாச, மாசில்செபஞ் செபித்துணவு மாகுதியி லாக்கிமற்ற வானோர் வைகுந், தேசமுழு வதுங்குலவிச் *சயத்தினுற்ற தெத்தாத்தி ரேயன் றன்பா, னேசமுடன் றினந்தோறு மிவ்வாறு விடாதொழுகு நிகரின் மேலோர். (௩)

கருதுகந்த ளேந்திரர்கோ ரக்கர்கொங்க ணேந்திரர்வெங் காமந் தீத்த, பெருமையினு கார்ச்சுனர்மச் சேந்திரர்மா தவநிலைமைப் பீம நாத, ரருணகிரி நாதரரும் புசங்ககுரு நாயகர்பே ராதி நாத, ருரிமை நவ நாதசித்தர் வானவர்கண் முனிவரர்க ளொழுக்க மிக்கார். (௪)

வேறு.

அருத்திதரு மியமநிய மம்பி ராணு யாமஞ்சிர வணமனன மளக்கொளுக, நிருத்தியா சனந்தியா னஞ்ச மாதி நெறியுணர்ந்து சிவன் பாத நேசித் தேத்திப், பொருத்துமணி மாமகிமா லகிமா ஞானம் பூத்தகிரி மாவீசத் துவமே பூண்டு, திருத்வசித்வம் பிராத்திபிரா காமியம்மாந் தேர்ந்தவட்ட சித்தியெனுந் திறத்து வாய்ந்த. (௫)

சாற்றரிய சனகர்சனந் தனர்மெய்ஞ் ஞானந் தழுவுசனு தனர்முதிய சனற்கு மாரர், போற்றுசனச் சுசாதரிவர் முதலா யுள்ள பொருவரிய முனிவரர்கள் புணரி சூழ்ந்த, நாற்றிசையா மெண்டிசையின் வைகும் வேத நான்கினெறி யுளஞ்சேர்த்தி நவையி லாது, கூற்றுயிருண் டருள்பரமற் பணிந்து நித்தங் கூறரிதாஞ் செயந்திபுரத் தென்றும் வாழ்வார். (௬)

வேறு.

சொல்லு தற்கரி தானவஞ் ஞானவேர் சூழ்ந்து
கல்லு மட்டறு காமமுன் னூறென்றுய்க் கலந்து
மல்ல லஞ்சிந்து புரத்துளோர் தம்முடன் மாறுய்ச்
செல்ல வெண்ணினும் பரிதிமுன் பனியெனச் சிதையும். (௭)

தாக்கு மோகவா காமியஞ் சஞ்சிதக் கட்டு
நீக்கு நீக்கமில் லாவுயிர்த் தொகைதொறு நிறைந்து
தேக்கு மானந்தச் செயந்திநன் னகரெனச் சிறந்தார்க்
காக்க மேல்வருஞ் சனனமு மில்லையா மளக்கின். (௮)

* சயம் - சையம் என்பதன் போலி

தழைத்த கங்கையில் வாழ்திரி வேணிசங் கமத்தி
னுழைத்த நல்வினை செயந்திநன் னகரென வொருக்காற்
குழைத்த வன்பினிற் சொல்லுமக் கதிக்கெதிர் கூறி
யழைக்க வேபதி னறிலொன் றில்லைகா ணன்றே. (௯)

வாச பேயமோ ராயிரம் வாம்பரி மகநூ
றூசி லாதுசெய் குநர்பெறு மருங்கதி யவைதாம்
வீசு தெண்டிரைச் செயந்திநன் னகர்வயின் மேவ
நேசம் வைத்தவர் தங்கள்பா னித்தமுந் தருமால். (௰)

செயந்தி நன்னக ரிருந்தறந் தினைத்துணை செய்யின்
வியந்த முன்னுவா மதியென நாடொறும் விளங்கும்
பயந்த தீவினை பின்னுவா மதியெனப் பாரிற்
கயந்த ருங்கொலா மியாதெனப் புகலுவன் கருத்தால். (௰க)

காழ கந்தரு ‡ சங்கிலி கரணமுங் கருத்திற்
பீழை தந்திடு § மாலினி கரணமும் பெற்ற
மாழை யொண்கணார் தங்கள்பால் வைத்திடு மனமு
மூழி னற்பெற்ற பெண்கள்பால் வேட்கையுற் றனவும். (௰உ)

பாலர் வேட்டவப் பன்னியர்க் கிச்சையாம் பண்பு
மால வெம்பத்தி நீயமு மப்பத்தி நீய
மேலு றுதசா திப்பிருங் கிசகர மென்னுஞ்
சீல மில்லதோ ரளவிலாப் பாவத்தின் செயலும். (௰௩)

சிந்து நன்னக ரத்தினி லன்புடன் சென்று
கந்த வேள்சர ணத்துணைக் கமலமுங் கண்டு
முந்து மன்பினிற் றெரிசிக்கச் சுடரவன் முன்னம்
வந்த தண்பனிக் குறும்பெனத் தொலைந்திடு மாதோ. (௰௪)

தரும மோமமா தானநற் றமஞ்சமம் வேள்வி
கரும மந்திர மிவைதருங் கதிகளுஞ் செயந்தி
புரமி ருந்துளார் பெறுங்கதி யதற்கிணை புகலி
னூரிய கோடியி னொன்றிலை யெனமறை யுரைக்கும். (௰௫)

‡ இயல்புக்குவிரோதமானபுணர்ச்சி.
§ நவபாதகத்தொன்று.

ஆபு நல்குர வாலத்தி யாசன மருந்தன்
மேய வன்பிணாற் போயதி பானமே விரும்ப
றாய தாங்குற வன்மனை யார்பவஞ் சுருதி
மாயு மென்றிடுஞ் செயந்திநன் னகர்வதிந் தவர்க்கே. (௰௬)

ஈரு வாவினு மேவத ஞரம்பத் தெறிநீர்
வாரி யிற்படிந் தாறெழுத் தையுமன மதித்து
வீர வேற்றடக் கரத்தனைத் தெரிசிக்கின் வெற்பி
ஞரி பாகனுக் குரியவான் கயிலைநண் ணுவரால். (௰௭)

விலங்க தாயினு மாக்களே யென்னினும் விரிநீ
ரலங்கு சிந்தூரன் னகர்வயி னுடலம்விட் டகன்றார்
மலங்கு பாவவெங் குறும்பற மாய்த்துவாட் டிறலான்
குலங்க ளோடினி திருந்துவே ளன்பரிற் குழைவார். (௰௮)

செல்லு மார்க்கங்க டவறுறச் செயந்திநன் னகரத்
தெல்லை சென்றுளா ரியாவருங் குமரவே ளிருதாண்
மல்ல லஞ்சிறப் பெய்துவ ரெய்துவர் வாய்மைச்
சொல்லி தென்றனன் சுகனுக்கு வியாதனுந் தொல்லோன். (௰௯)

காசி காஞ்சிபொன் னம்பலங் காளத்தி கமலை
தேசு லாவன லக்கிரி செயந்திநன் னகர
மாசி லானைக்கா வன்புரு டோத்தமா நகர
மோசை மாக்கட லுடுத்தபா ரிடத்தினோன் பதவும். (௨௰)

அருங்கு ரோசமோ ரைந்துள வவ்வயி னடைந்து
சுருங்கு கூபமும் வாவியுங் குளனும்வான் சுருங்கா
திரங்கும் யாறுமாம் புண்ணிய தீர்த்தத்தி னிறைபிற்
பரம்பு மந்நகர் தருங்கதி யாவரே பகர்வார். (௨௧)

அவையின் மிக்குறுஞ் செயந்திநன் னகரிடத் தடைந்த
புவன மியாவையுங் கூப்பிடு மெல்லையிற் புகுந்து
தவவு டம்புவிட் டொழிகுநர் குமரன்சா ரூப
முவமை யின்றெனப் பெறுகுவ ரெனமறை யுரைக்கும். (௨௨)

அன்பு தித்திடச் செயந்திநன் னகர்வயி னடைந்து
தென்புலத்திஞேர்க் கருத்தியோ டேட்டிய சிராத்த
முன்பு ணர்த்திய § கயைச்சிராத் தத்துமுக் கியத்தி
னின்பு டைச்சத மடங்கென வேதநின் றிசைக்கும். (௨௩)

§ ஓர் புண்ணிய க்ஷேத்திரம்.

கடவுளர்க்கரி தாகிய கந்தபுட் கரணித்
தடமலம்புதெண் ணீர்படிந் தவ்விடைத் தயவி
னுடனிருந்துதென் புலத்தினோர்க் கூட்டுக வுறுதே
லிடிகொண் மாவினாற் பிண்டமே யாயினு மிடுக. (உச)

இல்லை யென்றிடி னெள்ளுடன் புனல்கையா லிறைக்க
வல்லவம்பெறு தாயினு மாவின மாந்தப்
புல்ல தாயினும் போடுக விவ்வகைப் புணர்ப்பா
லல்ல லுற்றிடு பிதிர்க்கள்வே தாவுல கடைவார். (உரு)

பிரம லோகத்து முன்புள பிதிர்க்களாம் பெரியோ
ருரிய முத்திபெற் றிருப்பரா லவர்குலத் துற்றோ
ரரிய புத்திர ரில்லரே யாயினு மநாத
மரண முற்றன லின்றியே கிடந்துமா யினுமே. (உசா)

இந்து தீர்த்தத்துக் கந்தபுட் கரணியாந் தீர்த்தத்
துந்து மன்பொடு படிந்தெண்ணீ ரிறைத்துவ வசிக்கி
லந்த முற்றவ ரியாவரு மடற்களி றுகைக்கு
மிந்தி ரப்பதம் பெறுகுவ ரெனமறை யிசைக்கும். (உஎ)

முத்தி நல்கிய கந்தபுட் கரணிநீர் மூழ்கிப்
பத்தி மைச்செய லாற்கும ரேசனைப் பரவி
நித்த நித்தமு மாறெழுத் துண்மையை நினைத்துச்
சித்தி பெற்றதென் புலத்துளோ ரியாருஞ்சிறந் திருந்து. (உஅ)

நமது தொல்குலத் துதித்தவ ரொருவரா னாலுங்
குமர நாயகன் செயந்திநன் னகரிடைக் குறுகி
யமரர் போற்றிய கந்தபுட் கரணிநீ ராடிக்
கமையு டன்றில மிட்டெறி நீர்க்கடன் கழித்தால். (உகூ)

யாமெ லாஞ்சுரர் நாட்டுள விண்ணமு தருந்திக்
காமர் பெற்றித மாயிரப் பொன்மலர்க் கமலப்
பூம னூரெதிர் புகுந்தடி வணங்கநேர் போந்து
நாம நீடிய வைவக்கணெய் துவமென நவில்வார். (௩௰)

நிரய முற்றுளார் தங்கள்வாண் முகத்தைநேர் நோக்கி
யுருமெ னத்தெழித் தழலெனச் சீறியுள் ளுடைந்து
கரத லம்புடைத் தந்தகன் முறுவலுங் கனிய
விரைவி னுலவர் தம்முட னிருந்திது வினவும். (௩௧)

மோன மோடுபோய்க் கந்தபுட் கரணிநீர் மூழ்கி
வான நாடரு ளளித்தவேள் சரணமே வணங்கி
ஞான காரணச் செயந்திநன் னகரநண் ணுமை
லீன மாஞ்சன னச்சுமை சுமந்ததென் னென்றும். (௩௨)

மோது தெண்டிரை நீர்வத ரைம்ப மூழ்கிச்
சீத நீர்க்கந்த புட்கர ணியும்பரி சிக்கச்
சோதி வேற்கும ரேசனைத் தெரிசிக்கத் தொன்ணுண்
மாத வஞ்சிறி தியற்றுநர் பெறுகுவர் மாதோ. (௩௩)

சிந்து நன்னக ரத்திலே பிறக்கினுஞ் சிறந்த
சிந்து நன்னக ரத்தையே தெரிசனை செயினுஞ்
சிந்து நன்னக ரத்திலே யிறக்கினுந் தெய்வச்
சிந்து நன்னக ரென்னினு முத்திசேர்ந் திருப்பர். (௩௪)

உரைத்த நால்வகைச் செய்கையி னொன்றுபெற் றாலும்
வருத்த மின்றியே முத்திசென் றெய்துவர் வடிவேற்
கரத்த னணையே பாரத கண்டத்திற் கதிக்கே
பரித்த வேழுநன் னகருள வவற்றின்பேர் பகர்வாம். (௩௫)

திருவ யோத்திமா மதுரைமா யாபுரி தேவர்க்
குரிய காசிமெய்க் காஞ்சிபே ரவந்திவா னுரைக்க
விரிது வாரகை முத்தியை யளித்திடும் வேதப்
பரிதி வேலவ னுறைந்தருள் செயந்தியம் பதியே. (௩௬)

எண்ணு தற்கரி தாகிய முத்திபெற் றிருக்க
நண்ணு வித்திடு மென்பது சொல்வதென் ஞானப்
புண்ணி யத்திருச் செயந்திமா புரம்புகா தவமாய்
மண்ண கத்தினிற் பாவகா ரியரென வதிந்தீர். (௩௭)

என்று கூற்றுவ னிரயத்தார் தங்களுக் கிசைய
வொன்று மன்பினு லுரைத்தசொல் லவர்செவி யுறலாற்
கன்று மாநிர யத்தினை யிகந்துமேற் கதிக்கே
சென்று ளாரெனச் சுகனுக்கு வியாதன்செப் பினனால். (௩௮)

ஆத லாற்சிந்து புரமெலா நகர்க்குமே லாமா
லோது மந்நகர்த தீர்த்தமெத் தீர்த்தத்து முயர்ச்சி
மேத குஞ்சுரர் தங்களிற் குமரவேண் மேலாஞ்
சோதி வானவ னுமென நான்மறை துதிக்கும். (௩௯)

பருவ நூறுமா கப்புனல் காசியிற் படியும்
பெருமை மாதவப் பதிசிந்து புரமெனப் பேசி
யொருத் ரங்கந்த புட்கர ணிப்புன லூடு
மருவி மூழ்குநர்க் கந்தமா தவக்கதி வழங்கும். (சய)

பிறந்த நாண்முத லீறுறு மளவையும் பிரியா
துறைந்து தெய்வப்ர யாகைபின் மாகமா டுநர்க்குஞ்
சிறந்த வான்றிரைக் கந்தபுட் கரணியிற் றிளைத்து
நிறைந்த மூன்றுநா ளாடுநர்க் குங்கதி நிகர்க்கும். (சக)

முன்னு வோருக்கு முன்னுவோர் தங்கண்முன் னுகை
மன்னு வோருக்குந் தினந்தினம் படியுமா தவர்க்கு
நன்ன லந்தரு தீர்த்தங்க ளிருபத்து நான்குஞ்
சென்னி யாறுளார்க் கினியகா யத்திரிச் செல்வி. (சஉ)

எழுத்தொ ராறுநான் கானவுஞ் சுரர்பணிந் திறைஞ்சி
வழுத்து தாட்கும ரேசன்முன் புண்ணிய வடிவா
யழுத்து தீர்த்தமோ ரெழுந்ததா யாழிநீர்க் கயலின்
விழுத்த கும்பெயர் வேறுகொண் டிருத்தல்வேண் டினனியான்.

என்று நின்றுகா யத்திரிச் செல்விவாக் கெடுத்துக்
குன்றெ றிந்தவே லாறுமா முகத்தன்முன் கூற
நன்று ளத்தொடு கூறினை நாமுள மகிழ்ந்தா
மன்ற நிற்குதி யென்னநின் றுண்மறை மாதா. (சச)

வேறு.

கந்தன்முன் னுகந்த முகாரம்ப தீர்த்தங் களிற்றிளம் பிடியரு ளுர்த்தங், கொந்தலர்க் கமல வீட்டுளா ளுர்த்தங் கூறருஞ் சித்தர்தந் தீர்த்த, முந்திய திக்கு வேந்தர்தந் தீர்த்த முதியகா யத்திரி தீர்த்த, மிந்திரப் பவனிக் கேதுவ தாக்கு மினியசா வித்திரி தீர்த்தம். (சரு)

மேயவெண் கமலத் தாசிதன் றீர்த்தம் வெள்ளைவா ரணத்தருந் தீர்த்தந், தூயமுச் சூலக் காரிதன் றீர்த்தந் தோமறு குறக்கொடி தீர்த்த, மாய்விலா துயர்ந்த தூர்க்கைதன் றீர்த்தம் வயங்கொளி ஞானவான் றீர்த்தம், பாயொளி பரந்த சத்திய தீர்த்தம் பகர்தருந் தருமத்தின் றீர்த்தம். (சசா)

முனிவர்க டீர்த்தந் தேவர்க டீர்த்த முபல்பவ நாசன தீர்த்தங்
கனியுமா னந்தக் கந்தபுட் கரணி கம்பலை யறுதவான் சேது
நனிமுழக் கறுத பத்தெனுங் கங்கை நான்மறைக் கந்தமா தனத்தின்
புனிதமாந் தீர்த்த மா திரு தீர்த்தம் போற்றுசென் புலத்துளார் தீர்த்தம். ()

வேறு-

அன்ன தீர்த்தமுந் தீர்த்தத்தின் மகிமையு மவண்போய்த்
துன்னி மூழ்குறு முறைமையு மம்முறைத் தொடர்பாற்
பன்ன ருஞ்சிறப் பெய்திய பான்மையும் பரிவாச்
சொன்ன லம்பெற வியாதன்முன் சொற்றவா சொல்வாம். (௪அ)

இந்த மாநிலத் துயர்ந்தவான் றீர்த்தங்க ளியாவும்
வந்து சிந்துநன் னகர்வயின் மரகத மயூரச்
சுந்த ரச்சுடர்ப் பரிதிவை வேலொடுந் தோன்றுங்
கந்த வேடிருக் கருணையாங் கதியளிப் பதுவே. (௪௯)

அறந்தி றம்பினோர் தங்கட்கு மறத்துளோர் தமக்கு
நிறைந்த தேவர்க்கு மூவர்க்கு மியாவர்க்கு நெறியா
லுறைந்த வாறுமா முகத்தவ னருளெலா மொன்றாய்ச்
சிறந்தி ருந்தது மாவத னாரம்ப தீர்த்தம். (௫௰)

வேறு.

எவ்வமில் கவுரி கங்கை யமுனைகா விரிநீர்த் தோயை
கவ்வையோ டிரக்குந் தெண்ணீர்க் கவுசிகை வித்தை யாற்றி
னவ்விடைப் படிந்து ளோர்சே ரரும்பெற லாக்க நல்குஞ்
செவ்விநான் மறைக்கு மேலாந் தேவகுஞ் சரமான் றீர்த்தம். ()

மாதவக் குமரி தோகை வந்தனை பூத பாவை
வேதநற் சுருதி துங்க பத்திரை விபாத பூவை
காதலிற் பலகான் மூழ்குங் கதிதனைக் காட்டுந் தோட்டுச்
சீதளக் கமல வீட்டுத் திருமக டீர்த்த மாதோ. (௫உ)

வாலுவா கினிவி பாதை வைகைதே வகிமெய்ஞ் ஞானங்
கோலிய கண்ண வேணி கோதைகண் டகையாந் தீர்த்த
நூலுள முறையின் மூழ்கி னோர்க்குள கதியைக் காட்டுஞ்
சீலமா மறைக்கு மேலாய்ச் சிறந்துள சித்தர் தீர்த்தம். (௫௧)

தக்கதோ ருவதி பம்பை தாமசி சரையு நாதந்
தொக்கநீர்க் கம்பை துர்க்கை சுசோபனை யிவற்றி னொடு
மிக்கவான் கதியைக் காட்டும் வேதத்தின் மரபாய் நின்று
திக்கெலாஞ் சிறந்து காக்குந் தேவர்க டீர்த்த மாதோ. (௫௪)

நிருமதை தெசானை வாய்ந்த நிருவிந்தை தரபி யாதிக்
கருமகா சினியி னூடுங் கதிதருங் கமல வீட்டி
னருமறைக் கடவுள் போற்று மாறுமா முகத்துச் செவ்வே
டிருமுனஞ் சிறந்த காயத் திரியெனுந் தீர்த்த மாதோ. (ருரு)

பொன்மய முகரி கோதா விரிபெண்ணை பொருவில் சோதி
மின்மணி தரங்கந் தூற்றும் வேத்திர வதியி னூடு
நன்மைய தனைத்துங் காட்டு நான்மறை முடிவின் மேலாஞ்
சின்மயத் துருவாஞ் சாவித் திரியெனுந் தீர்த்த மாதோ. (ருசா)

விதிசைவ தரணி மந்தா கினிசிலா தலிய வேக
வதிவிரே பதிப லாகை வழங்குவான் கதிக ளெல்லாந்
துதியுட னளிக்கு ஞானச் சுவேதப்பூப் போலென் னெஞ்சப்
பதியினீங் காது மேவும் பாரதி தீர்த்த மன்றே. (ருள)

சந்திர பதாகை பன்னு சையுலோ கிதைவி பாதி
சிந்துவா ருதையின் மூழ்குந் திறன்வழா தென்று நல்கு
முந்துநான் முகனைக் குட்டு மோதிரச் செங்கை யான்முன்
னந்தர நாதற் றுங்க யிராவத தீர்த்த மம்மா. (ருஅ)

சரசோதி சோணை யாற்றிற் றண்புனன் மூழ்கங் காலும்
பொருநைபூங் கம்பை யாற்றிற் புகுந்துளோர்க் களிக்குங் காட்சி
விரைவுட னுதவுங் கஞ்ச வீட்டுளா னகந்தை நீக்கி
யொருதலைக் கபால மேந்து மொருவன்மா தீர்த்த மாதோ. (ருகூ)

அம்பிகை தலங்கண் மூன்று மருள்பொழி கண்ணின் பேராய்ப்
பம்பிய தலமோர் மூன்றும் பரவினர்க் குரிய ஞான
நம்புற வளிக்கும் வேற்கை நாயகன் புயமி ராறுங்
கொம்பினிற் படரு மானின் குறக்கொடி தீர்த்த மன்றே. (சா0)

வேறு.

இகத்தி லேசெயு மிடும்பை நீக்கியே
மகத்து வப்பரம் வழங்கு மாறுமா
முகத்தன் முன்னரே முழங்கிக் காட்டிவான்
சுகத்தை யீந்திடுந் துர்க்கை தீர்த்தமே. (சாக)

பரவு வார்க்குமுட் பரவ நெஞ்சகங்
கருது வார்க்குநற் கதியைக் காட்டுமாற்
சுரர்வ ணங்குதாட் டோகை யான்முன
நரலை வாய்த்திரு ஞான தீர்த்தமே. (சாஉ)

அல்ல லியாவையு மகற்றி நீக்கருந்
தொல்லை யூழறத் தொலைத்து வேதநூற்
கல்வி காட்டிச்செங் கமலத் தாளருட்
செல்வங் காட்டுஞ்சத் தியத்தின் றீர்த்தமே. (௫௩)

தொடர்ந்த மும்மலத் துருசு நீக்குவா
னடங்க லும்படிந் தாடி ஞோர்க்குறுந்
திடப்பெ றத்தருஞ் செயந்தி யம்பதித்
தடங்கொள் வாரிவாய்த் தரும தீர்த்தமே. (௫௪)

இருவினைத் தொட ரிரும்பு தேய்த்திடற்
கரமெ னச்சிறந் தாறு மாமுகக்
குருப ரற்குமுன் குலவிக் காட்டுநூன்
முராற ரும்பல முனிவர் தீர்த்தமே. (௫௫)

காம மேமுத லாறுங் காய்ந்துநற்
சோம சேகரச் சுருதி யான்பதப்
பூம லர்க்குளாப் புகுத்த ஞானத்தின்
சேம மாம்பல தேவர் தீர்த்தமே. (௫௬)

கோப மாய்த்தவக் கோதி லார்சொலுஞ்
சாப மியாவுக்குந் தாப மாகியே
தீப மாலையா னிறைந்த சந்நிதிப்
பாப நாசமாய்ப் பரம்பு தீர்த்தமே. (௫௭)

ஈட்டுந் தீவினைக் கிலக்க மாகவே
மூட்டுஞ் சஞ்சித முடித்து மோலிநீர்
சூட்டு வான்பதஞ் சூட்ட மேற்கதி
காட்டுங் கந்தபுட் கரணி யானதே. (௫௮)

வைய மியாவுக்கு மலினந் தீர்த்தவே
லையன் பாதமா மம்பு யத்துணை
கையி னெல்லிபோற் காட்டு மாதவச்
செய்யு ளாய்வருஞ் சேது தீர்த்தமே.
வைப்பிற்
ங் கினவால். (௰)

முத்திக் கின்பமூ லிகையு மாய்த்தெரி
சித்துப் போற்றுவார் செனன மாகுமா
வத்துக் காக்கவா னமுத மாகுமாற்
பத்துப் பேரிறைப் பரம்பு கங்கையே.
ர்ந்து
ந. (௰௧)

இந்த்ர சாலமா யெடுத்த மானிடர்க்
கந்த மாதியில் லாத வாதியான்
சந்த நாண்மலர்ச் சரணங் காட்டுமாற்
கந்த மாதனக் கருணைத் தீர்த்தமே. (எக)

கோதி லாததங் குலத்து ளோர்கதிக்
கேது வாகநீ ரெள்ளி றைத்திடு
நீதி யார்க்கெலா நெறியைக் காட்டுமான்
மாதுர் தீர்த்தமாய் வயங்குந் தண் புனல். (எஉ)

ஒருத ரம்படிந் துள்ளங் கையினீர்
மருவு மெள்ளுடன் மறித்து விட்டுளா
ரிருமை யுஞ்சிறந் திருக்க வீசன்ரு
ளருளுந் தென்புலத் தார்க டீர்த்தமே. (எங)

நாட்டுந் தீர்த்தமோ ராறு நான்கையும்
பாட்டி னுற்றினம் பகர மூழ்கநீ
டேட்டி னுட்டிக்கொண் டெழுதிப் பூசிக்க
மூட்டு வார்க்குமெய்க் கதியை மூட்டுமே. (எச)

செயந்திபுர வைபவமுரைத்த வத்தியாயம் முற்றிற்று.
ஆ திருவிருத்தம் ௱ஙச.



## நான்காவது: திருவவதார வத்தியாயம்.

சுரும்ப ரின்னிசை முரன்றுபண் பாடுதண் டுளவக்
கரும்பு யற்படி வத்திருச் செங்கணன் கனகத்
தரும்பி தழ்க்கம லாசனத் தண்ணல்வா னரசு
விரும்பு வச்சிர பாணிமற் றுள்ளவான் விபுதர். (க)

அருந்த வங்களு மறைகளு மவரவ ரரசு
மிருந்த ரனமு மவுணர்தங் தீமையா லிழந்து
முருந்தின் வாணகைக் கவுரியோர் பங்குடை முதல்வன்
பொருந்து வெள்ளிமால் வரைபுகுந் தவனடி போற்ற. (உ)

அன்ன பான்மையை யுணர்ந்திமை யத்தர சளித்த
கன்னி வார்முலைக் களபநாற் புயந்தொறுங் கமழத்
தன்ன தாலயங் கணப்பிலா துளத்தொடுந் தழுவிப்
பன்னெ டும்பக லிருந்தனன் யாவர்க்கும் பகவன். (ங)

நெற்றி நாட்டத்த னிந்தவா றமைந்தரு ணெறியை
முற்று நாடிய வமரர்க ளியாவரு முறையிட்
டற்ற மில்லதோர் புணர்ப்பிலுண் டாகிய போகத்
துற்ற தன்மையெத் தன்மையோ யாமிவ ணுரைக்கின். (௪)

பரையு நீயுமுண் டாக்கிய போகத்தின் பாரந்
தரைம டந்தையும் பரிப்பரி தாமெனத் தளர்வா
ளுரைசெ யும்பொழு தேழையேம் பையுளுற் றுழைவேம்
விரைய நீக்குதி யெனச்சுரர் குழாங்கொடு விளம்ப. (௫)

மூர லுந்திரு வுள்ளமுங் கனியமுக் கண்ண
னார ருட்கொடு சயனத்தை நீத்தன மாதி
வீரி யப்பொறி நம்வயி னீங்கின வெற்பி
னூரி பக்கமும் வைத்தில மதற்கிட னவில்வீர். (௬)

என்று ரைத்தசொற் கேட்டுணர் கின்றவா னிமையோ
ருன்ற னக்குள மூர்த்திக ளெட்டுள வவையிற்
றுன்று கின்றதோர் பார்மக ளாகுமத் தொடர்பான்
மன்ற வைத்தெமைக் காத்தரு ளெனச்சிவன் மகிழ்ந்து. (௭)

நிலம டந்தைபால் வீரியஞ் சேர்த்தலு நிலமான்
பெலமொ டுங்கிவெப் படையவீ ரியவழற் பிழம்பைப்
புலன டுங்குற வெயர்ப்பெழ வுடலம்வெய் துயிர்த்துச்
?சுலன னைக்கொளத் தேவர்க ளறைந்திடச் சுமந்தான். (௮)

வெய்ய செந்தழ லுங்கமாட் டாதுள மெலிந்துற்
றைய கோவெனக் கங்கையிற் சேர்த்தலு மவடான்
மெய்யி னூற்பனி மால்வரை யொருபுடை முளரிச்
செய்ய பூஞ்சர வணத்திடப் பெருமிதஞ் சிறந்து. (௯)

விளங்கும் வீரிய காந்தியி னூற்சுடர் மேய
களங்க றுத்தவோ ரெட்டெனு முருவத்திற் கவின்று
வளங்கொ டெண்டிரை பரம்புநீர்ப் புணரிசூழ் வைப்பிற்
றுளங்கி யெங்குமவ் வான்பொரு ளெனத்துலங் கினவால். (௰)

வின்னு தற்கரி தாகிய வீரிய வெற்புப்
பொன்னெ னக்கதி ராயிர கோடியிற் பொலிந்து
நன்னி ருட்பர சமயவோர் நாமற வீட்ட
வன்னி லைச்சுடர் வேலிறை யாயவ தரிக்க. (௰௧)

? அக்கினி

இரண்டு மூன்றிடத் துற்றதாற் கந்தனென் றிசைத்துத்
திரண்ட வானவர் கார்த்திகை யாங்கெரி யையுரைச்
சுருண்ட குஞ்சியஞ் சேய்க்குநம் வரைத்துணை முலைப்பா
லரண்டி டாதுநீ ரூட்டுமி னென்றறைந் தனரால். (௰உ)

அந்த வேலையி லறுபத்து நாற்கலை யனைத்து
முந்து தோன்றிட வுணர்ந்தொன்பான் மணியின்மொய்ம் பினர்தாம்
வந்து மொய்த்திட வள்ளியை மணஞ்செய்து வயத்தால்
வெந்தி றற்கொடுஞ் சூருரம் வேலினால் வென்று. (௰௩)

சுரர்க ளியாவருந் துதித்திடச் சுந்தரத் தோகை
திரும ணச்செயல் புரிந்தபின் றேவர்கோன் முதலா
விரவு தேவர்க ளியாரையு முருகவேள் விளித்துக்
கருணை கூர்ந்தவர் தங்கள்பா லின்னவை கழறும். (௰௪)

சிந்து தீரமு மடுக்கலு நதிதருஞ் சிறப்புங்
கொந்த லர்க்கம லாசனத் திருவருட் குறிப்புஞ்
சுந்த ரம்பெறு மோரிடன் வேலைநீர் சூழ்ந்த
வந்த முற்றசீர்ப் பாரத கண்டத்தி னறைவீர். (௰௫)

இன்ன செய்கைபெற் றிருக்குமோ ரிடத்தினி திருந்து
மன்னு கின்றமா முனிவர்க்குந் தேவர்க்கும் வையந்
துன்னு மாக்கடங் குழுவுக்கு மருண்மழை சொரிந்து
நன்ன லம்பெற வீற்றிருப் பாமென நவில. (௰௬)

தெரிந்த வானவ ரியாவரு மம்முறை தெளிந்து
விரிந்த போதத்தா லடியரேம் விரும்பினே மேனாட்
புரிந்த மாதவப் புணர்ப்பினு லீதுநீ புகன்று
யருந்த வந்தரு செயந்திநன் னகரநின் னருள்போல். (௰௭)

புணரி வான்றிரைத் தரங்கமும் பொற்றையும் பொருப்பின்
மணிவ ரன்றிய சாகர சங்கம வளத்தி
னணிவி ளங்கிய பொருநையுந் திருமக ளன்பின்
குணமு முள்ளது செயந்திநன் னகரங்கூ றுதுமால். (௰அ)

திருவவதாரவத்தியாயம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௱௫உ.

—•○◇○•—

## ஐந்தாவது:

# செயந்திபுர அத்தியாயம்.

கந்த மாதனப் பிறங்கலின் கவின்களுங் கனிதேன்
சிந்து தென்பொரு நைத்திரு நதிச்சிறப் பனைத்து
முந்து மாதவச் செயந்தியம் பதிவளன் முழுது
மெந்தை கேளென வமரர்க ளிறைஞ்சினின் றிசைத்தார். (க)

காந்த ளுங்குர வுங்குர வந்தரு கடம்புஞ்
சாந்த முந்தெய்வத் தன்மையும் வல்லியுந் தழுவி
வாய்ந்த பன்மணிக் குவைகளுந் தாங்கிய மரபாற்
சேந்த னொத்தது முத்தமிழ்ச் சந்தனச் சிலம்பு. (உ)

குரவுங் கொன்றையுங் கூவிளத் தணியுங்கூ ரெயிற்ற
வரவுந் திங்களுங் கங்கையுந் தரித்துவா னகிலம்
பரவுந் தன்மையும் பெற்றுல கத்துயிர்ப் பயிரின்
விரவுஞ் சங்கர னொத்தது சந்தன வெற்பு. (ங)

சொல்லு மாழியா னின்றிறைஞ் சப்படுந் தொடர்பா
லெல்லை நின்றள விடற்கரி தாகிமீ தெழுந்து
பல்வ ளத்தொடை யானனஞ் சிறந்துபைங் கொடியும்
புல்ல லாற்சிவ னொத்தது சந்தனப் பொருப்பு. (ச)

அறுகும் வன்னியுஞ் சிகரமீ தாதரித் தயில்வே
லுறுகு மாரநா யகன்றனைத் தன்வயி னுடைத்தாய்க்
குறுகு மாரியை யிடனமைத் தும்பர்கைக் கொளலாற்
பிறையின் வேணியா னொத்தது சந்தனப் பிறங்கல். (ரு)

சுரரு மாதவக் குழுக்களும் விழுத்தகு துணர்ப்பூந்
தருவுஞ் சுந்தர வரம்பையும் வேழமுஞ் சசியும்
பொருவின் மேனகை யும்புடை துலங்கலாற் பொன்னாட்
டரசன் பேரவை போன்றது சந்தன வடுக்கல். (சா)

இரவு நண்பக லும்விழி யிமைப்பிலா திருந்து
கருத ரும்பல வருத்தமு மேதினங் கவர்ந்து
பரவும் வானகக் குறியைமேற் காட்டிப்பண் பில்லா
விரக மங்கையர் போன்றது சந்தன வெற்பு. (எ)

திணிகொள் சாந்தமு நானமும் பலபல திறத்த
பணிக ளுங்களி யானைவெண் கோடும்பன் மணியுங்
கணித மின்மருந் தானவுந் தனதுகைக் கொளலால்
வணிக மாக்களை நிகர்த்தது சந்தன மலையே. (அ)

மழைக்கண் ணீரிறைத் தருஞ்சினைக் கையின்மல ரேந்திக்
குழைத்த தாதகத் தடக்கியோர் நிலைமையிற் குறுகி
யழுத்து பேரளி யொடுசெவ்வே டணையருச் சிக்கத்
தழைத்த மாதவர் போன்றது கந்தமா தனமே. (கூ)

தூங்க லோசையுஞ் செப்டலி ளோசையுந் துள்ள
ருங்கு நீர்மையி னோசையுங் கனியுந்தண் பூவு
மோங்கு காயுந்தே மாவுங்கூ விளமுமொன் றலிற்சீர்
தேங்கு செந்தமிழ் போன்றது சந்தனச் சிலம்பு. (௰)

மாலி னுந்தியின் விளங்கினான் மறைமுறை வகுத்துக்
கோல நான்முக மாகியெண் கையுமேற் கொண்டு
பாலி னன்கலை மானையும் பரித்துப்பங் கயத்தோன்
போல நின்றது தென்றலஞ் சந்தனப் பொருப்பு. (௰க)

கந்த மாதனச் செய்கையைத் தேவருங் கருத்தின்
வந்த வாறுனக் குரைத்தன மிதுநிற்க மலர்த்தேன்
சிந்து தென்பொரு நைத்திரு நதிச்சிறப் பனைத்து
முந்து மார்வத்தா லறைகுதுங் கேளென மொழிந்தார். (௰உ)

விரைத்த மான்மத மாமதத் தானமேற் கோலிக்
கரைத்து முக்கனி யவலொடு கடலையுங் கலந்து
திரைத்து வான்மருப் புடனெடுத் திமைத்தலாற் செய்ந்தி
புரத்து நான்மறைக் குஞ்சரம் போன்றது பொருநை. (௰௩)

கூன வெண்பிறை சங்கெனக் குரண்டவான் சிறைபிற்
பேன மின்றறக் கால்பல சடையினிற் பிறங்க
வான வம்புயக் கபாலநா வாய்க்கர மமைத்துப்
போன கப்பெறப் போந்தவர் போன்றது பொருநை. (௰௪)

அரவந் தாங்கிவன் றேலெடுத் தம்பர விடமார்ந்
திருமரு ருங்குநால் வேதபா ரகர்படிந் திறைஞ்சச்
சுரரும் வந்தனை புரிதர யாவருந் தொழப்
புரமெ ரித்தகண் ணுதற்பரன் போன்றது பொருநை. (௰௫)

செங்க டம்பெடுத் துங்குறிஞ் சித்திணை திரிந்துஞ்
சங்க முந்தியுஞ் சீரலை வாய்க்கரை சார்ந்து
மெங்கு மாசுர மொழித்தலாற் குமரவே ளென்னப்
பொங்கு கின்றது மன்றலந் தென்றலார் பொருநை. (௰௬)

விரவு பூந்துணர் சிந்துசெந் தாதின்மெய் சிவந்து
மருவு கந்தர நுழைந்துவந் தமரர்வாழ்த் தெடுப்பப்
பரவை மேனடந் தொற்றெனச் சூரன்முன் பகர்ந்து
பொருத வீரவா குவைநிக ரானது பொருநை. (௰௭)

வரையி னிற்பிறந் தீசர்தம் மேனியு மாகித்
தரைம கட்குமே லாய்ச்சர மசரமுந் தழைத்துக்
கருவு யிர்ப்பதற் கின்னருண் முழுவதுங் காட்டிப்
பொருவில் கற்புடைக் கவுரிபோ லானது பொருநை. (௰௮)

சங்க மேந்தியுஞ் சக்கரந் தரித்துமா தரையுந்
துங்க முற்றசெம் பொன்னொடு தழுவியுந் துணர்ப்பூங்
கொம்பு யிர்த்தமா மருதொடித் தகிலமுங் கொளலாற்
புங்க வர்க்கமு தளித்தமா லொத்தது பொருநை. (௰௯)

மலர்ப ரித்தன மேற்கொண்டு சதுமறை வகுத்திவ்
வுலக னைத்துமுண் டாக்கியு மாதவத் தொருங்காய்ப்
பலக லைத்திரு நாமிசை பழகலாற் படைத்தோன்
பொலிவு பெற்றது கற்றமா தவர்தொழும் பொருநை. (௨௰)

பலத ருக்களும் வெள்ளைவா ரணமுந்தன் பாலிற்
செலநி றைத்தெழு மீனினங் கண்களிற் றிகழத்
தலைமை பெற்றிமை யோர்தினந் தாழ்ந்திறைஞ் சுதலாற்
பொலனி லத்திறை போன்றதா லான்றநீர்ப் பொருநை. (௨௧)

ஆசின் மிக்குமென் மதுரமாய்ச் சித்திரத் தளவி
யோசை பெற்றுவித் தாரமா யைந்திணை யுடன்று
காசு நாண்மலர் பிறப்புடன் காட்டிமெய்க் கலசப்
பூசு ரன்றமி ழொத்தது வித்தகப் பொருநை. (௨௨)

மன்னு வெங்கர டங்கவிழ் தேறன்மா றுது
சென்னி யம்புவி மேற்றலை கொண்டுதென் னரங்கந்
துன்னி வானவர் முனிவரர் தினந்தினந் தொழலாற்
பொன்னி நன்னதி யன்னது துன்னுநீர்ப் பொருநை. (௨௩)

வாய்த்த மங்கையர் மஞ்சளும் வாள்விழி மையுந்
தேய்த்த பாலொடும் படிதலின் மும்மையுஞ் சிறந்து
ளேத்தும் வாணியும் யமுனையுங் கங்கையி னியல்பும்
பூத்து வெம்பவங் காய்த்தருள் கனிந்தது பொருநை. (உச)

ஓங்க லின்களி யானைமேற் கொண்டுகா லூற்றுப்
பாங்கின் முல்லைய சோகமா நீலம்பங் கயப்பூத்
தாங்கி வான்படை வீட்டிளஞ் சோலைசார் தலினாற்
பூங்க ழைச்சிலை மன்மதன் போன்றது பொருநை. (உரு)

கரைக டந்துளங் கலங்கிவான் பொருளெலாங் கவர்ந்து
விரைக லந்தமென் மலருஞ்செந் தாதுடன் விளங்கி
யுரனொ டும்பல வணைதொறும் படுத்துல கத்திற்
பொருண்ம டைந்தைய ரொத்தது தத்துநீர்ப் பொருநை. (உசு)

மணிவ ரன்றிய கடனையு மணிமுத்த நதியுந்
திணிகொள் சந்தனச் சித்திர நதியுஞ்செம் பவளம்
பணில முந்திய பச்சைமா நதியும்பாங் கிடராய்ப்
புணரி யாடுவான் போவது போன்றது பொருநை. (உஎ)

பொருநை மாநதிப் பெருமிதஞ் சிலசில புகன்றே
முருக கேளெனக் கடவுள ருச்சிமேன் முகிழ்த்த
கரத லத்துடன் செயந்தியம் பதிவளன் கந்தன்
றிருவு ளங்களி தரநனி மகிழ்ந்துசெப் பினரால். (உஅ)

வேறு.

வரியரவு மணியிசைக்கும் பாணருக்கும் வாணருக்கு மழையே போல, வரியரவ மணியினுடன் பாலனமுந் தினங்கொடுத்து மகிழ்கின் றாரு, மிரவலருக் கைந்தருப்போற் றினந்தினமுங் கொடுத்துமகிழ்ந் திருக்கின் றாரு, மிரவலருக் குடைந்துமடந் தையரிடந்தா டொடர்ந்துபடிந் திறைஞ்சு வாரும். (உகூ)

கதிர்வரவு தனைப்பார்த்துக் கொண்டுழவர் பலராடு களஞ்செய் வாருங், கதிர்வரவு தனைப்பார்த்து வாளுழவர் பலராடு களஞ்செய் வாரும், பதிகமுடன் றிருமுறைபார்த் தங்கங்கே படித்தருத்தம் பகர்கின் றாரும், பதிகமுடன் களைக்குவளை களையுமெனப் பள்ளரிடம் பகர்கின் றாரும். (௩௰)

வே று.

தளவம் புயத்து மடந்தையெனத் தழைப்பார் தலைவ ருடனூடித், தளவம் புயத்தி னிடைநீபத் தண்டே ளெழுகும் பெருக்காற்றிற், களபந் திமிரம் புயப்பாகர் கருத்துக் கடங்காக் கறையடிப்போர்க், களபந் திமிரக் குருளையெனக் களிக்கு மளிக்கா வகமெல்லாம். ()

வே று.

கரும்புருவச் சிலைமடவார் கந்துகநின் றுடவுயர் கவின்செய் மாடங், கரும்புருவச் செலுமதன்மேற் கற்பகப்பூந் தேன்சாய்க்குங் காமர்வீதி, கரும்புருவக் குரிசிலன்னார் வளர்க்கவளர் கங்குனிறங் கடுக்குங் காழ்த்த, கரும்புருவை செம்மையும்போ ராட்டோதை யெவ்வயினுங் கனைப்ப ருதால். (கூஉ)

வே று.

தானத் தோடு தழுவுமவ் வாரணந்
தானத் தோடு தழுவுமவ் வாரணம்
வானத் தோடு மலையும் வலம்புரி
வானத் தோடு மலையும் வலம்புரி (கூகூ)

செல்லு மீனுந் திகழ்தரு மாசினி
செல்லு மீனுந் திகழ்தரு மாசினி
யெல்லை நீக்கு மிருஞ்சுனை யாரமே
யெல்லை நீக்கு மிருஞ்சுனை யாரமே. (கூச)

காலுந் தேறல் கழனியின் கண்ணெலாங்
காலுந் தேறல் கரும்புறு கண்ணெலாஞ்
சாலி யூடு செலுந்திரட் சங்கமே
சாலி யூடு செலுந்தருச் சங்கமே. (கூரு)

ஓடை காட்டு மொளிர்வனப் போதக
மோடை காட்டு மொளிர்வனப் போதகங்
கோடு காட்டுங் குளிர்ந்ததண் ணாரமே
கோடு காட்டுங் குளிர்ந்ததண் ணாரமே. (கூசா)

வாலி பத்தின் மதர்ப்புமிக் காகிய
வாலி பத்தினை யொப்பவர் வைத்துள
மூல மட்டுறு முட்கனி யின்பலா
மூல மட்டுறு மொய்ப்பன வண்டெலாம். (கூஎ)

வான ரம்பை வளவயற் கோடெலாம்
வான ரம்பையி லும்மரக் கோடெலாம்
பான லத்திடை பாயுஞ்செந் தேன்களே
பான லத்திடை பாயுஞ்செந் தேன்களே. (௩௯)

வே று.

வாழ்த்தலை மதகு தோறு மடுத்தலை கொழித்துத் தெண்ணீர்
வீழ்த்தலை நோக்கி நாரை மீசைத்தலை விரும்பி வாளைக்
காழ்த்தலை முனைவாய் குத்தக் கதிர்த்தலை சாய்த்துத் தண்சாய்க்
கீழ்த்தலைப் பதுங்கி மீண்டு கிளர்ந்தலை புனலிற் பாயும். (௩௯)

காரெனத் திரண்டு பால்வாய்க் கன்றுள்ளிக் கனைத்து லாவு
நீரிடைப் படிந்த மேதி நெரிமருப் பூர்ந்த சங்க
மாரமுத் துகுப்பத் திங்க ளமுதவான் றுரை யென்னக்
கூரிதழ்ப் பசுந்தாள் வாசக் குவளைவாய் மலரு மாதோ. (௪0)

வண்டலை யிழைக்கும் வாட்கண் மகளிர்பூங் காம ரோதி
கொண்டலென் றயிர்த்துத் தோகைக் குலஞ்சிறை விரிப்ப வாசத்
தண்டலை கிடந்த மேகந் தண்புனல் சொரியுந் தோறும்
விண்டலை யளப்பச் சாலி வேலிமீக் கிளரு மாதோ. (௪௧)

வீதியின் மறையோ ரோதும் வேள்விக்கா ரிசைநூல் கேட்டுப்
போதுகொய் கிளியும் பாடற் பூவையு மிழற்றுந் தீஞ்சொற்
கேதமின் முனிவர் தேவர் கேட்டவி நமக்குண் டாமென்
றேதிலாப் பொதும்ப ரெல்லா மிமைப்பிலா திருப்பர் மாதோ. (௪௨)

அம்புரு வங்கோ டாம லயில்விழி யிமையா டாமற்
றம்புரு மேவே மான தானத்திற் கான மூட்டிக்
கம்புருக் களம்விம் மாமற் கனியனார் பாடுந் தோறுந்
தும்புரு முதலோர் கேட்டுச் சுடார்முடி துளக்கு வாரால். (௪௩)

வாளொளி மதியுந் தங்கள் வதனமும் பதண மாதர்
கேளுட னிருந்து செங்கைக் கிசலயக் கவின்செய் யாடி
நீளொளி முழுது நோக்கி நிழன்மதி களங்கா மென்று
சாளரங் கதவு சார்த்தித் திங்களைத் தடைசெய் வாரால். (௪௪)

ஒருதலைக் காமத் துற்ரு ரோவியத் தலைமை பூண்டோர்
வருதலைக் குறித்து நோக்கி மாணுருக் கிழியிற் கோட்டித்
தருதலைப் புரிதி ராயிற் றனதனைப் பாக்கு வோமென்
றிருதலைப் பேரி ணூரு மிரங்கினொந் தழுங்கு வாரால். (௪௫)

சூதினிற் பொருது வென்ருேர் தோற்றவர் நிதியம் வாங்கி
வீதியிற் குவித்த றோர்ந்து வெள்கிய தன்மை யாலோ
தாதகிச் சடையான் ருேழன் றன்மையு மாக மேனிக்
கேதமுற் றியக்கர் வேடத் திருந்தன னளகைக் கோமான். (௪௬)

ஆறெனு மங்கத் தாற்றி லைந்துமா மகத்தின் செய்கை
தேறுநான் மறையோ ரெல்லாஞ் சிறந்துமுப் போது மாற்றிக்
கூறிரு வினைக ணீக்கிக் குமரநா யகன்ரு ளொன்றே
பேறென விதயத் தெண்ணிப் பெருமிதத் தடைவ ரம்மா. (௪௭)

மைந்தர்தஞ் சிறுபொற் றேரும் வாம்பரி மகரூன் முற்றி
யந்தணர் வருந்திண் டேரு மரசர்மாக் கடவு தேரு
மிந்திரன் முதலாந் தேவ ரேறுபொற் கொடிஞ்சித் தேருஞ்
சந்தத மளவ ளாவித் தலைமயக் குற்ற வீதி. (௪௮)

வேறு.

ஏர்க்காலின் றலைபிடிப்பா ரிணைக்காலி லெழுந்தகய லினமார்த் தாண்டன், றேர்க்காலின் வெடிதாவிச் செருக்காற்றிங் களினமுதச் சேறா டாடிப், போர்க்காலிற் போய்வானப் புதுக்காலிற் குடைந்தாடிப் பொழியு மேக, நீர்க்காலின் மீண்டிறங்கி நெடுங்காலின் றலையுலவி நிகழு மாதோ. (௪௯)

வேறு.

மதுநவ பானஞ் செய்யு மாதர்கண் மாட மேற்போய்
மிதுனநல் யாமென் றெண்ணி விண்ணிடைக் கரங்க ணீட்டக்
கதுமெனச் சேடி மார்கள் கல்லென நகைத்துத் தங்கைப்
பதுமயாழ் கொடுத்து முன்னர்ப் பண்பினை யமைத்தல் செய்வார். ()

வேறு.

பழமறை முறைமுறை தெரிதொனியும் பலசுரு தியினிசை பயிற்ருெனியும், விழைவுறு வதுவையின் முழவொலியும் விகலமின் மனுநெறி பயிற்ருெனியு, மழல்விழி மதகய முரறொனியு மயில்விழி யினர்நட மிடுமொலியு, மழையென வுதவினர் தமதொலியு மறிகட லினுமொலி தருமறுகு. (௫௧)

தரளவெண் மணிபல தரமிடுவார் தமரெதி ரெதிர்தலை விலைபகர் வார், பருமணி வயிரமி தெனவறைவார் பவளமி தொளியில தென விகழ்வார், விரைகமழ் பரிமள நலதெனவே மிகுதிலை யிதுபண வெ டை யினுமே, யரிதென விலைபக ரிளைஞர்கள்கூ றமலைகள் கடல்பொ ரு மணிமறுகே. (௫௨)

பரிநிரை விலையொடு சுழிதெரிவார் பணிமணி யொருவயின் விலையிடுவார், கரிநிரை யொருபுடை விலைபகர்வார் கதிர்திகழ் கனகம துரையிடுவார், மருமலி மலையச நிலைதெரிவார் வடகலை தமிழுரை முறையறைவார், விரிகலை பலபல விலைதெரிவார் மிகுதிக ளளவில தெருநிரையே. (௫௩)

விரிதரு கொடைபொழி வியன்முரசும் வியனுறு வதுவையி னதிர்முரசு, மருவல ரடன்முடி கொளுமுரசு மறையவர் மகமுறை தருமுரசு, மருவிமு மதகய மறைபுனலுண் ணமைதியி னடிபடு கடி முரசு, மிரவொடு பகலுமன் மதன்முரசி னிகல்புரி வனசில சிலம றுகு. (௫௪)

சுளுகுகள் விவரமொ டுரையிடுவார் சுடர்விடு மணிமுடி விலையிடு வா, ரொளிவளை மணிபல தரமிடுவா ருறையிடு சுரிகைசெய் தூவரிடு வா, ரளியொடு மிரவல ரெதிரெதிர்கூஉ யறுசுவை தருமச னமுமிடு வார், களியின ரெழுதிய கிழியெதிரே களியொடு திரிபவ ரளவிலரே.

மலர்மக ளரியுடன் வருவதெனு மணிகெழு சிவிகையி னிடை வருவா, ரிலைதளிர் மலர்சிவ னடியிடவே யிரவினி ணெழுமுன ம வைதெரிவார், பலகலை தெரிகுர வரினிடையே பணிவிடை முழுவது முறைபுரிவார், தலையறு சதுர்மறை முறைமுறையோ துநர்பெரு கியதெரு வளவிலவே. (௫௬)

வேறு.

இனைய தாகிய செயந்திநன் னகரென விமையோர்
முனைவை வேலவன் முன்னநின் றெடுத்துரை மொழிய
வனைய செய்கையை யாறுமா முகப்பிரா னறிந்தே
வினைய மோர்ந்துபோர் வீரவா குவுக்கிவை விளம்பும். (௫௭)

வீர வாகுநீ கேளென யாவர்க்கு மேலோன்
பேர வாவுறு நினக்கிளை யார்தமைப் பெரிதாம்
பாரி டத்தொகை யவர்தமைப் பதாதியாந் தலைவர்
யாரை யும்மிவண் கொணருதி யாலென விசைத்தான். (௫௮)

இசைசெய் வாசக மனைத்தையுங் கருத்தினு லெண்ணி
விசைய மொய்ம்பனும் பாரிடத் தொகையையு மேலா
மசைவில் பூதசே னாதிப ரனைத்தையு மடங்காத்
திசைதொ ழும்பினோர் தம்மையும் விளித்தனன் சிறந்தான். ()

விளித்த காலையிற் பூதங்க ளியாவுமுள் வியந்து
களித்து வானமும் வையமு மொன்றெனக் கலந்து
துளிக்கும் வல்விடச் சேடனும் பணாமுடி துளக்கி
நெளிக்க நின்றுகூத் தாடின வயங்கொடு நிரம்பி. (௫௰)

வந்த காலையின் மாருதத் தலைவனீ மனத்தின்
முந்து தேரினைக் கடவுதி யாலென மொழிந்தே
யிந்தி ரன்மகண் மான்மக ளொடுங்கடி தெழுந்து
சிந்து ரப்பகைப் பீடநின் றொருவினன் சேயோன். (௫௧)

சீய மெல்லணைப் புறந்தனை நீங்கிச்செங் கதிரின்
பாயொ ளிச்சுடர்ப் பாதுகை மேற்பதஞ் சேர்த்தி
நாய கன்பெருங் கோபுர வாயினி னண்ணி
வாயு வுக்கிறை கொணர்ந்ததே ரேறினன் மகிழ்ந்தே. (௫௨)

தேரி னேறிய வேலையிற் செம்பொனி னடைப்பை
மார னேந்தினன் களாசியை வருணனின் றெடுத்தான்
கோர வீரவாள் கூற்றுவன் றனதுகைக் கொண்டா
னேரு லாவிய சாமரை யிந்திர னெடுத்தான். (௫௩)

ஆத வத்தனிக் கடவுளு மமுதவான் றுரைச்
சீத வெண்மதிக் கடவுளுங் கொடையுடன் செல்ல
நாத மிக்கெழு தந்திரி நகங்கொடு தடவி
மாத வத்துயர் தும்புரு நாரதர் வணங்க. (௫௪)

கால மேழுடைக் கடவுடீ வர்த்திகை தாங்கிப்
பாலின் வந்திட நிருதியுங் குபேரனும் பரவி
யால வட்டமும் விசிறியுங் கைக்கொள வலராக்
கோல நாண்மலர் மாரிதூஉய்க் கடவுளர் குழும. (௫௫)

ஆயி ரக்கம லாசனத் திறையவ னன்னத்
தூய புட்கொடு புறஞ்செலச் சுடர்மணிக் கிரணப்
பாயொ ளிப்பணிப் பாயலான் படரிருஞ் சிறைய
நாய கத்தனிக் கருடன்மீ தேறின னடப்ப. (௫௬)

சுரர்க ளார்த்தனர் முனிவர்க ளார்த்தனர் தொழுதே
நரர்க ளார்த்தன ரார்த்தன மறையொரு நான்குந்
தரையின் மேயசீ ரறஞ்சிறந் தார்த்தன தரங்கப்
பரவை யார்த்தென வார்த்தன பாரிடப் படையே (கூஎ)

துடிமு ழங்கின பேரிகை முழங்கின சொரிகா
ரிடிமு ழங்கின போலவான் றுந்துபி யிரைத்த
படக மேங்கின பதலைகள் பரம்பின பம்புங்
கடன்மு ழங்கின போலொலி பரந்தகா களமே. (கூஅ)

வேறு

விண்ணவர் பெருமான் வந்தான் வேனெடும் படையான் வந்தான்
பண்ணவர் மகுடந் தேய்க்கும் பதாம்புயக் கடவுள் வந்தா
னண்ணலங் குமரன் வந்தா னாறுமா முகத்தன் வந்தான்
றண்ணற வொழுகு நீபத் தாமவேள் வந்தான் வந்தான். (கூகூ)

கழுமலத் துதித்த ஞானக் கான்முளை வந்தான் வந்தான்
மழையெனக் கருணை யெம்பால் வழங்கிய செவ்வேள் வந்தான்
றழையுமுச் சங்கத் தேறுந் தலைமைப்பா வலவன் வந்தான்
செழுமறைப் பெருமான் வந்தா னென்றன சின்ன மெல்லாம். (எ௰)

ஆறுமா முகத்துப் புத்தே ளணிகெழு தேரி னீங்கிக்
கூறுநான் மறையு மொன்றுங் கோயிலிற் குறமான் யானைப்
பேறதாந் தெய்வ யானைப் பெண்ணொடு மடியர் வாழ்த்த
மாறிலாக் குமர மூர்த்தி மகிழ்ந்துவீற் றிருந்தான் மாதோ. (எக)

வீற்றிருந் தருளி னோடும் வேதற்கும் விளங்குஞ் சோதி
யாற்றலங் திகிரி யாற்கு மமரர்க்கும் விடைமுன் னீந்து
தேற்றுநான் மறைவல் லோராந் திரிசுதந் திரத்தர் வாழ்த்திப்
போற்றவேற் கரத்துப் புத்தேள் புவனிகாத் தளிக்கு நாளில். (எஉ)

செயந்திபுரவத்தியாயம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் உஉச.

---

# ஆருவது:
# வள்ளியம்மை திருவவதார அத்தியாயம்.

—ooꕥoo—

அகில மியாவுக்கு மந்தரு வாணிபோ
னிகரி லாதுயர் நீடுபொற் குன்றின்வா
யிகலுஞ் செற்றமு நீக்கிய வேமனுந்
தகைமை சேர்ந்த தவமுனி யென்றுளான். (க)

சங்கு சக்கரந் தாங்கு தடக்கையும்
பங்க யத்திருப் பாரப்ப டீரப்பொற்
கொங்கை வெற்பிற் குளிர்ந்த பசுந்துழாய்த்
தொங்க லுக்கிசைந் தோங்குதிண் டோள்களும். (உ)

எண்ணி யுள்ளத் திருத்திமெய் நாசியிற்
கண்ணி ரண்டுங் கவிழ்தர நோக்கியே
விண்ண வர்க்கும் வியப்புற யோகத்து
நண்ணு கின்ற துணர்ந்தன னாகர்கோன். (ந)

கான யாழிசைக் கந்தரு வத்தரும்
வான நாடக மாதரும் வம்மினென்
றூன சொல்லொன் றுணர்த்துவ னன்னது
தானு ளத்திற் றரிக்குதிர் நீரென. (ச)

பொருளின் மேற்படு பொற்றையிற் போய்த்தவத்
தெருளி னேமத் திருமுனி யென்பவ
னருளின் வைகின னுங்கவ னெஞ்சக
மருள நீவிர்மெய் மாற்றுமென் றோதலும். (ரு)

சொற்ற வாசகங் கேட்டிசை தும்புருக்
கற்று ணர்ந்துள கந்தரு வத்தரும்
பற்று நாடகப் பைந்தொடி யார்களு
முற்று ணர்ந்த முனிவன்முன் போயினர். (சா)

கையினி யாழிற் கனிந்தபண் டேறலு
மைய நுண்ணிடை யாரடி பேர்த்திடுஞ்
செய்ய தாளச் செயனடத் தேறலு
மையி லாமுனி வன்செவி யார்தலும். (எ)

யோகு விட்டு முனிவர னுள்ளத்தின்
மோக மிக்க மனத்தொடு முன்னர்வான்
ரேகை யொத்த சுரிகுழ லாரையும்
பாகி சைத்தவர் தம்மையும் பார்த்துளான். (அ)

நீங்க ளியாரு நிகரறு யோகத்தின்
பாங்கர் வந்து பரிபவஞ் செய்ததாற்
றீங்கொ டுஞ்சொலிற் சிறிய வெம்மொழி
தாங்கி வேடுவத் தன்மைசென் றெய்துவீர். (கூ)

உங்கள் பால்வந்த வொண்டொடி மாதரு
மங்கண் மாநிலத் தற்றமி லாவரைத்
துங்க வேடுவத் தோகைய ராகவு
மிங்கி சைத்தனம் போமின்க ளென்றனன். (ய)

அந்த வெம்மொழி கேட்டலு மன்னவர்
சிந்தை நொந்து தெருமந்து மாழ்கியே
மைந்தர் குற்ற மனங்கொடு வல்விடந்
தந்தை யூட்டிற் றனையர்க்குச் சார்வுண்டோ. (யக)

ஆயி னுங்கொடுஞ் சாபம கன்றுமுன்
மேய தொல்வடி வங்கொடு மேவவு
நீயி ரங்கி நிகழ்த்துதி யென்றலுந்
தூய மாதவ னன்றெனச் சொல்லுவான். (யஉ)

கால மூன்று முளங்கொடு காண்பவன்
சீல முன்னித் திகைத்தருள் சிந்தியா
மூல மின்றி முளைத்துக் கயிலையிற்
கோலங் கொண்டிருந் தானடி கும்பிட்டு. (யங)

தாது குத்த கடுக்கையுந் தாதகிப்
போது மொய்த்த புரிசடை யான்றருஞ்
சோதி வேற்கைச் சுருதியம் பண்ணவன்
காதல் கூர்ந்துல கத்தைக் களிப்பினால். (யச)

காக்க வேண்டிக் கடுந்தொழிற் சூர்கிளை
நீக்கி மாதவ னேத்திரத் துற்றுள
மாக்க யத்திரு வள்ளி மணந்தருட்
டேக்கொ டுஞ்சிறந் தான்செயர் திப்பதி. (யரு)

அருமறைக்கம லாசனத் தந்தணன்
மருமலர்த்துழாய் வத்திரு மான்மகக்
குரிசின் மற்றுள தேவருங் கும்பிடத்
திருவின் வைகிச் சிறந்தருள் காலையில். (யசு)

யாவருந்தொழு தேத்த விருந்துள
மூவிரண்டு முகத்தவன் மால்விழித்
தேவி மாருடன் சேர்ந்து கருணையின்
மேவி யன்பின் வியக்குமவ் வேலையின். (யள)

முருக வேளுக்கு முந்திய தாரமாய்
மருவு கின்ற மதார்ப்பினின் வாய்ந்தபே
ருருவ மெய்து முவப்பிற்செவ் வேள்புணர்
பெருமி தத்தி லகந்தை பிடித்துளாள். (யஅ)

இந்தி ரன்மக டன்னை யிழிவொடு
நிந்த னைச்செய்கை யாலுண் ணினைந்துவேற்
கந்த னுக்குள காமவி டாய்தணித்
தந்த மில்பக லாற்றினள் போகமே. (யகூ)

அரிவ லக்க ணவதரித் தாடன்மேற்
கருணை வைத்தவை வேற்கரக் கந்தவே
ளுருவு ளத்திற் சிறிதுணர்ந் தன்னவ
ரிருவ ருள்ளத்தி னெண்ணமுந் தேர்ந்துளான். (உய)

விண்டு வின்வலக் கண்ணிடை மேவிய
தொண்டை யந்துவர் வாய்மடத் தோகையைக்
கண்டு மெல்லக் கலங்க முகமனு
ளுண்டு காரிய மொன்றிவண் கேட்டிநீ. (உக)

மாறு மீக்கொண்டு வாரணப் பாவையைச்
சீறி நிந்தனை செய்தனை யன்னதாற்
கூறு கின்ற கொடுமொழிச் சாபத்தி
னாறு சென்றவ ணுற்றிட வேண்டுநீ. (உஉ)

தார மாயிரு வோருந் தழுவினீர்
வார முன்வயின் வைத்தன மாதலா
லீர மின்றி யிழிவுரைத் தாயதன்
காரணத்தைக் கருத்து ளடக்கினாள். (உங)

அன்ன பான்மை யுணர்ந்தன மாதலா
லுன்னி டத்தி லுறுபவ மியாவையும்
பன்னெ டும்பக லாற்றுதல் பண்பெனக்
கொன்னி லைச்சுடர் வேலவன் கூறுவான் (உச)

அலகி லாப்பொறை யாற்றிய மாதர்பா
லுலகெ லாந்தொழு தேத்தவு மும்பர்தாந்
தலைவ ணங்குந் தலைமையு மெய்துவார்
நிலைமை யென்று மறையு நிகழ்த்துமால். (உரு)

நிந்த னைக்குரித் தாகிய நீயும்வ
சுந்த ரைக்கட் சுலாவும் விலங்கின்பால்
முந்து தித்து முனைச்சிலை வேடர்பால்
வந்து ளச்சிறப் போடும் வளர்தியால். (உசு)

இழிவின் முன்ன ரிபற்றுங் கொடும்பவ
மொழியும் பாவ மொழியுமக் காலைநா
மழன்முன் னாக வமரரொ டேகியே
விழுமி தாக மகிழ்ந்துனை வேட்குதும். (உஎ)

என்னு மாற்ற மிளையன் விளம்பலுங்
கன்னி யுள்ளங் கவலுழந் தோவெனச்
சென்னி தாழ்ந்துளஞ் சிந்தித்து வைகினாள்
மன்னு மானின் வரன்முறை செப்புவாம். (உஅ)

வேறு.

காஞ்சனை யென்னுந் தெய்வக் கன்னிகை கவுரிக் குள்ளம்
வாஞ்சையின் சேடி யாகி மன்னுதல் வேட்டு விந்தைப்
பூஞ்சிலம் பிடத்து மானிற் பொலிவுறுங் குழவி யாகித்
தேஞ்சுரும் பரற்றுங் கூந்தற் றெரிவைவந் துதிக்கு மப்பால் (உகூ)

வளனுற வெடுத்து நீங்கள் வளர்ப்புறு மெல்லை நோக்கி
யளவறு முவப்பாற் செவ்வே ளன்னவ டன்னை வேடர்
கிளையுட னளிக்கு நீராற் கிடைத்தநுஞ் சாப நீங்கு
முளமகிழ் பூத்துத் தொன்மை போலவுற் றிருத்தி ரென்று. (௩0)

முனிவர னுரைத்து முன்போன் மோனத்தா றிருப்ப வன்னோ
ரனைவரு முணர்ச்சி நீங்கி யரிவையர் மருங்கிற் செல்ல
வினையுளந் தவல மெய்தி விந்தையஞ் சாரற் பாங்கர்
கனைகுரல் வேட ராகக் கதுமெனப் போந்தா ரன்றே. (௩க)

கந்தன தருளாற் றெய்வக் காஞ்சனை வனப்பு வாய்ந்த
சுந்தரச் சிறுமா னாகத் தூநிலாத் தவழுங் கோட்டு
விந்தையஞ் சார லுற்ற வேலைமால் விழியிற் றோன்று
மந்தமா னருண மானி னணிவயி றுற்ற தன்றே. (௩௨)

கருப்பத்தின் முதிர்ச்சி காட்டிக் காறளர்ந் துடலம் வீங்கப்
பொருப்பகத் துடைந்து பாரம் பொறுக்கலா துழன்று வாடி
மருப்புயர் பசுங்காச் சுற்றி மலைச்சிறு குறவ ரியாரு
மிருப்புறுஞ் சீறூர்ப் பாங்க ரீற்றுளைந் திட்ட மாதோ. (௩௩)

சென்றமான் சுழன்று பார்க்குஞ் செய்கையுங் கருப்பந் தாங்கி
யொன்றிய வயர்வுநோக்கி யுயர்ந்தவான் சிலைவி டாத
குன்றுறை வேட ரியாருங் கொம்மென வெழுந்து மானுக்
கின்றுணை யாகப் போற்று மென்றன ரதனைச் சூழ்ந்தார் (௩௪)

எழுமெழுந் தரற்றுங் காலொன் றெடுத்தடி பெயர்க்கு மீள
விழுமிருந் திசையைப் பார்க்கும் வெருண்டுதன் மேனி நாக்கொண்
டுழுநெடு மூச்சு வீங்கு முலைப்பரு தரற்றுஞ் சோலைப்
பழுமர மூட்டிற் சாயும் பரிவுறும் படுக்கு மாதோ. (௩௫)

அருணமா னிவ்வா றுள்ளத் தயர்வுகொண் டிரங்கி ஞானத்
தருணவில் வீசு வீங்குஞ் சராசர மனைத்து மீன்று
பொருணவில் வேதம் பூத்துப் பொருவருங் கற்பு வாய்ந்த
குருமணி யதனை வல்லிக் கொம்பென வீன்ற தம்மா. (௩௬)

மானிடைப் பிறந்த தெய்வ மணியினைக் கண்டு விந்தைக்
கானவர் குழாங்கொண் டுள்ளக் களிப்பெனும் புணரி மூழ்க
வானவப் போழ்து மானு மரிவைகாஞ் சனையம் மானைத்
தானளித் திருந்து ஞானத் தண்ணளி பெற்ற வாற்றால். (௩௭)

எண்ணிய வெண்ணி யாங்கே யாவர்க்கு முதவும் வேதப்
புண்ணியக் கவுரி வைகும் பொற்புறு புவனந் தன்னி
னண்ணினள் கவுரிக் குள்ள நாடருஞ் சேடி யாகி
விண்ணவர் முனிவர் வாழ்த்த விருந்தன டவத்தின் மிக்காள். (௩௮)

அடுக்கலிற் கிராதர் கூட்டத் தனைவரு மன்பு மீதூர்ந்
தெடுத்துடன் கொடுபோய் விந்தைக் கிறைவனைத் தொழுது வேண்டிக்
கொடுத்தன ரன்னோன் வாங்கிக் கொண்டனன் சுற்றத் தோடுந்
தொடுத்தபே ரன்பின் மூழ்கிச் சொல்லரு முவகை பூத்தான். (௩௯)

மனமகிழ் சிறந்து வேடர்க் கிறைமருங் கிருந்த மான
முனைநெடுஞ் சிலைக்கை வேடர் முகமலர்ந் தன்பு கூரத்
தனைநிக ரின்றித் தோன்றுந் தார்க்கருங் கூந்தற் செவ்வாய்க்
கனிமொழி வனப்பின் செவ்வி கண்டுமற் றிதனைச் சொல்வான். (சய)

உருவத்தின் வனப்பு வாய்ந்த வொண்டொடி சுணங்கு பூத்த
விருவெற்பின் களபக் கொங்கை யின்னலம் பருகத் தக்கான்
றருமத்தின் றலைமை யாய்மூ தண்டத்தி னுயிர்கட் கெல்லாங்
கருமத்தின் செயலாய் நின்று காக்குமோர் கடவு ளாமால். (சக)

இவ்வணமுரைத்து வேடர்க் கிறைபவ னிரங்குந் தெண்ணீர்ப்
பவ்வநீ ரடுத்த பாரின் பரப்பும்வா னகமும் போற்றுங்
கொவ்வைவா யமுதத் தீஞ்சொற் கோற்றொடிக் கினிய நாமச்
செவ்வினன் கமைந்த வள்ளி யென்றனன் சிறப்பின் மிக்கான். (சஉ)

செய்யதோர் நாமஞ் சூட்டித் தெரிவையைத் தனது வேடத்
தையறன் கரத்தி லுய்ப்பத் தண்ணளி சிறப்ப வாங்கிக்
கொய்ம்மயிர்க் கவரி மேய்ந்த குடிலிடைக் கொடுபோய்ச் சூழ்ந்த
வையக மளிக்குந் தாயை மகளென வளர்க்கின் றாளால், (சங)

கடவுளர்க் கமுத மன்ன கனிமொழிப் பவளச் செவ்வாய்
மடவரல் வசந்த கால மென்னுமோர் மடந்தை தூண்டாச்
சுடர்மணி விளக்கம் போலத் தோமறு வடிவம் வாய்த்து
முடிவிலா மறைகட் கெட்டா முதல்வியாங் கிருந்தாண் மன்னோ. ()

கொல்லையங் குறிஞ்சிக் கோட்டுக் குறவர்தங் குடிலி னுப்பண்
மல்லலஞ் சிறப்பின் மேலாம் வள்ளியுஞ் சரற்கா லத்துச்
சொல்லுமுற் பக்கத் துற்ற சுடர்மதி போன்று ளன்னு
வில்லிடை மலரின் மாரி யிரவுநண் பகலுந் தூற்ற. (சரு)

அண்டர்தம் முரசி னார்ப்பு மருவிநீர் சொரியு மார்ப்புந்
தொண்டக முழவி னார்ப்புஞ் சூழ்தரும் வரைப்பா லுற்ற
கெண்டையங் தடங்கட் செவ்வாய்க் கிள்ளையைப் பிள்ளை யென்று
ளெண்டரு நிதியம் வாய்த்த விருநில விளக்கம் போன்றாள். (சசு)

பெண்ணலங் கனியப் பேதை பெதும்பையுங் கடந்து வேற்கைப்
பண்ணவர்க் கினிய மங்கைப் பருவம்வந் தடையுங் காறும்
வண்ணவிற் கிராதர் வேந்தன் மைந்தரில் லாத சோகத்
தெண்ணமுள் ளொழித்து மாதை யினிதுடன் மகிழ்ந்து காத்தான்.

அனைத்துல களிக்குந் தாயை யன்புடன் வளர்க்குமேல்லைத்
தினைப்புனங் காக்குமற்றச் சேடிய ரிவளை வாவென்
றினக்கிளி கடியப் போது மென்றன ரிவளு மேனற்
புனத்திளங் கிளிக ளோச்சப் போந்தனள் பொருவி லாதாள். (சஅ)

மாதரு மிவளு மேனல் வனத்திடை யிருத்தல் கண்டு
காதலி னரம்பு பாடுங் கந்திரு வத்த ரிம்மான்
பாதபங் கயத்தி னாலே பருப்பத முன்செய் துள்ள
நீதகன் றளவி லாத சிறப்பினைப் பெற்ற தென்றார். (சகூ)

அண்டகோ டிகட்குந் தாயா மணங்கினை மகளாக் கொண்ட
வண்டிருங் குழற்கி ராத மடந்தைமா தவத்தை யெம்மால்
விண்டிடற் கெளிமை யன்றால் மீவடருக் கபசன் வாழ்க்கை
கொண்டபே ரன்பி னுள்ள குலமெலா முயர்ந்த வம்மா. (ருய)

கொன்னிலே நெடுவேற் செங்கைக் கொற்றவ னரிது நோன்பிற்
பன்னெடுங் கால மாற்றப் பண்புறு தவத்தின் பான்மை
மின்னெனும் வடிவந் தாங்கி வேடர்தம் மரபி லுற்று
லன்னவர் தவத்தை யெம்மா லுரையலாந் தகைமைத் தன்றே. (ருக)

என்றுளம் வியப்ப மீதூர்ந் தெடுத்தெடுத் துரைத்து வான்றோய்
குன்றிடத் திருந்த ஞானக் குருமணி விளக்கைக் காம
வன்றளை யறுத்த மூத்த முனிவரர்வழுத்தினாளுஞ்
சென்றவ ணிருப்ப மாதுஞ் சிறப்பின்வீற் றிருந்தா ளன்றே. (ருஉ)

வள்ளியம்மை திருவவதாரவத்தியாயம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம உஎகூ.

---

## ஏழாவது
## சுவாமிவள்ளியம்மையிடத்திற்சென்றஅத்தியாயம்.

முதிருந் தினைமொய்த் தயர்கொல் லையெலாங்
கதிர்கண் டுகவண் கொடுகன் னியர்தா
மிதணின் றுபுளி யாவையு மின்குரலா
லதிரும் படியோச் சினரவ் வரையின். (க)

தினைகாத் துளசே டியரோ டெளியேன்
வினைநீக் கியவேள் புணர்மின் னனையாள்
மனைநீத் துமடந் தையரோ டுசெலா
நனிவேட் கையினு டினளே னலையே. (உ)

புள்ளன் பொடுமோச் சியபொற் றொடியார்
நள்ளன் பொடுபோ யிகணு டிமனத்
துள்ளன் பொடுகூ டியுறைந் துசெவ்வாய்
விள்ளுஞ் செயலா ல்வண்மே வினளால். (ங)

அக்கா லேயிலந் தரவா னெறியான்
மைக்கார் முகிலா மயில்வா கனவேள்
புக்கா னதுபோழ் துபுனத் திடையே
யிக்கா மொழியெய் துதனைக் கினனல். (ச)

பிறைபா நுதலா கியபே ரழகு
மறைவா ணியைநேர் சொலும்வா சகமு
நறையார் மலரோ தியுநாண் மலருங்
கறையா ரயில்வே ளிறைகண் டனனே. (ரு)

கருணைக் கடலா கியகண் ணிறையு
மருணத் திருமே னியுமா றுமுகத்
தருணத் தலர்தா மரைநாண் மலரின்
வருணத் தையுநோக் கினண்மான் விழியாள். (சா)

பிடிபோ னடைபெற் றுளபெண் ணமுதை
வடிவே லிறைகண் டுமகிழ்ச் சியினாற்
படைவேள் கணைபாய் தொறுமா விரகக்
கடன்மூழ் கிமிகுந் துயர்கை யுறவே. (எ)

அல்லோ குழலோ வறியேன் மதவேள்
வில்லோ நுதலோ விரகந் தருவாள்
சொல்லோ கிளியோ துவரோ விதழோ
பல்லோ தளவோ வுவமிப் பதுவே. (அ)

மானோ கடுவோ வடுவோ கமலந்
தானோ மதனன் சரமோ கருமைத்
தேனோ குவளைத் திருநாண் மலரோ
மீனோ விவள்வாள் விழிவே லிணையே. (கூ)

புருவத் திணையோ பொருவேள் சிலையோ
விருவெற் பவையோ விணைவார் முலையோ
வுருவத் திடலோ மயிலோ வுழைவேன்
விரகத் துறமூட் டியமெல் லியலே. (ய)

என்று றமுகே சனிரும் பனியார்
குன்று னதிழிந் துகுளிர்ந் தநறு
மென்று துகுசோ லையின்மெல் லியன்முன்
னின்று னவளோ டுநிகழ்த் திடுவான். (யக)

வேயார் வரைமீ துபுனத் தினுள
நீயா ரிடமே துநினைப் பெறுமோர்
தாயா ரருட்டந் தையரார் பவள
வாயா ரமுதே வறியேற் குரையாய். (யஉ)

கொன்னே குறமா தர்குழூஉ வராு
னென்னே யுனைவேட் டுளனியாண் டுளனோ
நன்னே யமொடென் முனவிற் றுதியாற்
பொன்னே விலகாய் பொருவேள் கணையே. (யங)

வாளா வொருகன் னிகைமா தரெனிற்
கேளா யிவணீ கிரணந் தருபொற்
றோளா றிருசுந் தரமால் வரைமே
ளார் தொடைசூட் டுவனன் குறவே. (யச)

மன்றற் றொடைசூட் டுதிமான் மகணீ
யென்றற் புதமோ டுசெவ்வே ளிசையக்
குன்றக் குறமான் குமரன் புயமே
லொன்றக் கணிரண் டுமுறக் கவிழா. (யரு)

உள்ளத் தினில்வே ளொருநாற் படையு
மெள்ளச் செலவிட் டனன்மெய் வியராத்
தள்ளற் கருநா ணொடுதா னகையா
வள்ளத் துணைவார் முலைவாய் திறவா. (யசா)

விந்தைக் கிரிவேந் தனளித் தருள்வோ
னந்தக் கிரியா யிழையா ளருடாய்
சிந்தைக் குரியீர் சிறியேன் பதியோ
சந்தப் பொழில்சூழ் தருதாள் வரையே. (யஎ)

அடியேன் சிறுகன் னிகையா குமெனத்
தொடிவாய்ந் தகைசொற் றலுமன் னவள்பாற்
கடிவாய்ந் தகடம் பன்மிகுந் துயரா
லுடன்வாஞ் சைபினேக் கினனோண் ணுதலை. (யஅ)

அன்பா லறுமா முகவே ளருண
மின்பால் விழிவைத் ததைமீட் பரிதா
யுன்பா லருள்வைத் தனமொண் ணுநனீ
யென்பால் வருவைக் கிசைவா யினியே. (மக)

எனவா றுமுகே சனியம் புதலுங்
கனிவாய் மொழியன் பொடுகா தலியாத்
தனிநா யகரே தருமந் தவறு
முனியா தருள்வீ ரெனவே மொழிவாள். (உம)

குரவோர் களளித் திடுகொள் கையினால்
வரைவா ருடன்வாழ் வதுவே மரபாங்
கரவா லொருகா ளையர்கை யுறலாற்
றரைமீ துயர்கன் னிகையுந் தவறும். (உக)

வேறு.

எனையரு டந்தை தாய ரின்னருள் பெற்றோர் தம்பால்
வினவுதி யுனது தோற்றம் வியப்புற நோக்குங் காலை
யனையவ ருதகத் தோடு மளியனை யழல்சான் றாகக்
கனைமுர சோதை யார்ப்பக் கடிமணம் புரிவிப் பாரால். (உஉ)

அற்புட னினைய வாற்றா லருண்மணம் புரிதி யாயிற்
கற்பினின் முதன்மைத் தாய கன்னியு மியானே தந்தோர்
பொற்புறு குலங்க ளெல்லாம் புனிதமா மெனுஞ்சொற் கேட்டுச்
சிற்பர குமர மூர்த்தி திருவுள மகிழ்ச்சி பூத்தான். (உங)

கண்ணியுங் கயிறுந் தும்புங் கவண்வலை முதல யாவும்
வண்ணவிற் றழும்புங் காட்டும் புயமலை வாணர் வேந்தன்
றிண்ணிய குறவர்க் கெல்லாஞ் செய்வினை காட்டுங் காலை
யெண்ணினுக் கடங்கா வேற்கை யெம்பிரான் சென்று கண்டான் ()

சுவாமிவள்ளியம்மையிடத்திற் சென்றவத்தியாயம் முற்றிற்று.

ஆகதிருவிருத்தம். ௩௱.

## எட்டாவது.

## வள்ளியம்மை திருக்கலியாண அத்தியாயம்.

பவக்குறும் பெறியும் வியாதனை நோக்கிப் பலகலைச் சுருதியா ராய்ந்த, தவக்கட லனைய சுகமுனி யுள்ளந் தண்ணளி சுரப்பவீற் றிருந்து, சுவைத்தமிழ் முனிவற் குரைத்தவச் சுடர்வேற் சோதிவா னவன்கதை யனைத்துஞ், செவிக்கினி தமிர்தா மெந்தைகே ளடியேன் செப்புவ துண்டுசாற் றுவனால். (க)

தந்தைநின் வதனத் தாமரை மலரத் ததும்புபே ரானந்த வெள் ளஞ், சிந்தனைச் சனன மரணவே ரறுத்துச் செங்கண்மால் பங்கயன் காணு, மந்திரப் பொருளாஞ் சிவனிரு சரண வாரிச மென்னுமோர் வீட்டின், முந்துறச் செலுத்து மென்றபான் மையினுன் முத்தலை யிருதலை வேலோன். (உ)

வேடருக் கரசன் முன்குமரேசன் மேவிய தன்மையுங் கிராத, ஞடுதற் கரிதாங் குமரவேண் முன்ன நவின்றது நகைமுகத் துவர் வாய், மாடகத் திவவி யாழ்மொழிக் களப வனமுலை மகளோயீந் தனு வுஞ், சூடகத் தளிர்க்கை மாலைசூட் டியது மெந்தைநீ சொல்லுக வென்றான். (ங)

என்றலும் வியாதன் சுகன்முக நோக்கி யிம்பரு மும்பரும் வண ங்கக், குன்றகம் பிளந்த நெட்டிலைச் சுடர்வேல் கொண்டவன் காதை யி னன்பு, சென்றுள துனக்கிங் காதலாற் குமரன் சீர்த்தியைப் புக ன்றவ ரியார்க்கு, நன்றுணர் தருமம் பொருளின்ப மோட்ச நண்ணு மா லினிதுகே ணவில்வாம். (ச)

முகில்வயி றுடையக் கூனுடற் கருங்கான் முசுக்கலை யுலவுமால் வரையிற், றகைநெடுஞ் சிலைக்கை வேடர்கோ மகன்பாற் சதுமறை முறையிடு மிருதாட், குகன்முக மாறும் புயங்களீ ராறின் கோலமுங் கரந்துமா னுடன்போ, லகமகிழ் சிறப்பச் சென்றுநின் றெயினர்க் கரசகே ளொன்றுனக் கறைவாம், (ரு)

உன்னிடத் துதித்த மகள்வயி னார்வ முற்றன மளிக்குதி யென்ன, வன்னவிற் கரத்துப் புளினர்கோ னழன்று மகிழ்சிறந் தெம்மலை காக்குங், கொன்னிலைச் சுடர்வேன் முருகனுக் கிவளைக் கொடுப்பதை யன்றிமுத் தேவ, ரென்னிடத் திரந்து கேட்கினுங் கொடுப்ப தில்லைநீ போவென விசைத்தான். (சா)

அந்தவா சகத்தே ஞறிரு செவிக்கு மமுதமூற் றுவதென வக த்துட், கந்தவேண் மகிழ்ந்து மாணிடைப் பிறந்த கன்னிகை யேன லம் புனத்துட், சிந்தையின் விரைந்து சென்றிவ ளார்வந் தெரிகுது மெனவுளந் தேற்றி, யிந்திர சாலம் போலொரு தருவா யிராமுதோ ளெம்பிரா னின்றான். (எ)

தாருவின் றோற்றங் கண்டுமான் பயந்த தண்ணறு வொழுகுபூங் கூந்த, ஞரியும் பிரியாச் சேடியர் தாமு நாடரு முளத்திலற் புதமாய்க், காரிருட் படலங் கவித்தகற் பகத்திற் கவின்செறி நிழலிடை யினிது, வேரியந் தென்ற றைவர வுள்ளம் வியப்புறத் துயிலுமேல் வையினில். (அ)

குறவருங் குறவர்க் கிறைவனு மினிய கொள்கைய ராகிமா னளித்த, விறைவிகங் குறிஞ்சி விட்டகன் றேன விளம்புனத் தினி துவீற் றிருந்தா, ஞறையிடந் தேடி நாடுது மென்ன வுற்றன னற்ற மின் றுயர்ந்த, நறைமலர் பொதுளுந் தாருவின் றோற்ற நாடிநின் றெயினர்கோ னவில்வான். (சு)

கதிரவன் றடந்தேர்க் கஸினமா விலகக் கற்பகத் தாருவி னுயர் ந்து, முதுவரை யிடத்து வந்தகா ரணநா முன்னுறின் மாயமா மென் றே, யதிர்குரல் வேடர் தங்களை நோக்கி யருந்தருக் குறையுமி னென் று, சதிருட னுரைப்ப வம்மொழி கேட்டுச் சண்முகன் றருவுருக் கரந்தான். (௰)

மாமுத றடிந்து வான்றரு வளர வாங்கிய வடிநெடு வேலோன், றமமென் குழற்கா மைத்துனர்ப் பகைத்துத் தானுமோர் மரனுரு வெடுத்துக், காமுற வளர்ந்து கானவர்க் கொளிப்பக் கானவர்க் கரசன் றன் மகளைத், தோமறு குறிஞ்சிப் புறக்குடி லகத்துச் சுறுக்கொடு கடந்துசென் றிருந்தான். (௰க)

இருந்தபின் னொருநா ளேனலம் புனத்து ளீர்ங்கனித் துவரி தழ் மடந்தை, கருந்தட நெடுங்கட் சேடிய ரோடுங் கானிடைச் சென்றுநாங் கண்ட, பெருந்தண்மா மரம்போன் முதுவரை யகத் துட் கண்டில மென்றபே துற்று, வருந்தினர் போலத் திரிந்துதண் புனத்து வைகினள் வைகுமேல் வையினில். (௰உ)

மாறனுருக் கரந்து குருபரன் புனத்து மான்மக டனக்குள மயங்கிச, சரமெடுத் தெறியு மதனனுக் குடைந்து சஞ்சலித் தெண்ணம் வேறாகிப், பொருவருங் கரடக் குஞ்சர முகத்துப் புங்கவற் றொழுதுநின் றிரந்து, பருவரற் கிடனு மேழையேற் குனது பார்வையி னருடர வேண்டும். (யங)

என்றலுங் கடவுட் குஞ்சர வதனத் தெம்பிரான் றுணைமுக நோக்கி, யுன்றன துள்ளத் தெண்ணமியா தென்றே யுரைத்தலுங் குமரவே ளிசைப்பான், குன்றவர் தலைவன் புதல்விமே லன்பு கொண்டதாற் றெண்டிரைக் கடலுந், தென்றலங் கன்றுங் காமவேள் கணையுந் தெண்ணிலா வும்பகைத் தனவால். (யச)

யாவர்தம் மிடத்து முறுகுறை யனைத்து மெம்பிரா னகற்றுவை யிளைய, சேவக னிளமான் கன்றினுக் குடைத நீர்ப்பதற் கெண்ணினை யாகி, மாவடுப் புரையுங் கண்ணியுள் வெருவ மத்தமா லியானையின் வடிவாய், மூவகைக் கடங்கான் றன்னவண் முன்னர் முழக்கொடு வருதல்வேண் டினனால். (யரு)

அன்னமென் னடைமுன் வந்தனை யாயி னவ்விடை யளியனுமடைந்து, துன்னுவ னுனது தோற்றத்தில் வெருவித் தோகையு மவ்வயிற் பொருந்தும், வன்னமென் முலையு மார்பகத் தழுந்தும் வாயமிர் தத்துளி யருந்திக், கன்னிபொன் னுடலம் புணர்ந்துவிற் கழைப்போர்க் காமனு டகமுமா டுவனால். (யசா)

காமநூற் பயிற்சி நடந்தபின் வேதக் காரிகை யைத்தழல் சான்றூத், தாமரைத் தலைமீ திருந்தநான் முகனுந் தண்டுழாய்ப் படலைசூழ் மோலி, மாமனு மகிலத் தேவருங் காண வதுவையான் முடிக்குவ னென்று, பூமல ரருச்சித் தைங்கரற் றொழுது போந்தருள் புரிகென விடுத்தான். (யஎ)

கற்றையஞ் சுடர்வேற் றுணைவனுக் கடங்காக் காதல்கண் டைங்கரக் கடவு, ளற்றமின் றுளத்தி லார்வமீ தூர வடுக்கலிற் குறச்சிறு மடந்தை, சுற்றுறு மடவா ருடன்வினை யாடுஞ் சூழலிற் கருவரை கடுப்பக், கொற்றவெங் கரடக் கிம்புரிக் கோட்டுக் குஞ்சர வடிவொடுஞ் சென்றான். (யஅ)

குஞ்சர முழங்கி வருதலுங் குறமான் கொம்புவெம் புள்ளத்த ளாகித், தஞ்சமின் றெனக்கா ரென்றுநின் றேங்கிச் சஞ்சலித் திரு கணிர் சோரப், பஞ்சடிக் கமலஞ் சேப்பமென் மருங்குல் பயோதரச் சும்மையாற் றுது, வஞ்சியிற் றுவண்டு துவண்டுதள் ளாட மறுக்க முற் றுழலுமப் போழ்தின். (யகூ)

வேறு.

அந்த வேளை யருவஞ்செய் தான்றருங்
கந்த வேளைக்கண் டாள்கண்ட கன்னியு
மிந்த வேளை யெனக்கரு ளென்றுமுன்
வந்த வேண்மணி மார்புறக் கட்டினள். (உய)

போத கந்தொழு தான்புன மாமலை
மோத கங்கை முகந்தனங் கன்பொரும்
பாத கந்தொலைத் தோங்கும் பணைமுலை
வேத கம்பட விம்மித மெய்தினன். (உக)

சுருண்ட பூங்குழற் றேகையைப் புல்லிநீ
வெருண்ட வேழம் விலக்கின னியானுமோ
திரண்டு வீங்கிச்செம் மாந்திறு மாந்தெழு
மிரண்டு வேழத் திளமுலைக் கஞ்சினேன். (உஉ)

வாகைப் போதின் வயங்குபொன் மேனியு
மோகத் தேன்றரு மூத்தச்செவ் வாம்பலு
மேகக் கூந்தல் விரைச்சிறு காற்றுமென்
னாகத் தேபுணர்ந் தேமனென் றயிலினன். (உங)

ஆறி ரண்டுகை யாரத் தழுவியே
யாறி ரண்டு நயனங்க ளாலுமே
மாறி ரண்ட மலர்க்குழ லாடனை
மாறி ரண்ட மனத்தொடு நோக்கினன். (உச)

அன்னம் போல்வரு மாய்மயி லாட்கெதிர்
சென்னி யாறுடைச் சேவகன் செப்புவான்
கன்னி யானுனைக் காதலித் தேனுயிர்ப்
பன்னி யாய்ப்புணர்ந் தாலது பண்பரோ. (உரு)

என்று கூறு மிளையனு மானருள்
கன்று மேவிக் கலப்பது காண்டலு
மொன்று மன்புட னுள்ளக் களிப்பினு
னின்ற தேவர் நிகழ்த்துதன் மேயினர். (உசா)

---

* இந்தப்பாடல் பழைய எட்டுப்பிரதிகளிலில்லை; அன்றியும் முன்பின் பொருத்தமுமில்லை.

மூக்கி னூடு விழிமுகந் தன்பொடு
நோக்கு நோன்மையர்க் குந்துவ லாநிற்கும்
வாக்கி னூடு மனத்தும் பெருக்கொடு
தேக்கு மானந்த ஞானச்செந் தேறலாம். (உஎ)

முருக னென்று மொழிந்து மொழிந்துளத்
துருகு மன்பினர்க் கும்முரு காநிற்போ
ரருகு சென்றிடு மன்பர்க்குங் காமமாம்
பெருகு மாறுஞ் செலாதுளம் பேதுறும். (உஅ)

தாயு மாகிச் சராசர நல்கிய
மேய காஞ்சனை மின்னிடைத் தோன்றுகை
யாய பூதங்க ளைந்தினுக் கேதுவாம்
பாயு மூலப் பகுதியின் றோற்றமே. (உகூ)

உலக வாழ்க்கையை யோம்புதற் கெண்ணியே
யலகி லாவிளை யாட்டயர்ந் தையனுந்
திலக வாணுதன் மானிளஞ் செல்வியுங்
கலவி வேட்டதென் றுள்ளங் கருதினார். (ஙய)

மடந்தை வேலவன் மார்புறச் சேர்ந்துட
னடந்த செய்கையைச் சேடியர் நாடியே
கடந்து வானக் கதிர்கட வாமலை
யடைந்து வேடர்க் கரசன்முன் கூறுவார். (ஙக)

ஓங்கல் வாய்மதத் தோங்கல்வந் துற்றதுந்
தேங்க ருட்பன் னிருவிழித் தெய்வதம்
பூங்கு ழற்றிருப் புல்லிய பான்மையும்
பாங்கு றப்பணிந் தேத்திப் பகரவே. (ஙஉ)

ஆல மென்ன வழன்றழி வுற்றிடுங்
கால மொத்த கடலெனுங் கேளொடு
சூல வேற்படை யான்மகன் றோய்ந்தவான்
கோல மும்மகள் கோலமும் பார்த்தனன். (ஙஙு)

தாதை கேளுடன் சார்ந்தவத் தன்மைபூங்
கோதை கண்டுளங் கூசிக் கடப்பந்தா
ராதி யைத்தணந் தந்தமி றுதைபாற்
சாத லோடுசென் றுள்கவிழ்ந் தாணின்றாள். (ஙச)

நின்ற மாமக ணெஞ்சங் குறிப்பினல்
வென்றி வேட்டுவர் வேந்த னுணர்ந்துதான்
கன்று மாறொழிந் துள்ளக் கவலொரீஇ
யொன்று மன்பி னுளத்துடன் சொல்லுவான். (௩௫)

நமது தொல்குல நாயக ருமையிற்
குமர வேளென வுள்ளக் குறிப்பினு
லமைய நோக்குமுன் ஞறணிந் தான்புண
ருமைகு மார னுருவங்கண் டானரோ. (௩௬)

வேறு.

கார்வரை யிடத்துக் கதிர்வரை யுதயங் காட்டுதல் போற்களி மயின்மேற், றூர்வரை யனைய பன்னிரு புயமுஞ் சந்தன வரைத்தட மார்புஞ், சூர்வரை யறுத்த சுடர்வடி வேலுந் துகிர்வரை மேனியு மாய்ச்சீ, றார்வரை யரசன் விழிக்கெதிர் நின்று னுயர்வரைச் சரவணத் துதித்தோன். (௩௭)

சந்தநான் மறையு முறையிடு மிருதாட் சரவணோற் பவன்றிரு வடிவம், விந்தைமால் வரையிற் கானவர்க் கரசன் விழியினுற் பருகு வான் போலச், சிந்தையாற் களித்து நோக்கின னியான்முன் செய்தவப் பேறென நினைந்து, கந்தவார் குழலா டன்னைமார் பணைத்துக் கட்டின னுச்சிமோந் தனஞல். (௩௮)

மட்டறு முவகை பூத்தவே டுவர்கோன் மயூரவா கனத்துயர் செவ்வேள், கட்டழ கனைத்து நோக்கின னிதயங் களித்தனன் றுதிக்குநாக் குழறித், தொட்டமெய் மயிர்க்கூச் செறிதர விழியிற் றாயவா னந்தநீர் சொரியச், சிட்டரு ளடங்கி நான்மறைக் கடங்காச் சேயினை வழுத்துவ தானன். (௩௯)

வேறு.

உலகத்தின் முதலாய் நின்ற வொருதனிப் பொருளே போற்றி
கலைகட்கு முணர வொண்ணுக் கருணைவா ரிதியே போற்றி
மலைவிற்கைப் பெருமான் கண்ணின் வந்தமா மணியே போற்றி
புலமைக்குந் தலைமை யான புண்ணியா போற்றி போற்றி. (சய)

பேரழி குடைய தெய்வப் பிடிபுணர் களிறே போற்றி
கோரவெஞ் சிலைக்கை வேடர் குலமுய்ய வந்தாய் போற்றி
யாரமு தனைய வெய்மா னருளுமான் கணவா போற்றி
சூருடற் குருதி மாறாச் சோதிவேற் கடம்பா போற்றி. (சக)

என்றடி வணங்கி வேடர்க் கிறையவன் பகர்வா னெங்கள்
குன்றகந் தன்னிற் போந்து குழூஉக்கொடு விபுதர் வாழ்த்த
வென்றிவேற் கன்னி ஞானே வேதத்தின் முறையே நீயு
மன்றலந் தொடையல் சூட்ட வருதியா லைய வென்று. (சஉ)

தந்திவெண் கோட்டுக் காலிற் சந்தனச் சட்டஞ் சேர்த்திச்
சுந்தரப் புயல்சூழ் வேங்கைத் துணர்ப்பசுங் கொம்பர் சாய்த்து
விந்தையிற் றோகைப் பீலி மேய்ந்துவெண் கவரி நாற்றிப்
பந்தரச் சுதனீன் றுள்ள பங்கயன் சபைபோற் செய்தான். (சங)

தேவரு முனிவர் தாமுஞ் சித்தரு முத்த ராய
யாவரு மிறைஞ்சி யேத்த வெம்பிரான் பந்தர்ப் போந்தா
ஞவினு மனத்து மெட்டா நாரண னயனத் துற்ற
காவியங் கண்ணி ஞனைக் கடிமணக் கோல மாக. (சச)

கேசமே யாதி யாகக் கேள்கிளர் சரணங் காறுங்
காசுலாம் பணிக ளாகக் கவினுறத் திருத்திக் காதிற்
பூசலார் விழிக்குச் சந்தப் பூந்தழை யுடுத்து வேடர்க்
கீசனும் வேடன் றனமுன் விடுத்தன ரிதயத் தன்பால். (சரு)

வண்ணவிற் குனிக்கும் வேடர் மன்னவன் வனப்பு வாய்ந்த
பெண்ணினுக் கரசின் செங்கை பிடித்துவேல் பிடிக்குஞ் செங்கை
யண்ணறன் முகம்பார்த் தெங்க ளருங்குல முறைமை யீதாற்
றண்ணளி சுரப்ப யானுந் தருகுவ னென்று தானே. (சசு)

பொன்னொடு புனலுஞ் செங்கைப் போதினி லேந்தி மானின்
கன்னியைக் குமர மூர்த்தி கையினிற் கொடுத்த காலைத்
துன்னிய மலரின் மாரி தூர்த்தனர் தோமி லாத
வன்னவான் முரச மியாவும் வான்முழக் கென்ன வார்த்த. (சஎ)

அப்பொழு தகில மீன்ற வன்னையு மலரின் மாதுஞ்
செப்பருங் கலையின் மாதுஞ் சேடியர் தாமும் போந்து
துப்பிதழ்க் குறப்பெண் பூண்ட தோமுறு மணிக ணீக்கிச்
செப்புதற் கினிய வாக மணியினுற் சிறப்பித் தாரால். (சஅ)

கங்குலின் வனப்பு வாய்ந்த கூந்தலைக் கவினக் கோதித்
தொங்கலி னிறுக வாரிச் சொருகிவான் பட்டஞ் சேர்த்த
மங்கல முறமை வான முகிலினை வளைந்து வானிற்
றங்குமிந் திரவில் லென்னச் சாற்றலாந் தகைமைத் தம்மா. (சகூ)

நானநெய் தடவுங் கூந்த னுப்பணி னன்கு வாய்ப்ப
வானவிற் சுட்டி யோடு வயங்குசங் கிலியுஞ் சேர்த்தல்
சோனைவிண் முகிலின் பாங்கர்ச் சுடரிமைத் தழியா மின்னுண்
டானதுண் டாகி லம்மா வதற்கிணை யாக்க லாமால். (ருய)

அலகிலா மறைகள் சாற்று மருணமா னுதலி னூடு
திலகநின் றிமைத்தன் மானத் திங்களை யடைந்து நீயெங்
குலமகண் முகத்தில் வட்டங் கொள்ளுதி திலக மாயா
னிலவுவ னென்று தொன்று ணிகழ்த்துசம் மதிய தாமால் (ருக)

அருமறைக் குதலைச் செவ்வா யமுதமென் முலைபி னூடன்
றிருமுகத் தழகுஞ் சோதிச் செவ்விமூக் குத்தி முத்து
முருவகப் படுத்தில் வானத் துரோணியை மதிய மேந்தி
மருவிமுத் தாட்டு மாறு வழுத்தலாஞ் சிறிது மாதோ. (ருஉ)

சொல்லுதற் கரிய வாய சுருதியுங் கருதா மானின்
வல்லியின் கண்களூடு மைவரைந் தெழுதல் ஞானத்
தெல்லையில் கடற்குக் கூல மிட்டதோ கண்ணை றுகப்
புல்லிய கருப்புக் காட்டி வைத்ததோ புகலி னம்மா. (ருங)

வண்டென மிழற்றுந் தீஞ்சொன் மானிளஞ் செல்வி யாய
வொண்டொடி கபோலச் செவ்வி யோதிமக் கொல்லன் வாழ்த்தி
யண்டர்தம் பெருமான் செய்ய வாறுமா முகத்தின் சோதி
கண்டுகண் களிக்க வைத்த கஞ்சனம் போலுமாதோ. (ருச)

கருமுகில் விளர்ப்ப வுள்ளங் கறுத்தபூங் காம வோதி
யிருகுழைக் கிணங்கச் சாத்து மிணைமணித் தோட்டின் செவ்வி
பெருமையி னன்பர் ஞானம் பிறங்கநோக் குதற்கு வைத்த
திருவினிற் பொலியுஞ் சோதிச் சினைக்கண் ணுடி யாமால். (ருரு)

பூவைபோ னிறத்து மாயன் புதல்விசெவ் விதழி னூடு
பாவக மெழுதுங் காம ரெம்மனோர்க் கிசைக்கற் பாற்றே
மாவகம் பிளந்த வேற்கை வரன்கிளிக் கமுத மூறுங்
கோவையங் கனிநே ரென்னக் கூறலாஞ் சிறிது மாதோ. (ருசா)

சுந்தரங் கவினு மானின் றேகையார்க் கோதை காட்டுங்
கந்தர வனப்பும் பூசுங் காழகிற் கவினு மம்மா
முந்துசே தகத்தி னூடு முழங்குவெண் சங்கம் போலு
மிந்தவா றுரைப்ப தல்லா லியாதெனப் பகர்வன் மாதோ. (ருஎ)

நாரணன் புதல்வி மார்பி னளினநாண் முகையின் வாய்ந்த
வாரண மருப்பின் கொங்கை மதர்ப்பும்பூண் வனப்பும் பார்க்கிற்
காரண மில்லா வேலோன் காமப்பேய் தணிப்பான் சாந்திப்
பூரண கும்பம் வைத்தல் போலுமென் றுரைக்க லாமால். (ருஅ)

ஆரமு தனைய மானுக் கம்பொனி னுடை சாத்தல்
சூரிய கிரணம் வாரிச் சுடர்ப்பக லாய சேடி
மேருவுக் காடை யாக வுடுத்துமெய் யழகு நோக்குஞ்
சீரிய சிறப்பு மானச் செப்பலாம் புலவர்க் கம்மா. (ருகூ)

மயிலிளஞ் சாயல் காட்டு மானிளஞ் செல்வி யார்க்கு
வெயில்விரி மணியிற் செய்த மேகலை வயங்கச் சேர்த்த
னயனுறு முலைதாங் காது நைபுநூ லிடைக்குச் செம்பொன்
பயில்வுறு பூண்சேர்த் தன்பிற் பாதுகாத் திடுதல் போலாம். (சுய)

கவினுறு கையில் வெள்ளிக் கடகமுந் துகிரு மேய
வவிர்கரு வளையு மானி னணங்கினுக் கிணங்கச் சேர்த்த
லுவமையி றேவர் மூவர்க் குள்குண மூன்று நல்க
விவள்கரம் பிடித்த தாமென் றிசைக்கலாந் தகமைத் தம்மா. (சுக)

மாயவன் வலக்கண் பாங்கர் வந்தவ தரித்த மானின்
மேயகை விரல்க டோறும் விளங்குமோ திரங்கள் சேர்த்தல்
பாயமென் வசந்த காலப் பாவைகற் பகப்பூங் கொம்பிற்
றாயநாண் மலர்கள் பூப்பத் துலங்குதல் போலு மாதோ. (சுஉ)

கொண்டலைப் பழித்த கூந்தற் குறக்கொடி கமலத் தாளிற்
றண்டையுஞ் சிலம்பும் வெள்ளிச் சதங்கையுந் தயங்கச் சேர்த்தன்
முண்டகத் தளிமத் தன்ன முட்டையிட் டதனைக் காத்து
விண்டரற் றுதலா மென்ன விளம்பலா முளங்கொண் டம்மா. (சுங)

செய்யமா னளிக்க வந்த செல்விசெங் கமலத் தாளுங்
கையும்வான் செம்பஞ் சூட்டுங் கதிர்வனப் பொளிய வைவே
லையனு றிருக ணீல மழுத்தக்கே வணத்துச் செய்த
துய்யசெம் மெழுகுக் கொப்பச் சொல்லலாம் புலவர்க் கம்மா. (சுச)

இவ்வண முவமை யாரு மிசைப்பவிர்ங் கமல மாதுங்
கொவ்வைவாய்க் கலையின் மாதுங் குறக்கொடி தனக்குக் கோலச்
செவ்வியின் வாய்ப்பச் செய்த செய்கையை நெடுவே லண்ண
லெவ்வமில் கருணைக் கண்க ளிராறினு முள்ளம் வைத்தான். (சுரு)

வீரவேற் றடக்கை யண்ணன் மெல்லியல் வனப்ப தான
வாரியிற் படிந்து காம வபாவொழித் தளவி லாத
பேரருள் சிறந்த காலைப் பெயர்த்திரி சுதந்தி ரத்தர்
காரிகைச் சடங்கு காட்டக் களித்தவ ணடைந்தார் மன்னோ. (௬௫)

திரிசுதந் திரத்த ரியாருஞ் சிறந்துய ரிரண்டாம் வேதச்
சுருதியி னியதிக் குள்ள தோமமு பலிமுன் னீயப்
பொருவரு மணியிற் பொன்னிற் புரியுமண் டபத்திற் போந்தே
யரியணைப் பீடத் தெங்க ளையன்வீற் றிருத்தல் செய்தான். (௬எ)

காதலிற் குறக்கோ மாட்டி கரகநீர் வார்ப்பச் செவ்வேள்
பாதமெய்த் துணையை வேடர் பார்த்திபன் விளக்கிப் பின்னர்க்
கோதிலா சமன நீருங் கொடுத்தருக் கியமு நல்கி
மாதவன் மருகன் கையின் மதுபருக் கமுமீந் தானால். (௬அ)

அந்தண ரிரண்டாம் வேத வாகம மரபின் மிக்க
செந்தழ லதனை மூட்டிச் செய்வினைச் சமிதை யெல்லா
முந்திய முறையா லோம முடித்ததற் பின்பு ஞானக்
கந்தன்முன் னரிணை மீன்ற கன்னியைக் கொடுவந் துய்த்தார். (௬௯)

வலதுசெங் கையினாற் பொன்னின் மங்கல நாணை வாங்கிக்
கலைமகள் கையி னீந்து வள்ளிகந் தரத்துச் செவ்வே
ளலனுறப் புனைவித் தைய நன்பொரி தூவி வேதச்
சுலனனை வலம தாக மும்முறை சூழ்ந்த பின்னர். (எ௰)

மான்மகள் வலக்கால் பற்றி வஞ்சனேன் மனமா மம்மி
நூன்முறை மிதிப்பித் துள்ள நோன்மைபெற் றுயர்வான் சாலி
மீன்விழி பார்த்துப் பின்னு மிக்குயர் கரும முற்றிக்
கான்வனைக் குறவ னீன்ற கன்னியை மணஞ்செய் தானால். (எக)

மணவினை காண்பான் வேதன் மாலரன் றேவர் கோமா
னிணையறு முனிவர் கான மிசைத்தகந் திருவர் சூழ்ந்தார்
பணைமுர சோதை யார்த்த பைந்தரு மலரின் மாரி
கணமழை போலத் தூர்த்த கந்தனு மகிழ்ச்சி பூத்தான். (எ௨)

மன்றலந் தொடையல் சூட்டும் வதுவைநோக் குற்ற வானோர்
நின்றவ ரியாருந் தத்த நீள்பதி யடைந்தார் விந்தைக்
குன்றவர் சாட நீங்கிக் குமரவே ளுலகம் புக்கார்
மின்றிகழ் மருங்குன் மாதும் விசாகனு மகிழ்ச்சி பூத்தார். (எ௩)

சூருயிர் குடித்த வொள்வேற் றேகையெம் பெருமான் வேட
ராரமு தனையா ளோடு மணிமணிச் சிறப்பு வாய்ந்த
தேரின்மேற் கொண்டு ஞானச் செயந்தியம் பதியில் வானக்
காருலா வியதண் சாரற் கந்தமா தனத்திற் புக்கான். (எசு)

கரடிகை பேரி தாளங் காகளம் பதலை பம்மை
முருடுதுந் துபித டாரி முரசுசல் லிகைநி சாளம்
வரிவிர லேறு கோடு மத்தளம் படகந் தக்கை
பரவையி னார்ப்பத் தேவர் பனிமலர் மாரி தூர்த்தார். (எரு)

விந்தைமால் வரையிற் கந்தன் வேள்வியின் பொருட்டாற் சென்ற
வந்தநாட் டொட்டுத் தெய்வ வாரணந் தணங்கு நோற்றுக்
கந்தமா தனத்தி னுற்றாள் கண்ணுதற் பரனன் றுண்முன்
னிந்திரா திபரும் போற்ற விலிங்கத்தின் வடிவங் கொண்டான். (எசு)

கான்றமாக் கலுழி நால்வாய்க் களிறுலாங் குன்றந் தன்னிற்
றோன்றிய விலிங்க முன்னஞ் சுந்தரி யடியே னெஞ்சத்
தான்றபே ரெண்ணந் தானு மன்பினென் கேள்வ னெஞ்சத்
தேன்றவெண் ணமுமே நன்று யிறைமுடித் தருள்வா யென்றும். ()

எம்மிறை வேட்ட மாது மியானுமோ ருள்ள மாகச்
செம்மையை யருள்வா யென்றுஞ் சிந்தனை செய்ய வந்தக்
கொம்மைவெம் முலையாண் முன்னங் கோதிலா விலிங்கந் தன்னின்
மைம்மலி மிடற்றுப் புத்தேள் வந்தனன் மறைக ளார்ப்ப. (எஅ)

கயிலையெம் பெருமான் கந்த மாதனத் திலிங்கத் தூடு
வெயில்விரித் துலவுங் கோலம் வெள்ளைவா ரணன்கு மாரி
புயலினைக் கண்ட தோகை போலுளங் களித்தா ளந்தக்
குயின்மொழிக் குள்ளத் தூற்ற குறிப்பெலாம் பரனு மீந்தான். (எகூ)

ஈந்தவப் பொழுது தெய்வ யானையு மகிழ்ந்து வேற்கைச்
சேந்தனுக் கத்த னென்றுஞ் செகத்துள நாத னென்றுங்
காந்தளங் கரத்துச் சூலி காதல னென்று நீங்கா
வாய்ந்தபே ரன்பி னாலே வணங்கினள் வழுத்தி நின்றாள். (அய)

வழுத்திய தெய்வ யானை மாமனுங் கடவுள் பாத
முழுத்ததண் ணளியிற் பின்னர் முப்புர மெரித்த மூர்த்தி
தொழத்தகு மிலிங்கத் தண்டச் சூழலுள் ளளவு நீயே
தழைத்தசிந் தையினான் ஞானத் தண்ணளி சுரத்தல் வேண்டும் ()

ஐயநீ யுனது சேய்க்குஞ் சேய்க்கருந் தார மாகுந்
தையலா ரிருவ ருக்குந் தயவுடன் பரவி யேத்தும்
வையகத் தெவர்க்கு மன்பு மழையெனச் சுரந்து காத்தல்
செய்யவுன் னருளே வேண்டு மென்றன டெய்வ யானை. (அஉ)

கண்ணுத லதனைக் கேளாக் கடவுளர்க் கரச னீன்ற
பெண்ணமு தனையா யுள்ளம் பேதுற றவிர்தி நீயு
மெண்ணிய வெண்ணி யாங்கே யாமருள் புரிவோ மீது
திண்ணநம் மாணை யென்று செப்பின னொப்பி லாதான். (அங)

கொன்றைதேன் றுளிப்ப நின்று குஞ்சித சரணம் போர்த்து
மன்றினி னடிக்கும் பொற்றாள் வானவன் சந்த நீடு
குன்றகந் தன்னி லியாருங் கும்பிடப் பரிதி வேத
னின்றுள கற்ப மெல்லா நிறைந்திவ ணிருப்போ மென்று. (அச)

பேரரு ளிலிங்கத் தூடு பிரானுடன் மறைந்தான் றெய்வ
வாரண மடந்தை மீண்டும் வணங்கின ளிற்குங் காலைத்
தேரிடை யரிண மீன்ற செல்வியுங் குமர வேளு
மேருவி னுபர்ந்த கந்த மாதன வெற்பிற் போந்தார். (அரு)

உழைதருங் கொடியுஞ் செவ்வே லொருவனும் பொற்றேர் மீது
விழைவுடன் வருத னோக்கி வேழமான் மகிழ்ச்சி கூர்ந்து
குழைவொடும் போந்து செங்கை குவித்தன ளருட்க ணீரா
மழைகொடு வீங்குஞ் செம்பொன் வார்க்குடம் விளக்கி னாளால் (அசு)

கடவுதேர் நிறுத்தி வள்ளி கரங்களால் வலக்கை தூக்க
விடதுகை தூக்கிக் கந்த னெடுத்தன னியானை மாதுந்
தடநெடுந் தேரி னேறிச் சண்முக னிடப்பா கத்தி
னுடனிருந் தருளுங் கோல முவமையா னுரைக்கற் பாற்றோ. (அஎ)

மாதர்க ளிரண்டு பேரும் வானர சளித்த வேற்கைச்
சோதியுந் துலங்கு தோற்றஞ் சுடர்வயப் பரிதி யேந்துஞ்
சீதரன் றிருவும் பூமி தேவியுஞ் செம்பொற் றேரிற்
போதுமா றொப்ப தென்றே புகலலாம் புலவர்க் கம்மா. (அஅ)

தூயபொற் றேரி னீங்கிச் சோதிவே லுடைய காளை
யாயிழை மார்க ளோடு மாலய மதனிற் போந்து
மேயபே ரழகு வாய்ப்ப வேழத்தின் பஃகய தாய
சீயவான் பீடத் தெங்கோன் சிறந்துவீற் றிருந்தான் மன்னோ. (அகூ)

ஞானசத் தியினுல் வைகு நவைபறு சிவன்பா கத்தி
ஞனயே ரிச்சா சத்தி யரிதுசெய் கிரியா சத்தி
யூனமின் மூன்று மொன்று யுயர்வுட னிருத்தல் போல
மானவேற் படையான் சிந்து மாநகர் வதிந்தான் மாதோ. (கூ௰)

இந்திரன் மாதுக்காக விலிங்கமாங் கெழுந்த செய்கை
யந்தவே ளுணர்ந்து வேட்ட காதலிக் காக வந்த
தந்தையா மென்றென் றுள்ளந் தண்ணளி சிறந்து ஞான்ச்
சிந்தையாற் றுதை பூசை செய்தருள் புரிந்தான் சேயோன். (கூக)

தாரமா மிரண்டு பேருந் தாரகத் துருவ மான
வீரவேற் றடக்கை யண்ணன் மேருவிற் குழைத்தான் பொற்று
ளாரரு ளோடு பூசை யாற்றினர் சனக ளுதி
சீரிய முனிவர் தாமுந் திரிசுதந் திரரும் போற்ற. (கூஉ)

சனகனே யாதி யான தாபதர் தமக்கு மோன
வினியயோ கத்தி னுண்மை யிசையமா நிலத்து ளோர்க்கு
நனியருள் புரிந்து வேத நாயக னுகுஞ் செவ்வேள்
சினகரத் திருந்தான் ஞானச் செயந்தியம் பதியி லென்றான். (கூங)

## வள்ளியம்மைதிருக்கலியாணவத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—ஙகூங.

## ஒன்பதாவது
## பிரமாவுக்கு வரங்கொடுத்த அத்தியாயம்.



வேதமொரு நான்கென விதித்துள வியாதன்
பாதமலர் மெய்த்துணை பணிந்துசுக னின்று
காதலொடு நீடுகம லாசனன் வணங்க
வாதிதரு சேயுதவு மாறறைதி யென்றான். (க)

குருபரன் விமானமுயர் கோயிலி னிருந்தே
வருதிரி சுதந்திர மெய்ம் மாமறையி னோர்கா
ளொருவசன முண்டது வழாதிவ னுரைப்பாஞ்
சுருதியொடு நம்மடி துதித்தரு கிருப்பீர். (உ)

என்றுமுல கேழுதொழு மெம்பதி யிருந்தே
நன்றியுட னம்மடியி னுண்மல ரெடுத்தே
மன்றவணி வீர்கதி வழங்குவது தென்கா
னின்றுலவு சிந்துபுர மேயென நினைப்பீர். (௩)

நம்மையு நலம்பெருகு மாதரையு நாடுஞ்
செம்மைதரு கோயிலுள சீரியன யாவுஞ்
சும்மைகொடு காப்பது தொழிற்குரிய தென்று
னிம்மையுட னம்மையு மெனக்குதவு செவ்வேள். (௪)

ஆயிர மிரட்டியுள வந்தணர்க ணீவிர்
மேயவதி னுமொருவ னென்றுரை விளம்பித்
தாயினு மிரங்கியெளி யேன்றனை யளிக்குஞ்
சேயுள மகிழ்ந்துதிரு வாய்மலர்வ தானன். (௫)

வந்துதெரி சித்துநமை வாழ்த்துநர் பெருஞ்சீர்
சந்ததமு நுங்களை யடைந்தவர்கள் சார்வா
ரிந்தமட மாதரிரு வோருட னியாமிச்
சிந்துபுரம் வந்துதெரி சித்தினி திருந்தாம். (௬)

ஞானமில ராய்விடினு நம்மையு நவிற்று
தீனமுறு பாதக மிழைத்துளர்க ளேனு
மானமொடு சிந்துபுரம் வந்தடை பவர்க்கே
மேனிலை யளித்தருள்வம் வேண்டிய விருப்பால். (௭)

என்னவுரை செய்தகும ரேசனிரு போதாம்
பொன்னடி வணக்கமுறு பூசுரர்க ளியாரு
மன்னபரி சேயுன தடிக்கமலம் வீடே
மன்னுதொழி லாயினும் வழுத்துவதொன் றுண்டால். (௮)

நித்தலு மிறைஞ்சியிவ ணேயமொடு மூழ்கச்
சித்திவிழை மானுடர்க டேவர்பிறர் மூழ்கப்
புத்திர பவுத்திரர்கள் புண்ணிய மருத்த
முத்திதரு மத்தகய மூலவும தாகி. (௯)

நல்குரவு வெம்பிணி யொழித்தினிய நாவின்
மெல்லமுத மொத்தசுவை மேன்மையுள தாகிக்
கல்விபெரு ஞானமொடு காட்டியெமை யாளச்
செல்வமுள தீர்த்தம்வா நீயருள்செய் வாயால். (௰)

வேலையிடை மூழ்குதின மேலவர் விதித்தார்
சீலமுட னேழையர் தினந்தினமு மூழ்க
வாலியவிண் மாநதியின் வாய்ந்ததொரு தீர்த்த
மூலமிடை யீறின்முதல் வாவருள்க வென்று. (௰க)

கலைபயிலும் வேதியர்சொல் கட்டுரை வினவி
மலைமக ளளித்தருளு மைந்தனு மகிழ்ந்தே
சிலையினிரு நூறளவு தென்றிசையின் வென்றி
யிலைகொடொடு வேலினை யெடுத்தினிது விட்டான். (௰உ)

விட்டவயில் சேடன்முடி மீதினு மளாவித்
தொட்டவழி கங்கைவரு மாறுசெய்து தூவேன்
மட்டலர் கடம்பமணி மாலைபுனை செவ்வேள்
கட்டழகு பெற்றகையின் வந்தது களித்தே. (௰௩)

வேறு.

வேலொடு வேலையங் கரையின் மீமிசை
வாலிய கங்கைநீர் வரவு கண்டுள
மூலமின் றுயர்ந்தவேன் முருகன் முந்துறச்
சீலநான் மறையினூற் சென்று மூழ்கினன். (௰௪)

முந்துறக் குமரவேண் மூழ்குந் தன்மையா
லந்தமூற் றருளிரும்வே லளித்த பான்மையா
லிந்திரப் பெருவள வின்பத் துய்த்தலாற்
கந்தபுட் கரிணியாய்க் கவின்சி றந்ததே. (௰௫)

வருதிரி சுதந்திர மறைவல் லோர்களு
மருமறை முறையினு லதனின் மூழ்கினர்
திரிபுவ னங்களுந் தினமு மூழ்கிடப்
பெரிதிது நன்றெென மகிழ்ந்து பேசினர். (௰௬)

காவரு கந்தபுட் கரிணித் தண்புனன்
மூவிரு முகத்தின னருளின் முன்பதச்
சேவையின் மிக்குயர் திரிசு தந்திரர்க்
கேவரும் புகழிதி காசங் காட்டுமால். (௰௭)

திரைவத னரம்பத் தீர்த்தத் தன்மையால்
வருதினந் தினந்தொறும் வழாது நான்மறைச்
சுருதியின் மூழ்குநர் தொல்லை வான்கதி
விரைவொடு மடைந்துளார் மேன்மை கேண்மினோ. (௰௮)

நனைமுறுக் கவிழ்தரு நளின வீட்டுளான்
புனமுள கற்பத்தின் முராரி யென்பவன்
பனககாப் பண்டுயில் பரிந்து நீத்துவான்
றனுவொடு மிராமவ தாரத் துற்றனன். (௰௯)

செற்றமொ டிலங்கையிற் சேரி ராவணன்
கொற்றம தகற்றுவான் குறித்தி ராகவ
னற்றமி னம்முன மாதி சேதுவாய்க்
குற்றமின் றுயர் தரக் கோலி னானரோ. (௨௰)

காதலிற் சீதையைக் காக்க வேண்டியே
மாதவன் மூன்றவ தார மாயிவ
ணாதியிற் சேதுவா யமைத்த பான்மையான்
பூதலத் தமரராய்ப் புனித முற்றுளீர். (௨௧)

நந்தொடு தவழ்திரை நமது சந்நிதிச்
சிந்துவிற் றினந்தினந் திளைத்து மூழ்கலா
மிந்தவான் கதையலா லியாமு றைந்தசீர்க்
கந்தமா தனம்வருங் காதை சாற்றுவாம். (௨௨)

கருமுகில் படிந்துகண் டுயிலுஞ் சந்தனப்
பெருவரை மேருவாம் பிறங்க லோடுவெஞ்
செருமுயன் றுள்ளமுந் தேம்பி யாடகத்
தருவரை தானென வாக வேண்டியே. (௨௩)

மாற்றருந் தவத்தினால் வருந்தி நம்வயி
னோற்றலு நோக்கினா னோன்மை யாலுயர்
காற்றினின் முத்தலைக் கவினி ழுந்துள
வாற்றல்சால் பொன்வரை யாக வேண்டிநீ. (௨௪)

பண்ணிய மாதவப் பண்பு நோக்கினாந்
தண்ணளி சிறந்தபூஞ் சந்தச் சாரனீ
புண்ணியச் செயந்தியம் பதியிற் பொற்றையாய்
நண்ணுதி நவிற்றுதி நம்மை நாவினால். (௨௫)

நடந்துள பிரமகற் பத்தி னாளெலாங்
கடந்துபின் வருமயன் கற்பத் தெல்லையின்
மிடைந்தபொன் மேருவாய் விளங்கு வாயெனத்
தொடர்ந்தபே ரன்பினாற் றுணிவு செப்பினோம். (௨௬)

ஆதலா னமதுசந் நிதிய டைந்தலை
மோதுதெண் கடலிடைத் தினமு மூழ்கிநம்
பாதவா ரிசங்களும் பணிந்து நம்மையுங்
கோதிலாத் தன்னகங் கொண்டி ருந்ததால். (உஎ)

தருக்கினுற் கந்தமா தனத்தண் சாரலு
மிருக்கினுற் றினந்தின மினிது மூழ்கலாற்
பெருக்குமா நிலத்துளோ ரெவரும் பெட்புறக்
குருக்குநா டொறுந்தொறுங் குளிக்க லாகுமால். (உஅ)

இன்னுமோர் காதையுண் டெடுத்துக் காட்டுதுந்
துன்னுநான் மறைத்திரி சுதந்தி ரத்தர்கா
ளன்னவா கனத்தய னகந்தை யான்மணிப்
பன்னகா பரணனைப் பழித்து வைகினுன். (உகூ)

என்றலை யீசனு மெண்ணிக் காரிநீ
கன்றலை நூற்றிதழ்க் கமலக் கோயிலான்
றன்றலை யைந்திலோர் தலையைச் சோரிநீர்
நின்றலை யெறிதர வுகிரி னீக்குவாய். (௩௰)

என்றலுங் கபாலங்கை யேந்து காரியு
நன்றென வணங்கிப்பூ நளினத் தான்வயிற்
சென்றனன் செயிர்த்தனன் சிரங்க ளைந்தினி
லொன்றற விடக்கையி னுகிரி னீக்கினுன். (௩க)

ஈர்ந்தபின் கமலத்தோ னிரங்கி வைகுண்டஞ்
சார்ந்துதன் றந்தைபொற் சரணந் தாழ்ந்துளஞ்
சோர்ந்தனன் சோர்ந்துள சுதனைத் தேற்றவுந்
தேர்ந்தனன் றனஞ்சயன் றேரின் பாகனே. (௩உ)

பெண்மையி லீசனைப் பேது றச்செய்தோர்
மண்மையின் மயங்கிய மாலும் வான்முகிற்
றண்மையிற் சரவணோற் பவன்ற னெறெழுத்
துண்மையை யென்மகற் கோது வேமெனா. (௩௩)

ஆர்வமீ தூர்ந்திட வம்பு யக்கணே
சார்வுறு தனையனைத் தழுவித் தாங்கிநீ
யோர்வுற வாறெழுத் துண்மை யோதுவாஞ்
சோர்வறக் கேளெனச் சொற்றன் மேயினுன். (௩ச)

ஒருதலை போயுள துனது சென்னிமேல்
வருதலை வேண்டினை யாயின் மாமுதற்
பொருதலை வாரியிற் புலவு காட்டிய
விருதலை யொருசெவ்வே லிறைவன் மந்திரம். (௩௫)

குருமுறை யாகயாங் கூறு வாமது
மருவுமா ணாக்கரின் மரபிற் கேட்டுநீ
யுருவகத் தேற்றென வுளங்கொண் டோதினான்
கருமுகிற் படிவமார் கமலக் கண்ணனே. (௩௬)

அந்தவா றெழுத்தையு மம்பு யாசனன்
சிந்தையார் வத்துடன் றியானித் தான்றவ
முந்துநாங் கண்டுநான் முகத்த நீயுள
நொந்துமா தவஞ்செய்து நோற்ப தேதென. (௩௭)

உரைத்தவா சகந்தனை யுணர்ந்து வேதனுஞ்
சிரத்திலைந் தொன்றியான் சேதிப் பாகலின
வருத்தமுற் றேயுனை நோற்ற வாறெனக்
கருத்தழிந் தனனெனக் கழறிப் பின்னரும். (௩௮)

விழுந்தடி வணங்கினன் விழியி னீர்மழை
பொழிந்தன னகந்தையாம் பொருமல் போக்கிநெஞ்
சழிந்தன னளவிலா வன்பி னெற்றொழு
தெழுந்தனன் றுதியினு லின்ன சாற்றுவான். (௩௯)

வேறு.

கயிலையி லீசன் போற்றுங் கடவுளே கடவுட் டெய்வ
மயிலுடன் குறமான் றோயு மாமறைக் கடலே மேருப்
புயம்விழி யீரா றான புங்கவா மதமா றுக்கு
நயனுறு முகமா றான நாதனே போற்றி போற்றி. (௪௰)

கனகமா முடியிற் றுங்குங் கவின்பெறு மணியா லன்பர்
மனவிரு ளகற்றும் பானு வடிவமே கவுரி யீச
னினியபேர் வாஞ்சை யாகு மினமணி யிருக்கச் சேர்த்த
வினையிரு ரகம தாக விளங்குபெட் டகமே போற்றி. (௪௧)

திருவரு ளுனுவாற் றேவர் மூவரிற் சிறப்பு வாய்ப்ப
வருளுதல் காத்தன் மீட்டு மழித்திடல் புரிவாய் போற்றி
மருளும்வேள் கணைக ணீக்கு மாதவ ரிதயப் போதிற்
பரிதிபோல் விளங்கு ஞானப் பன்னிரு புயத்தாய் போற்றி. (௪௨)

தரைபுனல் செந்தீ காற்றுத் தாவறு வெளிய தான
வுரைதரு பூத மைந்தோ டுயர்மகத் துவமாங் காரம்
விரவுதத் துவப்பூந் தோட்டான் மேயதோ ரண்ட மொன்று
பரவுநான் படைக்கு மண்டப் பான்மையா மீது போலாம். (சங)

அளவிலா வண்ட மெல்லா மையநீ பீட மாக
வளனுற விருக்கு நின்சீர் மறைகளு முடிவு தேறு
வெளியனேற் குரைக்கற் பாற்றே யாவர்க்குங் குருவா னோர்க்குங்
களிமகிழ் சிறப்ப வோதுங் கருணையாங் குருவே போற்றி. (சச)

சொல்லுமுன் றியான மாகுஞ் சூரண வசியத் தாற்பூ
மெல்லியல் வாணி நான்கு வேதவா கமங்கள் வல்லா
ளெல்லையின் ஞான முன்றா ளிறைஞ்சுவோர்க் கெய்துங் கல்லாப்
புல்லறி வுடையே னெங்ஙன் றேர்குவன் பொறுத்தாள் போற்றி ()

தலைமைசே ருலகை மூன்றுந் தருதற்கோர் கமலை போலாங்
கலையெலா முதவ வெள்ளைக் கமலையாங் களிக்கு ஞான
நிலைமைசார் வதற்கு வாய்மை நிறைதரு குருவாந் த்யான
மலைவற வருளு நின்றாள் வாரிசம் போற்றி போற்றி. (சசு)

தத்துவத் தரங்க மோதித் தணப்பிலா மோக மாய
வித்தெனு மிடங்க ரோடு வேண்மதி யாசை கண்டு
கத்துமிச் சனன வேலை கடப்பத்தா ணுவாய் நல்கு
முத்தனே கருணை மாறு மூவிரு முகததாய் போற்றி. (சஎ)

வீரவா சனத்துச் சீய மெல்லணை பொருந்தி வாமச்
சீருறுங் கரத்தை வாமத் திருமுழந் தாளிற் சேர்த்திச்
சாருறும் வலக்கை ஞான முத்திரை தரித்து வாணி
யாருவா மதிய மேய்ப்ப வொளிதிகழ் வடிவ மாகி. (சஅ)

மாலய னுணரா ஞான வானவற் குபதே சிக்குங்
கோலமு நினைந்து நெஞ்சிற் குறித்தமே லவரை யெல்லாஞ்
சீலநான் மறையுந் தேடுஞ் சிவகுரு வாக்கு ஞான
மூலமே யெங்க ளாறு முகத்தனே போற்றி போற்றி. (சகூ)

உன்னரு ளமுத வாரி குளித்துளோர் பிரம லோகந்
தன்னுள சீரு மாவி போஞ்சரீ ரத்தி னூடு
துன்னலங் கார்ம் போல நோக்கவுந் துணிவுதேற்று
முன்னவா கருணை யாறு முகத்தனே போற்றி போற்றி. (ருo)

தேறலாங் கனிமு னீத்து விடமுண்பார் செய்கை போல
வேறுமோ*ரியவு ளெண்ணி மெலிவுறு மடியார்க் கெல்லா
மாறுமா முகத்தி யானத் தமிர்தினற் குளிர்ச்சி காட்டு
மீறிலா முதலே வேற்கை யிறைவனே போற்றி போற்றி. (ருக)

வள்ளியங் கொடிக்கு வாய்த்த வான்றருக் கொம்பே போற்றி
தள்ளருங் கருணை காட்டுஞ் சண்முகத் தெந்தாய் போற்றி
வெள்ளியங் கிரியின் ஞான மேருவின் மணியே போற்றி
யுள்ளநெக் குருகு மென்பா லுதவுவாய் போற்றி யென்று. (ருஉ)

தோட்டலர் கமல வீட்டுச் சுருதியா னுரைத்த வேதப்
பாட்டுரைத் திடுவோ ருக்கும் பகர்ந்துளார் பக்க மாகக்
கேட்டுளார் தமக்கு மேலாங் கேடிலா வாழ்க்கை நல்கித்
தாட்டுணைக் கமல வீடு கொடுப்பது சரத மென்று. (ருங)

பிரமனை நோக்கி நெஞ்சம் பேதுறேல் கருத்தில் வேட்ட
வரமுனர்ப் பகர்தி யாமும் வழங்குது மென்ன முன்னம்
புரமெரித் தானை யெள்ளல் புரிந்தன னதனு லேந்தாஞ்
சிரசிலொன் றிழந்தேன் மீளத் திருவரு ளிரங்க வென்றான். (ருச)

முனிவர்கா ளுமைப் போது முராரிகா தலன்முன் னேற்ற
னனிமகிழ்ந் தெய்து கால நாடியோங் காரந் தன்னற்
கனியுமைந் தெழுத்தி னுண்மை கழறியோ ரறிவுங் காமர்ப்
பனிமலர்க் கமலத் தான்முன் பகர்ந்தவா பகர்வுங் கேண்மின். (ருரு)

வாமமார் களிற்றின் மாது வயாவுற நோற்றற் காகக்
காமர்சூ ழிலிங்கத் தன்மை காட்டிய வகில நாத
னுமமா யிரமு நாவி னவிற்றியைந் தெழுத்தின் மூல
மோமென வழுத்திக் கங்கு லும்பகற் காலு மேத்தி. (ருசு)

இடைவிடா தொழுகு நீரா லினியவைந் தெழுத்திற் பூசை
யடைவினு லியற்று வாயென் றறைந்தன மவனுஞ் சூலப்
படையினன் பாத நாலா யிரயுகம் பணிந்தான் முன்னந்
தடைபடா திலிங்கத் தூடு தோன்றினன் றழற்கட் பெம்மான். (ருஎ)

தோன்றிய முக்கட் சோதி தொழுங்கம லத்தோ யாதுக்
கான்றமா தவத்தான் மேனிக் கயர்வுகொண் டிருந்த தெம்முன்

ம
பரிச்

* தெய்வம்.

னேன்றுரை பகர்தி யாமுந் தருகுவ மென்ன வேதன்
கான்றநீர் கண்கள் சோர வுரைப்பது கருத்துட் கொண்டான். (௫அ)

கருத்தினின் மகிழ்ச்சி கூர்ந்து கரதல முச்சி கூப்பி
யருத்தியிற் கண்ணீ ராகு மானந்த வாரி மூழ்கித்
திருத்துநாக் குழற நின்று தெண்ணிலா வேணி யானைப்
பொருத்துபே ரன்பின் வேதன் றொழுதனன் புகழ்வ தானுன். (௫௯)

வேறு.

உவமை யின்றெழு முமையின் பாகமா
யவிரு ஞானவா னந்த வாரியாய்த்
சிவனும் வாஞ்சையிற் சிறப்ப நல்கிடு
நவையி லாச்சக நாத போற்றியே. (௬0)

துதிவெண் பூதியும் புலியின் றோலுமாய்க்
கதிரின் மேனியிற் கவினப் போர்த்துளாய்
மதியும் பாம்பும்வான் சடையி னீடுமா
நதியுஞ் சூழ்சக நாத போற்றியே. (௬௧)

ஆல காலத்தா லரிய கண்டத்தோர்
கோல மாக்கிய கொள்கை யாய்புரத்
தேல வேநகைத் தெரிவைத் தாய்மறை
நாலுஞ் சொல்சக நாத போற்றியே. (௬௨)

காமன் மேனியைக் கனற்றும் பார்வையாய்
தூம வார்குழற் றோகை பாதியாஞ்
சாமகானனே தகைய வாயிர
நாம மாஞ்சக நாத போற்றியே. (௬௩)

எண்ணுந் தாருவு மினிய தேனுவும்
பண்ண மைந்தமா மணியும் பண்பினு
னுண்ணி னைந்துளார்க் குதவி ஞானத்தே
நண்ணு வாய்சக நாத போற்றியே. (௬௪)

உன்னை யெள்ளலா யுரைத்த தன்மையாற்
சென்னி யொன்றுபோய்த் தேம்பி னேனது
மன்னு காரண மாக வந்தனை
பண்ணி னேனெனப் பகர்தன் மேயினுன். (௬௫)

வேதன் சொல்லினை வினவிச் சூலவே
ளாகன் கூறுவா னாகி னங்களி
யோதி மத்தநிற் குணர்த்து வாமுளத்
தாத ரத்தினா லகத்துட் கோடிநீ. (௬௬)

வேறு.

போற்றிய சிந்து புரந்தனி லன்பு புகுந்தாராய்ச்
சாற்று தியான மருச்சனை மிக்க தவத்தாலே
பேற்ற முறும்பெரி யோர்பெரி யோர்க ளிபாதேனு
மாற்ற மிலாது நினைக்குமுன் முன்னர் வருந்தானே. (௬௭)

என்னமு னூறு முகக்கும ரேச னிசைத்தானு
லன்னவன் மேவிய வாலய வாயி லணித்தான
சன்னிதி வாரி தினந்தின மூழ்கு தணப்பின்றிப்
பொன்னின் விமான வுருக்கொடு போற்றுதி பொற்பாமால். ()

விமானம தாகி விளங்குதி வேத வியப்பானங்
குமார சுவாமி விமானம தான குறிப்பாலே
யமானத வாவிபு ளாய்தலை யைந்து மளிப்பாமே
னமானை யுனக்குள கற்ப மகன்றிடு நன்னாளே. (௬௯)

தண்ணளி யாலிது தந்தன நம்முள சாரூபங்
கண்ணளி னாலய மேவுதி கந்த வரைக்கண்ணார்
புண்ணிய சிந்து வினிற்றின மூழ்கு பொருக்கென்றே
யெண்ணிய வெண்ணிய வெய்துமி தூண்மை யிசைத்தேமால். ()

தலைமை புரிந்திட நாமருள் செய்துள சாரூப
நிலைமை யடைந்திடி லைந்தலை யுன்றலை நேராமான்
மலிசுடர் வேலவன் வாயிலின் முத்தம் வழங்குஞ்சீ
ரலைமணி யாழியி னித்தமு மூழ்குத லாமென்றே. (எ௧)

நீதலை யெய்துமந் நாளள வுங்குக னேராகும்
வாயிலின் வாரி தினந்தின மூழ்க வழக்காகு
மாயனி ராமவ தாரமொர் மூன்றில் வருஞ்சேதுச்
சேய்முன ராதிச் சேதுவி தாகவுஞ் செய்தானல். (எ௨)

வேறு.

மிடைந்த தெண்டிரைச் சேதுவுங் கண்டுநம் வியப்புறு மிருதானே
யடைந்து பூசனை விதிமுறை புரிந்தன னாதலி னயன்கேண்மோ

படிந்து நீயிவண் வைகுதி யுன்றலைப் பான்மையின் றவத்தாலே
தொடர்ந்த பேர்வுத ஞாரம்ப மாமெனச் சொல்லுதன் மரபாமால். ()

தொட்ட வாரிதி யுடுத்தமா நிலத்துள தூயநன் னதியாய
மட்டி லாதவான் றீர்த்தமுற் றுடிய மாதவக் கதியெல்லாங்
கட்டு நான்மறைக் கடவுனீ முகாரம்பக் கடலொரு தினமூழ்கக்
கிட்டு மென்றுபின் னிலிங்கத்தி லடைந்தனன் றெழுமுமுலோன் தலைவேக.

ஆய பான்மையா னமதுசந் நிதிவத ஞாரம்பக் கடலூடு
தூய வான்றிரி சுதந்திர முனிவிர்கா டோன்றிய தினந்தோறு
மேய வன்பினுன் மூழ்குதன் மரபென விதித்தன மிதுநிற்க
நேய மாகநாங் காதையொன் றுணர்த்துவ நெறியினின் றுணர்வீரால்

பொலனி லத்தருக் குளகென நெடும்பணைப் புழைக்கைவான் புடைநீட்டிக், கலுழி மாமுகி லெனப்பொழி களிறுசூழ் கலிங்கநாட் டரசின்ற, திலக வாணுதற் கனகசுந் தரிப்பெயர்த் திருமருக் கருங் கூந்தற், கலவ மாமயில் போற்குறு முனிவரன் கவினுறுந் தமிழ்ச் சாரல். (எசு)

பொருநை யந்துறை மூழ்த்தி னுடுவான் போந்தனள் போங்காலை
யரிய மாதவ னருவரைக் கானிடை யயக்கிரீ பனைப்பாராத்
தெரிவை யாயிடை நின்றவ மதிப்பினுற் சிரித்தன ளதுகாலை
விரைவி னீவருஞ் சனனத்தின் முகம்பரி யாகென விதித்தானால். ()

விதித்த சாபத்தைக் கனகசுந் தரியெனு மெல்லிய றயரோடுந்
துதித்து நீபகர் கொடுமொழி தவிர்பகல் சொல்லுதி யெனலோடு
மதித்தி ருந்தயக் கிரீபனு மவண்முகம் பார்த்துமா தவனுபி [ம்.
யுதித்து ளானுக்குப் போந்தலை வருதலை யுன்னிநோற் றுளன்முன்ன

கந்த மாதன வரையுள தவ்வரைக் கண்ணிடைக் கவின்பூத்த
மந்தி ரத்தினின் மந்திரப் பொருளதா மயூரவா கனத்தெந்தை
முந்து சந்நிதிச் சிந்துவின் மூழ்கினன் மொய்குழ லவணீபோ
யிந்த மாமுகம் போயந்த மாமுக மெய்துநீ யேகென்றான். (எகூ)

புக்க வச்சன னச்சுமை போயபின் புலிபொது வறக்காக்கு
முக்கி ரப்பெரு வழுதிபா லுதித்தன ளொளிவனப் புறுமேனி
மிக்க வங்கசுந் தரியெனும் பெயரொடும் விளங்கினள் பரிபோன்று
தக்க மாமுக மாயினள் வழுதியுஞ் சஞ்சலித் துளஞ்சோர்ந்தான்.(அம)

சோர்ந்த காலையி னந்தர வாணியொன் றரசநின் சுதைக்கிம்மாக்
கூர்ந்த வானன நன்முக ளுகநற் குறைகட னதிவாவி
யார்ந்த தீர்த்தத்தி னுடிக வென்றவ ணறைந்ததா லதுகேளாத்
தேர்ந்த மந்திரி மாரொடுங் களித்தனன் செழியர்கோ னினிதுற்றான்

வேறு.

செழியர்பிரா னமைச்சரொடுஞ் சேனையொடுந் தன்மகளை
வழிமரபின் மூத்தார்க ளொடுங்கூட்டி வானதியாஞ்
சுழிபெறியுங் கங்கைதனுக் கோடிமுதற் றாயபுனல்
விழுமியதண் ணதிமூழ்க மகிழ்விஞெடும் விடுத்தனனால். (அ௨)

நன்பொருளாந் தாரகத்தை நண்ணுவிக்குங் கங்கைமுத
லின்பமுறுந் தீர்த்தமெல்லா மினிதாடித் தண்பொதியத்
தென்பொருநை யிருகரையுந் தீர்த்தமுமு வதுந்தினைத்து
மின்பொலியுஞ் சங்கமமார் வேலையினும் படிந்தனளால். (அ௩)

ஆடியபின் னீடுவத னாரம்பத் துறைமூழ்கக்
கோடகத்தின் முகமொழித்துக் குறுமுயலின் மறுவொழித்த
நீடுமுவா மதிபோல நிறைவுபெறு முகநோக்கிச்
சூடகச்செங் தளிர்க்கையுளங் துளங்கினண்மா மகிழ்பூத்தாள். (அ௪)

விதிமுறையிற் பலபொருளும் வேதியருக் கினிதளித்து
மதிமுகத்தின் செவ்விபெற்ற மடவாலன் பினின்மூழ்கிக்
கதிர்மதியக் குலத்தாதைக் கொற்றர்தமைக் கடிதுய்த்தா
ளதிர்குரற்று னைகளோடுஞ் சென்றடைந்தான் பஞ்சவர்கோன். (அ௫)

கவுரியர்கோன் செயந்திபுரந் தனிலடைந்து கன்னிகையி
னவிரொளிவாண் முகநோக்கி யற்புதத்தின் கடன்மூழ்கி
யுவரியினீ ருடன்படிந்து மகளோடு முவமையிலா
நவமணிக்கோ யிலிற்புகுந்து நம்மையும்பூ சனைபுரிந்தான். (அ௬)

ஆதலினம் மாலயத்துச் சந்நிதியி லருந்தீர்த்த
மோதிடுநற் றிருப்பெயரு முறுமுகா ரம்பமதா
மாதரவின் வாஞ்சாதீர்த் தப்பெயரா மல்லாமற்
போதமுறுஞ் சத்தியதீர்த் தமுமாகும் பூசுரர்காள். (அ௭)

என்றுரைத்த குமரேச னின்னமுதச் செங்தேற
னின்றமுனி வரர்செவியா லெடுத்தருந்தி நிகரின்மறை
யின்றளவு முணர்வரிதாங் குகன்பாதத் திணைகிழற்கீழ்த்
துன்றுதிரி சுதந்திரரு நீங்காது தொழுதிருந்தார். (அஅ)

பிரமாவுக்கு வரங்கொடுத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—சாஅக.

---

## பத்தாவது:

## திரிசுதந்திரர்வரலாறுரைத்த அத்தியாயம்.

முற்றுணர் வியாதமா முனிவன் றண்மலர்
பற்றுடன் சுகமுனி பணிந்து தந்தைநீ
சொற்றிரி சுதந்திரர் வரவுந் தோற்றமு
மற்றதுஞ் சொல்கென வழங்கன் மேயினன். (க)

சுகமுனி வருதிரி சுதந்தி ரத்தருங்
குகனுமொன் றுகவே யிருந்த கொள்கைநா
முகமனன் றுரைப்பது மோனத் துண்மைபோ
லகமகிழ்ந் தினிதுகே ளறைகு வாமரோ. (உ)

முதுக்குறை யுறுதவ முனிவர் தங்குழு
விதித்திட வரியதாம் வேத நான்கையும்
மதிக்கொளும் வலியினர் மகிழிற் கங்கைமா
நதிக்கரை யினிதுமா தவத்தி னண்ணினர். (ங)

களிசிறந் தாறெனுங் கரும மாற்றுவார்
தெளிதருங் கடவுளர் முனிவர் தென்புலத்
துளரிவர் மும்மையார்க் குரிய வன்பினொ
லளவறு சுருதிநூ லகங்கொண் டாய்ந்திடா. (ச)

பிரமவான் சரியத்தான் முனிவர் பெட்புறக்
கருமநின் றுற்றுவார் கடவு ளோர்க்கெலா
மரியவேள் விகள்புரிந் தார்வ மூட்டுவார்
வருசுத னைக்கொட வாசிக் கண்ணுளார். (ரு)

தங்களுக் கன்புறத் தரும மாற்றுவார்
பொங்குவெங் காமமுன் புகலு மாறெனத்
தங்குமக் குறும்பறுத் துயருந் தன்மையார்
செங்கம லத்தனை நோற்குஞ் செய்கையார். (சு)

இருந்தனர் தம்முன செய்தி வேதனீர்
புரிந்தமா தவத்துள புகழ்ச்சி யெய்தினு
மருந்தவத் தீருளத் தார்வ மீதெனத்
திருந்துறப் புகலுமென் றிறைவன் செப்பலும்.

அஞ்சலி செலுத்திநின் றந்த ணாளர்வெண்
கஞ்சநாண் மலர்வளர் கலையின் செல்விக்கே
தஞ்சநா வளித்தசெந் தாம ரைக்குளாம்
விஞ்சையா யகத்துள விருப்பஞ் செப்புகேம்.

புடவியுஞ் சுவர்க்கமும் பொன்னந் தாமரைக்
கடவுணின் னுலகமுங் காமுற் றேமவ
ணிடைதொறுஞ் சுதந்திரத் திருத்தற் கெந்தைநீ
தடைபடா தருளெனச் சாற்றும் வண்ணமே.

அம்புயத் தண்ண லு மளித்துப் போயினன்
வெம்புமக் கினியவர் வேட்ட மூவர
நம்புற வளித்தன னகைநி லாக்கொழுந்
தும்புனந் தருள்புரி சூல பாணியும்.

வேட்டமூ வரங்களும் வேதி யர்க்குளங்
கூட்டுற மாயனுங் கொடுத்துப் போயினு
ளுட்டுமுத் தேவுமுப் புவன நல்கலாற்
சூட்டுபேர் திரிசுதந் திரரென் றுயதே.

அன்னதன் பான்மையா லந்த ணாளர்தா
மன்னுமுப் புவனமு மகிழ்ந்து வைகினர்
பின்னரும் பொருநையங் கரையின் பேர்மகந்
தன்னொடு மில்லறந் தழைத்து வைகினர்.

இந்தமாக் கதைதனை யெடுத்துக் காட்டிய
தந்தையாம் வியாதனைத் தாழ்ந்து போற்றியே
யந்தண ரிலக்கமெவ் வளவென் றுன்சுகன்
சிந்தையிற் களிமகிழ் சிறப்பச் சொல்லுவான்.

திருமுதுகுன்றத்துச் சிவன்றன் பூசனைச்
சுருதியி னின்புறப் புரிந்து சூழ்வினைக்
கருமல யகற்றிமுக் கண்ணன் றன்மல
ரிருமையும் பெற்றெரா யிரவர்வைகினர்

பெறலருந் திருவுடன் சிறந்து பெய்மதத்
தறுகண்மா வியானையாற் றூரம் புல்லிய
வறுமுகன் பாலிரண் டாயி ரத்தரு
மூறுபொரு ளடைந்துவா னவர்க்கொப் பாகவே. (யரு)

நித்தமுங் குகன்பத நீக்க மின்றியே
பத்திமைச் செயந்தியம் பதியின் வைகினூர்
வித்தகச் சரித்திரம் விளம்பு மேலையோர்
முத்தராய்க் குகனடி முளரி சார்வரால். (யசு)

புண்டரீ கத்தொடு பாம்பு போற்றிய
புண்டரீ கப்புரப் பொதுவிற் பொற்புறப்
புண்டரீ கப்பதம் பெயர்த்த புங்கவன்
புண்டரீ கப்பதப் போது பூசியா. (யஎ)

மும்மையி னாயிர முனிவர் வேள்வியின்
செம்மைபெற் றருணடத் தியானத் தூற்றுளார்
தம்மையர்ச் சனைபுரி தன்மை யோர்கடா
மிம்மையு மறுமையு மின்பத் தெய்துவார். (யஅ)

அளக்குநா லாயிர மந்த ணாளர்தாந்
துளக்கம லாசன புரத்துச் சார்ந்துளார்
வளத்துட னிருந்துமா தவனைப் பூசனை
யுளக்களி சிறப்பநோற் றுயர்ச்சி மேவினூர். (யகூ)

அல்லுறழ் கண்டன்வா ழுருண வெற்பினிற்
சொல்லுமை யாயிரந் தோமில் பூசுர
ரெல்லையி லன்பினூ லீசன் றாண்மலர்
மல்லலம பூசைசெய் தினிது வைகினூர். (உய)

அருஞ்சக நாதத்தா றாயி ரம்பெயர்ப்
பெரும்புவிக் கடவுளர் பிரசத் தும்பிசூழ்
கருந்துள வத்தனைக் கருதிப் பூசனை
புரிந்துவான் சிறப்பொடு பொருந்தி வைகினூர். (உக)

வாழிய மாதொரு பாகன் வாழ்திரு
வீழியின் மிழலையின் வேதத் தன்மையாற்
சூழு மேழாயிரஞ் சுருதி யந்தண
ரேழையோர் பாகனை யிறைஞ்சி வைகினூர். (உஉ)

கூடலி னிருந்தருள் குழகன் பக்கமாய்
நாடுமெண் ணுயிரர் நான்கு வேதமும்
பீடுற வுணர்ந்துளார் பிறையின் வேணியை
யேடவிழ் மலரிணு லருச்சித் தேத்தினுர். (உங)

சாற்றருந் தண்டக வனத்து மாதவ
மாற்றிய வொன்பதி ணுயி ரத்தரு
மேற்றமாம் பூசனை யிராமன் ருண்மலர்
போற்றியுட் களித்தவண் பொருந்தி வைகினுர். (உச)

வழுவின்மா தவத்துமா தவன்றன் கோகுலத்
தழிவில்வே தியர்பதி ணுயி ரத்தர்தா
முழுவலன் போடுமா லுபய தாண்மலர்
தொழுதுளக் களிப்பொடு சூழ்ந்து வாழ்ந்தனர். (உரு)

சிறப்புயர் வதரிகாச் சிரமத் தைந்துடன்
குறிக்குமா ருயிரங் கோதி லந்தணர்
நறைத்துழா யலங்கலரூழ் நார ணன்பதம்
பிறப்பிறப் பொழிதரப் பேணி யாங்குற்ருர். (உசு)

துதிதரு முகிலருச் சுவாமி மாமலைப்
பதியினின் மிக்குறு பன்னி ராயிரர்
விதிநிகர் வேதியர் வேற்கைச் சேவகன்
முதியதாட் டாமரை மோலி சூட்டுவார். (உஎ)

அளவுறு மெழுபத்தெண் ணுயி ரம்பெயர்
வளனுறு திரிசுதந் திரத்தர் வான்றிரைக்
குளிர்பனிக் கருங்கடற் கோசி கம்பனை
தளிரியன் மல்குறத் தவத்தின் வைகுவார். (உஅ)

ஏவர்க ளாயினு மிவரை நெஞ்சத்துப்
பாவகஞ் செய்யினும் பண்பி னேத்தினும்
பூவடித் தாமரைப் போது போற்றினுந்
தேவரோர் மூவர்க்குஞ் சிறப்புச் செய்துளார். (உகு)

திரிசுதந்திரர் வரலாறுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—ருாய.

---

## பதினொராவது:
## மாதபூசைவிதியுரைத்தஅத்தியாயம்.

பொறிவழியிற் புலன்செலுத்தா வியாதமுனி சுகன்முகத்தைப் பொருந்த நோக்கிக், குறியமுனிக் கறமுரைத்த செங்கனிவாய்க் குரு பரன்றாள் குறித்து மாதந், தொறுமுறையிற் பூசனையாற் றிடுமாறு மவனருளிற் றொடர்ந்த ஞானத், துறுசுருதி யுணர்ந்ததிரி சுந்திரர் செய் கையும்விதியி னுரைப்பான் மாதோ. (க)

கூறுமிரண் டாயிரரு மிருக்காகு முதல்வேதக் குழுவோர் முன்ன் மாறுபட வருங்காம முதலாகும் பகையனைத்து மரபின் வென்றோர், தேறுபெறு ஞானமெலாந் தாமுணர்ந்து பிறர்க்குரைக்குஞ் செய லோர் செவ்வே, ளாறெழுத்து மம்புலத்து ளடக்கியொரு நால் வேத மங்க மாறும். (உ)

முற்றுணரும் பெரியோர்க ளருமகத்தின் கருமமுற்று முரவோர் வேதத், துற்றசுபா சுபகரும மனைத்தினையுந் தவறுதுள் ளோது யேலோர், பற்றிகலி லாதுறைவோர் முத்தேவர் தம்பதமும் பழித்து வாய்ந்த, பெற்றமுகைத் தவன்சரண பங்கயமே பொருளாகப் பேணு நீரார். (ங)

ஐப்பசிச்சுக்கிலநவமி கார்த்திகையிற் சுக்கிலத்தட் டமிவை காசிச் சுப்பிரபக் கத்தொருமூன் றும்பக்க மாசியினிற் சுவேத பக்கஞ், செப் பருஞ்சத் தமியான யுகாதிநான் மூன்றுகுந் திங்க டோறு, மெய்ப்பவூ ரணைமகர சுக்கிலத்தேழ் பதினொன்று மேய பக்கம். (ச)

சொல்லுமனுப் புரட்டாதிப் பிறபக்கப் பிரதமையைத் தொட்டு முன்னு, மல்லலஞ்சேர்ச் சுவேதபக்க முன்னுகு மானையமா மாதந் தோறும், புல்லியபிற் பக்கவுவாப் பன்னிரண்டுஞ் சங்கிரமப் பொழுதீ ராறும், வெல்லரிய வைதிருதி விதிபாத நாலாறு மேலுமூன் றும். (ரு)

தனுமகரங் குடமீனத் தமரபக்கச் சத்தமிசார் நவமிமேய, வனு வெனுமட் டகையிவையி னூடுவரு மட்டமிநான் கான பக்க, மினிய மகர வட்டகையா மித்தொகைதொண் ணூற்றாறு மிடுஞ்சி ராத்த, மனுவினெறி வழிமரபிற் றென்புலத்தோர் தங்களுக்கு வழங்குந் தூயோர். (சா)

மேயசுவா காகாரஞ் சுதாகாரம் வவுஷ்ட்கார மிக்க மூன்றி, லாய விதி மந்திரத்தின் மிக்குயர்ந்தோர் பகலிரவு மனுட்டா னத்திற், றாய ர்கொடிக் கினிதூட்டி யதிதியரோ டிருந்துணவு துய்ப்போர் பூதி, காயமணிந் தரன்மணியு மணியாக வாகமெலாங் கவினப் பூண்போர். (எ)

இருக்காலு முக்காலுந் தூயகந்த புட்கரிணி யினிதின் மூழ்கி,
மருக்காலு மலரெடுத்துக் குகனையருச் சனைபுரிந்து வணங்கி ஞானச்,
செருக்காலுங் கனிசிறப்போ ரவர்முகச்செந் தாமரையைத் தியான
மாக, வொருக்காலுங் னினைப்பவரை யிருக்காலு மெடுத்துரைப்ப
வலப்பின் றுமால். (அ)

நவையறுகா ட்சியராகிக் காலமொரு மூன்றுமுள நாடித் தூய
தவவடிவா குந்திரிசு தந்திரந்தர் தங்களிடஞ் சார்ந்து சார்ந்தூண்
களைமெடுத் தருந்திடினு நீர்சிறங்கை யருந்திடினுங் கவற்சி பூண்ட
பவமகன்று மேலாய பரபோக மடைந்தூழின் பகைவெல் வாரால். ()

வேறு.

இத்திரி சுதந்திர ரென்னும் பூசுரர்
வத்திர சததளம் பார்க்கு மாண்பினோர்
குத்திரப் பாவமோர் குறைந்து மேலதா
முத்திபெற் றரனடி முளரி சேர்வரால். (௰)

திரிசுதந் திரத்தராய்ச் செல்வ மிக்குள
விருபிறப் பாளருக் கிடுக்கண் செய்துளோர்
வெருவருஞ் சேதக வெல்வ முற்பெரு
நரகிடை யளப்பில்பல் கால நண்ணுவார். (௰க)

கந்தனை வந்தனைக் கடவுள் வேதியர்
சிந்தனை நோவுறச் செப்பு வாரவர்
மூந்துறச் சிறுவோர் முகங்கண் டுள்ளத்து
நிந்தனை புரிதர நினைக்கு நெஞ்சினர். (௰௨)

அளப்பருங் கொடுநர கழுந்து வார்மதித்
துளத்திடை வணங்குவா ரொளிரும் பூஞ்சத
தளக்கம லாசனத் தளிபச் செஞ்சுடர்
விளக்கருள் பெற்றவே ளருளு மேவுவார். (௰௩)

திரிசுதந் திரரருளத் தெய்வத் தாமரை
யரதனச் சிங்கவேற் றணையின் வள்ளியுஞ்
சரவணோற் புவனுமா தவச்செ யந்தியம்
புரநிறைந் திருத்தல்போற் புகுந்து வாழ்வரால். (௰௪)

ஆதலாற் பரகதி யடைய வேண்டினோர்
தீதிலாத் திரிசுதந் திரரைச் சேவிப்பா

ரேனு தா னஞ்செய வெண்ணி னுனுமவ்
வேதியர் தங்கள்பாற் செய்ய வேண்டுமால். (யகூ)

உத்தம தானமே முதல வொண்பொரு
ளெத்தனை தானமென் றுனும் வேற்கரத்
தத்தனுக் குரியவர் தமைக்குச் செய்குநர்
முத்திபெற் றிருப்பர்நான் மொழிவன் கேட்டியால். (யசா)

தெளிந்திவர் பெருமையைச் செப்ப வேண்டியே
யுளங்கொடு நினைப்பினு முலைப்பின் றருமா
விளங்குமஏசன்சி ரிசைத்த பான்மையா
லளந்தனன் புதல்வநீ யறியும் வண்ணமே. (யஎ)

ஆயுமீ ராயிர மந்த ணாளரோ
டேயவேற் குமரனுக் கினிய கார்த்திகைத்
தூயகார்த் திகைதனிற் சொன்மு காரம்பப்
பாயுமென் புணரியிற் படிந்து ளன்பினுல். (யஅ)

பரவுவா ரிம்மையிற் பாரின் வேந்தரா
யிருமைபெற் றம்மையி னெய்து பேரின்பத்
திருவொடு புணர்ந்துசெவ் வேள்செந் தாமரை
புரையடி யிணைநிழல் புகுந்து வைகுவார். (யகூ)

பன்னிரு திங்களும் பரவு கார்த்திகை
யன்ன நாட்சந்நிதி யாழி மூழ்கிவெம்
பன்னகப் பகைமயிற் பகவன் றாளிணை
சென்னிசேர்த் தினர்கதி செப்பற் பாலதோ. (உய)

மாகவான் திங்களின் வருமு காரம்ப
மேகநா ளிரண்டுநா ளினிய மூன் றுநா
ளோகையோ டாடிவே ளுபய தாண்மலர்ப்
போகமுண் டார்சன னத்தைப் போக்குவார். (உக)

சித்திரை முப்பதுந் திரைமு காரம்பத்
தத்துநீர் படிந்துவேள் சாணஞ் சேவிக்கு
முத்தரே கந்தவேண் முருகன் முத்திசேர்
பத்தரே யன்றிவே றுரைக்கற் பாலதோ. (உஉ)

கந்தபுட் கரிணிநீர் களித்து மாகநாண்
முந்துறப் படிந்துவேன் முருகற் போற்றுவா

யிந்தமா நிலத்துளோ ரெவர்க்கு முன்னரே
வந்துமா முகத்தினுன் மலினந் தீர்ப்பரே. (உ௩)

சித்திரை யைப்பசித் திங்கட் காலமு
முத்தர தெக்கிணு யனமு மோர்வில்வேண்
மைத்துனர்ப் பரவுவார் வாச பேயத்தை
நித்தமுஞ் செய்குநர் நிலைமை யெய்துவார். (உ௪)

சங்கிர மந்தொறுஞ் சமையம் பார்த்துமுன்
னங்குள மாவத ஞரம் பத்துநீர்
பொங்கிய கந்தபுட் கரிணிப் பூம்புனன்
மங்கலச் சுருதிநூன் மரபின் மூழ்கியே. (உ௫)

சிறுபயு றளவிபு செங்கெ லோதன
மறுமுகத் தவன்றனக் கமுது செய்வித்தோ
ருறுமக நூறுசெய் துயர்ந்த வான்கதி
பெறுகுவ ரெனமறை பிரித்துப் பேசுமால். (உ௬)

ஆடியோர் முப்பது மாவின் வெண்டதி
நீடிய வோதன நிவேதித் தன்பினிற்
கோடலங் கண்ணிசூழ் குமரற் போற்றுவார்
நாடரு மவன்பத நளினத் தெய்துவார். (உ௭)

ஆவணித் திங்களி னரிய வேதத்தான்
மூவிரு முகத்தனை முழுதும் போற்றுவா
ரோவரு மெச்சநூ றுஞற்று வார்பெறுந்
தாவிலாப் பரகதி சார்வர் திண்ணமே. (உ௮)

கன்னியின் மாளைய சிராத்தங் காமுறச்
சென்னியா றுள்ளவன் செயந்தி யம்பதி
தன்னிருந் தாற்றுவார் பிதிர்க்க டங்குலம்
பொன்னலர் கமலத்தோன் புரத்து நண்ணுவார். (உ௯)

துலைநெடுந் திங்களிற் சுரர்கள் போற்றிய
வலைபுனற் கந்தபுட் கரிணி யாடிவேல்
வல்லவனைப் பணிகுவார் தமக்கு வான்பிறப்
பிலையிலை யென்றுநான் மறையி ரைக்குமால். (௩௰)

தீதிலா மார்கழித் திங்க ளிற்றதி
யோதனங் குமரனுக் குவப்பித் தன்னவன்

பாதமெய்த் துணையெனப் பரவு வார்மது
சூதனன் பதந்துணை சூழ்ந்து வைகுவார். (நக)

மகரமோர் மூப்பது மணிப்பொன் னாலய
மகருவின் றாபத்தா லமைத்துச் செய்யவேற்
குகனையே யிறைஞ்சுவார் குலங்கு ழூஉக்கொடு
தகையவாஞ் சிவன்பதஞ் சார்வர் திண்ணமே. (நஉ)

சேயிருந் திருவிழா நடத்துஞ் செவ்வியோ
ராயிரஞ் சனனம்பே ரரசின் வைகியே
காயம்விட் டாவிபோங் காலை மான்மக
ஞயகன் சரணதா மரையை நண்ணுவார். (நந)

செப்பருங் கார்த்திகைத் திங்கண் மூப்பது
மொப்பிலாக் குமரன்முன் னுள்ளத் தன்பினுன்
மெய்ப்படு மாவினெய் விளக்கு வைத்துளார்
சுப்பிர மணியன்றாட் டுணையிற் சேர்வரால். (நச)

கார்த்திகை யாரலிற் கந்தன் செஞ்சுடர்
போர்த்தமூ விருமுகப் புண்டரீ கத்தைப்
பார்த்திடா ரட்டையின் படுகு ழிக்கணே
யார்த்திடு நிரயத்தா டழுந்து வார்களே. (நரு)

நிலைதருங் கார்த்திகைத் தினத்து நெல்லிபி
னிலைகொடு குகனடிக் கிறைத்து ளோரெலாஞ்
சொலுமிலைக் கொருமகந் தொடர்பி னாற்றிய
பலனடை வாரெனப் பகரு நான்மறை. (நசு)

திரிசுதந் திரர்கடஞ் சிறப்புந் திங்களுக்
குரியபூ சனைவிதி யுரைத்த காதையுங்
கருதினர் கேட்பவர் கந்தன் முன்புறுங்
திரைகடன் மூழ்குநர் பலத்தைச் சேர்வரால். (நஎ)

மாதபூசைவிதியுரைத்த வத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—ருசஎ.

# விபூதி அத்தியாயம்.



சுருதி யாவையு முற்றொருங் குணர்வுறுஞ் சுகனெனுந் தவத் தோய்சொற், றருதி யானமா முனக்குநாஞ் சொல்வது தகைய நான் மறைமூலங், கருதி யாவர்க்கும் விளம்பவொண் ணாதது கைநெல் லிக் கனிபோலாம், வருதி யாறுமா முகத்தவன் சரித்திரம் வழுத் துது மெனச்சொல்வான். (க)

கொடிய சூரற வறமறை விண்ணகங் குடிபுக விகல்காட்டு, நெ டிய வேலெடுத் தமர்த்தொழின் முடித்துமா னின்னிடை வருந்தே னைக், கடிம ணம்புரிந் தாறுமா முகத்தவன் கடவுளர் பலர்சூழ, வடி ய ராக்கிரி சுதந்திரர் தம்மொடு மாலயத் தினிதுற்றான். (உ)

பெருமி தத்துட னட்பல பிற்படப் பேரருட் குமரேசன்
பருமி தப்பரி வாயத்தி னெடுந்திருப் பயிலுமண் டபநாப்பண்
டருமி தத்தொடு மிருந்தன னிருந்தபின் றண்ணளி யுடனேத்திப்
பொரும தத்திறல் வாகுவாங் கெய்தியம் போருகப் பதம்போற்றி.()

ஞான வாரிதி யாய்க்குரு வாய்த்திரு நான்மறை யினுங்காணு
மான வேற்படை யாயொரு விண்ணப்ப மாலயன் றொழுதேத்துங்
கூன வெண்பிறை மிலைச்சிய வேணியான் குரைகழற் றுணைவாழ்த்தி
மோன மோடிருந் தருள்புரி வடிவமா முதல்வனின் றிருக்கோலம்.()

எங்கு மாகயான் கண்டுனைப் பூசனை யியற்றுதற் கென்றேவேள்
பங்க யப்பதம் பரவிய வாகுவைப் பார்த்தெனக் கருட்கோலச் [மா"
சங்கை சொல்வதற் கெண்ணின மெண்ணுமுன் சாற்றினை மகிழ்ந்தே
லங்கண் மாநில முதற்பல வண்டமு மானது நாமேயாம். (ரு)

திருத்து நான்மறைக் கொருபொரு ளாங்குகன் செய்யவா குவைநோக்கிச்
சுருக்க மாகநம் விபூதியி னளவையைச் சொல்லுது மெனவானம்
பொருந்து மண்டபத் தருநிழல் யோகத்துப் பூண்டவா சனமாகி
யருத்தி பெற்றுயர் ஞானமுத் திரையுட னாறுமா முகத்தையன். (சு)

வேறு.

தார மாகிய வோரிரு சத்திக டாமிரு மருங்காக
வீர வாகுவைப் பார்த்துநெட் டிலைச்சுடர் வேல்கல வயினேந்தி
நேரு மானந்த வடிவமாய் வடிவிலா நின்மலப் பொருளாகும்
பேர ருட்கொடு தாதைக்கு முன்னமே பிரணவஞ் சொலும்வாயால் (எ)

முத்தொழிலின் கருமமுநான் முதற்றொழிலாம் பிரமரொரு
பத்துளரி னான்முகனுன் பரவுலகிற் சுவர்க்கமுநா
னொத்தநவ மானகண்டத் துயர்பரத கண்டமுநா
னத்திரியின் மேருவுநா னமரர்தமி லிந்திரனுன். (அ)

மதியுளரிற் பொன்னவனுன் றேர்த்தொழிலின் மாதலிநான்
புதியமணித் தடந்தேரிற் புட்பகச்செம் பொற்றேர்நான்
றுதிதருதே வர்க்கினிய தோகையரி லூருப்பசிநான்
விதமுறுகா னத்தொழிலின் மேம்படுகந் தருவருநான். (கூ)

விளக்கரிய வுலகுகளின் மேபசிவ லோகமுநான்
களக்கறுக்குங் கலைபவையிற் கருதரிய வேதமுநான்
வளக்கெழுவே தச்சுரமோர் நான்கவையின் வாழியசீ
ரளக்கறிதற் கொண்ணுத வரும்பிரச வோசையுநான். (ய)

எழுத்தவையிற் பிரணவநா னிருடிகளி லகத்தியனு
னழுத்தமுறு யோகிகளி லரியதெத்தாத் திரயனுநான்
விழுத்தகைய சிவன்பாதம் விருப்புடைய பத்தர்தமின்
முழுத்ததிருப் பாற்கடலின் விழிதுயிலு முகுந்தனுநான். (யக)

புண்ணியத்தின் வடிவாய புரியவையிற் காசிநான்
வண்ணமலை யோரேழில் வானளவும் பனிவரைநா
னெண்ணரிய சிருட்டிதனி லிரணியகற் பத்தனுநான்
றண்ணளியிற் காப்பதனிற் றக்கமகா விட்டுணுநான். (யஉ)

கடியசங்கா ரத்தொழிலிற் காலத்தீக் கடவுளுநான்
மிடலுடைய செய்கையரில் வெலற்கரிய காலனுநான்
வடிவுடைய குருவடிவில் வாய்ந்ததெக்கி ணமூர்த்தத்
துடனிருக்குந் திருக்கோலத் துவமையிலா வடிவமுநான். (யங)

சொலவரிய தெய்வமடத் தோகையர்க டம்மிலுயர்
மலைமகளு மலர்மகளும் வாணிதிரு வடிவமுநா
னிலவியமா தங்கடமி னிறைதருசீ ராவணிநா
னலகிலா துயர்வேத வாரிடரில் வசிட்டனுநான். (யச)

கடவுளரா மிருடிகளிற் களிக்குமிசை நாரதனுன்
படவரவத் துடன்புடலி பரிக்குமத மாக்கடமின்
மிடலுறுஞ்சா ருவபௌமம வெண்மருப்பு வேழமுநான்
குடநிகர்த்த செருத்தலுடைக் கோவினத்திற் சுரபியுநான். ()

நாடரிய பரியினெழு நாமவாம் புரவியுநான்
கேடில்பல விலங்கவையிற் கெழுதகைய கேசரிநான்
பீடுபெறு பறவைகளிற் பெருந்திறல்சேர் சரபமுநான்
றேடுபன்னோ ருருத்திரரிற் சிறப்புளதாஞ் சங்கரனுன். (மசு)

பாதலத்திற் பணிவேந்திற் பஃறலைப சேடனுநான்
மாதர்தரு மோடைகளின் மானதப்பூம் பொய்கையுநான்
போதநிறை மந்திரத்திற் பொலிவுறுகா யத்திரிநான்
பேதநெடுந் தாருவினிற் * பிப்பலப்பூந் தாருவுநான். (மஎ)

வருமுயிரைக் கொடுபோகும் வலியோரி லியமனுநா
னரிதுசுசி செயுமவரி லாண்டகைய வாயுவுநா
னுரனுடைய வானரத்தி லுணர்வுடைய மாருதிநான்
பொருவரிய சிலைவலியிற் போர்காட்டு மிராமனுநான். (மஅ)

உற்றமனச் சூரர்களி லுயர்காத்த வீரியனு
னற்றமிலா வறநெறியி லளப்பரிய சத்தியநான்
பற்றுமக நூற்றின்மிக்காம் பாய்பரியின் வேள்வியுநான்
குற்றமறு கற்பின்மடக் கோதையரிற் பார்வதிநான். (மகூ)

வியப்புறுபல் பொருளதனின் மிக்கான தமனியநா
னயப்பொடுவந் தனைக்குரிய நாரியரி லன்னையுநான்
செயற்குரிய தானத்துச் சீரபய தானமுநா
னியற்பெயராம் யதுகுலத்துக் கெழில்காட்டுங் கண்ணனுநான்

வாக்குடைய முதியோரில் வல்லவரிச் சந்திரனுன்
றேக்குநதி பலவவையிற் றசகங்கை மாநதிநான்
றாக்குமலை வாரிதியிற் றண்டரங்கப் பாற்கடனுன்
மீக்கிளர்தா ரகைக்குழுவில் வெண்மதியக் கடவுளுநான். (உக)

---

* அரசமரம்.

இருதுவெனு மோராறி னிணங்குகுளிர் வசந்தமுநா
னரிவையரை மோகனஞ்செய் யாடவரின் மன்மதனுன்
பெரியதவத் தினிலுரிய பிராணுயா மத்தியனுன்
பரவைபெழு நவமணியிற் பானிறவெண் முத்தமுநான். (உஉ)

ஏற்றமுறு மாபரணத் தெழில்வனப்பா குங்கலைநா
ளூற்றலுறும் பிதிர்கடமி லரியமா வென்பவனுன்
மாற்றருஞ்சீர் நால்வருண மானவையின் மறைபோர்நான்
சாற்றரிய வாச்சிரம நான்கினிற்சன் யாசமுநான். (உ௩)

தள்ளரிய வனமவையிற் சயித்திரதத் தண்வனநா
னெள்ளொளியிற் கதிர்பரப்பு முயர்வானப் பரிதியுநான்
விள்ளரிய வித்தைதனின் மெய்ஞ்ஞான வித்தையுநா
னெள்ளரிய விந்தியங்கட் கேதுவா மிதயமுநான். (உச)

பொற்பமைசத் திரியர்தமிற் புருகுச்சப் புரவலனு
னற்புறுத்து தனத்தர்தமி லளகைநக ராதிபனுன்
பற்பலவாந் தீர்த்தத்திற் பரப்புமணி கர்ணிகைநா
னெற்பொலியு நிவப்பதனி னெல்லையிலா வரைகளுநான். (உ௫)

தெறுபாவ நாசனத்திற் றிரைமோது சேதுவுநா
னுறுதயவின் மாதாநா னுயரிரவி குலத்தோரின்
விறலுடைய இராமனுநான் விதுகுலத்து வேந்தர்தமி
னிறைபொறையி னரசாட்சி நிலைமைதனிற் றருமனுநான். (உ௬)

தண்டனையி லியமதண்டத் தன்மையுநா னவத்தைகளா
மெண்டகைய நால்வகையி னெவ்வனமா மவத்தையுநான்
மண்டலத்தோர் பூசனையின் மானதமாம் பூசனைநான்
கொண்டபடப் பன்னகத்திற் கூறரிய வாசுகிநான். (உ௭)

சுவையாறி னுப்பதுநான் சுடர்விரிக்குஞ் செந்தீயி
னவைதீர்ந்த சாடரத்தீ நான்முதிய காவியத்தி
னுவமையில்ரா மாயணநா னுறுந்தரும சரித்திரங்க
ளவையின்மனு நான்ஞானத் தருங்கதையிற் கீதையுநான். (உ௮)

வரகவியில் வியாதனுநான் வாணயன மானவைகட்
குரியவணி கெழுபொருணு னுள்ளத்தா லிவைகருதிச்

சுருதிமுறை யாராய்ந்து தோமறுமுன் பூசனையைப்
புரிசுதிநீ யெனவுரைத்தான் பூமகன்றிண் சிரம்புடைத்தான். ()

இத்தகைய விபூதியெ லிரா று நோன்மலையா
ரத்தனருள் புரிந்தமர வாராய்ந்து கணத்தலைமை
வித்தகனைப் புயவீரன் வியப்புற்று னக்காதைப்
புத்தமுதஞ் சுகமுனிநின் புலனருந்த விருந்தளித்தேன். (நூய)

விபூதியத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—ருஎஎ.

---

## பதின்மூன்றுவது:
## விசுவரூப அத்தியாயம்.



எந்தையே பல்லுயிர்க் கிறைவனே சதுர்மறைத்
தந்தையே தந்தையுந் தாயுமில் லான்றரு
மைந்தனே கலவமா மயில்வருங் கடவுளே
முந்துமா னந்தவோங் காரமா மூர்த்தமே. (க)

என்றுவா கைப்புயத் தேந்தலும் புகலுவான்
மன்றல்வா ரீசநாண் மலரடித் தொண்டனேன்
றுன்றுபே ரன்பினாற் சொலும்விபூ திச்செய
னன்றியாற் புனிதமாய் நவையறுத் தேனியான். (உ)

வேண்டுமோர் தருமமொன் றுளதியான் விள்ளுகே
ணுண்டநீ யன்றிவே றரியவான் பொருளெனத்
தூண்டுமா றென்றிலைத் தோமின்மா னுக்கிறற்
பூண்டநின் பேருருப் பொற்புறுந் தோற்றமாய். (ந)

பரவுறும் விசுவரூ பத்திருத் தோற்றமாந்
தெரிசனைக் குள்ளம்வைத் தேனையத் தெரிசனைக்
கருணைவைத் தாளெனக் கழறும்வாள் வாகுவாங்
குரிசிலுக் கருளொடுங் குருபரன் பகருவான். (ச)

இருடிகட் கரிதுவா னிமையவர்க் கரிதுநூற்
சுருதிகட் கரிதுமெய்த் தொண்டருக் கரிதுசொற்

கருதுதற் கரிதுளங் காண்பதற் கரிதுமாம்
பொருவிலற் புதமொடும் போற்றுநந் தோற்றமே. (ரு)

ஊனுறுங் கண்களுக் குட்படா துன்றனக்
கானஞா னக்கணே யருளொடுந் தருதுநீ
ஞானநாட் டத்தினு னந்திருத் தோற்றமே
மானவாட் செங்கையாம் வாகுவே காண்டியால். (சா)

என்னமூ விருமுகத் தெம்பிரான் கருணையான்
மன்னுபே ரண்டமு மற்றவண் டங்தொறுந்
துன்னுவோர் தோற்றமுஞ் சுரருமா முனிவரும்
பன்னுநான் மறைகளின் பயனுமாய் நின்றனன். (எ)

கருணையாம் வடிவினைக் காண்டலு நீண்டவா
ளொருகையா னிருகையு முச்சிமேற் கூப்பியே
யருவிநீ ரிருவிழிக் காறுமீ ராறெனப்
பெருகவாய் குழறியே களியொடும் பேசுவான். (அ

அத்தநின் வடிவிலே யளவிலா வமரரும்
பத்தெனும் பிரமரும் பன்னிரண் டாகிய
கொத்துறும் பரிதியுங் கூறுருத் திரர்களா
யொத்தபன் னொருவரா யுளரையுங் கண்டனன். (கூ)

ஏழுமால் வரைகளு மேமவான் குன்றமுஞ்
சூழுமால் கோடியாஞ் சுரநதித் தொகைகளும்
வாழிமால் கயிலைமால் வரையுமவ் வரையிலே
யூழியா னடனமுங் கண்டுவப் பெய்தினேன். (ய)

பாற்றிரைப் புணரியும் பாம்பணைப் பள்ளியு
மூற்றிருந் தொழுகுதே னுந்தியங் கமலமு
மாற்றலங் திகிரியு மம்புயத் தாயிழை
போற்றுநா ரணனையுங் கண்டுநான் போற்றினேன். (யக)

அரியதாம் யோகியர்க் காதியாங் கபிலனும்
பெரியமா தவன்முதற் பின்னுளோர் தம்மையு
முரியநான் மறைதெரிந் துளவசிட் டனைமுத
லிருடியோர் தம்மையுங் கண்டன னெளியனேன். (யஉ)

மனுவினீ டியமுறை மன்னரும் பூரணத்
தினியமா நதிகளு மெழில்வரைத் தலைமுதற்
கனைகடற் றலைவரைக் கடவுளர்த் தொகுதியு
மினநதிக் கிருகரைக் கிடைங்தெரிங் தேனியான். (௰௩)

கருதரும் பெருமைவ கண்டமு மவணுறு
மருவனங் களுமமர் வாளிறூற் போரிடைச்
செருமுயன் றுயிர்விடுங் தீரரு மேழிரும்
பொருவருங் தகையவான் புவனமுங் கண்டனன். (௰௪)

எழுதுதற் கரியவா மெங்தைநின் வடிவினின்
முழுமணிக் கிரணவா பரணமு மொய்கதிர்க்
கழகளித் தொளிர்செய்பொன் னுடையுங் குண்டலக்
குழைவெயிற் சுடர்களின் கோடிசூ ரியர்களும். (௰௫)

அளவிலா மதனவா காரமு மளவிலா
வொளியவான் மதிதருங் கிரணமு மொள்ளழற்
கொளுவுமா ரழலெலாங் கோலவா னயனமாம்
வளனெலாங் கண்டதோர் வடிவமைங் துள்ளநீ. (௰௬)

அண்டகோ டிகளெலா மையநின்மேனியிற்
கொண்டரோ மத்திடைக் கோத்தமா மணிகளாக்
கண்டன னின்முகக் கமலமுங் கோரமாம்
விண்டபே ரோதையும் விண்ணிடிக் கண்ணவாம். (௰௭)

சூலம்வா ட்ண்டுவிற் றேமரங் காமர்சூழ்
வேலெழுச் சக்கர மாயவெம் படைகளுஞ்
சீலநின் கைகளிற் செற்றின பற்றிகல்
மூலமே நடுவிலா துற்றதோர் மூர்த்தமே. (௰௮)

அளவிலா வானன மளவிலா நீள்குழை
யளவிலா நீள்விழி யளவிலா நாசிக
ளளவிலா துயர்கர மளவிலா நின்வடி
வளவிலா மறைகளா கமமுநா டரியவால். (௰௯)

புகலருங் திருமுகப் புண்டரீ கங்தொறுங்
தகைவபே ரண்டமுஞ் சட்சடன் றழலினிற்

றுகளெழப் பல்லின்வீழ் தொனியினு லடியனே
னகமுடைந் துருகியுள் ளஞ்சினே னஞ்சினேன். (உ0)

கோரமீக் கிளர்தரக் கோலநீ கொண்டதாற்
சீரினுற் பார்க்கவுஞ் சிறியனே னஞ்சினே
ஞரைநீ சொல்கென வறிகிலே னென்றலும்
வீரவா குணர்தர வேண்மகிழ்ந் துரைசெய்வான். (உக)

வேறு.

ஐந்தொழிற் குரிய மூவ ராகியிவ் வடிவத் தோடு
வந்துதித் துள்ள கோலங் கடவுளர் மதிப்பார் தங்கள்
சிந்தையைக் கடந்த ஞானச் சின்மயா னந்தரூபம்
விந்தையான் மிக்க மூலப் பகுதியாய் வியப்பு நீங்கா. (உஉ)

கூறுதற் கரிய வண்ட கோடிக ளெல்லா மிந்த
வாறுசெய் விப்போ மென்ற வாசகங் கேட்ட லோடும்
வேறெடுத் துரைக்க நெஞ்சம் வெருக்கொடு வீர வாகு
தேறிநாக் குழறி மீண்டுஞ் சேவடி துதித்துச் சொல்வான். (உங)

கின்னர ரியக்கர் பாட வரம்பையர் கெழுமி யாடத்
துன்னிய முனிவர் சித்தர் தோகையர் தொழுது நிற்பப்
பொன்னகர்க் கிறைவ னுள்ள நடுங்குறக் கண்டேன் போற்றி
யுன்னருங் கோலம் பார்க்க வுள்ளமும் வெருவு மம்மா. (உச)

துதிக்கவு நாவுள் ளேங்குஞ் சொல்லருந் தியானத் தாலே
மதிக்கவு நெஞ்ச மேங்கும் வாய்மைசஞ் சலமு மாமால்
விதிக்கவுங் குணங்க ளாருன் மெய்க்கலங் கார மாக
வுதித்திருந் தருளும் வேற்கை யொருவனே சரணம் போற்றி. (உரு)

சராசர மனைத்து மாகிச் சராசரத் தன்மை நீங்கும்
பராபர வியற்கை யாகிப் பரவுவா ருள்ளந் தோறும்
விராவிய கருணை யாகி விளங்குநின் மெய்யின் றேற்ற
மராமலர்த் தொடையல் சூடு மயூரவா கனத்தாய் போற்றி. (உசு)

வயம்புனை வோர்க டம்மில் வீரரில் வயப்போர் நோக்கி
வியந்துளங் களிப்பு நீங்காப் பொருநரில் வில்லோர் தம்மி
லுயர்ந்துளோர் தம்மி லியானென் றுளத்தகங் காரந் தன்னுற்
புயம்படைத் தேனை யல்லாற் பொருவருங் கொடுஞ்சூர்த்தானை. (உஎ)

வெல்லுத லரிது போலு மெனவுள மேம்பா டெண்ணும்
புல்லுணர் வோடும் வாளா பொருந்துமென் னிதய மாய
கல்லகங் குழைய மோதுங் கருணைவா ரிதியே காணு
வெல்லையி லண்ட மெல்லா மெடுத்தபே ருருவ நீத்து. (உ௮)

பண்டுள வடிவங் காட்டி யாளெனப் பையு ளோடு
முண்டகத் திருத்தாண் மீது மோலியுங் கரமுஞ் சூட்டித்
தெண்டனிட் டிறைஞ்சும் வீர வாகுவின் செய்கை நோக்கி
விண்டலத் துதித்து வீசும் விரிகதிர்ப் பரிதி போலும். (உ௯)

ஒளிதிகழ் முகமோ ராறு முயர்புய நிரையீ ராறும்
வளநிரை விழியீ ராறு மாமணிக் குழையீ ராறு
முளரியந் தாளு மாக முன்னரின் வடிவங் காட்டிக்
களிமகிழ் சிறந்து வீர வாகுவைக் கைக ணீட்டி. (௩௰)

எடுத்தன னெடுத்த காலை யெழுந்தருட் கண்ணீர் மாரி
விடுத்தடி வணங்கி நின்ற வீரவா குவைமுன் னோக்கி
முடித்தலை துளக்கி யஞ்சே லொன்றுநா மொழிது மென்னாத்
தொடுத்தபே ரன்பி னோடுஞ் சொல்வதற் குள்ளம் வைத்தான். (௩க)

எண்ணரும் பிரமர் தாமு மியற்சன காதி யோரும்
பெண்ணொரு பாகற் போற்று நந்தியும் பிருங்கி யாதி
திண்ணிய கணத்து ளோருஞ் சிந்தைமுற் றுருங்க நோற்றுக்
கண்ணினுக் கடங்கா விந்தக் கோலத்தைக் கருத்துள் வைத்தார். (௩உ)

அன்னவர் தம்மை நோக்கி யருள்சுரந் தினிய தோற்றத்
தின்னல மினிமுன் னாதி யுகத்தினி லிகல்வெஞ் சூரைக்
கொன்னிலை வேலாற் கீண்டு கந்தமா தனப்பொற் கோயின்
மன்னிவீற் றிருத்த லாக வேண்டின மகிழ்ச்சி மிக்கால். (௩௩)

அவ்வயி னமது சேனைக் காதியாம் வீர வாகு
செவ்வியி னிறைந்த தோற்றத் தெரிசனம் விரும்பு மன்னாற்
கெவ்வமில் வடிவங் காட்டு வோமென விசைத்தோ நீருங்
கவ்வையி னிரங்கித் தோற்றங் காண்மினென் றுரைத்து ளோமால். (௩௪)

செப்பிய யாற்றந் தன்னாற் சிந்தனை மகிழ்ச்சி யெய்தி
யிப்பெரு வடிவ முன்பா லெடுத்தனந் தொழுது நீயு

மொப்பிலா வுவகை பூக்தா யுள்ளமும் புனிதம் பெற்ருய்
முப்புவ னத்து ளோரின் முதன்மையும் படைத்தி கண்டாய். (ௗ௫)

ஆதலி னெழுத்தோ ராறு மற்புதத் தழுத்தி வேத
நீதியான் மெய்த்தி யான நெஞ்சகத் தடக்கி நம்பே
ரோதுதி நமது பொற்ருளூற்றுளோர் தம்மைக் காத்துக்
காதலா லவர்த முள்ளக் கருத்தவா முடித்தி யப்பால். (ௗ௬)

அளக்கரும் பிரம கற்ப வந்தத்தி னமது பாதத்
தளக்கம லத்து வீடு தந்தன மென்றே யீசன்
குளக்கணிற் ருேன்று ஞானக் குருபர னுரைத்தா னன்ன
வளத்திய றன்ஞல் வீர வாகுவு மனங்கொண் டேத்தி. (ௗ௭)

புகலருங் குமர வேள்வி பூதியுங் கேட்டு மேலாந்
தகையபே ருருவங் கண்டு சததளத் திறைக்கு மெட்டாச்
சுகமடைந் தருந்தி யானத் துதியுட னிருந்தி யோகத்
தகமகிழ்ந் தின்று காறு மற்புதப் புணரி யாழுந்தான். (ௗ௮)

பேருரு வமைந்த தோற்றப் பெற்றியும் விபூதி யாய
சீரருட் சிறப்பு மேத்திச் சிந்திப்போர் தீமை நீங்கிக்
கோரவெம் பவவேர் கீண்டு கூறுதற் கரிதாஞ் செல்வ
வாரியிற் றிளைத்து வேண்டு மைந்தரை யடைவர் மன்னே. (ௗ௯)

வஞ்சனை தீநீர் காற்று வருமவ மிருத்து வெந்நோய்
சஞ்சல மவர்பாற் செல்லா தண்ணளி யுடனே கேட்போர்
நெஞ்சகங் குழைய வேண்முன் னித்தமும் படிப்போர் வாக்கி
விஞ்சையி னெழுது வோர்கள் விருப்புட னினைத்த வெல்லாம். (௪0)

முற்றுருங் கெய்து வார்கண் முழுதுநம் மாணை யாணை
சொற்றன மிதயத் தன்பு தூண்டுதி யெனவி யாதன்
கற்றுணர் சுகனுங் கேட்கக் கழறினன் முனிவீ ருங்கட்
குற்றமாக் கதையை யின்னு முணர்த்துவ மென்றுன் சூதன். (௪௧)

விசுவரூபவத்தியாயம். முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—௲௱௰௮.

---

பதிமூன்ருவது:

## சுவாமியினதுமந்திரமகிமையுரைத்த அத்தியாயம்.

---

மகமாயை யாதி மலமூ டறுத்து வளர்கின்ற ஞான மினிதாய்ப்
புகவே செலுத்து மொருகாதை யுண்டு புகல்வா நினைக்க வரிதாங்
குகனுன முத்தி வடிவாய தண்ட கூடம்ப ராவ மனுநூற்
சுகனே யருத்தி யுடன்வீர வாகு தொழுநாள் வினோர்க டொழுதே.

போனு ரிருந்தா பதர்க்காதி யானென்று புகலுங்கை வீணை முனிவ,
ஞுதை பேரன்பு கொண்டுசெவ் வேள்கொண்ட வக்கோல நின்று
தொழுதே, வாஞு றெனக்கண்க ளீர்பாய ரோமங்கள் வடிவத் தரும்
பவிதயர், தானுன வானந்த ஞானம்பெ ருக்காழி தாழ்ந்தா னுயர்ந்த
புகழால். (உ)

நீடுஞ் சரற்கால மேகத்தின் மின்சார்த னேரக்கை வீணை நில
வப், பீடொன்று முள்ளக் களிப்பாங் தரங்கம் பிடித்தூந்த வான மு
னிவன், மூடுங் துழாய்த்தொஙகன் மோலிப்பி ரானண்ட மூதண்ட
கூட நிமிருந், தாடன் றலைக்கொண்டு நால்வேத கீதங் தலைப்பாடும்
வேலை யதனின். (௩)

பாலாழி நடுவிற் சுவேதச் செழுந்தீவு பண்புற்ற தீவி னிடையே,
மேலாய வைகுண்ட பட்டினத் தானந்த மயமாய் விளங்கு வதுசீர்,
மூலாக மக்கோயி லவையூடு படிகத்தின் மொய்த்துத் திரண்டு நெடி
தாங், காலா யிரம்பெற்ற மண்டபத் தின்பங் கனிந்தான் பயத்தி
னுரைபோல். (௪)

மெலிதாய வெண்மைத் திருச்சேட பரியங்க மிசையான பூவி
ன் மகளு, நிலமாது மிருபாலி னிலவச் சுனந்தனொடு விச்சுவச் சேன
னுவணன், றலையான நந்தனுயர் சனகாதி யோர்கங்கை தானுதி முங்
து நதிகண், மலர்வான் றருச்சுரபி விண்ணக மடந்தையர் வசுக்களனு
சந்தர் முதலோர். (ரு)

வாயார வாழ்த்தித் துதித்துத் துதித்துள்ள மலினங் துரக்கு
முதியோ, ரோயாம லஞ்சலி செலுத்தினர் தொழத்தகைய வும்பர்க்கு
ஞான வமுதந், தாயா யளிக்கின்ற நாரா யணக்கடவு டன்முன்னர்

யாழின் முனிவன், போயா தரத்தோடு பாதார விந்தங்கள் போற்றிப் பணிந்த பொழுதில். (சு)

புகலரு மருக்கிய மிருக்சொடு கொடுத்துமுனி புங்கவனை யுங்க னகமே, தகையமணி யாசனத் தினிதிருத் திப்பசிய தண்டுளவணிந்த பெருமான், முகமலர நீயிவண் விளைந்தபொருள் சோர்வற மொழிந் திடுதி யென்ற பொழுதே, யகமகிழ் சிறந்தினிசை நாரதக் கடவுண் முனி யாதரந் தொடுபு கலுவான். (எ)

உமைதந்த மைந்தன் கொடுஞ்சூ ரறுத்தரிண வொண்டொடியை யானை மகளைக் கமைகொண் டணைந்துபா ரதகண்ட வைப்பினிற் கனியு முத் தமிழி னுடனே, யமைவின் றுயர்ந்ததண் பொருநையின் றென் றிசையி னமரர்முனி வரர்கள் வாழ்த்தச், சிமையந் தருங்கந்த மாத னச் சாரற் செயந்தியம் பதியி னிடையே. (அ)

கொற்றவம் புயவீர வாகுவுக் காகவே கொண்டவா னந்த வடிவஞ், செற்றமின் றுயர்முனிவர் கந்திருவர் விண்ணவர்க டிரிசுதந் திரர்க ளுடனே, யுற்றுநின் றெழுவடிவு கண்டுகண் டுள்ளத் துவப் படங் காமை யாலே,மற்றநின் பாதத் துரைப்பான் பொருட்டிலிவண் வந்தன னெனப்பு கலுவான். (கூ)

பாரதப் போரிற் றனஞ்சயற் காகநீ பாலித்த வடிவு கண்டேன்
சூருடைத் தண்டகா ரணியத்தின் மாதவன் றேழற்கு நன்கு வாய்ந்த
மேருவிற் சங்கரன் காட்டுந் திருக்கோல மேவரக் கண்டு தொழுதே
னுருமச் சுறவெதிரி காச்சிரம மதனிலே யரியநர நார ணர்களாம். (௰)

இருவோர் தமக்கு மொரு காலாக் கினிக்கடவு ளின்பத் தெடுத்த வடிவும். பிரியாது கண்டுகண் டுள்ளங் களித்தனன் பிரமன் றெழிற் கூடவும், பரமே சுரக்கடவுண் மேருமால் வரையினிடை பண்டுகொண் டுள்ள வடிவு, மொருவாது நின்றுகண் டுள்ளங் களித்தன னுரைக்கடங் காத குமரன். (௰க)

வேறு.

கொண்டி ருந்தவிக் கோலத்தைப் போலயான்
கண்டி லேனிது காரண நின்னடிப்
புண்ட ரீகத்தைப் போற்றிப் புகல்வதற்
கண்டி னேனென் றருண்முனி சாற்றினன். (௰உ)

நார தன்சொல் நாரணன் கேட்டுப்புன்
மூரல் கொண்டு முழங்கித்தன் வைகுண்டத்
தூர டங்கலு மொண்ணில வுக்கருப்
பூர வெள்ளை புதுக்குவித் தானரோ. (௰௩)

கருணை கொண்டு விழியின் சத்தூரியா
விருடி மேனிக்கு லேபன மப்பிவான்
பருவ மாமுகில் போலும் படிவத்தான்
றிருவி ருந்தின் பவளச்செவ் வாய்விண்டான். (௰௪)

நத்து வக்கட னீந்தித் தகைமைசார்
முத்த ருக்கு முதன்மைய தாம்பரி
சுத்த யாழ்முனி சொல்லுவன் கேளென
வித்த சத்துப தேசம் விளம்புவான். (௰௫)

கயிலை மால்வரைக் கண்ணுதன் மூர்த்திபுந்
துயிலும் யாமுமொன் றாகிக் குகனுருப்
பயிலு மந்தப் பசுபதி யைம்முகத்
தியலு நம்முக மெய்திய தாமென. (௰௬)

இறைவன் றிண்புய மெட்டுமெட் டார்துழாய்
நறைகொ ணம்புய நான்குமுன் னுன்கதாம்
விறல்கொ ளம்புய மேயவெஞ் சூலமும்
பொறைகொ ளாழியும் பொறபமர் சத்திபாப். (௰௭)

வக மாக விருதலைச் சூலமே
யாகு மந்த வரன்கலை யாகிய
மாக வான் சுட ராய்நம் வலக்கணின்
பாக மாகி யெழும்பிர பஞ்சத்தை. (௰௮)

உண்டு பண்ணும் விட்சேபத் துயர்சத்தி
மண்ட லந்தொழ வள்ளியென் றற்றனள்
விண்டு வின்வடி வாக விளங்கிய
வெண்ட ருஞ்சந் திரகலை யென்பதாய். (௰௯)

இயவு ளாயிடக் கண்ணெனு மானந்த
மயம தாகி வரும்பரி பூரண

வுபர்வு நீக்கியுள் ளாவர ணப்பெய
ரயர்வி லாதுபர் வாகிய சத்தியே. (௨௰)

கூற ருந்தெய்வ குஞ்சர மாதென
மாறி லாதுதித் தாளந்த மாதரே
யாறு மாமுகற் காமிரு சத்தியும்
வேறி லாது விளங்கும் பிரமமே. (௨௧)

வேறு.

சுப்பிர மணிப னென்று சொலும்பெயர் பதமூன் றாகு
மப்பதத் திடையுண் டான வரும்பதஞ் சிவனு மீற்றின்
மெய்ப்பதஞ் சிவனை யேத்தும் விண்டுவின் வடிவா முன்னஞ்
செப்புறு பதமி ரண்டு பதங்களைச் சேர்ந்து காட்டி. (௨௨)

ஒப்பரு மயிக்க மாக வுரைத்தலா லுரைக்க வொண்ணு
மைப்படி மிடற்றி னானு மாலெனு நாமு மாக
முப்புவ னங்க ளேத்த மூலமு முடிவு மில்லாச்
சுப்பிர மணிய னாகச் சொல்லுநால் வேத மாதோ. (௨௩)

சரவண பவனென் றோதுந் தாவறு பதங்கண் மூன்றிற்
பரவுறு சரமென் றாய பதமது சலமே யாகும்
வருவனம் வாச மிந்த வான்பத மிரண்டும் பார்க்கி
லரிதுமா தவத்து நாரா யணனெனு மருத்த மாமால். (௨௪)

இயலுறு பவனென் றோது மிருபதஞ் சிவன்றா னாகு
மயலற விரண்டு மொன்றாய் வழுத்திலா றெழுத்தே யாகும்
பயனொருங் குணரின் ஞானப் பரம்பொருட் சிவன தாய
சுயவடி வாகு மென்றே சொல்லுநான் மறைக ளம்மா. (௨௫)

மலைகுகன் றான மாவ மயலற வகுக்குங் காலை
நிலமணல் சுக்குப் பாறை நிகழ்த்தருங் கல்லு நான்காங்
குலமவை நமக்கும் வேற்கைக் குமரற்குந் தான மாகும்
பல்னுறு நிலனு மற்றப் பருப்பதஞ் சிவனு காரம். (௨௬)

தரையிட னாமு மறறத் தடவரை சிவனு மாக
மருவுமவ் விடங்க ளெல்லா மயூரவா கனத்தி னற்குப்
பொருவரு மிடன தாகப் பொருந்துதற் கெடுத்துக் காட்டிச்
சுரர்தமக் கமுத மீந்த துழாய்ப்புயல் பின்னுஞ் சொல்வான். (௨௭)

வேங்கட வரையு மந்தண் வேங்கட வேற்பின் மீதி
லாங்குக னேரித் தீர்த்த மானது மசலத் தாடு
பாங்குறு மூர்த்தி தானும் பன்னிரு புயனும் வாசத்
தேங்கமழ் துளபத் தாம யானுமாய்ச் சிறந்து ளோமால். (உஅ)

நெருப்புறு கலைமுன் மூன்று நிலமகள் கமலை நீலி
பொருத்துநான் குடனைந் தாறு வதுமுறை புரையி லாத
வுருத்திர னிகரி லீச னுயர்சிவன் கலையிவ் வாறு
திருத்துகார்த் திகையோ ராறுஞ் சிவனுமால் வடிவு மாமால். (உகூ)

ஆயவித் தன்மை யாலே யளப்பறு மார ணனிற்
சேயினுக் குரித்தாமோமஞ் செபமுப வாசம் பூசை
நேயமோ டியற்றி லீச னெடியமால் விரதத் துள்ள
தூயநற் பலன்க ளெல்லாந் துகளறக் கொடுக்கு மாதோ. (௩0)

அகரமு முகரந் தானு மளப்பறு மகரந் தானு
மெகினவா கனனு நாமு மீசனு மாகு மந்த
வுகரமே குமர னாகு முயர்ந்தெழு மகரந் தானு
மகரமுந் தெய்வ மாதும் வள்ளியு மாகு மம்மா. (௩க)

உரைதகு மெழுத்து மூன்று முரைக்கடங் காது நின்ற
பிரணவ வடிவ மாகும் பெண்களோ ரிரண்டு பேருஞ்
சரவண பவனு மொன்றாய்த் தனித்தவோங் கார மாகுஞ்
சுருதியாழ் முனிவ வுண்மை சொற்றன மென்றான் மாயோன். (௩உ)

நாரதற் குரைத்துச் செங்க ணாரணன் முனிவ னோடுஞ்
சீரினுக் கழகு செய்யுஞ் செயந்தியம் பதியின் முன்னந்
தாருகற் றடிந்த செவ்வேள் சரித்திர மினிது காண்பான்
காருடப் பிடர்மேற் கொண்டு கந்தமா தனத்திற் போந்தான். (௩௩)

கருடவா கனமேற் கொண்டு கண்ணனுங் குற்ற காலை
முருகவேள் சென்று பூசை முறைபிற ழாது செய்யக்
குருபர னுவப்பப் பூசை கொண்டன்மே னியனுஞ் செய்தா
னிருவருங் களித்துக் கந்த மாதனத் தினிது புக்கார். (௩௪)

வேதனும் விமான மாக விளங்கிய சிமையக் கந்த
மாதனத் திருந்தான் கந்த வரைச்சக நாத மூர்த்தி

யாதரத் தகில மெல்லா மற்புதத் தளித்தா னேமிச்
சீதரப் புத்தே டானுஞ் செயந்தியம் பதியிற் புக்கான். (கூரு)

விண்ணள வாரச் சாரல் விசயமாங் கோயி றன்னிற்
கண்ணகன் றீர்த்த மான கந்தபுட் கரிணிப் பாங்க
ரெண்ணினர்க் கெண்ணி யாங்கே யின்னருள் புரிந்து வானிற்
பண்ணவர் பரவ வேற்கைப் பரமன்வீற் றிருந்தான் மன்னோ. (கூசா)

மூனைச்சுடர் வேற்கை யானை மொழியவன் தனைகள் செய்ய
நினைக்கமெய்த் தியானஞ் செய்ய நிறைந்தபூ சனைக ளாற்ற
நனைத்துழா யலங்க லாற்கு நான்மறை முடிவுங் காணுப்
புனற்சடை யாற்கு முள்ளம் பொருந்திய மகிழ்ச்சி யாமால். (கூஎ)

இனையமாக் கதைவி யாத னிசைத்ததே னுண்டு தந்தை
நனைமலர்ப் பாதம் போற்றி நாடரு மகிழ்ச்சி பூத்து
மனனிலை யுணர்ந்து கண்ட வான்சுக முனிவ னீண்ட
மூனைநெடு வேலோன் பாத முன்னியாங் கிருந்தான் மன்னோ. (கூஅ)

சுவாமியினதுமந்திரமகிமையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—சா௫சா.

---

## பதினைந்தாவது:

## பலகதையுபதேசித்த அத்தியாயம்.

இருக்குமுத னல்வேத முணர்ந்தசுக முனிகே ளின்னுமொரு காதையுனக் கெடுத்துரைப்ப னென்றே, குருக்குமதிக் கோடீரக் கடவுளிரு சரணக் கோகனகங் கரங்குவித்துக் கொண்டுயர் வியாதன் றருக்குமனக் கொடுஞ்சூரை வேரறுத்த சுடர்வேற் சண்முகத்தி னிணையடிச்செங் தாமரையுள் ளிருத்திப், பெருக்குகளி மகிழ்சிறப்ப வுடல்புளக மரும்பப் பிள்ளைமுகங் தனைப்பார்த்துப் பேசவுளம் பிடித்தான். (க)

காலமொரு மூன்றினையுங் கருத்தினிடைக் காண்போன் காமமுடன் வெகுளிமிகு களிமயக்க மொழித்தோன், சூலநெடு வேல்பிடித்த துண்டமதிச் சடையான் றுணைச்சரண மலர்பரவுந் துருவாச முனிவன், மேலமர ரினிதிருக்கும் விண்ணுலக மாறுய் விரிஞ்சனுல

கடையவுளம் விரைந்துசெலுங் காலைச், சேலனைய கருநெடுங்கட் டெய்வமட மாது சென்னிபணிந் தின்னறவத் தேமாலை கொடுத்தாள். (உ)

வாங்குமலர்த் தொடைமாலை வனப்பனைத்து நோக்கி வார்சடையின் மலர்முகத்தின் மணிமார்பி லணைத்துத், தாங்கரிய மகிழ்பூத்து முனியகலுங் காலைத் தருநிழலி லரசிருக்குஞ் சதமகத்த னூற்கோட், டோங்கலயி ராவதத்தி னெருத்தமிசை வரக்கண் டுளங்களித்து மதுமாலை யும்பர்முனி யெடுத்துப், பாங்கினொடு கொடுத்ததனை வானரசன் வாங்கிப் பத்தியிலன் போலானை மத்தகத்திற் பதித்தான்.

மத்தகத்தின் மணிமாலை வானிறைவ னுகைக்கு மதயானை கடங்கவிழ்க்கும் வான்புழைக்கை நீட்டிக், கொத்தலர நறவொழுகுங் குழங்கல்விரை மாலை கோட்டாலுங் காத்தாலுங் குறைபடுத்தக் கண்டு, சித்தமழ லதுதூண்டத் துருவாசன் சீறித் திகைத்தமரர் கோமானைச் சினந்திருக நோக்கி, யித்தனையுங் கடவுளருக் கிறைவனெனுஞ் செருக்கா லியானளித்த மாலைதனை யிழிவுபுரிந் தனையால்.

ஆதரத்தி லியானளித்த மலர்மாலை வாங்கி யணிமுடியிற் சூட்டாதுள ளகந்தைபிடித் தேறும், போதகத்தி னுலிழிவு புரிந்தெறிந்த பாவம் பொறையாக நின்னிடத்துப் பூண்டுதனை வாதப், பாதகத்தி னுனது பதியவுணர் கவரப் பருவரலுக் கிடனுகிப் பதுமமகணீங்கத், தீதிழைத்துள ளலமந்து மும்மலமு நீங்காச் சிறியோரிற் றிரிகவெனத் துருவாசன் மொழிந்தான். (ரு)

கொடுஞ்சாப மொழிந்ததுரு வாசமுனி பின்னுங் குலிசநெடும் படையேந்துங் குரிசின்முக நோக்கிக், கெடுங்கால மதியுளத்தூத் தோன்றுது போலாங் கிறிபிறழ்ந்து முதியோரைக் கீழ்மைபுரிந் ததுதீர்ந், திடுங்கால மூணர்ந்துனக்குக் கூறநினைந் தனமா லிமையோர்க்கு முனிவரர்க்கு மியாவருக்குந் தீமை, நெடுங்காலம் புரிந்தகொடுஞ் சூர்தொலைத்து நெடுவா னிலைநிறுத்து சுடர்வேற்கைப் பெருமான்ற னிடமாய். (சு)

வாய்த்தகந்த மாதனத்து வரையிடத்து நீபோய் மதிமுகங்களாறுகொண்ட வானவன்போற் சரண, மேத்தியவ னிருந்துநெடுந் தவம்புரிதி யாயி னீராறு தோளுடைய பெருமான்ற னருள

னீர்த்தரங்கக் கடலமுத மிமையோர்கண் மதிப்பார் நிறையமுதத் துடன்கமலை முன்னுதிக்கு மவள்கண்,பார்த்தவுடன் விண்ணரசுந் திரு வுமுள வாய்நான் பகர்சாபந் தீருமெனத் துருவாசன் பகர்ந்தான். (எ)

துருவாசன் கொடுஞ்சாப முரைத்திடுந்தன் மையினுற் சுடர்க்கு லிச நெடும்படைக்கைத் துறக்கநகர்ப் பெருமான், றருவான வரம் பையர்கள் சுரபிநிதி யொடுசிந் தாமணிபு லோமசைவிண் டலைமை யிவை யனைத்துஞ், செருவால்வெவ் வவுணர்கொள மனமறுகி மறுகித் திருவிழந்து கவினிழந்து சேணிழந்து சூரைப், பொருவாகை வேலு டைய குமரேசன் சந்தப் பொருப்பின்மன விருப்பமுடன் மருப்ப யில்கற் பகுத்தார். (அ)

சூடியவச் சிரபாணி நெடுங்காலஞ் செவ்வே டிணைச்சரண வாரீ சந் தொழுதிருக்கு மளவி, னீடியவிண் ணவர்கூடிப் பாலுததி மதிப்ப நிறையமுதத் துடன்கமலை நேரிழைவந் துதித்தாள், பீடுபெறு திரு முகத்தின் பேரழகு குலிசப் பெருந்தகைகண் டரும்பாவ மொழிந்தி னிய வடிவுந், தோடலர்கற் பகநிழலும் பொன்னகருங் கிடைத்துச் சுரர்மகுட மிறைவணங்க வரசுபுரிந் தனனே. (கூ)

இத்தகைமை மகவான்வெண் களிற்றரசுள் ளுணர்ந்துள் ளேமா ந்து சஞ்சலமுற் றிரவுபக னினைந்து, மத்தகத்தி னணிமாலை நெடும் பனைக்கை நீட்டி வாரியெடுத் தெறிந்ததனிற் றுருவாசன் சினந்தே, பித்தனென யான்றூக்கும் பெருந்தகையுள் ளுடையப் பெருஞ்சாப மிடநாகப் பேராசு மிழந்தா, னத்தனென வாய்வெருவித் தலைவ னுக்குப் பாவ மளித்தனனென் றுளந்தேறி யடலானை விளம்பும். (யி)

வேறு.

செய்த தீவினை செய்தவர்க் கேயென
வையஞ் சொல்லும் வழக்குமற் றுண்மையே
கையெ டுத்த கடும்பவந் தீரவே
லையன் றுனை யருச்சிக்க வேண்டுமால். (யக)

என்று வேழத் திறையுளத் தெண்ணியே
நன்று ணர்ந்துள நாரதற் போற்றியே
குன்றெ றிந்த குருபரன் பூசனைக்
கொன்று மந்திர மோதென வோதினன். (யஉ)

கீழ்த்தி சைக்கட் கிளர்ந்தெழு மாதங்கங்
காழ்த்த நெஞ்சக் கவலொழிந் தன்பினால்
வீழ்த்த கட்புன லோடுசெவ் வேளடி
வாழ்த்திக் கந்த வரைப்புறஞ் சார்ந்ததால். (௰௩)

செயந்தி யம்பதி சேர்புன லாடியே
நயந்த பஞ்சக் குரோசமு நாடியே
வியந்து சூழ்ந்து விரைகொண் மந் தாகினி
பயந்த பங்கயப் போது பறித்திடா. (௰௪)

அந்தப் போதை யரன்மகன் றாளர
விந்தப் போதில் வியந்தருச் சித்திடா
முந்தப் போதனை மோதுகை யானைநாற்
றந்தப் போதகந் தாழ்ந்துடன் சூழ்ந்ததே. (௰௫)

இந்த வாறைந்து வைக லிராப்பகற்
றந்தி யேத்திவெஞ் சாபந் தணந்துவேற்
கந்த வேளின் கருணைகொண் டிந்திரன்
முந்து பக்கத்து மொய்ம்புடன் சென்றதே. (௰௬)

ஆத லாற்கும ரேசன்பொன் றாலய
மாத வத்தின் வடிவம தாகுமாற்
கேத நீங்கச் சுகமுனி கேட்டியா
லீது நிற்க வினியொன் றுணர்த்துவாம். (௰௭)

கருத்தி னுக்கடங் காதுயர் கந்தனுக்
கருத்தி முற்றச்சொ லாகமத் தாற்றினாற்
றிருத்து பூசை தினந்தொறு மெட்டதாய்ப்
பொருத்து சாமந் தொறுங்களி பூப்பதே. (௰௮)

கால மெட்டுங் கருதிமெய்ப் பூசனைச்
சீல ராகிய சீரிய நாலிரு
பால ராகப் பகலிர வும்மறை
நூலி னாற்றினர் நாம நுவலுமாம். (௰௯)

வேறு.

பகற்கால நாற்கால மந்தநாற் காலமுதற் பகருங் கால
முகைக்கமலன் பூசையிரண் டாங்காலம் பலமுனிவர் முயலும் பூசை
மகத்துவமூன் றுங்காலங் கந்தருவர் சித்தருக்கு வாய்ந்த பூசை
பகுத்தநா லாங்காலந் திக்கிறைவ ருடன்மகவான் பரிந்த பூசை.(உ௰)

உரிமையினைந் தாங்காலந் திருமுதலாஞ் சத்திகளுக் குவந்த பூசை
தெரிதருமா றுங்கால மவுணருடன் பணிக்கிறையாஞ் சேடன் பூசை
விரிதருமே ழாங்காலம் வள்ளிதெய்வ யானையுளம் விரும்பும் பூசை
கருதுமெட்டாங் காலமுயர் கங்கைமுத னதிகளுடன் கண்ணன் பூசை()

எட்டான காலமுறை யியற்றுநர்பூ சனைநோக்கி யிருகண் ணீர்கள்
விட்டாறு முகக்கடவு ளிணைச்சரணக் கோகனக வீடு காத்துக்
கட்டாரி கரமெடுத்த வீரவா குவுமிதயங் களித்தா னந்த, முட்டாத
கடன்மூழ்கி விளையாடுஞ் செய்கையெம்மான் மொழியப் போமோ. ()

ஈதுநிற்க வின்னுமொரு காதையுண்டக் காதையுனக் கெடுத்துக் காட்டி, யோதுதுமியா மென்றுசுக முனிவரனை முகநோக்கி யொரு நான் காக, வேதமுறை விதித்ததவ வியாதமுனி யகங்குழைந்து விருப்ப மிக்க, மாதவத்திற் புலிக்காலைக் கொண்டகவு தமன்சரிதை வழுத்தல் செய்வான். (உ௩)

புண்டரிக புரமான புலியூரிற் கனகமணிப் பொதுவின் ஞானத் தொண்டர்களும் பதஞ்சலியும் விண்ணேரு முனிவரருந் தொழுது போற்றத், தண்டலிலா னந்தநடத் திருக்கூத்துப் பயிலீசன் சரணப் போது, கண்டுகளி மகிழ்தூங்கும் புண்டரிகத் தாண்முனிவன் கவற்சி தீர்ந்தான். (உ௪)

பொதுவினிடைச் சதிநடனக் கூத்தாடு பரன்றுணைத்தாட் போது தாழ்ந்து, மதிவகிர்கீற் றணிந்தசடை யெம்பெருமா னின்கருணை வாரி யாலே, கதிரவன்சூழ் பேருலகிற் கடவுணதிப் புனலாடிக் கயிலை யாதி, முதியதலம் பலதொழுதற் குள்ளம்வைத்தே னெனப்பாணி முகிழ்த்துப் போற்ற. (உ௫)

அன்னபரி சரனளிக்க வியாக்கிரத்தா ளருந்தவனங் ககன்று வேலை, பன்னுலகிற் கடவுணதி பலமூழ்கி மேயதலம் பலவும் போற்றி

முன்னமுங் றளைபடுத்தும் பாண்டியருக் கரும்பொருளாய் முத்தி வீட்டி, னன்னலந்தந் தருள்பொருநை யிருகரையிற் றீர்த்தமெலா நாடி யாடி. (உசு)

சந்திரனுக்கிருஞ்சாபந் தீர்த்தசோ மாரணியந் தன்னிற் போந்து, மந்திரத்தின் வடிவான சோமலிங்கர் பங்கயத்தாள் வந்தித் தேத்திச் சிந்துமணி யெடுத்தெறியுஞ் செயந்திபுரத் திருக்கோவில் சென்று வேற்கைக், கந்தனைவந் தனைபுரிந்தா கமவிதியிற் பூசனையுங் களித்துச் செய்தான். (உஎ)

ஆனந்த மயமான கூப்பிடோ ரைந்துமுளத் தன்பா னோக்கித் தானந்த வில்லாத வேள்விபுரிந் தாறுமுகன் றனக்காம் வண்ண ஞானந்த னுள்ளமிசை மீதூரச் சிந்துபுர நகர்க்கும் வாசப், பூநந்த வனஞ்செறிசோ மாரணியந் தனக்குநடுப் புடையோர் வைப்பின். ()

பலனளிக்கு மறைவேள்விச் சாலைதனை விதிமரபிற் பணிந்துட் போந்து, கலைமுதிர்ச்சி யாரிடரு மந்தணரும் பெரியோருங் கவினச் சூழ்ந்து, வலனுயர்த்த தனுவடிவு முக்கோணத் தீன்வடிவு மனுமுன் சொற்ற, தலைமைபெறச் சதுரமெனுங் குண்டமுமும் முறையாகத் தானே சேர்த்தி. (உசு)

பிராணன்வடி வாங்கோதா வபானனெனு முற்காதா பெயர்வி யானன், பராவடிவாய் வருபிரமா வுதானனெனு மத்வரியு பகர்ச மானன், விராவுயச மானனொடு தங்கடங்களிடந்தோறும் வியப்பின் மேவத், தராதரமெல்லாம்பரவ வேள்விமுறை யினிதாற்றுந் தன்மை யோர்ந்து. (௩௰)

புண்ணியத்தெண் டிரைக்கோதா வரிச்சுருதி மாநதியாம் பொரு வின் மாதுள், ளெண்ணியருட் டிருத்தாதை சண்முகனுக் கற்புதமா மினிய யாகந், தண்ணளியிற் புரிவித்தா னவபிருத நானமவன் றனின் றுடக், கண்ணகன்பே ராறுகிப் போதுமென மகச்சாலை களித் தாங் குற்றுள். (௩௧)

ஆங்கெழுகோ தாவரியி னவபிருத நானமர பாடி நீயென் பாங்குறுபெண் ணுகையினுற் றந்தையர்க்குக் கைமாறு பரிவிற் செய்தா, யீங்கிவணீ பரிதிமதி நால்வேத முள்ளளவு மெனது சீர்த்தி

யோங்கவென வருள்சுரந்து பின்னருமா தவனவள்பா லுரைப்ப தானான். (௩உ)

விருத்தகங்கை யாகியகோ தாவரிநீ பொருநையெனும் வேத மாதுக், கருத்திபெறு திருத்துணேவி யாகியிவ ணடைந்தடைவார்க் கமுதம் போலத், திருத்தகுநற் சிறப்பாக விருத்தியென வருமகமுஞ் செவ்வேட் கண்பாற், பொருந்தியவ னிருகிரண சரணதா மரைவி னைத்தண் போது போற்றி. (௩௩)

நீங்காத பரிவினொடு விடைபெற்றே யவணகன்று நிமல மாய, வோங்காரத் திருவடிவாஞ் சிவகலைக்கோர் வைப்பாக வொளிர் பொன் மன்றிற், பூங்காலின் றிருக்கூத்துப் புலிக்காலின் றிருமுனிவன் புகழ்ந்து போற்றப், பாங்காக வவணடைந்தான் கிடையாத பரபோ கப் பதம்பெற் றுய்ந்தான். (௩௪)

முத்தெறிசங் கமமூழ்கிச் சோமவா வியிற்படிந்து முடிவி லாத வத்தரெனுஞ் சோமலிங்கர்த் தொழுதுபுலிக் கான்முனிவ னரிது வே ள்வி, வித்தகச்சா லையிற்கோதா வரியாடிச் செயந்திபுர மேவி வேற்கை, நித்தனையன் பிற்பணிவார் பிறப்பொழித்துக் குகன்சரண நீழல் வாழ்வார். (௩௫)

இன்னுமொரு காதையுனக் கெடுத்துக்காட் டுதுஞ்சுகனீ யினிது கேளென், றுன்னரிய வியாதமுனி களிசிறந்தாங் கவனுணர வுவப்பு மிக்குத், தன்னகப்பூங் கமலமலர்த் தாதரத்தி னியாவருமே தலைமை யான, நன்னலம்பெற் றிடவேதம் பகுத்தவா யாற்சிறிது நவில்வ தானான். (௩௬)

மாதவத்தி னுயர்வசிட்டன் வாமதே வன்வரசா பாலி மாயை காதன்மிக்காங் காசிபன்மார்க் கண்டனொடு கவுதமன்முற் கலன்வே தத்திற், கோதில்கவு சிகமுனிவ னெடுங்காலங் காசிநகர் குறுகிக் கூனற், சீதமதிக் கிறணிந்தான் பதம்பணிந்து தவமியற்றிச் சிறந்தா ங் குற்றார். (௩௭)

காலிருமா தவமுனிவர் காசியகி லேசரடி நாட்பூச் சூடி, யேனு மவன் விடைகொடுப்பக் காசியகன் றகலாத வியல்பு நீடுஞ், சீலமறை முறைநிறையுஞ் செயந்திபுரந் தனையடைந்து சிறந்த ஞான, மூலமெ னுஞ் சண்முகனற் கருணைவா ரியின்றலைமை முழுதும் பெற்றார். ()

பெற்றமா தவர்குமரன் கந்தமா தனவடிவும் பெயர்வி லாது
சுற்றுமா மணிதரங்கந் தூற்றுவத னாரம்ப முதலா ஞான
முற்றுநா லாறுன புண்ணியதீர்த் தமுநோக்கி முன்னுங் காதற்
பற்றினுற் றனித்தனியே பேருலகெ லாமுணரப் பகர்வ தானுர். ()

மண்டுதிரைக் கடலுடுத்த புடவிதனிற் போகமொடு வழங்கு முத்தி, யுண்டுபடுத் தியதலங்கள் பலகோடி யுண்டவைக ளுவமை யில்லாக், கொண்டசுடர் வேற்குமரன் செயந்திபுரந் தனிற்கீழாங் குறிக்கி னென்றே, துண்டமதிக் கோடீரன் றனைப்பழிச்சும் வசிட்ட முனி சொற்றான் மாதோ. (சய)

பிரமகத்தி கள்ளருந்தல் வேதசாத் திரநிந்தை பேசும் பாவ மொருதினத்திற் செயந்திபுரத் துபவசிக்கி லன்னபவ மொழித்து மேலாம், பரகதிக்க ணெய்துவரெய் துவர்திண்ணந் திண்ணமெனப் பயிலும் வேதம், வரையறுக்குந் தவவாம தேவமுனி வரன்பகுத்து வகுத்தான் மாதோ. (சக)

படப்பாந்தட் டலைசுமக்கும் பாரிடத்திற் கடவுணதி பலவுஞ் சூழ்ந்த, கடற்பாலி னுளதீர்த்தத் தொகையுமிவை தரும்பலனுங் கருதித் தூக்கி, யெடைப்பார்க்கி லினியகந்த புட்கரிணிக் கிணையாகா வெனச்சா பாலி, திடப்பான்மை யென்றுணை யிட்டுரைத்தா னியா வருக்குந் தெரிய மாதோ. (சஉ)

பிறந்தநாண் முதலாவி போங்காறும் பிரயாகை பிரிவின் றுடிச், சிறந்தவான் கதிதனிலுங் கார்த்திகையிற் கார்த்திகைநாட் செவ் வேண் முன்ன, ருறைந்தவார் கலிமூழ்கி யுமாபதிசே யைப்பரவி லுயர்ந்த கோடி, நிறைந்தவான் கதிகாட்டு மாணேயெனக் காசிபனு நிகழ்த்தி னுல். (சங)

பருவமொரு நூறளவும் பரம்புமணி கன்னிகையிற் படியு நீர் மை, யொருதரந்தென் செயந்திபுரஞ் சென்றுகும ரேசனடி யுவந்து வாழ்த்தும், பெருமையினர்க் கெளிதாகக் கிடைக்குமென மூவாறு பெரும் புராணம், விரிவுரைக்கு மாணேயென மார்க்கண்ட னுத்த மும்ப விளம்பி னுல். (சச)

மழைதிறம்ப வறந்திறம்பிக் கொடுமைபுரி கொடுங்கால வரள்பும் ளாகத், தழையுமுக் மாயிரமும் வரையாம லனமளிக்குந் தவத்தின் மேன்மை, யுழைமகள்கா தலனுறைந்த செயந்திபுரத் தொருதிவச முற்றோரெய்தும், விழைவுறுநற் பயனிகரா தானையெனக் கவுத மனும் விரித்துச் சொன்னான். (சரு)

தருப்பைநுனி கோலியநீர் தனையருந்திக் காமாதி தணந்து மோன, விருப்பினொடு பருவமொன்று நனிபுரியு மத்தவத்தின் மேன்மையேமப், பொருப்பரசி மகன்செயந்தி புரத்திருப்பார் தங் கள்வயிற் புகலுங் கோடி, திருப்புகழுண் டாகுமென முற்கலமா முனிவரனுஞ் செப்பி னானால். (சசு)

வயப்புரவி மகநூறு வாசபே யப்பெயரா மகத்தி னூறு, வியப் புறுத்த சனனமுத லீறுறுங்கா றுந்தினமு மிக்காச் செய்த, நயப் பினிய செயந்திபுரந் தனிலுறைவார் தினமடைவ ரென்ன நாட்டூ, வயக்கடவுள் சனகாதி யோகியர்முன் யானுணர வறைந்தா னென்ன.

கோசிகனீ தானையெனப் புகன்றனனு லீதுநிற்க குணிப்பி லாத, மாசிறவச் சுகமுனிகே ளரித்துவா ரத்தின்முகில் வனப்பு வாய்ந்த, கேசவன்முன் னொருமாக மூழ்குபலன் வேறுளைக்கக் கிளர் ந்து வாசம், வீசுகந்த புட்கரிணி யொருதரமூழ் குநர்க்காகும் விளம்பி னம்மா. (சஅ)

களவினுற் றிரிவோர்கள் பின்னவர்தங் கன்னியர்பாற் காம வாஞ்சை, யளவளா வுறுமறையோர் மறையோரை நிந்தனைசெ யறி வி லாதோர், தெளிவிலாக் கைமையர்பால் வந்துறுபு ரூணகத்தி செ ய்வோர் வானி, னிளஙிலாக் கலைதவழுங் கோடீரர்க் குணர்வுரைக்கு மினைய சேயின். (சகூ)

சேவடியைப் பணிந்தொருநாட் செயந்திபுரத் தினிதிருப்பாற் றீமை பூண்ட, பாவவினைக் குறும்பறுத்துப் பரகதிவா னகந்திருந்து பரிவின் வாய்ந்த, மூவிரண்டு முகத்தனடி நிழலிருப்ப ரீதுநிற்க முனி வ கேளென், றுவனுடன் வியாதமுனி பின்னுமொரு காதையெடுத் தறைவ தானன். (௫0)

அற்பினுடன் கார்த்திகையிற் கார்த்திகைநாட் செயந்திபுரத் தமரர் போற்றப், பொற்புநிறை திருமுகங்க ளோராறுங் களிதுறப் பப் புகழ்ந்து போற்றுக், கற்பினர்க ளெவரேனுஞ் சந்திரசூ ரியருல வுங் காறு மாறு, மற்புரைவே சரியாவர் நிச்சயமீ தெனநூல்கள் வகுக்கு மாதோ. (௫க)

புழுத்தகரு மலம்பொசிக்கும் வாலைய மாய்விடினும் பொறை யாய் மூத்த, வழுக்குடம்பு செயந்திபுரந் தனிலொழிந்தா லதுவுமழி யாத ஞானம், பழுத்துமறு சனனமின்றிக் கதியடையு மினுங்காதை பகர்வன் வேத, விழுத்தகுமெய்ப் பொருளாகு மெனச்சுகற்கு வியாதமுனி விரித்தான் மன்னோ. (௫௨)

சொல்லருமா காதையொன்று சந்தான விரதமெனத் தொடர் ந்த பேரா, மல்லலொழித் தடியவர்பா லன்புவைக்கு முருகனுளத் தருளே போலா, மெல்லிலதவி ரருந்தவத்துச் சுகமுனிகே ளிம்பரும் பர்க் கிணங்கக் கையி, னெல்லியென லாகவதன் முறைதிறம்பா துலகுணர நிகழ்த்து வேனால். (௫௩)

அரியநோன் பியற்றுகின்ற காசிபன்கா தற்குரிய வதிதி யாகுந், தெரியிழைநன் மைந்தரிடத் திச்சைவைத்துத் திசைமுகத்தன் சிறு ஙிற் றேர்ந்த, சுருதியாழ் முனிசரணம் பணிந்தேத்தி மைந்தரொடு தூய வாழ்வுந், தருவதா மொருவிரத மெனக்கருள வேண்டுமெனச் சாற்றி னளால். (௫௪)

சாற்றியுடன் வணங்கதிதி யுரைகேட்டுத் தந்திரியாழ் தாங்குஞ் செங்கை, மாற்றருஞ்சீர் நாரதனும் வானவர்தஞ் சிறையகற்றும் வை வே லண்ணற், கேற்றதவ விரதமுனக் கறைகுதுமா லுளங்கவற்சி யின்றி யின்று, கோற்றொடிகேட் டுணர்தியெனச் சந்தான விரதமது கூறு கின்றான். (௫௫)

பெட்புடன்கார்த் திகைத்திங்கட் பூரணையிற் செயந்திபுரம் பிற ங்குங் கந்த, புட்கரிணி முதலான நாலாறு தீர்த்தமுறை புகுந்து மூழ் கி, விட்புலவர்க் கரசளித்த கௌமாரி குமரனுளம் விரும்பு நோன்பு, கட்பொதிதா மரைத்தாளுக் காகவொரு பருவமுற்றக் கருணை வேண் டும். (௫௬)

என்னமறை யாலறைகூஉய் மூவெட்டா கியதீர்த்த மினிதின் மூழ் கிப், பன்னிரண்டு தரங்கோயில் வலஞ்சூழ்ந்து பன்னிரண்டு கண்ணு ன் பாத, மன்னிநின்று பன்னிரண்டு தரம்பணிந்து பின்னெழுந்து மவுன மாகத், துன்னியசூர் மாப்பாட்டிற் போய்வடக்கு முகமாகச் சுவாமி சேர்தாள். (௫௭)

நோக்கியிருந் தனுமிகையிற் குடபாலிற் சுதரிசன நுவலுங் கீழ்பாற், ருக்கருமுக், சூலநடுச் சத்தியிவ்வா றெருமுப்பாற் றரையிற் றீட்டி, யாக்கியசோ டசவிதியாற் பூசனைசெய் தாறிரண்டி னளவை யாகத், தேக்கருளின் வந்தனையாற் றிருக்குமர னுலயத்தின் றிசைபார்த் தன்பால். (ருஅ)

பேருட்சுப் பிரமணிய வென்றென்றே மூன்றுதரம் பேசிப் பேசி, யாருமிடற் றெழுமோசை யெவ்வளவோ வவ்வளவு மறைகூஉய் வாகைச், சூருயிர்போய்க் கதியடைந்த வவ்வயிற்றெண் கடன் மூழ்கிச் சுடரு லாய, வீரவடி வேற்காத்த னுலயத்தின் மவுனமொடு மீண்டும் போகி. (ருகூ)

சந்நிதியை யடைந்துகுரு முகமாகக் கும்பமொன்று தாபித் தேத்தித், துன்னுபதி னறுவிதத் தன்பினிற்பூ சனைபுரிந்து தூநீர்க் கும்ப, மன்னுபுன றனின்மூழ்கி யனைத்தினுக்குங் காரணமாய் மருவி நின்ற, பன்னிருகைக் குமரேசன் றனைப்பரவிப் பன்னிரண்டு பழிப்பில் வேத. (சூ0)

அந்தணர்க்குத் தெக்கணையோ டூட்டுவித்தா றெழுத்துமனத் தழுத்தி வேற்கைக், கந்தனைச்சிந் தனைக்கோயி லூடிருத்தி யுபவசித் துக் களித்துப் பின்னர், வந்ததினத் தினிமைதரும் பாரணையூண் விதி மரபின் வாய்ப்பச் செய்தே, முந்தறைபு மிவ்வாற்ருற் பன்னிரண்டு பூரணையு முற்ற நோற்று. (சூக)

மற்றவிருச் சிகத்திங்கட் கார்த்திகையி னிவ்விரத மரபி னூற் றிக், கற்றமறை யோர்க்கரிய கோதான முதலாய களிக்குந் தான, முற்றும்மன மகிழ்சிறப்பரி கொடுத்தவர்க ளாறுமுக முருகப் புத்தே, ளுற்றதிருக் கருணையினு லவாவர்வேண் டியவிருப்பி னுவந்து வாழ்வார். (சூஉ)

இவ்வாறு மறையவர்க ளியற்றுநர்க ளாமாகி விருஞ்சிலேடைக்
கொவ்வாத கலையனைத்தும் பெற்றதிக சந்தானத் துவந்து வாழ்வார்
மைவாரி யிருநிலத்தி லரசரியற் றுநராகின் மருவார்ச் செற்றுச்,
செவ்வாமன் னிலைபுரிந்து சந்தானம் பலவடைந்து சிறப்பின்வாழ்வார்.

வணிகரிந்நோன் பியற்றிடினற் றனதனைப்போ லாய்மகவின மகிழ்வார் மற்றைத், தணிவரும்பின் னவரியற்றி லளவறுநல் வளத் தொடுசந் தான வாழ்க்கை, யணிபொருந்தி யினிதிருப்பார் சுகமுனி.

கேணாதன்சொல் லதிதி கேட்டுப், பணிதல்புரிந் தாசிரிய னாதமா முனிவனைப் பாவித் தேத்தி. (௬௪)

ஓர்பருவ மதிதியருஞ் சந்தான நோன்பியற்றி யொளிர்வேற் சேயின், சீரருளி னிந்திரனை யுபேந்திரனை மகிழ்சிறப்பத் திருவி னீன்று, சோர்வொழிந்தின் றளவுமுற்று ளாதலினு லிவ்விரதந் துணி வி னேற்றோர், போரயிலாற் காளாகி யன்னவன்றாள் வீட்டின்பம் புகுவர் மாதோ. (௬௫)

ஈதுநிற்க சுகமுனிகே ளின்னுமொரு காதையுண்டா லியம்பு கேனியான், மாதவத்தின் முறைதிறம்பா வொருமறையோன் மறை நான்கு மங்க மாறு, மோதியுணர்ந் துண்மையெலா மாராய்ந்து தன் னுள்ளத் தொருங்கே யாக்கி, வேதியர்க்கெல் லாமுணரத் தானு ணர்த்திப் புகழ்நிறுவி வியப்பு மேலாய். (௬௬)

புகலுறும்வை திகஞ்சைவம் வயிட்டிணவம் வாமமிசை பொருந் து மேலோர், பகர்சவுர முயர்காண பத்தியமே யாறுகப் பகுத்துக் காட்டுந், தகையமத விகற்பமெலாந் தானுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தனைக்குத் தானே, நிகரொருவ ரில்லாது புகழ்நிலவாற் புடவிதனி னெடிது வாழ்ந்தான். (௬௭)

பையரா முடிதாங்கு நெடும்புடவிக் கண்வதிந்து பவத்தின்மூத் துச், செய்யதாய் தந்தைகுருச் சிவனயன்மான் மறையோர்க டெய் வஞ் சார்ந்த, துய்யதா மந்திரமா தீர்த்தமருந் தவந்தருமஞ் சுருதி நன்னூல், பொய்யிலா மறைவேள்வி யருந்ததிக்கற் பினில்வாய்ந்த புரைதீர் மாதர். (௬௮)

சொற்றிடுமிவ் வாறனைத்து நிந்தனைசெய் தனையாகத் துணிந்து கண்பர், லுற்றனமெய் காணாத வுறுபொருளா னவைபொய்யா முண் மை ஞானம், பெற்றவருஞ் சுவர்க்கமொடு நிரையமுள வென்பரவட் பெயர்வி லாது, முற்றவிருந் திவணடைந்தோ மெனவொருவர் சகந்தெரிய மொழிந்து ளாரியார். (௬௯)

எனநினைந்து தன்வேத முறைதிறம்பி யறம்பாவத் தியல்போ ராது, சனனநெடும் பொறைதாங்கி நெடுங்காலங் கொடுந்தொழிலிற் றனே மூத்து, மனனுணர்வு தள்ளாட நாக்குழற நரைமுதிர்ச்சி வந் தூழ் முற்ற, வினையுழன்று சுழன்றகறங் காஞ்சடல நீத்தாவி விட்டா ன் மாதோ. (௭௰)

ஆவிபோம் பொழுதியம படர்பாச மெடுத்தழுந்தக் கட்டிக் காலனேவலா லங்கங்குவிட விருபத் தெட்டாக வியற்றுங் கோடி, பாவமா மெயநிரயத் தூடழுந்திப் பின்வழுதிப், பாண்டி நாட்டிற், றுவருக் கொடுங்குரல்வாய் வாலேய மாய்மீண்டுஞ் சனித்தான் மாதோ. (எக)

யாவருக்கு மருவருக்கும் வாலேய வுருத்தாங்கி யிருந்த காலத்
தோவறமுன் குருமுகமாய் வேதமதி கரித்ததவத் துயர்ச்சியாலே
நாவலந்தீ வுக்கணியாஞ் சிந்துபுரந் தனிலடைந்து நவையின் மூத்து
மேவருமச் சட்சுமமைப் பெரும்பாரந் தனைநீத்து விழுந்த தன்றே.

சிந்துபுரந் தனிலாவி விட்டொழிந்த தன்மையினாற் சிறந்த ஞானக், கந்தனரு ளான்ஞானக் கருத்தடைந்து வருங்காம தேனுத் தாரு, முந்துமரம் பையர்சூழத் தேரேறிக் கொண்டுவண்டு மொய்த்தூ டாடுங், கந்தமல ராசனத்தா னுலகடைந்திந் நாளளவுங் களிப்பா னுய்ந்தான். (எங)

அருந்தவத்துக் கொருநாஞ்சி லாகியதென் செயந்திபுரத் தமர்ந்து வேதம், பொருந்தவுரைத் தாறுமுகப் பெருமான்ற னிருசரணப் போது போற்றி, யிருந்தெவர்க்கும் பசியாம லனங்கொடுத்துப் பின்னுடலத் திடும்பை நீத்த, பெருந்தவத்தர் பெரும்பேறறை யெம்மனோர்க் கெடுத்தெடுத்துப் பேசொணாதால். (எச)

பலகதையுரைத்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—எஙல.

---

## பதினேழவது:

# இயமனுக்குச்சிந்துபுரவைபவமுரைத்தவத்தியாயம்.

அருந்தவ நெடுங்கட லளந்துணர் வியாதன்
றிருந்துசுக மாமுனிவ செப்புவது கேளென்
றிருந்துணர்வி னுலக மேழினுயர் சிந்து
புரந்தனை யடைந்தவர் புகும்பரி சுரைப்பான். (க)

சங்கமெறி வாரிதி தனிற்பொருளை நாடி
வங்கமொடு சென்றுபல வாணிக முயன்றே
கங்குல்பக லுந்துயில கன்றுகட லூடே
பொங்குபல மீனொடு புலாலினிது தின்பான். (உ)

கற்றுணர்வி லாதுளமி லேச்சனது காலை
யற்றமறு சேனையுட னாழியிடை நாவா
யுற்றபல வாணிகர்க ளுள்ளநிதி யாவுஞ்
செற்றமொ டெடுத்தவர்கள் சென்னிதுணி விப்பான். (ங)

தீமைபுரி வித்துமறை செல்வழி நடாத்து
மோமமறை வாணர்சினை யோடுறு பசுக்க
டாமற வொறுத்துள தசைக்கறி சமைத்தே
காமுற நுகர்ந்துகிளை கட்குநுகர் விப்பான். (ச)

தன்னுள புலைச்சமய மேசமய மென்றென்
றுன்னிநிக ரின்றிவளர் வுற்றசம யத்தோர்
சென்னியற வெட்டிய செருக்கினொடு பாவந்
துன்னுமுட லச்சுமை சுமந்துபல காலம். (ரு)

திரிந்துழியொர் காலமுயர் சிந்துபுர நண்ணி
யருந்தவர் வணங்குறுபொன் னாலயமுன் னாகி
விரைந்திவிட மேதென வினவியுள் வெகுண்டே
புரந்தர னிறைஞ்சவளர் கோயிலிடை போனான். (சு)

போனபொழு தாறுமுக புங்கவனை யேத்தி
மோனமொடு நான்மறைசொன் முப்புவன வைப்புத்
தானமெனு மந்தணர்க டம்மையெதிர் நோக்கி
யானவுரு வேதெனவு மந்தணர்கள் சொல்வார். (எ)

சங்கர னுதற்கண்வரு சண்முகவ னுமால்
வெங்கய முகாசுரனை வென்றமர ரெல்லா
மெங்கள்குழு வுக்கரச னென்னவொரு பேருந்
துங்கமொடு பெற்றுள சுவாமியிவ னுமால். (அ)

போற்றுமெளி யோர்களிடர் போக்கியருண் ஞான
மாற்றரிய சீரொடு வழங்கவுள வாஞ்சை
யாற்றலொ டிருந்தபெரு ளாகுமென முன்னஞ்
சாற்றுமறை யோருரை தடுத்துமுரை சாற்றும். (கூ)

அரனெவ னவன்பெறுவ தாகவரும் வேற்கை
முருகனெவ னென்றுள முனிந்துநெடு வாளாஞ்
சுரிகையொடு சீறின னடந்துசுடர் வேலோ
னருகுசெல வோடிவிழுந் தாவிபு மழிந்தான். (௰)

ஆவியழி போதுவிழு மவ்வள்வி லாதி
மூவிரு முகத்தனடி முன்னமுடி யாத
பாவிதர முன்புவிழு பான்மைபணி வோரின்
மேவர விருந்தெழு மேதினி நடுங்க. (௰க)

பாசமொடு காலபடர் பற்றவரும் வேலை
யீசன்மக னைத்தொழு திருந்தகண நாதர்
மாசறு குமாரனடி வாழ்வுபெறு வோனை
நீசர்விடு மென்றவரை நீக்கினர்கண் மாதோ. (௰உ)

அன்னவர்க டென்றிசையி னுணைகொடு போற்று
மன்னனை வணங்கவர லாறுபுகல் வீரா
லன்னமுறை கூறவ்வளி யேற்றமுகில் போலாய்ச்
சென்னியு நடுங்கவுயர் சிந்துபுர முற்றான். (௰௩)

உற்றபொழு தாறுமுக முள்ளகும ரேசன்
பற்றினொடு வாழ்திரி சுதந்திரர் பராவ
முற்றவுணர் கும்பமுனி மோனமுனி வோர்கள்
கற்றசன காதியர் களித்துடன் வணங்க. (௰௪)

மானருண் மடக்கொடியும் வானரச னீன்ற
வேனகு கருங்கண்மத வேழமட மாதுந்
தானமொ டிரண்டுபுற முந்தழுவ வேல்வேண்
ஞானமுறு முத்திரையி னன்குற விருந்தான். (௰௫)

நன்றியுட ஞறுமுக நாயக னிரண்டு
மன்றன்மல ராஞ்சரண வாரிசமு ஞகத்
தென்றிசை புரக்குமிறை சென்னிபணிந் தேத்தி
நின்றுகும ரேசனடி நேர்கொடு துதித்தான். (௰௬)

தேவரிடர் தீர்த்தவுணர் தேவியர் கழுத்தின்
மேவுகல னீக்கிமறை மிக்கவுரை காணு
மூவிரு முகக்கடவுண் முண்டக மலர்த்தாட்
பூவென வியந்துதரு மன்புகல்வ தானன். (௰௭)

இழுதையர்க ளாயிடினு மெந்தைசர ணத்தே
தொழுமவரை நான்மறை துதித்தமுதி யோரும்
வழிபட வியற்றிய மயூரவரை மாதின்
குழவியென வாழ்த்தியுயர் கூற்றிறை துதித்தான். (௰௮)

நாடரிய தேவர்சே ஞபதியு மாகப்
பீடுபெறு நிற்கொடு பெரும்பகை யொழித்தே
நீடமரர் வாணிலைமை நிற்கவருள் செய்த
வாடன்முரு காவெனவு மந்தக னறைந்தான். (௰௯)

பகவதி தருங்குக பராவருமை ஞான
வகவிரு ளகற்றுமரு ணேதயசொ லாறு
முககுரு பராவினது முண்டக மலர்த்தாள்
புகலெனவு மியாமிய புலத்திறை பணிந்தான். (௨௰)

தண்ணளியி லாதகொடுந் தானவர்க ளாய
புண்ணொடு மழுந்துபுல வர்க்கரு மருந்தாம்
பண்ணவ கயம்பரம வென்றுரை பராவி
யெண்ணரிய கூற்றுவ னிறைஞ்சியவ ணின்றான். (௨௧)

நின்றநம னைக்குமர னீடருளி னோக்கி
யுன்றுதியி னுனம துளங்களி சிறந்தா
மின்றுவர லாறுபகர் வாயென வியம்பத்
தென்றிசை புரக்குமிறை செப்புத றுணிந்தான். (௨௨)

பிறைமவுலி யானது பெருங்கருணை யாலே
யறமொடு கொடும்பவ மடைந்தவர்க ளியாரு
நிறைதரு சுவர்க்கநிர யம்படர வீரே
முறுகரிமு ஞகவுறு வித்திடல்செய் வேனல். (௨௩)

இந்தமுறை தானுமியல் வேதியரு முன்னூல்
விந்தையுணர்கின்றமனு வேந்தரு மருங்கே
வந்துட னிருப்பமதி மாலைபுனை வோர்க்கென்
சிந்தனை வெருண்டவர் வினைச்செய லுணர்ந்தே. (உ௪)

நீதிபுரி தன்மையுடை யேனெறியி னில்லாப்
பாதக னியற்றிடு பாதக முணர்ந்தே
யேதமொ டிவன்றனை யழைத்திடு மெனுமுன்
றூதரை விடுத்தனன் விடுத்தவர் தொடாமுன். (உ௫)

நின்னருகு நின்றுள நெருங்குகண நாத
ரென்னுடைய தூதரை யிடித்தொரு மிலேச்சன்
றன்னையு னடிக்கமல வீடுதமு விப்ப
தென்னென நமன்புகலு மின்சொலது கேளா. (உ௬)

ஞானமுள ராயிடினு ஞானமில ரேனு
மானின்விழி யார்மிசை மயங்கினர்க ளேனு
மேனைய வழுக்கின்முறை நாடினர்க ளேனு
மானத மியற்றொழி லடைந்திலர்க ளேனும். (உ௭)

முந்துபவ மூழ்முறை முயன்றுளர்க ளேனுஞ்
சுந்தர மறைத்திரி சுதந்திரர்கள் சூழ்ந்து
வந்துதொழு நம்முக மலர்ச்சியது நோக்கிற்
சிந்துபுரம் வந்தினி திருக்குமவர் செய்த. (உ௮)

தீவினை யொழித்தினிய செம்மையின ராகி
யாவலொடு நந்தம தடிக்கமல நீழன்
மேவர விருப்பரிவன் மேயமுக மாறுந்
தாவற விழித்தவுடன் சாய்ந்துயிர் விடுத்தான். (உ௯)

வருதிரி சுதந்திரர்முன் வாயுரை புகன்றுன்
விரைவினுயர் நம்முகம் விருப்பினொடு பார்த்தான்
பரிபவ மொழித்துமறை பண்பினி னிறைஞ்சு
மிருசரண தாமரை யிருங்கதி யடைந்தான். (௩௰)

ஆணைநம தாணையென வாறுமுக வேலோ
னேனுடைய கூற்றின்முக மின்னருளி னோக்கித்
தானுவின் மகன்றகைய தண்ணளி சுரப்ப
வாணிநிக ரானமணி நாவினின் மகிழ்ந்தே. (௩௧)

அந்தகனை நோக்கிமுரு கேசனறி விப்பான்
சிந்துபுர மானது சிறப்பினொரு மூவர்
முந்துறு தவத்தரொடு நாமு முறையாக
விந்தையுடன் வாய்த்துதி விளம்புபதி யாமால். (௩௨)

வேறு.

என்று பன்னிரு தடம்புயக் குமரவே ளெதிராய்
நின்ற கூற்றுவ னுணர்தரக் கூறின னிலையார்
தென்றி சைக்கணு னறுமுகன் சேவடித் துணையை
நன்றி பெற்றகை யுச்சிமேற் கூப்பின னடந்தான். (௩௩)

ஆய தன்மையாற் சுகமுனி யறிதர வியாதன்
பாய தெண்டிரைப் புணரிசூழ் செயந்தியம் பதிதான்
சேயின் மிக்கசா யுச்சியத் திருநெடும் பதியா
மேய சத்தியஞ் சத்திய மெனவுரை விடுத்தான். (௩௪)

இயமனுக்குச்சிந்துபுரவைபவமுரைத்தவத்தியாயம் முற்றிற்று:
ஆக—திருவிருத்தம்...எ௲ச.

---

## பதினேழாவது:
## பிரமன்றேவர்கட்குபதேசித்த அத்தியாயம்.

விரிந்த மாமறை நான்கெனத் தொகுத்தசீர் வியாதன்
றெரிந்த மேலவர் புகழ்சுக முனிவனுட் டெளியப்
பரிந்த மாதவச் செயந்தியம் பதியின்மான் மியமே
பொருந்து காதையொன் றுணர்த்துவன் கேளெனப் புகல்வான் (௧)

பாவகாரியாய் வணிகர்தங் குலத்திலுற் பவித்து
மூவர் தம்மையும் பூசுரர் தம்மையு முதுபார்
மேவு மாதிரத் திறையவர் தம்மையு மேலா
மேவர் தம்மையு நிந்தனை புரிந்துமூத் திருந்தான். (௨)

வாணி கத்தினிற் சோரவா ணிகமன மதித்துத்
தூணி விற்பவர் முன்னதிற் பாதியுஞ் சுருக்கிப்
பேணி விற்பவன் றுய்தரு மாப்பொனிற் பிரித்துக்
காணி கைக்கொளச் செட்டியா பாரமுங் கற்றான் (௩)

தானு மீகில னீருநர் தம்மையுந் தடுக்கு
மீனன் புண்ணிய பாவமா யுள்ளன விரண்டு
மானிலத்திடைப் பொய்யெனப் புகன்றபேழ் வாயான்
ஞான மானமூ தறிவொரீஇ யவங்கொடு நடப்பான். (௪)

வருண நான்கையு மொன்றென நின்றவ மதிக்கு
மிருண யந்ததோ ருணர்வினன் வருணநான் கினிலும்
பொருண யந்ததொன் றின்றுநால் வகையெனப் பூண்டோர்
தருண மோர்ந்துகூத் தாடுவோர் வேடத்தின் றகைமை. (௫)

பெரிய வான்சிலை யுருவமும் பிறங்குதாம் பிரத்தி
னுரிய சீருரு வதனையுந் தெய்வமென் றுரைக்கி
னரர்க டம்மொடு நவிற்றுத லில்லையா னரலைப்
பரவை மாநிலத் தியல்புள ரென்பது படிறே. (௬)

தாய ராவதுந் தந்தைய ராவதுந் தவத்திற்
சேய ராவதுஞ் சுற்றம தாவதுஞ் சிறப்பின்
மேய தேவர்க ளாவதுந் தேவரின் மேலாந்
தூய மாதவ ராவது மாய்விலாச் சொன்னம். (௭)

என்ன னெஞ்சத்து ளியாரையும் யாவையு மிகழ்ந்து
பன்ன கப்பிட ராற்றிய புடவிக்கோர் பரமாய்
நன்ன லத்துட னிருந்தன னிருந்தநாட் பலபோய்ப்
பொன்னி னிச்சையாற் கப்பலிற் புணரிநீந் தினனால். (௮)

புணரி சூழ்ந்ததீ வாந்தரத் திடமெலாம் புகுந்து
வணிகர் தன்மையிற் பலபொரு ளியாவையு மாறிக்
கணித மில்பொரு டேடிநீள் கப்பலி னேறித்
தணிவ ருங்களி கொண்டுதன் கடனடுச் சார்ந்தான். (௯)

வங்க நீரிடைச் செல்லுழி மழையுமோ வாது
பொங்க மாருதச் சூறையு மெறிதரப் புணரி
தங்கு தோணியுந் தகர்ந்தது நிதியமுஞ் சலதி
யங்கு வீழ்தர வணிகனும் புணரியூ டாழ்ந்தான். (௰)

வீழ்ந்த செட்டியு நீந்தினன் மிதந்தனன் விரிநீர்
சூழ்ந்த தெண்டிரைத் தரங்கநீ ரீர்த்திடச் சுரர்தாந்
தாழ்ந்த சீர்வத னரம்பச் சந்நிதி சார
வாழ்ந்த பேருணர் வொழிதரச் சென்றது வாழ்நாள். (௰௧)

உயிரொ ழிந்திடு மியாக்கையை யவ்விடத் துறைவோ
ரியல்பி னாலெடுத் திமத்தி னய்கனுக் கேற்றி
நயனு ணர்ந்தழற் கருமமு மாற்றினர் நன்னூற்
பயனு ணர்ந்துள சுகமுனி கேளெனப் பகர்வான். (௰௨)

செட்டி செய்தவெம் பவமெலாஞ் சிறுகுழி யிடத்து
மட்டு றும்புன லிரவிசெங் கதிரினால் வறந்து
விட்ட பான்மைபோல் வேளரு ளாலற விண்ணோ
ரிட்ட தேர்மிசைக் களித்துட னேறின னிருந்தான். (௰௩)

தேரி னேறினன் பரிதியின் காந்தியிற் சிறந்து
மேரு வில்லுடைப் பரமன்சா ரூபமாய் விளங்கிக்
காரி னேர்தரு கண்டமுஞ் சந்திர கலையு
மேரு டன்றரித் தருங்கணத் தவரொடு மிருந்தான். (௰௪)

வரையி லாறுசெய் பவத்தினன் மூத்தவோர் வணிக
னுரிய தாயசா ரூபத்தை யுற்றன னென்று
லரிய மாதவர் செயந்தியம் பதியிடத் தடைந்து
துரிய மெய்திடிற் கதியெவன் சொல்வது துணிந்தே. (௰௫)

பகர்வ தற்கரி தாகிய செயந்தியம் பதிக்கு
நிகரெ னப்பல தலங்களை யுவமித்து நிகழ்த்துந
தகவி னோர்களுங் கொடும்பவச் சலதியிற் றாழ்ந்து
மிகைப டைத்தகூற் றுவன்புரந் தன்னின்மே வுவரால். (௰௬)

சடமெ டுத்துளோ ரியாரையும் பரகதி தன்னி
லுடனி ருத்திய செயந்தியம் பதிக்குவ மானங்
கடனி லத்தில்வே றெண்ணினோர் காலனீள் கண்ணும்
வடவை பற்றிய புதுவிருந் தென்னவும் வதிவார். (௰௭)

புண்ணி யத்தலச் செய்கையை யுந்திபூத் துடையான்
விண்ண கத்துள விந்திர னுதியாம் வியன்சீர்ப்
பண்ண வர்க்கெலாம் பகர்ந்திடு மளவையிற் பரிவா
யெண்ணு தற்கரி தாஞ்சிந்து புரமென விசைத்தான். (௰௮)

எடுத்த நான்முகன் காசிநீ டியற்சுக நாதுந்
தொடுத்த மாதவத் துவாரகை தோட்டலர் விரிஞ்சற்
கடுத்த மாபுர மைந்திலிங் கத்தல மரங்க
மடற்பு டார்ச்சுன புரிகழை தழையுமா வனமே. (௰௯)

பச்சை மாநதி சூழ்ந்தசோ ராடவிப் பகுவாய்
நச்சு மிழ்ந்திடு நாகணைச் சயனமா நகரா
மிச்சை கொண்டவங் நகர்ச்செலா மேலதா மினிய
முச்ச கந்தொழுஞ் செயந்தியம் பதியதே முதன்மை. (உம)

என்ற டிக்கடி நான்முக னெடுத்தெடுத் திசைத்தான்
றென்றி சைச்செல்வோர் செயந்தியம் பதியெனத் தேரு
ரன்றி வெற்பெறி வேலினன் செயந்திபு மலர்ப்பூங்
கொன்றை சுற்றிய வேணிபா னிதயகோ கனகம். (உ)

வேறு.

திங்க டோறுங் திகழ்திருக் கார்த்திகைத்
துங்க வேற்கைச் சுவாமியைப் போற்றுவார்
பங்க மாம்பவ பாச மறுத்துயர்
சங்க ரன்பதத் தாமரை சார்வரால். (உஉ)

மாத முப்பது மாகங் கருதிவே
லாதி முன்வத னாரம்ப மாடுவா
ரேதி லாப்புன லெத்தல மூழ்கினும்
போது தற்கரி தாம்பவம் போக்குவார். (உங)

வேள்வி நூறும் விதிமர பாற்றிய
நீள்க திக்கெதி ராக நிகழ்த்திடின்
மூளு மாக முகாரம்பங் கோடியாச்
சூளு ரைக்கும் பலனைச் சுருதியே. (உச)

சிறந்த கார்த்திகைக் கார்த்திகைத் தீபத்தா
னிறைந்த வாறு நிலாமுக மண்டலம்
பிறந்து சாமுன் னொருதரம் பெட்புற
வுறைந்து போற்றுநர்க் கோபிறப் பில்லையே. (உரு)

வேறு.

சிந்துநன் னகர மல்லாற் சிறந்தவூ ரிருந்தா னெய்யாற்
கந்தன்முன் றீப மேற்றக் கற்பிக்கு முதியோர் தாமு
முந்துவான் பரியின் வேள்வி முற்றினோர் கதியை யன்னார்
விந்தையாற் பெறுவ ரென்றே வேதமோ யாது சாற்றும். (உசு)

அற்றைநாட் கந்தன் மேவு மாலய முழுதுஞ் சோதி
பெற்றவான் றீபம் பார்க்கும் பெட்பினோர் தங்கட் கெல்லா
மற்றுமோர் சனன மின்றால் வானுளீர் விரிப்ப தென்னே
கற்றுளோ ரேனுங் கல்லாக் கடைநிலத் துற்றா ரேனும். (உஎ)

சென்னியா றுடைய வையன் செயந்தியம் பதியி னீங்கா
தன்னிலை பொருந்து மேலோ ரடங்கலுங் கயிலை யீசன்
பொன்னடி பெறுவ ரீது புகன்றது வாய்மை யென்னப்
பன்னினன் கடவு ளோர்க்குப் பதுமப்பூந் தவிமக் கோமான்.()

ஒன்றிரண் டொருமூன் றுன வுயர்தினந் தோறு மன்பாய்ச்
சென்றிருந் தாலுந் தீமை செயத்துணிந் தார்க ளேனு
நன்றுணர்ந் திருந்தா ரேனு நான்மறைச் செயந்தி யுற்றார்
கன்றிய பாவ நீங்கிக் கடவுளர்க் குரிய ராவார். (உகூ)

கருதரு மேலை வீட்டுக் கேறுதற் காக வைத்த
பொருவரு மேணி சிந்து புரமெனப் பிரமன் விண்ணோர்
தெரிதர நுட்ப மாகத் தேற்றின னெனவி யாதன்
பரிவுடன் சுகற்குத் தேறப் பகுத்தனன் றொகுத்து மாதோ.()

பிரமன்றேவர்கட்குபதேசித்தவத்தியாயம் முற்றிற்று.

ஆ—திருவிருத்தம்—எகூச.

---

## பதினெட்டாவது:
## சுகப்பிரமரிஷிபூசைபண்ணின அத்தியாயம்.

நாடருந் தவத்தின் வைப்பா நைமிசா ரணியத் துற்ற
பீடுறு முனிவர் கேட்பப் பெருமறைச் சூத னென்பா
னீடருள் சுரப்ப நோக்கி நெடுநிலா வேணி பொற்றாள்
சூடிமற் றவர்முன் னாகச் சொல்லுதற் குள்ளம் வைத்தான்.(க)

நவையிலா மறையின் மூத்து நாரண வடிவந் தாங்கு
முவமைதீர் வியாதன் றன்பா லுறுசுக முனிவன் கேட்பச்
சிவனருள் குமர மூர்த்தி செயந்தியம் பதியிற் காதை
யனைவுப தேச மாக வறிவொருங் குணர்த்து கின்றான். (உ)

பாரத கண்டத் தூடு பகர்தரு மூவா றுன
சீரிடங் குமர மூர்த்தி திருவருள் போலா யுற்ற
பேரினைப் புலரிக் காலைப் பேசின ரியாரு முள்ளத்
தாரரு ளடைந்து பாவத் தருந்தளை யகற்று வாரால். (ஙு)

எழுமுகிற் படலை தூங்கு மிமையமால் வரையின் பாங்க
ரழகினுக் கழகு செய்யு மாடியின் சிறப்பு வாய்த்தச்
செழுமைபெற் றுயர்ந்த ஞானச் செய்யவிந் திரநீ லப்பேர்
தழுவிமுத் தேவர் காக்குந் தகையபட் டினமொன் றுண்டால்

அந்தமா நகரிற் றேவ ரியாவருந் திரண்டன் பாக
முந்துமோர் தேவர் சேனு பதியென முருக வேட்குச்
சிந்தையார் வத்தி னோடுந் திருமணி மவுலி சூட்டிச்
சந்தநான் மறையின் வாழ்த்தித் தண்மலர் மாரி தூற்றி. (௫)

அன்றுதொட் டின்று காறு மாரரு ளபிஷே கப்பே
ரொன்றிய குமர னென்ன வும்பர்கள் வணங்கி யேத்த
வென்றிவே லண்ணல் போற்றி வேண்டுநர் வேண்டி யாங்கே
நன்றருள் புரிந்து வேத நவிற்றவீற் றிருந்தான் மாதோ. (௬)

கங்கையின் கரையி னோர்சார் கனகல மென்னுந் தீரத்
தங்கினி தமர்ந்து தாதை யளித்துள கலைக ளெல்லா
மங்கல மரபி னோர்ந்து மறைகளுக் கெட்டாச் செவ்வேள்
பங்கமில் சிவமா ணுக்க னெனப்பெயர் பரித்தா னம்மா. (௭)

மலையத்தின் மேல்பான் முத்தி வழங்குமந் தரங்க மான
நிலையத்திற் குமர தாரை நீணறிக் கரையின் பாங்கர்க்
கலைமுற்று முணர்ந்த வேத வாரிடர் கண்ணே யாகித்
தலைமைத்தாம் வேத பாடந் தணப்பிலா தவர்கள் கூட. (௮)

இருந்துருச் சொல்லிக் கொண்டி யாவர்க்கு மிறைவ னாகிக்
கருந்தட நெடுங்கட் செவ்வாய்க் கவுரிவார் முலைப்பான் ஞானத்
தருந்திவெஞ் சமணை மாய்த்த வாறுமா முகங்கொண் டுற்ற
பெருந்தகை யாங்கு மாரப் பிரமசா ரிப்பேர் பெற்றான். (௯)

பனிமுகிற் படலை நீங்காப் பழநியஞ் சார னுப்பட்
டனிமுத லாகி மூத்த தன்கிழக் கோலங் காட்டி
முனிவரர் நால்வர்க் குண்மை முற்றொருங் குணர்த்தி யாங்குச்
சினகரத் திருந்து ஞான தேசிக னெனும்பேர் பெற்றான். (௰)

தொன்மறை முடிவு மூத்த சுவாமிமால் வரையின் ஞானஞ்
சின்மயத் தந்தை யுள்ளந் தெளிதர வோங்கா ரத்தின்
றன்மைமுற் கூறி யீசன் றன்குரு வடிவா யார்க்கு
நன்மைசார்ந் துயர்சு வாமி நாதனென் றொருபேர் பெற்றான். ()

விந்தையின் கிரியி னோர்சார் விகாரபட் டணத்தி லியானை
தந்துள மாதை வேட்டுத் தண்ணளி சுரந்து வானத்
திந்திரன் முதல தேவ ரிறைஞ்சமுன் வதுவைக் கோலச்
சுந்தர வடிவ மென்னத் துலங்கினன் குமர மூர்த்தி. (௰௨)

தினகரன் மரபிற் றோன்றுஞ் சித்திர சேன னென்றோர்
முனைநெடுஞ் சுடர்வே லண்ணன் முதியமா தவத்தின் ஞானத்
தனிவரை யதனி னோற்குந் தன்மைகண் டினிய கந்த
னனிமகிழ் சிறந்து வேட்ட தேதென நவில்வ தானுன். (௰௩)

கூடலி னினிதா யுள்ள கோலமோ ரறுபா னுன்கா
யாடின நடன மியாவு மளியனே னினிது காண
நாடகச் சுருதி யாக நடித்திடல் காட்ட வேண்டித்
தேடின னென்று கூறத் திருவுளஞ் சிறப்ப நோக்கி. (௰௪)

கூறரு மறுபா னுன்கான் கோலத்தின் செய்கை யெல்லாம்
வேறுவே றுகக் கந்த வேடிரு நடனங் காட்டி
யூறுதே னருவி கால வுயர்ந்தவான் பரங்குன் றத்தி
னேறுசீர் நடன நாத னெனவொரு பெயர்பெற் றானால். (௰௫)

தேறலி னருவி தூற்றுந் தென்மலை யத்துத் தென்பா
லாறுட னைந்த தான வான்பதி யவையின் கீழ்பால்
வீறுமங் கலப்பொற் சாரல் வீற்றிருந் தகில நல்கு
நாறுபூங் கமல வீட்டு நான்முகன் வணங்கிப் போற்ற. (௰௬)

வேதனுக் குலகை மியாவும் விதித்திடு செயலு ஞானப்
போதனைச் செயலு முள்ளம் பொற்புற வுபதே சித்துக்
காதலிற் சிறந்த வேற்கைக் காங்கேயன் கருணை காட்டித்
திதறும் போகமோட்சத் தியாகியென் றிருந்தான் மன்னோ. ()

பொருநைச்சங் கமத்துத் தென்பாற் பொலன்குவ டுயர்ந்த சந்த
வரையினில் வீர வாகு வழுத்துதற் காக வேண்டிக்
கருணையின் விசுவ ரூபங் காட்டியெஞ் ஞான்று நீங்கா
தருடரும் விசுவ ரூப னென்றரும் பெயர்கொண் டானால். (௰௮)

தெண்டக வனத்துக் கோதா வரிநதித் தென்பாற் சீதை
யொண்டொடி பிரிந்து காமத் தொள்ளழல் பொருது ராமக்
கொண்டனெஞ் சகமுன் றேறக் கோதில்வாக் கியமோர் நான்கு
பண்டுரைத் தருளி ராம னெனப்பெயர் பரித்தாங் குற்றுன். ()

கொண்டுறும் மகேந்தி ரத்திற் குருங்கத்திற் றென்கீழ்ப் பாங்க
ரண்டுதற் கரிய கூர்மச் சிலையிடை யணிகொள் சோதி
மண்டபத் திரண்டு மாத ரூடியும் புணர்ந்தும் வானோர்
கண்டடி வணங்கக் காமக் கடவுளென் றொருபேர் பெற்றான். (௨௰)

வானுபர் சையச் சித்த மல்குகேத் திரத்துச் சித்த
ரூனமில் சனக ராதி யோகியர்க் குண்மை யான
மேனியிர் குளிகா சித்தி பாதுகா சித்தி மிக்க
ஞானமாம் பிராஞ யாம சித்தியு நன்க தாக. (௨௧)

முந்துற வுபதே சித்து முடிவிலா யோகி யோக
சுந்தரர் யோக நாதர் தூயயோ கீசர் வேத
மந்திர வடிவாம் யோக வல்லபென் றறைந்தா னந்த
நந்தனி னுமந் தாங்கிக் குமரவே ணண்ணி னானல். (௨௨)

திரிகூடா சலத்தி சான திக்கினி லிலஞ்சி யான
புரியினிற் கபில ராதி யோகியர் புகழ்ந்து கேட்ப
வரியமுத் தேவர் மூவ ராவது நாமே யென்று
சுருதியின் வரதராசத் தொல்பெயர் சூட்டிக கொண்டான். (௨௩)

விந்தைமால் வரைக்கு மேல்சார் வெய்யவ னெடுந்தேர் தட்டக்
கொந்துலாங் கவடு போக்குங் குமாரமா வனத்தி னுப்ப
ணந்தகோ பாலர் தம்மி னுகிளங் கதிர்போ லுற்ற
முந்துசீ கரப்பேர் கொண்ட மூதுல கேத்துங் கோமான். (௨௪)

கண்ணனுற் பத்தி யான காரண முதலா யன்று
னெண்ணு தற் கரிய தாய வைகுண்ட மெய்துங் காறு
நண்ணிய தினயோர் பத்தி னுடகத் தியற்கை யாகத்
தண்ணளி சிறப்ப வாடிக் காட்டென வணங்கித் தாழ்ந்தான். (௨௫)

கோகுலத் தாயன் வேட்ட குறிப்பெலா நடித்துப் பின்ன
ரோகையிற் கண்ண னுன வுயர்திருக் கோலங் காட்டி
வாகுறு கண்ணன் சாயுச் சியத்தையும் வழங்கிச் செவ்வேள்
சீகரக் கடவு ளென்றோர் திருப்பெயர் சூட்டிக் கொண்டான். (௨௬)

கங்கையின் வடபாற் சிங்கி பேரிபட் டினத்திற் காமர்
தங்கெழிற் சிலையி ராமன் றனைத்தியா னித்து வாழுந்
துங்கமா குகற்கி ராமன் றொல்கதை யனைத்துஞ் சோரா
தங்குநா டகக்கூத் தாக வருளொடு நடித்துக் காட்டி. (௨௭)

சுந்தரச் சிலையி ராமன் றேற்றமுங் காட்டி ஞான
முந்திய பிரமா னந்த முத்தியுங் கொடுத்து வேத
மந்திரக் குகச்சு வாமி யென்னவும் வாய்ந்து பேரா
னந்தநா யகனென் றோது நாமமுங் குமரன் பெற்றான். (உ௮)

திருமுது கிரியி லீசன் றிருமுன்பு பொன்ன னீன்ற
கருதரும் புதல்வ னென கசன்றனக் ககார மூன்று
மருவிய வகாரமூன்று வகைபட வுபதே சித்துக்
குருபர னுபர்ந்த மாயா மயக்குமா ரப்பேர் கொண்டான். (உ௯)

புகலுதற் கரிய மூகாம் புரியினிற் கபில யோகிக்
ககமகிழ் சிறந்து கால னாணையைக் கடக்க வேண்டித்
தகையமந் திரஞ்சொல் வாய்ந்த தந்திரப் பசும்பூ டாதித்
தொகைசொலிச் சகல லோக குருப்பெயர் சூட்டிக் கொண்டான். ()

பரம்பிய தரங்கத் துங்க பத்திரை வடபா லாக
வருந்தவத் துயர்ந்த கோசி கப்பெய ரந்த ணாளன்
றிருந்தற ஞான மெல்லாந் தெளிதர வுணர்த்தி ஞானம்
பொருந்துதே சிகப்பேர் சூட்டிக் கொண்டனன் போர்வே லண்ணல்.

ஆரிடர் கேண்மோ மூவா ருனைன் னகரந் தோறுஞ்
சீருட னிருக்குந் தோற்றஞ் செயந்தியம் பதியிற் சந்தச்
சாரலின் வீர வாகின் றகையபே ரன்புக் காகக்
கூரிலே வேலோன் காட்ட வுளங்கொடு குறிப்பிற் சொற்றான். (௩௨)

சொற்றிடுஞ் செய்கை யெல்லாஞ் சூரரம் பிளந்த வேற்கைக்
கொற்றவ னினிமுன் னாகுங் கோகன கத்துள் ளானுக்
குற்றநற் கற்பத் தெல்லை யும்பர்வான் முனிவர் போற்ற
வற்புட னடிக்கு மென்ன வறிவொருங் குணர்த்தி னானல். (௩௩)

ஒருங்குற வுணர்த்திப் பின்ன ருலகெலாந் தானே யாக
வருங்குகன் சரணச் செந்தா மரைமல ருள்ளத் தேத்தி
யருங்குளி ரிமயச் சார லரித்துவா ரத்தை நீங்கித்
தருங்கதி மூல மான வதரிகாச் சிரமஞ் சார்ந்தான். (௩௪)

அழிவிலாச் சிவன் முத்த னஞ்சுக முனிவ னென்பான்
கழிபெருங் காதல் கூர்ந்து கடவுளர்க் குரிய ஞானம்
பொழிதருங் கருணைச் சிந்து புரத்திய றந்தை செவ்வாய்
வழிமது செவிச்செவ் வாயான் மாந்தின்ன மகிழ்வும் பூத்தான் (௩௫)

உயிரினுக் குயிராங் கந்த னுபயதா மரைப்பொற் பாதம்
பயிலுமெஞ் சகத்த னாகிப் பனிவரைச் சாரற் றாங்கும்
வியனுடை யரித்து வாரந் தன்னில்வீற் றிருந்து வேதத்
தியலுணர் கருத்து மீதூர்ந் தெண்ணின னெண்ணி யாங்கே. (௩௬)

விழிதுயில் வாரைப் போல மிக்குயர் பிராண யாமத்
தழிவிலா யோக முற்றி யைந்தெனும் பிராண மாயைக்
குழுவினை யொன்ற தாகக் கூட்டமிட் டவையை மேலைச்
சுழுமுனை யதனிற் கூட்டித் தொடர்வினை யகற்றுந் தூயோன். (௩௭)

அந்தரத் திடையா றாக வாறுமா முகத்துப் புத்தேள்
சிந்துரன் னகரம் போற்றச் செல்லுழித் திரும்பி நின்று
முந்துமா லரித்து வார முதுபனி யிமயச் சாரல்
புந்தியால் வணங்கி மீண்டும் போயினன் போமா றுற்ற. (௩௮)

வேறு.

பனிதாழ்வரைக் கேதாரமும் பழநான்மறை முழுதுந்
தனிபாடிய சோமீசுரன் றனையும்வலஞ் சூழ்ந்தான்
வினைதீர்தர வருகாசி விசாலாட்சி யெனும்பூங்
கனிதோய்தரும் பெருமானையுங் கண்டான்வினை காணான். (௩௯)

பெரிதாங்கதி வடிவாம்பிர யாகைத்திரு நதியுந்
தரைமீதுய ரடல்கூடிய வடமுந்தழை தென்பாற்
குரியார்க்கருங் கதிகாட்டிய கெயையும்மவ ணுறுசீ
ரரிபாதமுந் தொழுதானகத் தரன்றாளிணை தொழுதான். (௪0)

சகநாத மெனும்புண்ணிய தலஞ்சூழ்ந் தொருமுனிவன்
மகளாகிய கோதாவரி வாணாறு படிந்து
துகடீர்தரு கோகன்னமுந் தொழுதேதிருப் பதியுங்
குகனேரியின் சீருங்கரங் குவித்தானந்து மவித்தான். (௪௧)

கச்சிப்பெரு மானைப்புடை களிக்குஞ்சிறு மானை
யச்சத்தொரு மானைத்தொட ரம்மானெனு மறைவாய்ப்
பச்சைப்பெரு மானைப்புணர் பதுமத்திரு மானை
யிச்சைப்படி தொழுதான்புக ழிறவான்வயின் பிறவான். (௪௨)

சொலகோபல நரசிங்கமத் தூமங்கல கிரிவாழ்
வலநீணர சிங்கப்புகழ் வலநாடு சுவாலைப்
பெலமாகர சிங்கந்தனைப் பிரமாம்பிகை பெட்பார்
பலமாதல மொருமாதவப் படிவத்தினன் பணிந்தான் (௪௩)

திருமுட்டவ ராகத்திரு மாலைத்திக ழிலந்தைத்
தருவைத்தண வாதேயவண் டாழ்வார்க்குயர் வாக்கி
வருமச்சுத னரநாரணன் மலர்த்தாளிணை வணங்கித்
திரைமுத்திள நிலவார்நரு மதையாறுடன் சிறந்த. (௪௪)

தரங்கத்திரை பணிலத்திரை தருதுங்கபத் திரைநீர்
பரம்பத்திரை விரிசோணபத் திரைகண்டகி பவமா
மிரும்புக்கரம் போலாங்கவு சிகைபாறிவை யைந்துங்
கரம்பற்றுற வெடுத்தாகமுங் கவினத்தெளித் தனனால். (௪௫)

நீடுந்தவ நேமிப்பெயர் நெடுமாவன மிருப்பார்
பீடொன்றிய விருதாண்மலர் பிடித்தான்சிர முடித்தான்
கோடும்பிறை முடித்தேமுது குன்றந்தனிற் குன்று
தாடுங்குழ கன்றாளிணை யடைந்தான்றுய ரடையான். (௪௬)

சுருதித்தலை யண்ணாமலை தொழுதான்சுரர் போற்று
மருமைத்திருக் காளத்திசென் றடைந்தானன வரதம்
பரதத்துட னடுஞ்சபை பணிந்தான்பணி மீதே
மருவித்துயில் கோவிந்தனை மதித்தன்பொடு துதித்தான். (௪௭)

முத்தாங்கனி நாவற்கிடை முளைத்தானைக்கை முகிழ்த்தான்
சித்தாமல கத்தாடவித் தெத்தாத்திரே யன்றாண்
மெய்த்தாமரை விரைப்போதினை மேவிப்பணிந் தேதன்
கைத்தாமரை குவித்தான்றிரைக் காவேரியி னிறங்கி. (௪௮)

அரங்கத்தர வணைமேற்றுயி லாழிப்புய விருதாட்
டரங்கைக்கொடு தாழ்ந்தானெறி தரங்கத்திரைப் பொன்னி
வரம்பெற்றதண் ணதிப்பாலிரு கரைவாழ்பதி யனைத்தும்
விரும்பித்துதித் திடபக்கிரி மீதாயனை வியந்தான். (௪௯)

எட்டாகிய வெட்டாடலி னிமைந்தேவினை யாடு
மட்டார்புனற் பிறைதாங்கிய மதுராபுரிக் கரசாங்
கட்டாகிய கடம்பாடவிக் காமாரிநற் சரணந்
தொட்டாடிக்கொண் டாடிக்களி துளங்கத்துதித் தார்த்தான். (௫௰)

பொதியாசலத் தூயர்மாதவன் பூந்தாமரைச் சரணம்
விதிபாலுடன் றுதித்தான்விதி வேதாகமப் பொருநை
நதியாடின னதியின்கரை யிருபாலுள நவைதீர்
பதியாமிரு வோர்வாழ்பதி பலவுந்தொழு தனனால். (௫௧)

பொருநைத்திரு நதிச்சங்கமப் புணரிப்புனன் மூழ்கி
யருமைக்கள கண்டத்தின ராற்றாரரை வணங்கி
மருமைக்குழற் கோதாவரி மகிழ்பூப்பச் சென்றுடித்
திருவுக்கணி மலர்போல்வளர் செயந்திப்பதி புகுந்தான். (௫௨)

மீதாறின னிருந்தேகந்த வெற்புஞ் சிந்துபுரமு
மோதாதுணர் வான்றுளிணை யுளங்கொண்டுடன் றாழ்ந்தான்
றூதான்மயங் காப்பூசுரர் தமைபஞ்சலி செலுத்திக்
கோதாமத நீத்தைந்து குரோசத்தெல்லை சூழ்ந்து. (௫௩)

இரவித்தடங் தேர்தோய்ந்தெழு மிரவிப்பெயர்ச் சந்த
வரையிற்கடி திழிந்தவ்வழி வளர்பூசுரர் வணங்கு
மருமைச்சுரு தியின்வாய்ந்துள வானுவருக் கியமும்
பருவத்துடன் வாங்கித்திரை வதனாரம்பம் படிந்தான். (௫௪)

கங்கைக்கெழு மடங்காங்கடற் கரைக்கந்தபுட் கரிணி
சங்கற்ப விகற்பத்தொடு தாழ்தோன்றவத் தூயர்ங்கா
னங்கற்புக நிறைதீர்த்தமொ ராறுநான்கையும் படிந்தான்
திங்கட்பிள வளவுஞ்சடைச் சிவன்றாள்சிரம் புனைந்தான். (௫௫)

போராளை முகத்தானடிப் போதாகம விதியிற்
பேராதரத் தாராதனைப் பெரும்பூசனை புரிந்தா
னாராவமு தடித்தாமரை யணிநூபுர மணியிற்
சீராலுறு நவவீரர்க டிருத்தாண்மலர் துதித்தான். (௫௬)

அயிராவதந் தருமாதினை யடித்தாமரைப் போதுங்
குயில்வாய்மொழிக் குறக்கோமளக் கொடித்தாமரை யடியுந்
துயின்மாலையு முவணத்தையுஞ் சூழ்தேவர்க டமையுஞ்
செயிர்தீர்மனு விதியான்மல ரிறைத்தேசிரங் குவித்தான். (௫௭)

பொன்னீடு விமானத்துருப் போலாந்திசை முகனை
நன்னேயமுச் சூலச்சகந் நாதச்சிவக் கொழுந்தைத்
தன்னேரிலம் முனிபுங்கவன் றகுசோடச விதியா
லின்னேயருள் வீரென்றல ரிறைத்தான்வினை குறைத்தான். (௫௮)

சூர்மாதவர் முறைசூழ்தரத் துளவோனருண் மடவா
ரிருபாலுற நெடுவேலொடு மிகற்சூர்ப்பகை தணிப்பான்
வருகாரண மாய்முக்குணங் கடந்தானந்த மயமா
முருகேசனை யிமையாதுள மோனத்தொடு பார்த்தான். (ருகூ)

பார்த்தான்பதி னாறும்விதிப் படிபூசனை பரிவிற்
கூர்த்தாறுமு கேசன்பதக் கொழுங்கோகன கம்பூத்
தூர்த்தான்விழிப் புனன்மாமழை சொரிந்தான்மயிற் கூச்சுப்
போர்த்தான்கரங் குவித்தஞ்சலி புரிந்தாவலிற் புகழ்வான். (சூ௰)

## வேறு.

பன்னிரு கரத்தாய் போற்றி பசும்பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணை யாறு முகப்பரம் பொருளே போற்றி
கன்னிய ரிருவர் நீங்காக் கருணைவா ரிதியே போற்றி
யென்னிரு கண்ணே கண்ணு ளிருக்குமா மணியே போற்றி. (சூக)

கருணைமா ருதுள் ளாறுங் கண்கள்பன் னிரண்டி னாலே
யிருவினை களைந்த மேலோர்க் கினியவா னந்த மெல்லாம்
வரன்முறை பெருக்கி யன்னார் மனைமேனுங் கோயிற் றாண்டாத்
திருவிளக் கொளியாம் வைவேற் செயந்தியம் பதியாய் போற்றி. (சூஉ)

அருஞ்சகந் நாதா செம்பொ னாழியங் கடவுள் வேதன்
பொருஞ்சமர் வீர வாகு பொருதலைத் தெறியுந் தெண்ணீர்க்
கருங்கடல் வணங்கு நோன்றாட் கவைமா மயிலாய் தேவி
தருஞ்சிறு குருந்தே வானோர் தமக்கெலாங் குருவே போற்றி. (சூங)

கருதரு ஞான மாய கருத்தினை விளக்கும் வானப்
பரிதியின் கதிரின் மூத்துப் படிவம்போ மளவை யாமூ
விருசுட ரவையு மொன்றா யியற்றியோர் பிரம மாகக்
குருவடி வாகி வந்த குமரனே போற்றி போற்றி. (சூச)

இருமையி னுண்மை மூவா விளமைசேர் ஞானி யோர்தம்
விரிதரு தியான மேவி மேயவிந் திரியத் தாலுந்
தெரிதரற் கரிதா யார்க்குந் தேற்றரு நுட்ப மாகுஞ்
சரவணத் தளிமஞ் சாருஞ் சண்முகத் திறையே போற்றி (சூரு)

காமமே முதல வாறுங் களிதரும் பருவ மாறு
மோமெனும் பொருண்முன் ஞான வுயர்மய கோச மாறுந்
தோமறு சுவைக ளாறுஞ் சூத்திர மாறு மாகத்
தாமொரு வடிவ மான சண்முக சரணம் போற்றி. (௬௬)

விள்ளுதற் கரிய வாறு விதத்தொடு பகல வாகித்
தெள்ளுமுக் குணங்க டந்து வேதியர் சிறப்பி னேத்தக்
கொள்ளுமுத் தேவர் தம்மாற் குவலயம் புரப்பச் செய்து
வள்ளியோர் பங்கில் வைத்த வானவ சரணம் போற்றி. (௬௭)

மறையவர் மகத்தி னீட்டு மாகுதி வழங்கக் கூவு
நிறையுமந் திரமுள் ளோர்ந்து நீடிருங் கதியன் னோர்க்கு
முறைபுரிந் தருளு மாறு முகமுறு கேச பூந்தா
ணறைமலர் கமலப் போது நம்பினேன் போற்றி போற்றி. (௬௮)

குகமெனு நட்ப மாகிக் குகையெனு மிதய வீட்டிற்
குகைவரை யிருப்பார் தங்கள் குகையெனு மிதயப் போதி
லகமகிழ்ந் தன்னம் போல வருளுட னிருக்கு மாறு
முகவிகத் தெனையாட் கொண்ட முளரிப்பூஞ் சரணம் போற்றி. (௬௯)

பரன்சிகை தருமன் சென்னி பதுமத்தன் மேல்வாய் வேள்வி
யுரந்தரு கீழ்வாய் கண்ண னுளமுயர் வருடங் கோச
நிரந்தவச் சுவினிப் புத்தே ணீண்முன்கா லுதர நாப்பண்
புரிந்தவத் திரியோ டாமித் திரன்பின்கால் புனலின் வேந்தே. (௭௰)

வாற்கணு வனலி ரண்டாம் வான்கணு மகவான் மூன்றும்
பாற்கணுப் பிரமர் பதநுப் பகர்தரு நான்காய் நீண்ட
மேற்கணு வபயத் தெய்வ மேயவோர் சிஞ்சு மாரத்
தேற்புறப் புடவி காக்கு மின்னருட் கடம்பா போற்றி. (௭௧)

வேறு.

ஓர்வடிவ மாமிரண்டு வினைக்கவடு மலமூன் றுயர்வேர்வைத் தறமாதி நான்குபழம் பழுத்தே, யார்பூக மஞ்சுசிறு கப்பாகி யாறு மருங் காம முதற்றழைவைத் தெழுகாது தோலா, யேர்புரியட் டகமாய வெண்பூக்கொண் டொன்பா னெனும்வாயிற் கணுவைத்துத் திசைபத்து நிழலாஞ், சீர்பெருகு பலமரங்கள் பயிராக்கி வளர்க்குஞ் சிந்துபுரக் குமராவுன் செஞ்சரணம் போற்றி. (௭௨)

சாற்றியகம் மொளியாகிக் கம்மெனுமிந் திரியந் தமக்கரிதாய்க் ககரென்னுஞ் சுரர்கணத்தின் பதியாய்ப், போற்றுகசம யிலுனைகத்தக் கம்மெனுமின் புருவாய்ப் புகல்கமெனிந் திரியவணி பூண்பவனு மாகி யாற்றலுறு கம்மான வாகாயந் தனக்கு மாதிநடு முடிவாகி யடியேனுக் கிருதா, ளேற்றமுள்ள கதிகாட்டி யெனையாண்ட சுடர்வே லேந்து கரச் சிந்துபுரத் திறைபோற்றி போற்றி. (எங)

கோவான வினனுகிக் கோவானபுனிக் குழுவினையு நடத்தி யந்தக் கோவானதுறக்கக், கோவாகிக் கோவான பசுபதியு மாகிக் குகையான விதயமெனுங் கூடாகி வாக்காங், கோவாலும் விழியான கோவாலும் புவன கோடியிலுண் டானசர மசரயனைத் தினையுங், கோவாகிப் புரந் தளிய னுளக்கமலத் துள்ளே குடியிருக்கு மருக்கடம்பக் குமரனடி போற்றி. (எச)

ஞானவடி வாகிமுது ஞானவிதை யாகு நன்னுதலின் முலைபமுதுக் கின்குழவி யாகி, ஞானமெனும் பாற்கடலி னடுச்சுழிய தாகி ஞான நிழ லாம்பெரியர் நன்கிடமு மாகி, ஞானநிறை கதிபாகி ஞானியர்க்கு மெட்டா ஞானவிரு சத்தியுட னிருந்தெவையுங் காத்து, ஞானமொடு வடநிழலி னிருப்பார்க்கும் விருப்பா ஞானவுரை விரித்தகுரு நாத னடி போற்றி. (எரு)

விரிக்குமிளங் கதிராகி மேவியந்தச் சுடரை விளக்குவிக்கு மவ னுகி விளங்குமிளங் கதிராற், பெருக்குமயன் மாலீசன் போற்படைத் துங் காத்தும் பின்றுடைத்துஞ் சிவனிதயப் பேரிடத்து நிறைவாய், நெருக்கியவுற் பவமுதல வாறுகும் பருவ நிறையு மந்த வடிவகன்று நினைவார்க ளுளத்தே, யிருக்குமிருக் கறியாத பரம்பொருளு மாகி யென்னுவிற் குடியிருக்குங் குமரனடி போற்றி. (எசா)

பக்கமென லாங்கருமை வெண்மையின வாங்கார்ப பாசவிரு நூல்கொண்டு பாயசரடாக்கி, மிக்கவதி லேழுன்று நூற்றறுபத் தைந்தா மேவுதின மணிக்குவைகள் கோணவநனிசெய்த, தக்கவட மொன்றலபல் கோடியுகந் தோறுஞ் சாத்தியிரு சத்தியிரு சாருமுற வைத்தோன், கொக்குவரை யோடுதுணை குருகுவரை பெயரக் கூர் வேற்கை யேந்திய குமாரனடி போற்றி. (எஎ)

திங்களிரண் டாறுபதிதழ்ச் செங்கமலப் போதாந் திகழ்பருவ மாறுசெறி வருடமொரு கொத்தாந், தங்குவரு டக்குலைக எறுபதென நீள்செங் தாமரைத்தண் மலர்மாலை தன்னிலளவிறந்த, கொங்குயிர்த்த பலகோடி புனைந்துமொரு சூரன் குடர்மாலை யுடன்வாகை மணமாலை புனையுந், துங்கநெடுஞ் சுடர்விரித்த விரண்டுமூனைக், கதிர்வேற்சூல மெடுத்தோன்கிரணத் துணைச்சரணம் போற்றி. (எஅ)

தாரவிரு சத்திகளுஞ் சாருமொரு சத்தி தரித்தருமந் திரசத்தி யுற்சாக சத்தி, சீரியநற் பிரபுசத்தி யிம்மூன்றிற் சிறந்து செய்யுமறம் பொருள்காமஞ் செவ்விதுறவுதவு, மாரருளின் வாய்ந்துபதத் தம் புயம்ப ராவு மன்னோர்க்கன் னையர்தந்தை குரவரினன் புற்றே பேரருளின் சீர்காட்டுந் துணைக்கடம்ப மாலைப் பெருமான்ற னிருசர ணப் பிரசமலர் போற்றி. (எகூ)

ஆகமனம் வாக்கென்னு மவைமூன்றின் கரும மாறுகும் வினைய கற்றி யரியபத்தி யோடுஞ், சேகறுமுக் கரணமுற வந்தனைசெய் வோரைத் திருக்கருணை காட்டிமலத் திரயாதி நீக்கிக் கோகனதத் தாளான கோயிலர சளித்துக் கும்போத யற்குமுறை கூறியெனை யாளுங், கேகயப்புள் ளரசேறு சோதிவடி வேலோன் கிரணவரு ணச்சரண விணைப்போது போற்றி. (அ௦)

வேறு.

வருணமாச் சிரம நான்காய் வாழ்பவர் பரவ வன்னோர்
விரிபுநாற் றிசையிற் கீர்த்தி விளக்குவித் தறமுன் னான்கும்
பொருளொரு நான்குஞ் சேரப் புரந்தருள் குமர மூர்த்தி
திருவடித் துணைய தாகுஞ் செழுமலர்க் கமலம் போற்றி. (அக)

பன்னொரிந் திரியற் கெட்டாப் பரமவா னந்த மாகி
மன்னுயிர்ந் தியக்கோ வாகி வான்செப வடத்தி னூலே
துன்னருஞ் சிறப்பு வாய்த்துச் சூழ்ந்தவிந் திரிய நீக்கு
முன்னவ ரருச்சித் தேத்து மூவிரு முகத்தாய் போற்றி. (அஉ)

சிவனுக் கான்மா வாகிச் சிறந்தபூ ரணமென் றுன்னுந்
தாவறு முதியோர் தங்க டியானத்தாற் றன்னைக் காட்டி
மேவர வுலகுக் கெல்லாம் வியன்குரு வாகி யாண்ட
மூவிரு முகத்துப் புந்தேனன் முண்டகத் துணைத்தாள் போற்றி (அங)

மகத்தினி லிரண்டு, நான்கு மற்றவோ ரிரண்டும் பின்னர்த்
தொகுத்தவோ ரைந்தி ரண்டு சூழ்ந்திடு மெழுத்தா யோம
வகத்துமந் திரமு மாகி யாகுதி யனைத்தும் போற்றிப்
புகத்தவாக் கதிமுன் காட்டும் பூங்கடம் பத்தாய் போற்றி. (அச)

பொன்னலர் கமலத் தண்ணல் புவனமே யாதி யாக
மன்னுமெப் புவன வாழ்வும் வறிதெனக் குமர மூர்த்தி
தன்னருட் சலதி மூழ்கத் தாழ்விலாக் கருணை காட்டி
யென்னிடத் தன்பு பூத்த வினையடிக் கமலம் போற்றி. (அரு)

கதியெனு முதிய வீட்டின் கண்ணினே தென்றுள் ளெண்ணித்
துதிதரு முனது கீர்த்தித் தோத்திரம் புராண மான
மதுரவா ரிதியி னீந்த மகிழ்ந்தருள் சுரந்தன் னூர்க
ளிதயதா மரைப்பூங் கோயி லிலங்குநல் விளக்கே போற்றி. (அசு)

உடைந்தவான் கும்பம் போல வுள்ளொடு புறமு மொன்று
யடைந்தவா ரிதியின் மூழ்குங் குடம்புற மகமு மொன்றாய்
மிடைந்தவாரியினுள் ளாகி வெளியுமாய் விளங்கிச் சூர்மாக்
குடைந்தநெட் டிலைவேல்கொண்ட குமரனே போற்றி போற்றி (அஎ)

தத்துவ மிருபத் தஞ்சாச் சாற்றுநர் தமக்கு மந்தத்
தத்துவ மிருபத் தாறாய் நினைத்துளோர் தமக்கு மீளத்
தத்துவ மிருபத் தேழு தானென்பார் தமக்கு மந்தத்
தத்துவத் தியல்பாய் நின்ற சண்முகத் திறையே போற்றி. (அஅ)

செய்யதொம் பதம தான சீடற்குத் திருந்து மேன்மைத்
துய்யதற் பதம தான பிரமத்தைத் தொடர்பாற் காட்டிப்
பையவே யசிய் தென்னும் பதத்தினு லொன்ற தாக்கு
மெய்புணர் குருவாஞ் சோதி வேற்படைக் குமரா போற்றி. (அகூ)

அயனெனப் பிராகை மூழ்கு மையனே யிலங்கைக் கானி
னயனுறு செபத்தின் வாய்ந்த நாரண வடிவே ஞாலத்
துயர்சகந் நாதந் தன்னி லூணருந் தரியே வானப்
புயனிறக் கண்ண னுகித் துவாரகை புரப்பாய் போற்றி. (கூடு)

தாண்டவக் கூத்துத் தில்லை தனிற்பரா சத்தி யோடு
மூண்டிருந் தகில வாழ்க்கை முற்றுறக் கலேபி னீதி
யாண்டிருந் தளப்போய் கூட லணிநகர்ச் சித்த ராகி
வேண்டிய வினைதை மாற்றும் வேனெடும் படையாய் போற்றி. (கூக)

வாரண வாசி யான மன்றத்துக் கன்ன தானக்
காரண வுமைபோற் காக்குங் கடவுளே காஞ்சி தன்னிற்
பூரணக் கம்பை நோற்கும் பூவையா யரங்கந் தன்னி
லூரண வடிவாய்த் துஞ்சு நான்மறைக் கடம்பா போற்றி. (௬௨)

விளம்பிய விவையல் லாது விராட்பெரு வடிவ மாகி
யுளங்களி சிறப்ப யாவு மொன்றென நிறைந்து மாயக்
களங்கறுத் திடுவோ ருள்ளக் கமலப்பூஞ் சுரும்பே வேத
மளந்தறி யாத செவ்வே லையனே போற்றி போற்றி. (௬௩)

சொல்லரு ஞான வீட்டுச் சுடர்விளக் குலக மான
செல்விவான் றிலக மேலாய்ச் சிறந்தவா னந்த சார
மல்லறீர்த் தெனையாட் கொண்ட வற்புத வடிவே யின்றுன்
மெல்லடிப் போது சூட்ட விருப்பமுற் றடைந்தே னென்றான். (௬௪)

அஞ்சலி செலுத்தி வேற்கை யாறுமா முகத்துப் புத்தேள்
செஞ்சிலம் பலம்புந் தண்டைச் சீறடிக் கமல மீது
நெஞ்சகங் குழையச் சென்னி நிலமிசை தாழா நின்ற
வெஞ்சலில் சுகனைக் கையா லெடுத்தனன் குமர மூர்த்தி. (௬௫)

கையினா லெடுத்துக் கந்தன் கடம்பமார் பிறுகப் புல்லித்
துய்யமா தவத்தின் மேலாஞ் சுகமுனி வேத சார
மெய்யினாற் றுதித்த வெல்லாம் விருப்பமிக் கடைந்தோ மென்று
வையமீன் றளித்தா ளீன்ற மைந்தனன் குனாப்ப தானான். (௬௬)

சொற்றருந் தவத்தின் மேலாஞ் சுகமுனி சொற்ற தெல்லாங்
கற்றுவந் துரைப்போர்க் கெல்லாங் கருத்தினி லெண்ணி யாங்கு
வெற்றியம் புயத்து வீர வாகுவே யருள்வா னென்றே
மூற்றொருங் குணர்வோர்க் கெட்டா மூவிரு முகத்தன் சொன்னான். ()

வேறு.

வந்தனையாய் நமைத்துதிக்குஞ் சுகனே கேண்மோ வையகத்துக் குனதுதெரி சனத்தால் வாக்காற், சிந்தனையாற் பரிசத்தா லறமுன் னான்குஞ் சிறந்துதவி யுயர்சிவன் முத்த னாக, முந்துநிலத் திருத்தியெ னக் குமரப் புத்தேண் முகமனெடுத் துரைத்துவிடை கொடுப்பப் போற்றிச், சந்தமறைச் சுகமுனிதன் கரங்கள் கூப்பித் தணவாத விடையென்றே தணந்தான் மாதோ. (௬அ)

குற்றமொரு மூன்றகற்று முனிவீர் கேண்மின் குறைவிறவச் சுகற்குவிடை கொடுத்துச் செவ்வேள், பற்றொடுதன் செயந்திபுரத்

தின்று காறும் பணிந்தவர்க்கெல் லாங்கருணை பாலித் துற்றான், பெற் றமுசைத் தான்மகனைப் பணியும் பூசை பெரிதியற்றுங் கீர்த்தனங்கள் பேசு நும்பா, லுற்றுரைத்த சரித்திரமே கதியுண் டாக்கு முண்மையு ண்மை யென்றவர்பா லுனாத்துப் பின்னும். (௬௯)

உரைத்தகதை வியாதமுனி சுகற்குச் சொன்ன துங்களிடத் துரைத்தன னியா னுமைசேய் காதற், சரித்தி ரத்தைக் கருத்தினு டன் கேட்கின் றோர்க்குத் தருமமுத லொருநான்கு மரபிற் சாரும் விரித்தபுரா ணத்தியலை யெழுதித் தானம் விதிமரபிற் கொடுப்பவர் தாம் வேலை ஞால, மருத்தியுடன் கொடுத்தபல னடைவார் வாங்கு மன்னவரு மன்னகதி யடைவர் மாதோ. (௱)

புத்தகத்தைக் குமரன்வடி வாகப் பூசை புரிந்தியற்றும் பெரி யோர்க்கும் போர்வேற் செங்கை, யத்தனரு டருமுகமா யிருந்தன் னருக் கறமுதனுங் கையுமளிப்ப னவன்பு ராண, வித்தகப்புத் தகமி ருக்கு மில்லந் தோறும் விரைக்கமலத் திருமடந்தை கமலப்போதுங் கைத்தலத்தில் வளையாழி தாங்குங் கண்ணன் கதிர்மணிமார் பும்போ லக் களிக்கு மாதோ. (௱௧)

சிந்துபுர மான்மியத்தைத் தினஞ்சொல் வோர்கள் சிறந்தநிதி மக்களுட னெடிது வாழ்வார், முந்துகதை சந்நிதியிற் குருமுன் னாக முற்றவந்தி யாயமொன்று கேட்போ ரெல்லாஞ், சுந்தரவாம் புரவி மகக் கதியிற் சார்வார் தூயகதை சந்நிதியின் முக்காற்கேட்போ, ரெந் தமல டானுலு மகப்பெற் றுய்ந்தே யிருநிலத்தி லளகையர்கோ னென்ன வாழ்வார். (௱௨)

நாலாறு குகதீர்த்தந் தன்னை வேத நாடுசகந் நாதர்தமைத் திருமா றன்னை, மேலான குருபரனை வீரர் தம்மை மின்னுரைத் தோகைத னைச் செவ்வே றன்னைப், பாலான நெடுஞ்சிகரந் தன்னைச் சந்தப் பருப் பதத்தைத் திரிசுதந்தி ரத்தர் தம்மை, நூலாரு முனிவீர்கா ளாண்டு தோறுஞ் சென்றேத்து மெனச்சூத னுவன்றான் மாதோ. (௱௩)

மயில்வாழி தகர்வாழி சேவல் வாழி மனுவனைய திரிசுதந்தி ரத் தர் வாழி, குயில்வாழு மொழித்தெய்வ யானை வாழி குறவர்குலக் கொடிவாழி கொடுஞ்சூர் மாய்த்த, வயில்வாழி செயந்திபுரத் துற்றோர் வாழி யாறுமுகப் பெருமான்றன் கருணை வாழி, பயில்வான்மை முகில் வாழி புராணங் கேட்போர் படிப்போர்கள் கிளைகளெலாம் வாழி மாதோ. (௱௪)

சுகப்பிரமரிஷி பூசைபண்ணினவத்தியாயம் முற்றிற்று.

ஆ அத்தியாயம் ௰அ க்கு. திருவிருத்தம். அ௬அ.

காப்புத்திருவிருத்தம் க. ஆகத்திருவிருத்தம். அ௬௯.

திருச்செந்தூர்த் தலபுராணம்

முற்றிற்று.

பரமபதிதுணை.

# திருச்செந்தூர்த்தலபுராணம்

# அரும்பதவுரை.

## காப்பு,

ஊற்று-ஊற்றுகின்ற மதநீர். எடுத்து-உண்டு. ஓலிடும் முழங்கும். சாரல்-மலைப்பக்கங்கள். வாய் ஏற்று-இடங்களாகக்கொண்டு. உகைக்கும் (தமது மயில்வாகனத்தை) நடாத்தும். மூந்திய-முன்னுதித்த. மாறு-பகை. மூம்மதத்துக் களியானை யெனக் கூட்டுக.

## கடவுள் வாழ்த்து.

1. இருப்பது - நிலையுள்ளதாகிய. அ-அந்த. இயலபு - இயற்கைவடிவத்தை. என்று-பொருந்தி. ஆலம்-விடத்தை. சருப்பதம் (இருபெயரொட்டு) உணவு-சிலை. வில்-என்று என்னும் எச்சம் ஆக்கியென்பத னோடு முடிந்தது.

2. சங்கம்-சங்கவளையலின் றுண்டம். மாடு-பக்கம். பீடு-பெருமை. மதியின்-சந்திரனைப்போல.

3. இணங்குன்ற - (கற்றவரவைக்குப்) பொருந்த. விழு-சிறப்பு. வேதம்-வேதத்தினிடத்து. பழுத்த - (பழமாகப்) பழுத்த.

4. முரன்று-ஒலித்து, பாடி. உழக்க-மிதிக்க. விண்டு-வாய்பிளந்து. உடைந்து-கட்டுவிட்டு.

5. அரம்-பாதாளம் அடங்கலும்-எங்கும். தழை-தளிர்கள். செல்ல - வியாபிக்க. மூலம்-வேர். மேலாய்-மேற்போக. உத்தரமடங்கலும் - ஊழித்தீயையும். பொருவு- ஒத்த. சூர்மா-சூரனாகியமரமரத்தை. உத்தரமடங்கல் - இருபெயரொட்டு.

6. கிஞ்சுகம் (ஆகுபெயர்) முருக்கமலர். தரு-நிகர்த்த. கலைக்கிள்ளை-சரசுவதி. கம் - தலை. கார்நிறக்கஞ்சுகன்-கரியநிறச் சட்டையணிந்தவைரவக்கடவுள். கிள்ளியென்பது - மிக்குறுமென்பதனோடு முடிந்தது. மிக்குறல் - (யாரினும்) மேற்பட்டிருத்தல்.

7. வேள்வி-யாகம். வீட்டிய-வெட்டித்தள்ளிய. மதலை-வீரபத்திரர்.

8. செகளபம் - செஞ் சந்தனம். குரை-முழங்குகின்ற.

9. வடுத்த-வடுப்பட்ட செம்மணி-சிவந்தமாணிக்கம்; அது: பார்வதிதிருவடிச்சிலம்பிலுள்ளது.

10 அறுகால்-வண்டு. முகை - அருமபு. குறுகார்-பகைவர். கட்டழித்து-நிலைகுலைத்து.

11. புணை - தெப்பம், தோணி. சொல்-(ஆகுபெயர்) தேவாரப்பாக்கள். அவ்-அவைகள். இன்-இனிய.

12. அரவம்-ஒலி. சிவப்பூர - சிவப்பு நிறம்பொருந்த. பரவைக்கு-பரவையாரிடத்து. தூது-தூதாகப்போம்படி. பணித்த - கற்பித்த. கவிராசன் கவிசிரேட்டர், சுந்தரமூர்த்தி நாயனார்.

13. கொள்ளை-மிகுதி. நாற் கவி-ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம் என்பவைகள். வாரிசம்-தாமரை. பிரசம்-தேன்.

14. ஒருதனி-(இருபெயரொட்டு) ஒப்பில்லாத. கதிர்நிறம் கவின-சூரியனதுநிறம் (போலும்) நிறம் விளங்க. குரு-நிறம். மௌலி-முடி. வில் இமைப்ப-ஒளியைத்தர. முறுவல்-பல். முத்து அரும்ப - முத்துக்கள் (போலத்) தோன்ற. மரு-வாசனை. கழுநீர்-செங்கழு நீர்மலர்.

## பதிகம்.

1. நவை-குற்றம். ஒழுக-வெளிப்பட. கங்கை நதி மூலம்-கங்கா நதியின் அடிப்பக்கம். சூழா-(செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம்) ஆலோசித்து.

2. முறையினால்-கிரமமாக. மறை-வேதம். வைபவம்-மான்மியம். வை-கூர்மை. நிறைவின் - (எல்லாக்குணங்களும்) நிறைவோடு.

3. பரம்பும்-நிறையும். இறை-குமாரக்கடவுள். சிந்துபுரம் - திருச்செந்தூர்.

4. செயந்திபுரம் - திருச்செந்தூர்.

5. உதாம்-வயிறு. இருத்தி-இருப்பாய். மறையின் வாய்ப்ப-வேதவிதிப்படி பொருந்த.

6. மானிடம்-மனிதப்பிறவி. எயினர்-வேடர். விந்தை வரை-விந்தமலை.

7. தரு-(வேங்கை) மரம். குறைமின்-வெட்டுங்கள்.

8. தாருவுருக்காந்து - மரவடிவமடைந்து. துணைக்குஞ்சரம் - சகோதராகிய யானைமுக விநாயகர். வாரணத்தினுருவாகி (விநாயகர்) யானை வடிவெடுத்து.

9. வாஞ்சை-ஆசை. வேட்டு-விவாகஞ்செய்து. பெட்பு-விருப்பம். நறவமலர்த்தேர்-தேனிறைந்த புட்ப விமானம். யானைமகள் - தெய்வயானையம்மை.

10. திரிசுந்திரத்தர் - முக்காணிப்பிராமணர். விபூதி-சொரூபம்.

11. வயம்-வெற்றி. வாய்ப்பு - சிறப்பு. உதித்தது-தோன்றியது. புலம்-அறிவு. புயல்போன்மேனி - மேகம் போலுந் திருமேனியுடைய திருமால். மேனி - வினைமுதற் பொருளுணர்த்தும் இ, விகுதி புணர்ந்து குன்றிய பெயர். சுயம்பிரகாசக் கடவுள் - தானே பிரகாசிக்குங் கடவுள் (ஆகிய).

12. பகடு-யானை.

13. உடற்றும்-வருத்தும். மாயைத்தொடர் - மாயாமலங்களின் றொடர்ச்சி. அற்புதம்-ஆச்சரியம்.

14 ஒவ்வாது-சமானமில்லாமல். (ஓவாது என்றும் பாடம்) உண்டுபடுத்துய - உண்டுபண்ணிய. எண்தகைய-மதிக்குந் தகுதியை யுடைய.

15. செவ்வல் - திருநெல்வேலிக்குச் சமீபமாயுள்ள ஒரு கிராமம்.

16. இசை-சொல். வாணிபான்-சரசுவதி யருளுடையவன்.

17. அளறு-சேறு. ஆம்-சாரியை. கனி-கனிந்த. புலவர்-தேவர்.



## 1. நைமிசாரண்யத்திற் சூதமுனி சேன்ற அத்தியாயம்.

1. சாதிசேய் - விசுவாமித்திரன். என்றிருந்தவமுனிவன்-என்ற பெரிய தவத்தை யுடைய முனிவன். என்ற என்பதில் அகரந் தொகுத்தல்.

2. சீர்வசு - ஸ்ரீவசு. வித்துவான் - ஒரு முனிவன். சுசி - அக்கினி.

3. மாணக்கர் - (மேற்செய்யுள்களிற் குறிக்கப்பட்டாரது) சீடர். பன்னியர் - அவ்விருடிகளுடையபத்தினிமார்கள். தெக்கணாக்கினிமுதலமுத்தீகள்-(காந்தாங்கொண்ட) தெக்கணாக்கினி, ஆகவனீயம், காருகபத்தியமுதலியமூன்று நெருப்புக்கள். அடைந்தார்-(நைமிசாரணியத்தில்) வந்தார்கள். கிழவர் - உரியவர்.

4. முகமன்-உபசாரவார்த்தை. வாலிய-பரிசுத்தமாகிய. அருக்கியமுதல-அருக்கியம், பாத்தியம், ஆசமனம்; இவை: முனிவர்களுக்குச் செய்யு மரியாதை. எல்லை - சமயம்.

5. கவின-பிரகாசிக்க. பண்-சுரம், இசை. பராசரன்மதலே-வியாசமுனிவர் சோம் - குற்றம். விண்டுவின் வடிவாய் வந்தவன் - திருமாலதிசமாயுள்ள (அவ்) வியாசமுனிவர்.

6. தொடர்பு - (நல்வினை) சம்பந்தத்தால்.

7. மாண்பியர்பரித்த - மகத்துவங் தங்கிய. தரித்துளோம் - (மனத்தில்) தாங்கிக்கொண்டிருக்கின்றோம்

8. சொற்ற - சொல்லிய. சூர்-அசுரர். சேயோன் - குமாரக் கடவுள். பொற்றை - சிறுமலே.

9. மும்மலக் குறும்பு - ஆணவம், மாயை, கன்மங்களின் சேட்டை. எறி-முறிக்கின்ற. கரங்குவித்தனன் - கைகூப்பியவனுகி. துணிந்தான்-(அம்முனிவ ரெண்ணப்படி விரித்துச்சொல்லத்) தொடங்கினன்.

10. பொலவன்-பொன். புழைக்கையான்-விநாயகக்கடவுள். கபோலஆடி-கன்னமாகிய கண்ணுடி. உயிர்ப்புவீங்கும் - பெருமூச்செறியும்.

11. தோகை-பீலி, மயிற்றோகை. சூட்டின் மணிக்கொடி-தலேப்பூவாகிய இரத்நச்சூலசம் - கோழிக்கொடி. துண்டம் - மூக்கு. உடன் விளக்கும் - ஒன்ருகப் பிரகாசிக்கச்செய்யும். மரகதப்பொன் நாகம் - மரகதமணியாலாகியமலே. விசாகன்-முருகக்கடவுள்.

12. தொல் - பழைய. மேதகும் - மேன்மைதங்கிய. கவற்சி - கவலேயும். வேறு - பிறமனவிகாரங்களும். புலப்பட - தெளிய.

## ௨. வியாதர் சுகருக் குபதேசித்த அத்தியாயம்.

1. மரகதத் தனித்தாவரம் - மரகதமணிபோலும் ஒப்பற்ற திருமேனி. வெரிந்-முதுகு. இருவினைத் தொடர்பு-நல்வினை தீவினைகளின் சம்பந்தம். கங்கைமூலம் - கங்காநதியின் அடிவாரம்.

2. தலேயயங்கிய - (ஒருகாலத்திலே) தலேதடுமாறிய. வகுத்திட்டா-வகுத்து. நெறி - முறை. ஆய் - (பிறவினை விகுதி தொக்கது) ஆக்கி. திறத்தி - [illegible] திறத்தி. காண்பான் - (எல்லாவற்றையுந் தன்மனத்தின்கட்) காணுமவ்வியாதமுனிவன்.

3. அன்னவன் - அத்தன்மையனுன வியாதமுனிவன். பொருநை-தாம்பிரவன்னி நதி.

4. சீர்மை - சிறப்பு. மதலேக்கு-(உமது) புத்திரனுகிய அடியேனுக்கு; இது: இடவழுவமைதி. செப்புதி - (விரித்துச்) சொல்வாய்.

5. கற்றை - இரட்சி. சோர்பு - தளர்வு.

6. கடா-எருமைக்கடாவாகனம். நடுவன்-யமன். மானசோத்திரம்-யமனுடைய பட்டணம். கதவு-(அந்தகாரத்திற்புகாமற் றடுக்குங்) கதவு. எட்டுயோகத்தின்-எண்வகையோகத்தினுலே. மதிப்பார்-தியானிப்பார். சுடர்-ஒளி. அமரர்சேனை காவலன்-முருகக்கடவுள்.

7. உடைந்த - (விகாரம்) கரைகளையுடைத்த. மூதாரம்பதீர்த்தம்-இருபத்துநான்கு தீர்த்தங்களுளொன்று; அஃது சந்நிதிக்கு நேரிலுள்ளசமுத்திர தீர்த்தம். வதனாரம்பமென்பதும்இது. படிந்து-மூழ்கி. அன்னுர் - தேவர்முதலாயினுர். அருள்புரிவார் - அத்தேவர்முதலாயினுர்க்குக் கிருபைசெய்வார். இதற்கு, எழுவாய் பதம்பணிவார்.

8. வைகல்-தினம். ஆன்ற-நிறைந்த. சோடசம்-பதினுறு. விதி-உபசாரம். கான்ற - கக்கிய. என்று - பொருந்தி.

9. பரியின் வேள்வி-அசுவமேதம். உஞற்றும்-செய்யும். உலவா-கெடாத. கதித்தொகை - பதவிக் கூட்டம்.

10. கதி-பயன். அமையும் - கிடைக்கும். பொங்கு-மிகுந்த எழுத்தாறு-நமகுமாராய என்னுமந்திரம்; இதைச் சரவணபவ எனச்சிலர் கூறுவர். திருமுருகாற்றுப்படையில், ஆறெழுத்தடக்கிய என்பதற்கு-நமகுமாராய என்று ஆசிரியர் நச்சினார்க்கினியார் கூறியதுங் காண்க.

11. சொழிக்கும்-தெரிந்து விளக்கும். சேவை-தரிசனம்.

12. வியன்-பெருமை. அமைத்த-பெற்ற. நமைஒதார் - நம்போன்ற இருடிகளை (ஒருபொருளாக மதித்துப்) பேசார்.

13. ஈறு-மாணம். சருகு ஆரினும்-இலைகளைப் புசித்தாலும். பசுவாம்-விலங்கின் பிறப்பாம்.

14. பரிக்கும்-தாங்கும், காக்கும். சுரர் - தேவர். பெரும்தம் - உயர்ச்சி. கதி-மோக்ஷம்.

15. ஆசரவு - அன்பு. நுட்பம் - நுணுக்கம். சோராது - சோர்வில்லாது. உரைக்கேன் - சொல்லுவேன். துணிவாக-நிச்சயமாக. உம்-அசை.

16 நான்மறை கரைகண் டுயர் கருத்தாய் என்றதற்சேற்ப, வதனூரம் பதீர்த்தமும் படிந்து கரை யேறாதியென்றூர்.

17. கனைத்து ஒலிடும் - (இருபெயரொட்டு) முழங்கும். கண்டான்-செய்தவியாதமுனிவன். விண்டான்-சொல்லினான்.

## 3. செயந்திபுர வைபவமுரைத்த அத்தியாயம்.

1. ஆங்காரம் - அகங்காரம். ஆதி-மூலம். ஓங்காரம்-பிரணவம். ஐம்புலனும்-பஞ்சேந்திரியங்களும். ஒன்றாய்-ஒருவழிப்பட்டு. பரபோகத்துணமை-பரமானந்தத்தின் மெய்ம்மை:

2, சிரபுரம் - தலைநகரம். முந்து-முற்பட்ட. முதியோர் - பெரியோர். அலகு-எண். கதி-பயன். போகம் - அநுபவிக்கும் பொருள்கள்.

3. களித்த - மகிழ்ந்த. கொல்லாபுரி - செபஞ்செய்யு மிடங்களிதென்று. கரநியாசம்-கைவிரலாற் றொட்டுச் செய்யுங் கிரியை. உணவு-தேவருண்டி. ஆகுதியில்-யாகத்தில் பூரணாகுதியினிடத்து. ஆக்கி (தேவர்கட்கு) உண்டுபெண்ணி. சையம் - ஸ்ரீசயிலம். தெத்தாதிரேயன் - ஒருமுனி சிரேட்டன்.

4. கருது - (யாவரும்) மதிக்கப்படுகின்ற. நவநாதசித்தர் - ஒன்பது வகைச் சித்தர்.

5. அருத்தி-ஆசை. இயமம்-மெய்மை, கொல்லாமை முதலியவை. நியமம்-சந்தியாவந்தன முதலியவை. பிராணயாமம் - வாயுவையடக்கி மந்திரஞ் செய்தல். சிரவணம - மெய்ப் பொருளைச் சற்குருவினிடங்கேட்டல். மனனம் - (அங்ஙனங் கேட்டவற்றை) மனத்திற்பதித்தல். நிருத்தியாசனம்-(பதித்தவற்றை) ஆராய்ச்சி செய்தல். தியானம்-ஈசுரனை நினைத்தல். சமாதி-(தியான முதிர்ச்சியினால் பூரணமாக ஈசுரனை) மனத்திற் பதித்தல்; நிட்டைகூடல். இவற்றை எண்வகையோகமென்பர். அணிமா-மிகச்சிறுத்தல். மகிமா-மிகப்பெருத்தல். லகிமா- மிக நுட்பமாதல். கரிமா - மிகத் திட்பமாதல். ஈசத்துவம்-சகலமும் ஆளும்வன்மையாதல். வசித்துவம்-எல்லாந் தன் வயமுடமை. பிராத்தி-வேண்டியவற்றையடைதல். பிராகாமியம்- எல்லா இடங்களிலுந் தடையின்றிச் செல்லுதல்; இவற்றை அட்டமாசித்தி யென்பர்.

6. நாற்றிசையாம் எண்டிசை - நான்குபெருந்திசையும் அதனுளடங்கிய நான்கு கோணத் திசையும்., இவற்றைத் திக்கு, விதிக்கு என்பர்.

7. அஞ்ஞானம்-அழகிய ஞானம். வேர்-மூலம். சூழந்து-சுற்றி, கல்லும்-தோண்டுகின்ற. காமமூன்றாறு - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம். மாறாய் - விரோதமாகி. சிதையும்-அழியும்.

8. மோக ஆகாமியம் - மயக்கத்தைச் செய்யும் ஆகாமியவினை. சஞ்சிதக்கட்டு - (இருபெயரொட்டு) கட்டுப்பட்டு நிற்கின்றவினை. தேக்கும்-நிரப்பும். சிறந்தார்க்கு-சிறப்பாகத் தெளிந்தவர்க்கு. ஆக்கம்-செல்வம். இடத்தினிகழ் பொருளின் றொழிலை யிடத்தின்மேல் வைத்துத் தாக்கும் நீக்குமென வுபசரித்துக் கூறினார்.

9. திரிவேணி சங்கம்-கங்கையும், சாசுவதியும், யமுனையுங் கூடுமிடம். உழைத்த நல்வினை - (மேற்சொல்லப்பட்ட இடங்களில் மூழ்குதலால்) பெறப்பட்ட புண்ணியம். குழைத்த -(விகாரம்) நெகிழ்ந்த. அக்கதிக்கு-அப்பயனுக்கு. எதிர்கூறி-ஒப்பாகச் சொல்லி. அழைக்க-வருவிக்க.

10. வாசபேயம் - யாகத்திலொன்று. கதியவை - பயன்களை. வயின் - இடம். நித்தமும்-நாள்தோறும்.

11. முன்னுவாமதி-பூருவ பக்கத்துப் பிறைச்சந்திரன். பயந்த - (தாம்) பெற்ற. தீவினை - பாவம். பின்னுவாமதி- அபரபக்கத்துச் சந்திரன். கயந்தரும் - அழிவையடையும். யாதெனை-(இங்ஙனமாதற்குக் காரணம) எது வென்று. கொல் ஆம் - அசைகள்.

12. காழ் அகம் - கடின சித்தம். பீழை- துன்பம். பெற்றமாழையொண்கணார். (தாம) ஈன்ற புத்திரிகள். ஊழினால்பெற்ற-முறையினாலே. (பிறர்) அடைந்த.

13. பாலர் வேட்டஅப்பன்னியர்-(தம்) புத்திரர்மணஞ் செய்த அந்தப் பத்தினிகள். பண்பு-(பாவக்) குணம்.

14. பனி - பனியினது. குறும்பு-(குளிர்ச்சியாகிய) சேட்டை.

15. ஓமம்-யாகம். தமம்-புறஇந்திரிய அடக்கம். சமம் - அகஇந்திரிய அடக்கம். கதி-பயன்.

16. நல்குரவால் - தரித்திரத்தால். அத்தியாசனம் அருந்தல்-(கிடைத்த இடத்து) மிக்கபோசனத்தையுண்ணுதல். அதிபானம் - மிகக்குடித்தல். குரவன் மனையார்பவம்-ஆசாரியன்மனைவியை யநுபவித்தபாவம்.

17. எறிநீர்-(அலையை) வீசுகின்ற சலம். தடம்-பெருமை.

18. மலங்கு-மயங்குகின்ற. வாட்டிறலான்-வாளாயுதத்தைக் கொண்ட வெற்றியை யுடைய வீரவாகு தேவர். குலங்களோடு-கூட்டத்தாருடன். வேளன்பரில் - தூதர்களோடு. குழைவார் - (மனங்) குழைந்திருப்பார்.

19. மார்க்கம்-வழி. தவறுற - தப்பிப்போக. மல்லல்-வளம். (துணிவுபற்றி) எய்துவவெய்துவ வெனறார்.

20. கமலை - திருவாரூர். அனலக்கிரி-அருணாசலம். புருடோத்தமாநகரம் — துவாரகை. ஒன்பதினும் - ஒன்பது நகரத்தினுள்ளும்.

21. குரோசம் - கூப்பிடுதூரம். அவ்வயின்-அந்தச் செயந்திநகரத்தி னிடமானது. அடைந்து-சார்ந்து. சுருங்கு (காலாந்தரத்தில்)சுருங்கிய. கூபமும்-கிணறும். வான்-பெருமையோடு. சுருங்காதிரங்கும் - மிகமுழங்கும். ஆம-ஆகிய. புண்ணிய தீர்த்தத்தின் - புண்ணிய தீர்த்தத்தினாலும். இறையின்-மூர்த்தியினாலும். பாயபும் (எங்கும்) பிரசித்தியுடைத்தாம். அங்கர்-அந்தச் செயந்திபுரம். எனவே தலம், தீர்த்தம், மூர்த்தியென்னு மூன்று சிறப்புள்ளமை காண்க.

22. அவை-20ம் பாடலிற் கூறியனென்பது தலம். அடைந்த - அடைந்துள்ளன. சவ உடம்பு விட்டொழிகுநர் - (செயந்தி நகரில்) தவத்தினையுடைய சரீரத்தைவிட்டிறப்பவர்கள்.

23. சிராத்தம் - சிரதையோடு செய்யப்பட்ட கிரியை. முன்புணர்த்திய-முதன்மையாகச்சொல்லப்பட்ட. கயை - கங்காநதியிற் பிண்டமிடும் விசேடமாகிய இடம். முக்கியம் - விசேடம். சதம்-நூறு.

24. கடவுளர் - தேவர். கந்தபுட்கரிணி-ஒரு தீர்த்தம். அலம்பு - ஒலிக்கின்ற. இன் - தவிர்வறிவந்த சாரியை. தென்புலத்தோர் - பிதிர் தேவதைகள். இடிகொண்மா-இடித்துக்கொள்ளப்பட்டமா.

25. இல்லையென்றிடில்-கூடாதாயின். வல்லபம்-வல்லமை; சத்தி. ஆவினம்-பசுக்கூட்டம். போடுக-போகடலென்பது போடலென மருவிப் போடுக என்றாயிற்று. புணர்ப்பு-செய்கை. வேதாவுலகு-சத்தியலோகம்.

26. அவர்குலம்-கந்தபுட்கரிணியிற் பிண்டமிடுவோர்குலம். அநாதமரணம்-துணையின்றித் தனியேயிறந்துகிடக்குஞ்சாவு. அனலின்றி - (அவருடல் சுடுதற்கு) அக்கினியில்லாமல். மாயினும்-கெட்டாலும்.

27. சிந்து தீர்த்தம் - வதனாரம்ப தீர்த்தம். எள்நீர் - எள்ளும் சலமும். உபவசிக்கில் -பட்டினிவிரதமிருந்தால். அந்தமுற்றவா-(மேலேசொல்லியபடி) மரணமடைந்தவர்.

28. இதுமுதல்-30வரை குளகம். நித்தநித்தமும - தினந்தோறும். மூழ்கார், பரவார், நினையார். இம்மூன்றும் எச்சப்பொருள்கள். நினையா-நினைத்து.

29. கமை - பொறுமை. திலம் - எள். நீர்க்கடன் கழித்தால் - நீர்க்கடனைச்செய்தால்.

30. காமர்-அழகு. பூமினார்-சாகுவதி இலக்குமி. நாமம் - பெருமை.

31. இதுமுதல்36வரை ஒருமுடிபு நிரயம்-நரகம். உருவம்-இடி. செழித்து-முழங்கி. உள் உடைந்து - மனமவருந்தி. கரதலம்புடைத்து - கையோடு கைதட்டி. முறுவல் - பற்கள். கனிய-வெளிப்பட - அவர் - (மேற்கூறிய) நரகத்துள்ளவர். வினவும் - கேட்பன.

32. மோனம்-மௌனம். ஈனம்-குற்றம். சனனம்-பிறவி.

33. பரிசிக்க - தீண்ட. சொன்னுள்-பூருவகாலம். இயற்றுநர் -செய்தவர்.

35. பாதகண்டம் - பாதனென்னும் அரசனு லாளப்பட்ட இப்பூமி. கதிக்கே-மோக்ஷத்திற்காகவே. பரித்த-அமைத்த.

36. வான்உரைக்க - தேவர்களும் புகழ. (வான்-ஆகுபெயர்)விரி - (புகழ்) விரிந்த. துவாரகை - துவாரகை (மூலமாக )முத்தியையளிக்கிடும்-மோக்ஷத்தைக் கொடுத்தருளும். வேதப்பரிதி-(ஆகுபெயர்) மறை வடிவாகிய ஒளி. மேற்கூறிய எழு தலங்கட்குஞ் சீவகலை கொடுப்பவர் திருச் செந்தூர்க்குமாரக்கடவுள்என்று சமஸ்கிருதபுராணத்துட் கூறலாயினனம்பொருள் கூறப்பட்டது.

37. பாவகாரியர் - பாவமே தொழிலாகக் கொண்டவர் என - என்று சொல்ல. வதிந்தீர்-தங்கினீர்.

38. கன்றும்-வருந்தும. இகந்து-நீங்கி. மேற்கதிக்கே-மேலாகிய மோக்ஷத்தினிடத்தே.

39. மேதகும்-மேன்மைதங்கிய.

40. நூறுபருவம் - நூறுவருடம். மாகப்புனல்-மாசிமாதத்துநீர்; மாகஸ்நானம். காசியில்-காசிக் கங்கையின் கண். படியும் - மூழ்கும். அந்தக்கதி-அந்த மோக்ஷத்தை.

41. ஈறு-மரணம். பிரயாகை-கங்கையிலே விசேடமாகிய ஓரிடம். மாகம் ஆடுநர் - மாகஸ்நானஞ் செய்பவர். நினைத்து-படித்து.

42. முன்னுவோர் (தம்மை) நினைப்போர் முன்னுக-எதிரே. மன்னுவோர்-இருப்போர். சென்னி-தலை. காயத்திரிச்செல்வி-காயத்திரி மந்திர தேவதை. ஆம் என்னும் பயனிலைவருவித்துக் கொள்க.

43. எழுத்து (என்னுடைய) அக்ஷரங்கள். குமரேச - குமாரக் கடவுளே. முன் (உமக்கு) எதிரே. அழுத்து - மூழ்கச்செய்யும். அயலின்-பக்கத்தில். விழுத்தகும் - சிறப்புத்தங்கிய. வேறுபெயர்கொண்டு. (வெவ்) வேறு பெயர்களைத் தாங்கி.

44. வாக்கெடுத்து - வாக்காலுயர்த்தி. மன்ற நிற்குதியென்ன - (முருகக்கடவுள்) நிலைபேறுற நிற்பாயென்றருளிச் செய்ய. மறைமாதா - (காயத்திரி) மந்திர மாகியதாய். நின்றுள்- அவ்வாறு நிற்கச் செய்தாள். நின்றுளென்பதிற் பிறவினைப் பொருள் தரும், பி. விகுதிதொக்கது. 43, 44 இவ்விரண்டுமொரு தொடர்.

45. கந்தன்முன் - குமாரக் கடவுளுக்கெதிரே. உகந்த (அவர்) மகிழப்பட்ட தீர்த்தங்களாவன. களிற்றிளம் பிடியருள் தீர்த்தம்-தெய்வயானை தீர்த்தம். கொந்து-கொத்து இந்திரபவனிக்கு-தேவேந்திரன் போலுலாவருதற்கு.

46. வெள்ளைவாரணத்துத் தீர்த்தம் - அயிராவத தீர்த்தம். முச்சூலக்காரி தீர்த்தம் - முத்தலைச் சூலமேந்திய வயிரவ தீர்த்தம். குறக்கொடிதீர்த்தம்-வள்ளியம்மை தீர்த்தம். பாயொளிபரந்த-பரவிய காந்தி நிறைந்த.

47. பவநாசன தீர்த்தம்-பாவநாச தீர்த்தம். கம்பலை - முழக்கம். சேது-சேது தீர்த்தம். நனி-மிக, பத்தெனுங் கங்கை-தசகங்கை தீர்த்தம்.

48. அவண்-அவ்விடத்து. தொடர்பு-சம்பந்தம். பான்மை-தன்மை. பரிவு-அன்பு. சொற்றவா-சொன்னவிதம்

49. மரகத மயூரம்-மாகத மணிபோலும்பசியநிறமுள்ளமயில். பரிதி- சூரியனைப் போலப் பிரகாசிக்கின்ற.

50. திறம்பினோர் - தவறினோர். மூவர் - திரிமூர்த்திகள். நெறியில் - முறையோடு.

51 எவ்வம் - துன்பம். சவுரி, கங்கை, யமுனை, காவிரி, காதோயை, கவுசிகை, வித்தை, இவ்வனைத்தும் ஒவ்வொரு நதிகள். கவ்வையோடிரங்கும்-மிகமுழங்கும். இதில். ஒடு -ஒடு என்பதின் விகாரம். ஒடு என்பது - இசைநிறைச் சொல்.

52. குமரி, தோகை, வந்தனை தூதபாவை, வேதம், சுருதி, துங்கபத்திரை, விபாசை, யூவை, இவையும் நதிகள்.

53. வாலுவாகினி, விவாதை, குமரி, தோகை, வந்தனை, வைகை, தேவகி, கன்னவேணி, கோதை, கண்டகை, இவையும் நதிகள். கோலிய - வளைந்த.

54. மரபாய் - கிரமமாகி.

55. திருமதை, தெசானை, திருவிந்தை, தாபி, கருமநாசனி, இவையுந் தீர்த்தங்கள்.

56. பொன்முகரி, கோதாவரி, பெண்ணை, வேத்திரவதி, சாவித்திரி,

57. விதிசை, வைதரணி, மந்தாகினி, சிலாதவி, வேகவதி, விரேபதி, பலாகை. இவையும் நதிகள். சுவேதப்பூ-வெண்டாமரைமலர். நெஞ்சப்பதி-மனமாகிய நகரம். பாரதி-சரசுவதி.

58. சந்திரபதாகை, பன்னுசை, உலோகிதை, விபாசை, சிந்து, வாகுதை. இவையும்நதிகள். இறன்வழாது-உறுதிவழுவாது. முந்து-பூருவத்தில். முன்-எதிரேயிருக்கின்ற. அந்தரநாதன்-இந்திரன்.

59. சரசோதி - சரசுவதி. பொருளை-தாம்பிரவன்னி. கம்பை-கம்பாநதி. ஒருதலைக் கபாலமேந்து மொருவன்- (பிரமாவினுடைய) ஒருதலையோட்டைத்தாங்கிய வைரவக்கடவுள்.

60. அம்பிகைதலங்கள்மூன்றும்- உமா தேவியாருக்குச் சொந்தமாகிய மூன்றுகோயில்களும். அருள்பொழி- கிருபையைத் தருகின்ற. கண்ணின் பேராய்-நேத்திரத்தின்பெயரையுடையனவாய். (விசாலாக்ஷி, காமாக்ஷி, மீனாக்ஷிகோயில்க ளென்னப் பட்டனவாகி) பம்பிய-நிறைந்த. தலமூன்றும்- (முறையே காசி, காஞ்சி, மதுரை என்னும்) மூன்று தலங்களும். அக்ஷம்-கண். நம்புற - நம்பிக்கை பொருந்த. குறக்கொடி யென்றதற் கேற்பப்புயமிரா ருங்கொம்பென்றார்.

61. இகம்-இம்மை. மகத்துவம் - மேன்மை. பரம்-முத்தி.

62. தோகையான்-மயில்வாகனத்தையுடைய குமாரக்கடவுள். முனம்- எதிரிலுள்ள. நாலை-சமுத்திரம்.

63. தொல்லைஊழ் -பழையவினைத்தொகுதி.

64. துரிசு-குற்றம். அடங்கலும்- (பிறதீர்த்தங்கள்) முழுதும்.

65. குலவி-விளங்கி. மூரல்தரும்- முழங்கும், கூறும். பலம்-பலனை.

66. காய்ந்த - கெடுத்த. சோமசேகரம்-சந்திரனையணிந்ததலை. சுருதியான் - வேத சொரூபமாகிய சிவபிரான். பதப்பூமலர்க்குளாம் - திருவடித்தாமரைக்குள்ளாக. சேமம்-வைப்பு. பலம்- வலிமை.

67. சோபமாய் -சினமுடையவராய. தாபம்-காட்டுத்தீ. நீபம்-கடம்பமலர்.

68. இலக்கம் தீவினை. அநேகபாவம். மூட்டும்-(காலக்கிரமத்தில்) லநுபவிக்கச்செய்யும். சஞ்சிதம்-கட்டுப்பட்ட வினை. மோலி - முடி. பதஞ்சூட்ட - (மூழ்குவார்கள்) திருவடியைத்(தமது) சிரத்திற்றரித்துக்கொள்ள.

69. மலினம்-(துட்டநிக்கிரகத்தால்) துன்பம். மாதவச்செய்யுள் ஆய்வு அரும - முனிவர்களுடைய பாடலாலாராயப்படும் அருமையான.

70. முத்திக்கு - மோக்ஷத்தைப் பெறுதற்கு. மூலிகை-மருந்து. ஆவத்துக்காக்க-ஆபத்தினின்றும் பிரித்துக்காப்பதற்கு. பத்துப்பேரினுல்பரம்பு கங்கை - பத்துநாமங்களால் நிறையப்பெற்ற கங்காதீர்த்தம்.

71. இந்திரசாலம்-அத்தியற்புதம். ஆய்-ஆக. இது, எச்சத்திரிபு.

72. கதிக்கு ஏதுவாக - மோக்ஷமடைதற்குக் காரணமாக. நெறி - (நல்) வழி. மாதுர்தீர்த்தம்-மாதுருதீர்த்தம்

73. மறித்து - (கைகளை) மடக்கி.

74. பகர-சொல்ல. மூழ்க - (பாட்டாற் படித்துணர்ந்து) ஸ்நானஞ் செய்ய. நீடு-நீண்ட. எட்டில்-எட்டினித்து. நாட்டிக்கொண்டு-நிலை நிறுத்திவைத்துக் கொண்டு. மூட்டுவார்க்கு- பிறர்க்குப் போதிப்பார்க்கு. மூட்டும் (அத்தீர்த்தங்கள்) அடைவிக்கும்.

## 4. திருவவதார அத்தியாயம்.

1. சுரும்பர்-வண்டுகள். முரன்று- ஒலித்து. வச்சிரபாணி - இந்திரன். விபுதர்-தேவர்.

2. தானம் - இருப்பிடமாகியவுலகம். அவுணர்-அசுரர். முருந்தின்-மயிற்கினடிமுட்போலும்.

3. பான்மை - தன்மை. களபம்- கலவைச்சந்தனம் தணப்பிலாது-நீங்காது. தழுவி - (அவ்வுமாதேவியாரைக்) கலந்து.

4. செறியை-முறைமையினை. முற்றும்-முழுதும். முறையிட்டு (எமது சூறைகளை) வரிசையாக்கி. அற்றம்-சோர்வு. புணர்ச்சி-சம்பந்தம். போகம்-சுகம்.

5. போகத்தின்பாரம்-போகத்திலாரும் கனம்; அஃதாவது: பிரபஞ்சவிருத்தி. பரிப் பரிதாம்-தாங்குதற்குக் கூடாததாகும். பையுள்-துன்பம். உளைவேம - வருந்துவோம் நீக்குதி-(அப்போது) நீக்கியருளவேண்டும்.

6. மூரல் - புன்சிரிப்பு. உள்ளம்-(ஆகுபெயர்) மனமகிழ்ச்சி. கனிய-முதிர. சயனத்தை-புணர்ச்சியை - நீத்தனம்-விடுத்தோம். ஆதிவீரியப்பொறி-முதன்மையுடைய சுக்கிலமாகிய (நெருப்புப்) பொறி. அதற்கு-அப்பொறிக்கு. இடம் - (இருப்) பிடத்தை. நம்வயினிங்கின வீரியப்பொறி யெனக் கூட்டுக. நீங்கின-பெயரெச்சம்.

7. மூர்த்திகள் - வடிவங்கள். அவையில்-அவற்றுள். துன்றுகின்றது-நெருங்குகின்றதாகிய. ஓர் - ஒப்பற்ற. பார்-பூமி. மகள்-(ஒரு) பெண். ஆகும்-ஆவள். மன்ற - (அவளிடத்து) நிலைபெற.

8. பெலம் ஒடுங்கி - வலியடங்கி. வெப்படைய-வெப்பமடைதலும் - (அதுகண்டு) அவ்வீரியப்பிழம்பைத்தேவர்கள் சுலனனைக் கொள அறைந்திட (அவன்) புலனடுங்குற வுடலம் வெயர்ப்பெழ வெய்துயிர்த்துச் சுமந்தானெனக் கூட்டிமுடிக்க. சுலனன் - அக்கினி.

9. ஐயகோ-ஐயோ. மொய்யினல்-(தன்) வலிமையால். ஒருபுடை-ஒருபக்கத்திலுள்ள. சரவணத்திட-சரவணப்பொய்கையிற் சேர்க்க. பெருமிதம்-மகத்துவம்.

10. சுடர்- (அவ்) வக்கினிப்பிழம்பானது. அமேய - அளவிடப்படாத. களங்கு அறுத்த-குற்றத்தைக் கெடுத்த. எட்டெனுமுருவத்திற்கவின்று-அட்டமூர்த்தவடிவத்தோடு பிரகாசித்து. துளங்கி - (நீரசைவினால்) அசைந்து. அவ்வான்பொருளென - அந்தப் பிரமப் பொருளைப்போல.

11. வீரியவெற்பு-மலைபோலெழுந்த வீரியத்திரட்சி. கதிராயிர கோடியின்-ஆயிரங்கோடி சூரியனைப்போல. நள்இருள் - நடுஇராத்திரி போன்ற. வேர்-மூலம். நாம்-பெயர். வீட்ட-வெட்ட. நாம்-நாமமென்பதன் விகாரம்.

12. இரண்டு மூன்று இடம் - சிவபிரான், பூமி, அக்கினி, கங்கை, சரவணப் பொய்கை. கந்தனென் றிசைத்து-கந்தனென்னுந்திருநாமஞ்சூட்டி. இங்கே-ஐந்திடத்துற்றதனாலே கந்தனென் பதைக் கந்தபுராணத்திலே சரவணப் படலம் 21ம் பாட்டில் ஆறுவடிவமுமொன் றனதாற்கந்தனென்று பெயராயிற் றென்று கூறப்பட்டிருத்தல் காண்க. அரண்டிடாது-பயப்படாமல்.

13. ஒன்பான் மணி-(பார்வதிதேவியார் திருவடிச் சிலம்பிலுள்ள) நவரத்நம். மொய்ம்பினர்-பலமுள்ள வீரவாகுதேவர் முதலினோர். வயத்தால்-வெற்றியுடன். சூர்-சூரன்.

14. சுந்தரித்தோகை-(கனக) சுந்தரியென்னும் (பழைய) பெயரையுடைய தெய்வயானை யம்மை. விரவு-கலந்த. விளித்து-அழைத்து.

15. சிந்துதீரமும் - சமுத்திரக்கரையும். நதிதருஞ் சிறப்பும் -ஆறுதாத்தக்க வளமும். திரு அருட்குறிப்பும்-இலக்ஷ்மி கடாக்ஷமும்.

16. மாக்கள்-மனிதர்கள்.

17. அம்முறை - அந்தக் குணங்களை. புணர்ப்பு-சம்பந்தத்தால்.

18. வான்றிய - சொரிந்த. சாகரசங்கமம்-சமுத்திரக் கலப்பு. பொருநை-தாம்பிரபர்ணிநதி.

## 5. செயந்திபுர அத்தியாயம்.

1. பிறங்கல் - மலை. எந்தை - எங்கள் பிதாவாகிய குமாரக்கடவுளே.

2. காந்தள் - கார்த்திகைமலர். குரவு - குராமலர். குரவம் - வாசனை. சாந்தம் - சந்தனம். வல்லி - கொடி (வள்ளியம்மை). சந்தனச்சிலம்பு - சந்தனசைலமென்னும் பொதியமலை.

3. கூவிளத்தணி - வில்வத்தாலாகிய, அழகு. கூர்எயிற்ற - கூரியபற்களையுடைய. வான் - விண்ணுலகம். அகிலம் - மண்ணுலகம். உலகத்துயிர்ப்பரிப்பின் - பூமியிலுள்ள உயிர்களைத் தாங்குந் தன்மையினாலே.

4. ஆழியான் - திருமால். நன்று - நன்மையாக. எல்லை அளவிடற்கரிதாகின்று - அளவு அளத்தற்கு அருமையுடைத்தாய்நின்று. ஐபானனம் - சிங்கம் (ஐந்து முகம்). பைங்கொடி - பசிய கொடி (பார்வதி).

5. அறுகு - யாளையாளியென்னு மிருகம் (அறுகம்புல்). வன்னி - கிளி (வன்னிமலர்). குறகுமாரியை - அனுகுமேகதத்தை (கிட்டிய வுமாதேவியை). உம்பர்கைக்கொளல் - தேவர்கள் பற்றிக் கொள்ளல்.

6. விழுத்தகு - சிறப்புத்தங்கிய. பூந்துணர் - பூங்கொத்து. தருவும் - மரங்களும் (பஞ்ச தருக்களும்). அரம்பையும் - வாழைகளும் (தெய்வப்பெண்களும்). வேழமும் - யானையும் (அயிராவதமும்). சசியும் - சந்திரனும் (இந்திராணியும்). மேனகையும் - மேலான பிரகாசமும் (மேனகை யென்னுந் தெய்வப் பெண்ணும்).

7. நண்பகல் - பொருந்திய பகல். விழியிமைப் பிலாதிருந்து - (தனது ஒளிச்சிறப்பினாலே பார்ப்பவருடைய) கண்களுக்கு விளங்குதல் இல்லாதிருந்து (நித்திரையில்லாமல் விருந்து). பல வருத்தமும் கவர்ந்து - (தன்னையடைந்தவர்பாலுள்ள) அநேகவருத்தங்களைக்கெடுத்து (அநேக திரவியங்களைக் கிரகித்து). வானகக் குறியை மேற்காட்டி - சுவர்க்க வுலகத்தின் குறிப்பைக் (தானுயர்ந் திருத்தலாற்) காண்பித்து (வெள்ளிய நகத் தழும்புகளை உடலிலே காண்பித்து). விரக மங்கையர் - பரத்தையர்.

8. திணி - பலம். நானம் - கஸ்தூரி. பணி - பாம்பு (ஆபரணம்).

9. மழைக்கணீர் - முகிலினிடத்திலுள்ள சலம் (தளிர்ந்த ஆனந்தக் கண்ணீர்). கிளை - மரக்கிளை. கை - இடம். குழைத்த தாது - கலந்தபொன் (நெகிழப்பட்ட சுக்கிலம்).

10. தூங்கலோதை - யானையின் முழக்கம். செப்பலோதை - (ஒருவரோடொருவர்) பேசுதலா லுண்டாகு முழக்கம். துள்ளல் தாங்குநீர் மையினோதை - குதித்தலைக்கொண்ட நீரையுடைய மேகமுழக்கமும். இனி, பாட்டுக்களின் றளைவேறுபாடு பற்றிய தூங்கல், செப்பல், துள்ள லென்னும் ஓசையுங் கொள்க. கனி முதற் கூவிளமிறுதியாகிய பொருள்கள் மலைக்கும், அசைவிகற்பங்களுக்குக் காட்டிய கனிமுதலிய உதாரணங்களாகிய வாய்பாடுகளுக்குஞ் சிலேடைகாண்க.

11. மாலின் - மேகத்தினாலும். உந்தியின் - காட்டாற்றினாலும் (விட்டுணுவின் நாபிக் கமலத்தினாலும்). நான்மறை முறைவகுத்து - (தன்னிடத்திருப்பவர்) நான்குவேதங்களை முறையாகப் பிரித்தோதப்பட்டு (நான்கு வேதங்களைக் கிரமமாகச் செய்து). கோலம் நான்முகமாகி - (அருவி) நீரோட்டம் நான்குபக்கத்தினும் (உடையது) ஆகி (அழகாகிய நான்கு முகங்களுண்டாகி). எண்கை - காடிகளை (எட்டுக்கை). பாலின் நன்கலை மானையும் பரித்து - பக்கங்களிலே நல்ல கலைமான்களையுந் தாங்கி (வெண்மையுடைய சரசுவதியையு (நாவிற்) சுமந்து).

12. தேவ-முருகக்கடவுளே. ஆர்வம் - ஆசை.

13. விரைத்த-மணஞ்செய்த. மான்மதம்-கஸ்தூரி. மா மதம்-யானைமதமுள்ள. தானமேற்கோலி-இடங்களிடத்தைவளைந்து.விநாயகருக்குச் சொல்லுமிடத்து கஸ்தூரி, கரியமதம் ஒழுதந்தானமாகிய கன்னத்திற் பூசப்பட்டு என்க. முக்கனி களைத்து - வாழைப்பழம், மாம்பழம், பலாப்பழங்களையும் பிதிர்த்து. அவல், கடல்-நீர்நிலை, சமுத்திரம் (அவலுங்கடலையும்) கலந்து-சேர்ந்து (கலந்துண்டு). திரைத்து-அலைகளையாக்கி (தோல்சுரித்து). வான்மருப்பு-பெரிய (மாக்) கொம்பு (வெள்ளிய(ஒரு)கொம்பு). நான்மறைக்குஞ்சரம்-நான்கு வேதங்கட்குந் தெய்வமாகிய யானை; விநாயகக்கடவுள்.

14. கூன-வளைந்த. பிறையின் - சந்திரன்போன்ற. வளை-சங்கு. குரண்டம் - கொக்கு. சிறையின் - இறகுபோல. பேனம்-நுரை. மின்ற - விளங்க. பலகால் - (பிரிந்துசெல்லும்) அநேகம் வாய்க்கால்கள். கபாலம்நேர்-(பிரமன்) தலையோட்டுக்கு ஒப்பாக. போனகம்பெற- (தாருகாவனத்து முனிவர் பத்தினிகளிடத்துப் பிச்சை) அன்னம் வாங்க. போந்தவர்-வந்தசிவபிரான்.

15. அரவம் - ஓசை (சர்ப்பம்). தோல்-யானை (யானைபுலியின்றோல்). அம்பரவிடமார்ந்து-கடலிடத்துச்சேர்ந்து (கடல் விஷத்தையுண்டு). வேதபாரகர்- வேத பாராயணஞ் செய்யு முனிவர்.

16. கடம்பு - கடம்பின்மலர். குறிஞ்சித்திணை - குறிஞ்சிநிலம். சங்கமுந்தியும்-சங்குகளைத்தள்ளியும் (மதுரைத்தமிழ்ச் சங்கத்திலே முற்பட்டிருந்தும்). சீர்அலைவாய்க்கரை-சிறந்த கடற்கண்ணுள்ளகரை (சிறந்த திருச்செந்தூர்). எங்கு மாசுரமொழித்தல் - எவ்விடத்தும் பெரிய (வெப்பமுள்ள) பாலைநிலத்தைக் கெடுத்தல். (ஆசுரம்-அசுர சம்பந்தம்). பொங்குகின்றது - பொலிகின்றது.

17. செந்தாதின் - சிவந்த மகரந்தத்தால் (சுவர்ணத்தைப்போல). கந்தரம் - மலைக்குகை (கிரவுஞ்சகிரியின் குகை). பரவைமேல் நடந்து-சமுத்திரத்தினிடத்துச் சென்று (சமுத்திரத்தின்மேற்சென்று). ஒற்றெண்-தூதாக.

18. வரை-பொதிகை (இமயம்). சரம்-சஞ்சரிக்கும் பொருள். தழைத்து-விருத்தியாகி. கருவுயிர்ப்பதற்கு-பெறுவதற்கு. கவுரி-உமாதேவி.

19. சக்கரம்-(ஆகுபெயர்) நீர்ச்சுழி (சக்கராயுதம்). மாசரை - (தன்னிடத்துஸ்நானஞ் செய்யும்) பெண்களை (பெரியபூமிதேவி) பொன்-சுவர்ணம் (இலக்குமி). அகிலமும் - (தன்னிடத்தகப்பட்ட) எல்லாவற்றையும் (பூமியையும்). கொளல் - கைக்கொள்ளல் (உட்கொள்ளல்).

20. மலர் பரித்து - பூக்களைத்தாங்கி (தாமரைப் பூவாற்சுமக்கப்பட்டு). அனம் மேற்கொடு-அம்சப்பறவையைத் (தன்) மேலேகொண்டு (அன்னவாகனத்தின் மேலேறிக்கொண்டு). சதுர்மறை வகுத்து - நான்குவேதங்களாலே பிரித்துச் சொல்லப்பட்டு (நான்குவேதங்களை யுண்டாக்கி). ஒருங்காய்-அடக்கமாகி. பலகலைத்திருநா-பல கல்விகளைக் கற்ற (பெரியோர்) சிறந்தநாக்கு (பலகல்விக்கதி தெய்வமாகிய ஞானச்செல்வியானவள் நாக்கு).

21. பலதருக்கள்-அநேக மரங்கள் (ஐந்து கற்பகவிருக்ஷங்கள்). வெள்ளை வாரணம் - வெண்ணிறமுள்ள சங்கு (ஐராவதயானை). மீனினம்-மீன்கூட்டங்கள். பொலன்-பொலம்என்பதன் போலி.

22. ஆசு-விரைவு. மதுரம் - இனிமை. சித்திரம்-அழகு. வித்தாரம்-விரிவாய். ஓசை-ஒலி. (ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம்என்னும் நால்வகைப் பாடலும் [இன்] னோசையும்). ஐந்திணை-ஐந்துநிலம். உடன்று-பொருந்தி.

காசு - இரத்நம். நாண்மலர்-அன்றலர்ந்தபூ. பிறப்புடன் காட்டி- (அவை) தோன்றுமிடத்தடனே காண்பித்து (காசுமுதலாகச்சொல்லப்பட்ட வுதாரணங்களைக்காண்பித்து). மெய்க்கலசப் பூசுரன் - உண்மையாகிய கும்பத்திற்பிறந்த அகத்தியமுனிவர். வித்தகம்-மேன்மை.

23. வெம் - விருப்பமுடைய. கரடம் (விநாயகராகிய) காக்கை. கவிழ்- (அகத்தியர் கமண்டலத்தினின்றுங்) கவிழ்க்கப்பட்டு. தேறல்-தெளிவு. மாறுது - நீங்காமல். சென்னி-சோழனுடைய. அம்-அழகிய. புவிமேல் தலைக்கொண்டு - பூமியின் மேலிடத்தைத் (தனக்கிடமாகப்) பெற்று. தென்-அழகிய. அரங்கந்துன்னி - சீரங்கத்தில் நெருங்கி எனப் பொன்னி நதிக்கும், வெங்கரடம்-கொடிய யானை மதமும். கவிழ் - கவிழ்ந்தவரும். தேறல்-தேனும். மாறுது - நீங்காமல். சென்னி - (வெள்ளத்திலிறந்த வுடலின்) தலைகளை - அம் - நீரானது. புவிமேல் தலைக்கொண்டு. பூமியின்மேல முதன்மையாகக் கொண்டு. தென்னர் - பாண்டியராசாக்கள். அங்கம்-சரீரம் துன்னி - (ஸ்நானஞ்செய்யும்போது) நெருங்கப்பட்டு. எனப்பொருநை நதிக்குஞ்சிலேடைகாண்க. தொழல்-தொழப்படுதல். பொன்னி-காவிரி.

24. படிதலால் - மூழ்குதலால். மும்மை - சிவப்பு, கறுப்பு, வெண்மையாகிய மூன்றுநிறத்தாலும் விளங்கி. வாணி யமுனைகங்கையி னியல்பும்பூத்து-சரசுவதி,யமுனை,கங்கைநதிகளின் தன்மையுந் தோன்றப்பட்டு. வெம்பவம்-கொடிய பிறவி. காய்த்து-கெடுத்து. அருள்கனிந்தது - கருணைமுதிர்ந்தது. சரசுவதிக்குச் செநிறமுடைமை தியானம் வல்லார்வாய்க்கேட்டுணர்க.

25. ஓங்கலின் களியானை-மலையிலுள்ள களிப்பையுடைய யானை (உயர்ச்சியோடு களிக்கின்ற [இருளாகிய] யானை. கால்-காற்று (தென்றல்). கழைச்சிலை-கருப்புவில்.

26. கரை - நீர்க்கரை (அளவு). செஞ்சாது-சிவந்த பூந்தாது (பொன்). அணை-செய்கரை (மெத்தை). பொருண்மடந்தையர்-பரத்தையர்.

27. வான்றிய - வாரிய. கடனை - கடனுநதி. பணிலம்-சங்கு. உந்திய-செலுத்திய. பச்சைநதி-பச்சாறு. பாங்கியரா - (தன் பக்கங்களிலுடன் வருமாற்றால்) தோழிப் பெண்களாக. பொருநை போவது - தாம்பிரபருணிநதிபோதல்.

28. கடவுளர்-தேவர்கள். முகிழ்த்தகாதலம்-கூப்பியகைகள்.

29. வரி அம் அர மணி. இசைக்கும் பாணருக்கும் - கீற்றுக்களையுடைய அழகிய சிவபிரானது உருத்திராக்கம் பொருத்தியணியும் இசைப் புலவருக்கும். வாணருக்கும்-(ஏனைய) வித்துவான்களுக்கும். வரிஅரவமணி - இரேகைகளையுடைய நாகரத்நம். இரவலர்-யாசகர். இரவு-இராத்திரி. அலர்- (மன்மதன் பாணமாகிய) பூ.

30. கதிர்வரவு-நெற்கதிர் விளைந்துவருதல். சூடு - நெற்போர். கதிர்வரவு-சூரியனுதித்தல். வாள்உழவர் - வாள்வித்தை கற்ற வீரர். ஆடுகளம் - விளையாடு போர்க்களம். பதுமம்-பாயிரம் திருமுறை, தேவார திருவாசக முதலியவைகள். பதிகம்-பாசி. கவளைக்குவளை-கவளையாக முளைத்த நீலோற்பலம். பதி-திருச்செந்தூர்.

31. தளம் - இதழ். தழைப்பார் - விருத்தியாகின்ற பெண்கள். ஊடித்தள - ஊடலைச்செய்து தள்ள. நீபம்-கடம்பமலர். களபம்திமிர் - கலவைச்சந்தனம் பூசுகின்ற. கறைஅடி-உரல் போன்ற கால்களை யுடைய. களபம்-யானைக்கன்றுகள். திமிக்குருளை-இருட்குட்டிகள். ஆற்றில் காவகமெல்லாம் களித்துவிளையாடுமெனக்கூட்டுக. காவகம்-சோலையினிடம்.

32. கரும்புருவச்சிலை-கரிய புருவமாகிய வில். கந்துகம்-பந்து. கரும்பு உருவ-புரர்பூசநக்ஷத்தைசூடுருவும்படி.

சாய்க்கும் - ஒழுக்கும். உருவக்கருப்புக்குரிசில் -வடிவத்தோடு கூடிய கருப்புவில்லையுடைய மன்மதன். கங்குல்-இரநள். கடுக்கும்-ஒக்கும். காழ்-வயிரம்பொருந்திய.தகரும்-ஆடுகளும். செம்மைப்புருவையும்-செம்மறியாடுகளும். போராட்டு- யுத்தஞ்செய்யும் விளையாட்டு. ஓதை-ஓசை. ஓசையாகிய கனைப்பெனக்கூட்டுக. கனைப்பு-முழக்கம்.

33. தானத்தோடு தழுவம் அவ்வாரணம் (செயந்தி நகரத்தி லுள்ளார் செய்யும்) கொடையோடு தழுவிய அந்த வேத வோசைகளும். வலம்புரி - சங்கின்ஓசைகளும். வானத்துஓடும்-வானுலகத்தில் விரைந்து செல்லும். அலையும் - சுற்றித் திரியும். வானத்தோடு-மேகங்களோடு. மலையும்-மலைகளையும். வலம்புரி-வெற்றியைச் செய்கின்ற. அவ்வாரணம்-அந்தயானைகள். தானத்தோடு தழுவும் - மத நீரோடு பொருந்தும்.

34. திகழ்தரும் - விளங்குகின்ற. ஆசினி-ஈரப்பலாக்கள். செல்லும்-மேகமும். மீனும்- நக்ஷத்திரங்களும். திகழ்தரும் ஆசினி செல்லும்- பிரகாசத்தைக்கொடுக்கும் ஆகாயத்திற்போகும். ஈனும் - (அங்ஙனம்போய்) காய்க்கும். எல்லை (சூரிய) கிரணவெப்பத்தை-சுனை ஆர் அம். சுனைகளிலே நிறைந்த நீர். எல்லை-சூரியனை. சினை-கிளைகள். ஆரம்-சந்தனவிருக்ஷங்கள். நீக்கும் - (போக வொட்டாது) விலக்கும்.

35. கழனியின்கண்நெல் - வயல்களில் நெற்பயிர்கள். சால் உந்து ஏறல்ஆம் - வாயு மண்டலத்தைத் தள்ளி (அதனமேல்) ஏறி வளர்தலாகும். சாலி-நெற்பயிர். சங்கம்-சங்குகள். சாலி-அருந்ததி பதவி. தருச்சங்கம் - மரக்கூட்டங்கள்.

36. ஓடை அகம் - தடாகங்களினிடங்கள். ஒளிர்வனப்போது-பிரகாசிக்கின்ற நிறமுள்ள பூக்கள். ஓடை-நெற்றிப்பட்டம். வனப்போதகம்-அழகிய யானைக்கன்றுகள். கோடு-நீர்க்கரைகள். குளிர்ந்ததண்-(இருபெயரொட்டு) குளிர்ச்சி. நாரம்-நீர். கோடு-அந்நீரிலுள்ள) சங்கங்கள். ஆரம்-முத்துக்கள்.

37. வாலிபம்-சிறுபருவம். மதர்ப்பு-களிப்பு. வால்இபம்-பரிசுத்தமாகிய யானை. வைத்த- (வளர்த்து) வைத்திருக்கப்பட்ட. மூலம் மட்டு உறு -மூல நக்ஷத்திரத்தினளவு (உயர்ந்து) பொருந்திய. பலாமுட்கனி-பலா மரத்தின் முட்கள்நிறைந்தபழம். மூலம் மட்டு உறும்-வேரினிடத்துத்தேனிறையும். மூலமட்டுறும் முட்கனி மூலமட்டுறும் பலாவெனக்கூட்டுக. வேரினுங் கனியுண்டென்பதனை "படிக்குளீரப் பலாப்பழுத்து,,என்னும்பிரபுலிங்கலீலைச்செய்யுளானுமறிக.

38. வான் அரம்பை - பெருமை பொருந்திய வாழைமரங்கள். கோடு-கரை. வானரம்-குரங்கு. மரக்கோடு-மரக்கிளை. பானல் - நீலோற் பலம். செந்தேன்கள்-செம்மையாகிய வண்டுகள். பா நலத்திடை-பாட்டுக்களினழகிய இடத்தில. பாயும்-பரவும். செந்தேன்கள்-(சுவைப் பொருள்களாகிய) சிவந்த தேன்கள்.

39. தலைவாழ்மதகு - (குளங்களினிடத்து) நிலைபெற்ற மதகு. மடுத்து-கலந்து. வீழ்த்தலை- (மீன்களை) விழச்செய்தலை. மிசைத்தலைநோக்கி-மேலிடத்திருந்து பார்த்து. வாளைக் காழ்தலை-வாளைமீன்களின் வயிரம்பொருந்திய தலையில். குத்த-கொத்த. கதிர்த்தலைசாய்தது - (அம்மீன்களகப்படாமையால் (அந்நாரைப்பறவைகள் தமது) ஒளிபொருந்திய தலைகளைச்சாய்த்து. சாய்க்கீழ்ததலை - பஞ்சாய்க்கோரைப்புல்லின் கீழிடத்து. மீண்டுகிளர்ந்து-திரும்பியெழுந்து.

40. திரண்டு-கூடி. உள்ளி-நினைத்து. கனைத்து-ஒலித்து. மேதிநொரி

மருப்பு ஊர்ந்த சங்கம் - எருமைகளின் முறுக்குடைய கொம்புகளிலேறியூர்ந்து திரியுஞ் சங்குகள். ஆர-நிறைய. தாரையென்ன - ஒழுக்கென்று நினைத்து.

41. வண்டல்-மகளிர்விளையாட்டு. தண்டலை-சோலை. விண்தலை-ஆகாயத்தினிடம். சாலி-நெற்கதிர்கள். வேலி-பூமியினிடத்தினின்றும். மீகிளரும்-மேலோங்கி வளரும்.

42. வேள்விக்கு-யாகத்தின்கண். ஓதும் ஆர் இசை - ஓதப்படும் அரிய (சுர) வோசை. நூல்-வேதம். கேதம் துன்பம். அவி-உணவு. ஏது-குற்றம்; ஏதத்தின்கடைக்குறை. பொதும்பா-சோலை.

43. கோடாமல்-கோணாமல். தம்புரு - ஓரிசைக்கருவி. கானம்மூட்டி-இசையை யமைத்து. கம்பு - சங்கம். புடையாமல்-விம்மாமல். தும்புரு-கானத்தில் வல்ல கந்தருவன்.

44. பதணம்-மதிலுள்மேடை. கிசலயம்-தளிர். ஆடி-கண்ணாடி. சாளரம்-பலகிணிவாயில்.

45. ஒருதலைக் காமத்துற்றோர்-பிரிந்த துணையை நினைந்து வருந்தியிருக்கும் நாயகன் நாயகிகள். ஓவியத்தலைமை-சித்திரமெழுதலிலேமுதன்மை. வருதல் - வரவு. மாண்உரு - மாட்சிமை தங்கியவடிவம். கிழி-படம் கோட்டி-தருதல். கொடுத்தல். ஒருத்தலைக்காமத் துற்றோரிருதலைப் பேரின்பமெனக் கூட்டுக.

46. வீதியிற் குவித்தல் - (வீடு நிறைந்தவுடன்) தெருவிலே குவித்தல். வெள்கிய-வெட்கமுற்ற. தாதகி - ஆத்திமலர். தோழத்தன்மை - தோழனுந்தன்மை. ஆக - ஆகவும். உடம்பிற்கு - சரீரத்தின்கண். ஏதம்-குற்றம். அளகைக்கோமான்-குபேரன்.

47. ஆறெனுமங்கம்-ஓதல் முதலிய ஆறு தொழிலாகிய அங்கம். ஆற்றின் அமைந்து-(வைதிக)மார்க்கத்திற்பொருந்தி. மாமகம்-பெரியவேள்வி. முப்போதும் ஆற்றி-திரிகால (நியமங்கள்) செய்து. பெருநிதம்-பெருமை.

48. பரிமகம்-அசுவமேதம். நூல் முற்றி - சாத்திர விதிப்படி முடித்து. மாக்கடவுதேர்-குதிரைகளாற் செலுத்தப்பட்ட இரதம். கொடிஞ்சி-மேன்மொட்டு; தலையலங்காரம். சந்ததம்-எப்போதும். தலைமயக்குற்ற-இடமயக்கங்களுற்றன.

49. ஏர்க்கால்-மேழி. தலை-உச்சி. கயலினம் - கயல் மீன் கூட்டங்கள். மார்த்தாண்டன் - சூரியன். தேர்க்கால்-தேர்ச்சக்கரம். வெடி-அச்சத்துடன். செருக்கால்-களிப்பால். ஊடாடி-பயந்து. போர்க்கால்-பொருதலையுடைய காற்றைப்போல. வானப்புதுக்கால் - ஆகாயகங்கை. குடைந்து-படிந்து. ஆடி-விளையாடி. மேகநீர்க்கால்-மழைத்தாரை. நெடுங்கால்-நதி. தலை - இடம்.

50. மதுநவபானம் - கள்ளைப்புதிதாகக்குடித்தல். மிதுனம்-மிதுனராசியை-யாழென்று (வடிவொற்றுமையால்) வீணையென்று. கல் என-கல்லென்று. கைப்பதுமம் - கைத்தாமரை. முன்னர்ப்பண்பு-மிதுனராசியை யாழென்று கைநீட்டியகுணம். அமைத்தல்-அடக்குதல்.

51. முறை முறை-வரிசைவரிசையாக. தொனி-முழக்கம். சுருதியினிசை-(வேத) சுரத்தின்ஓசை. விழைவு-விருப்பம். மிழவு-மிருதங்கம். விகலம்-குறைவு. மூரல்-ஒலிக்கின்ற. நடம்-நடனம். மழையென - மேகம்போல. மறி-சுழல்கின்ற. ஒலிதரும் - முழங்கும். மறுகு-வீதிகளில்.

52. தாமிடுவார்-தாம் பிரித்தாராய்வார். தமது-தம்முடையபொருளை. எதிரெதிர்-(வாங்குவோருக்கு) நேரே நேரே. தலைவிலைபகர்வார்-முதற்சொன்னவிலைக்கு விற்பார். பொய்ம்மையாக விலையைக் கூட்டிச் சொல்லா

றென்றபடி. பரிமளம் - கலவைச்சந்தனம். இது பணவெடையின் மிகுதியிலே அரிது என விலை பகரிளைஞர்கனெனக்கூட்டிமுடிக்க. இலே என்பதில், இகரந்தொக்கது. அமலைகள் - பேரொலிகள். மறுகு-கடைவீதியில்.

53. பரிநிரை - குதிரை வரிசை. பணிமணி-நாகரத்நம். விலையிடுவார்-விலைமதிப்பார். கதிர்-காந்தி. உரையிடுவார்-உரைகல்லில் உரைத்துப்பார்ப்பார். மலையசநிலே - சந்தனக்கட்டையினியல்பு. முறையறைவார்- புத்தகம்படிப்பார். விரிகலே - விரிந்தவஸ்திரம். மிகுதிகள்-பெருக்கங்கள்.

54. வியன் முரசு - பெரிய முரசு. வதுவை-கலியாணம். முடிகொளும் - கிரீடத்தைப் பறிக்கும். முரசும்- (வெற்றி)முரசும். மகம்-யாகத்தில். தரும்-கொடுக்கும்; முழங்கச்செய்யும். அறைபுனல்உண் - ஒலிக்கின்றநீருண்ணுகின்ற. அமைதி-சமயத்தில். கடிமுரசு-காவல்முரசு. மன்மதன் முரசின் -கடலோடு. இசல்புரிவன - மாறுகொண்டொலிப்பன.

55. சூழ்ச்சி-உபாயம். வளை-சங்குசுரிகை-உடைவாளுக்கு. நெய்துவரிடுவார்-நெய்பூசுவார். இரவலர் - யாசகர். அசனம்-சோறு. களியினர்-களிப்பையுடையவராய். எழுதியகிழியெதிரே-(தங்கள் தங்களால் விரும்பப்பட்டாரை) எழுதிவைத்திருக்கப்பட்ட படத்துக்கு நேரே. திரிபவர்-செல்வார்.

56. அரி- திருமால். மணிகெழு-இரத்நங்கள்பதித்த. அவை-அவற்றை. குரவர்-ஆசிரியர். துலையறு-சமானமற்ற. ஓதுநர்-ஓதுவார்.

57. முனை-நுனி. வை -கூர்மை. வினையம் ஓர்ந்து போர் -உபாயத்தையுணர்ந்து பொருதலைச்செய்கின்ற.

58. பேர் அவாவுறும் - பெருமைவிரும்பும். நினக்கிளையார் - உன்றம்பிமார் (இலக்கத்தொன்பதின்மர்). பாரிடத்தொகையவர்- பூதக்கூட்டத்தவர்.

59. விசையமொய்ம்பன் - வீரவாகுதேவர். அடங்கா - (வலிமை) ஒடுங்காத. பிஞர்-தம்பிமார். விளித்தனன் - அழைத்தனர். விசையமொய்ம்பனுகிய சிறந்தானெனக்கூட்டுக.

60. வியந்து களித்து - (இருபெயரொட்டு, மிகமகிழ்ந்தது. கலந்து-வியாபித்து. பணம் - படம். துளக்கி-அசைத்து. வயம்- வெற்றி. நிரம்பி - நிறைந்து. பூதாதியர் யாரும் சேடனும் நிரம்பியெனக்கூட்டுக.

61. மாருதத் தலைவ - வாயுதேவனே. மனத்தின் - மனத்தைப்பார்க்கினும். முந்து-முற்பட்டு. கடவுதி - செலுத்துவாய். மான்மகள்-வள்ளிநாயகி. சிந்துரப் பகைப்பீடம் - சிங்காதனம். (சிந்துரம்- யானை. பகை - அதன் விரோதியாகியசிங்கம். பீடம்-ஆதனம்.) ஒருவினன்-நீங்கினுன்.

62. பாய் ஒளி - பரந்தகிரணம். சுடர்-பொன். பாதுகை-பாதகுறடு.

63. எல்லை - சமயம் அடைப்பை-வெற்றிலைப்பை. மாரன் - மன்மதன். களாசி-படிக்கம். கோரம்-பயம்.

64. தந்திரி - (வீணையிலுள்ள) ஏழுநரம்புகள். நகங்கொடுதடவி - நகத்தால் தடவி வாசித்து.

65. தாலம்-நாக்கு. தீவர்த்தி - தீவட்டி. பாலின்-பக்கத்தில். ஆலவட்டம்-பெரிய விசிறி. விசிறி - சிற்றாலவட்டம். அலராநாள்மலர் -வாய்விரியும்பருவத்தையுடைய புதுமலர். தூஉய்-தூவி. குழூஉ-கூட.

66. ஆயிரக்கமலாசனம்-ஆயிரமிதழ்களுடனே கூடிய தாமரையாசனம். பணிப்பாயலான் - சர்ப்ப சயனத்தையுடைய திருமால். படர் இரும் சிறைய - விரிந்த பெரிய சிறகுகளையுடைய.

67. ஆர்த்தென - முழங்கினுற்போல.

68. துடி-உடுக்கை. துந்துபி-தேவவாத்தியம். ஒலித்த - முழங்கின. படகம்- பெரும்பேரிகை. பதலை - ஒருகட்பறை. பம்பும்-நெருங்கும். காகளம்-சின்னம்.

69. நீபத்தாமம்-கடப்பமாலை.
70. கான்முளை-பிள்ளை.
71. அணிகெழு- அலங்காரம்பொருந்திய. யானைப்பேறதாம்- (அயிராவத) யானை பெறுதலையுடையதாகி. மாறு-பகை. வீற்றிருந்தான்-வேறுயெழுந்தருளியிருந்தான்.
72. ஆற்றல்-வலி.

## 6. வள்ளியம்மை திருவவதார அத்தியாயம்.

1. அகிலம்-பூமி. துருஆணி - அசையாநிலையைச்செய்யும் ஆணி. பொற்குன்று-மாமேரு. செற்றம்-கோபம். தகைமை-தகுதி. எமன் - ஒருமுனிவன்; இன்பத்தைச் செய்வோனென்றதனால் வந்தபெயர்.

2. படீரம்-சந்தனம். வெற்பின் - மலைகளோடு

3. கவிழ் தர - கவிழ்ந்து பார்க்க. நாகர்கோன்-தேவேந்திரன்.

4. சானம்-இராகம். இசை - பாடுகின்ற. நாடகமாதர் - நாட்டியப்பெண்கள். வம்மின்-வாருங்கள். அன்னது-அச்சொல். தரிக்குதிர் - கொள்ளுங்கள்.

5. பொருளின் - பொன்னுக்குள். பொற்றை-மேரு மலை. நீவிர்-நீங்கள். மெய்-(ஆகுபெயர்.) மெய்யறிவை.

6. தும்புரு - யாழ் வாசித்தலிற் சிறந்த ஒரு கந்தருவன். கற்று - (அவனிடம்) படித்து.

7. பண் தேறலும் - இசைப்பாட்டாகிய தேனும் ஐயம்-சந்தேகம். தாளச்செயல் - தாளத்தி ஞேசை யுடன் கூடிய. நடத்தேறல் - நடனச்செய்கையொலியாகிய தேனும். ஆர்தல் -நிறைதல்.

8. யோகு-யோகம். முனிவரன்-முனி சிரேட்டனாகிய எமன். வான் - பெருமை. தோகை - மயில். பாகு இசைத்தவர்- (தேன்) பாகுபோலஇசை பாடிய கந்தருவர். உள்ளத்தின்யோகம் விட்டெனக் கூட்டிமுடிக்க.

9. பாங்கர்-பக்கம். பரிபவம்-அவமானம். தீம் கொடுஞ்சொலின் - தீய கொடிய சொல்லால். எம்மொழி-எமது (சாபமாகிய) வார்த்தையை. வேடுவத் தன்மை - வேடர் வேடிச்சியின் செயல்.

10. உங்கள்பால் - (கந்தருவரே) உங்கள் பக்கம். அற்றம் - சோர்வு. வேடுவர்-வேடர்.

11. செருமந்து-சுழன்று. மாழ்கி-மயங்கி. துணையர்-மக்கள். சார்பு-தஞ்சம்.

13. சீலம் உன்னி-(அச்சாப நீக்குதற்கு வாய்ப்பான) இயல்பை நினைத்து. மூலம் -(சனக்கொரு) காரணம். கோலம்-திருவுரு.

14. தாது - மகரந்தம். உகுத்த - சொரிந்த. தாதகி-ஆத்தி. போது-பூ. புரி-முறுக்காகிய. சுருதியம் பண்ணவன் - வேதகீதங்களை யுடையாராகிய அழகிய குமாரக்கடவுள்.

15. சூர்-சூரன். கிளை - (அவன்) கூட்டத்தார். மாதவன்-விஷ்ணு. நேத்திரத்துற்றன - கண்களினின்றும் பிறந்த. மா-பெருமை. கயத்திரு-தெய்வயானையம்மை. வள்ளி - வள்ளியம்மை. சேக்கு-நிறைவு. சிறந்தான்-சிறப்புற்றிருந்தான்.

16. மகக் குரிசில் - நூறு பாகஞ் செய்தவனாகிய இந்திரன். திரு-(திருவருட்) செல்வம்.

17. மால்விழித்தேவிமார் - விஷ்ணுவினிரண்டுகண்களினின்றும் பிறந்த தெய்வயானை யம்மை, வள்ளியம்மை.

18. மதர்ப்பு-களிப்பு.பேருருவம்-பேரழகு. பெருமிதம்-சருவம.

19. நிந்தனைச்செய்கை - நிந்திக்குஞ்செய்கை. ஆல்-அசை. ஆற்றினள் - செய்தனள். (வள்ளியம்மை)

20. திவ்வியக் கண்ணின்-ஞானக் கண்ணால்.

21. தொண்டை - செவ்வைக்கனி. தோகை-வள்ளிநாயகி. கலங்கா-கலங்காதவிதமாக-முகமனால் - உபசாரவார்த்தையினால்.

22. மாறு மீக்கொண்டு-பகைமேற்கொண்டு. வாரணப்பாவை - தெய்வயானை. சாபத்தின் ஆறு - சாபத்தின் வழி. அவண்-(குறிக்கப்பட்ட) அவ்விடம். ஆற்றிட-பரிகரிக்க.

23. வாரம்-அன்பு ஈரம் - அன்பு. அடக்கினாள்-பொறுத்துக் கொண்டாள் (தெய்வயானை).

24. அன்னபான்மை - அப்படிப்பட்ட தன்மை. பவம் - பாவம். ஆற்றுதல்-(நாமினிச் சொல்லும் விதம்) பரிகரித்தல். கொன்-பெருமை. இலை-இலைவடிவமான.

25. பொறையாற்றிய-பொறுமையைச் செய்ய. எத்தவும் - துதிக்கவும். தலைமையும்-முதன்மையும். நிலைமை-உண்மை.

26. வசுந்தரை - பூமி. சுலாவும்-சுற்றித்திரியும். விலங்கு-மிருகம். மூந்து - முற்பட்டு. உளச்சிறப்பு - மனமகிழ்ச்சி.

27. முன்னர் - இனிமேல். இயற்றும்-பொருந்தச்செய்யும். அக்கொடும்பவம் - அந்தக் கொடியசன்னத்திலே. இழிவின்-இழிவால்.மொழியும்பாவம்-(நீதெய்வயானையை) நிந்திக்கும் பாவம்-ஒழியும்-கெடும். அழன்முன்னாக-அக்கினி சாட்சியாக. விழுமிது ஆக-சிறப்பாக. வேட்குதும்-விவாகஞ்செய்வோம்.

28. இளையன் - குமாரக் கடவுள். கவல் உழந்து - கவலையினால் வருந்தி. ஓவென - ஐயோவென்று. உளம் சிந்தித்து-(மேனடக்குங் காரியத்தை) மனத்திற்கருதி. மானின்வால் முறை - (இனிமேல் வள்ளியம்மை) மானவயிற்றிற்றோன்றுதலின் கிரமம்.

29. தெய்வக்கன்னிகை-தெய்வப்பெண் கவுரி-உமாதேவி. வாஞ்சை-இச்சை. சேடி-தோழி. விந்தை - ஒருமலை. மானிற் பொலிவுறும்-மான்வடிவத்தோடு விளங்குவள். தெரிவை - வள்ளியம்மை. தெரிவை குழவியாகியெனக் கூட்டுக. உதிக்கும் - தோன்றுவள்.

30. அன்னவள் - அத்தன்மையுடையவள்ளியம்மை. வேட்டு-மணந்து. கிளையுடன்-(உங்கள்) சுற்றத்தாரோடு. கிடைத்த - (என்பாற்) பெற்ற. நீங்க-(அப்போது) அகல. தொன்மைபோல-முன்னிலைமையைப் போல (தேவசொரூபம் பெற்று). இருத்திர்-இருப்பீர்.

31. முனிவரன் - எமமுனிவன். மோனத்தாறு - யோகவழியில். அன்னோர்-கந்தருவர். அரிவையர்-தேவநாட்டியப் பெண்கள். வினை-தீவினையால். உழந்து-வருந்தி. கனைகுரல்-மிக்கஒலி. கதுமென-விரைவாக.

32. தூ-பரிசுத்தம். கோட்டு-உச்சியையுடைய. வேலை-சமயத்தில். அந்தமான்-அந்தவள்ளியம்மை. அருணம்-செந்நிறம். அணி-அழகு.

33. காறளர்ந்து - கால்சோர்ந்து. வீங்கி-பருத்து. பொறுக்கலாது-தாங்கமாட்டாது. மருப்பு-மரக்கொம்பு. சுற்றி-சூழ்ந்துதிரிந்து. சீறூர் - சிற்றூர். பாங்கர்-பக்கத்தில். ஈற்றுளைந்து - பிள்ளைப் பேற்றுக்கு வருந்தி.

34. சுழன்று (மனங்) கலங்கி. அயர்வு-வருத்தம். சிலைவிடாத - (கையில்) வில்லைநீங்காத. கொம்மென-விரைவாக. போற்றும் - பாதுகாப்பீர். என்றனர்-என்றுசொல்லிக் கொண்டவராகி.

35. அரற்றும் - அழும். இரும் திசை-பெரியதிக்கு. வெருண்டு-பயந்து. மேனிநாக் கொண்டு உழும்-(தன்) உடலை நாவால் நக்கும். உலப்பு - வருத்தம். பழுமரம்-ஆலமரம். மூட்டில் - தூரில். பரிவு-அன்பு.

36. இரங்கி - வருந்தி. தருணவில்-இளங்கிரணம். பொருள் நவில்-அருத்தஞ் சொல்லப்படும். வேதம்பூத்து-வேதமாகிய பூவைமலர்த்தி. குருமணி-நிறமுள்ள இரத்நம்போல் வாளாகிய வள்ளியம்மையை. வல்லிக்கொம்பென - பூங்கொம்பென்று சொல்ல.

37. விந்தைக் கானவர் - விந்தைமலையிலுள்ளவேடர். அம்மானை - அந்த வள்ளிநாயகியை. தண் அளி - குளிர்ந்த கிருபை. பெற்ற ஆற்றால் - அடைந்த தன்மையால்.

38 எண்ணிய - நினைந்தவற்றை - எண்ணி ஆங்கு. நினைந்ததுபோல.

39. அடுக்கலில் (விந்தை) மலையில். கிராதர் - வேடர். இறைவன் - வேடராசன்.

40. கனிமொழி - வள்ளியம்மையாகிய குழந்தை. செவ்வி - சிறப்பு.

41. பருகத்தக்கான் - அநுபவிக்கத்தக்கவன். மூதண்டம் - பழைய அண்டங்கள். கருமத்தின் செயலாய் - வினையின் செய்கைவழியாகி.

42. பவ்வம் - சமுத்திரம். பரப்பு - விசாலமான இடம். நாமம் - பெயர். செவ்விநன்கு - அழகு நன்றாக. வேடர்க்கிறைவனுகிய சிறப்பின்மிக்கானெனக்கூட்டுக.

43. வேடத்தையல் (தன்மனைவியாகிய) வேடிச்சி. உய்ப்ப - கொடுக்க. கவரிமயிர் - கவரிமானின் உரோமம். குடில் - சிறுவீடு. சூழ்ந்த - (கடலாற்) சூழப்பட்ட.

44. போலவென்பதனை மடந்தையென்பதனோடுங் கூட்டுக.

45. சொல்லை - முல்லைநிலத்தை யடுத்த. குறிஞ்சி - குறிஞ்சிநிலத்திலுள்ள. கோட்டுக் குறவர் - மலைவாசிகளாகிய குறவர். நாப்பண் - நடுவிடம். மல்லல் - வளம். சாற்காலம் - கூதிர்க்காலம். சுடர் - பிரகாசம். மதி - பிறைச்சந்திரன் அன்னாள் - வள்ளியம்மை. தூற்றும் - சொரியப்படும்.

46. ஆர்ப்பு - ஒலி. தொண்டகம் - குறிஞ்சிநிலப்பறை. கிள்ளை - வள்ளியம்மையை. பிள்ளையென்றாள் - புத்திரியென்று வளர்த்த வேடராசன்மனைவி. விளக்கம் போன்றாள் - விளக்குப்போலப் பிரகாசித்தனள்.

47. பெண்நலம் - நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்னு நாற்குணங்கள். பேதை - எழுவயதுப் பருவம். பெதும்பை - பதினொருவயதுப் பருவம்.

48. சேடியர் - தோழிப்பெண்கள். இனம் - கூட்டம். கடிய - ஓட்ட. போதும் - போவோம். ஏனல் - தினை. ஓச்ச - ஓட்ட.

49. நரம்பு - (ஆகுபெயர்) யாழ். கந்தருவத்தர் - கந்தருவசாதியார்.

50. கிராதமடந்தை - வேடராசன் மனைவி. எளிமை - இலேசு.

51. கொன் - பெருமை. நோன்பு - தவம். தவத்தின் பான்மை - (அத்) தவப்பயன்.

52. மீதூர்ந்து - மிகுந்து. மூத்த - முதிர்ந்த. சென்று - போய். அவண் - (தமதிருப்பிடமாகிய) அவ்விடம்.

## 7. சுவாமி வள்ளியம்மையிடத்திற் சென்ற அத்தியாயம்

1. கொல்லை - புனம். இதண் - பரண்.

2. வேள்புணர் - முருகக்கடவுள் சேரப்பட்ட. செலா - சென்று. வேட்கை - ஆசை. ஏனல் - (ஆகுபெயர்) தினைப்புனம்.

3. நள் - நடு. செவ்வாய் - செவ்வையாக.

4. அந்தரவால்நெறியால் - ஆகாயமாகிய சுத்தமுள்ள மார்க்கத்தால். முகிலாமயில் - மேகம்போன்ற மயில்.

5. மறைவாணி - வேதவாக்கு.

6. நிரை-வரிசை. அருணம்-சிவப்பு. தருணம்-இளமை. நாண்மலர்-(உருவகம்)முகம். வருணம்-பிரகாசம்.

7. கையுற-(தம்முள்ளத்தி)னிடத்திற் பொருந்த.

8. தளவு-முல்லையரும்பு.

9 கடு-விடம். வடு-மாவடு. கருமை-கருநிறம். தேன்-வண்டு.

10. இயல்-சாயல். மெல்லியல்-மிருதுவான் தன்மையை யுடையாளுக்கு.

11. குன்று-மலையைவிட்டு. இழிந்து-(கீழே) இறங்கி.

12. வறியேற்கு - சிறியேனுக்கு. வறுமை-சிறிமைப்பாலது.

13. கொன்னே-வீணே (நீ). குழு உ-கூட்டத்தில். வேட்டுளன் - (விவாகஞ் செய்தலை) விரும்பி யுள்ளவன். நவிற்றுதி - சொல்வாய். (அங்ஙனஞ் சொல்வாயாயின்) பொருவேள்கணை விலகாய் - போர்செய்த மன்மதன் பாணத்துக்குத் தப்பமாட்டாய்.

14. வாளா - (விவாகமில்லாமல்) சும்மாவிருக்கின்ற. மாதர் என்பதில் அர் சாரியை. ஆயமாதர்பேர் பொன்னனையாளென்ப என்னுந் திருவிளையாடற் செய்யுளானு முணர்க. நாள்-(சுப) தினத்தில். ஆர்-பொருந்திய.

15. இசைய - சொல்ல. உறக்கவிழா-திகத் (தலை) குனிந்து.

16. படை-பாணம். வியரா-வியர்த்து. நகையா - புன்சிரிப்புச் செய்து. வார்முலை - (அன்மொழித் தொகை) வள்ளியம்மை. திறவா-திறந்து.

17. அளித்தருள்வோன் - பிதா. ஆயிழையாள் - வேடராசன் மனைவி. வரைதாள் மலையினடிப் பக்கம் (சிற்றாறொன்றபடி).

18. தொடிவாய்ந்தகை - (அன்மொழித் தொகை) வளையலணிந்த கைகளையுடைய வள்ளியம்மை. கடி-வாசனை. வரஞ்சை-இச்சை.

19 அருணமின் - மான்பெற்றவள்ளியம்மை. மீட்பு - திருப்புதல். இசைவாய்-சம்மதிப்பாய்.

20. கனிவாய்மொழி - (அன்மொழித்தொகை) வள்ளியம்மை. காதலியா-விருப்பமுற்று. தவறு - தவறுறுத விதம்.

21. குரவோர் - தாய் தந்தையர். வரைவார்-விவாகஞ் செய்பவர். மரபு-முறைமை. தவறும் - குற்றமுடையவளாவள்.

22. அருள்பெற்றோர் -பெரியவர். தோற்றம் - காட்சி. உதகம் (தான) சலம். அழல்-அக்கினி.

23. அற்பு-அன்பு.

24. மலைவாணர்-மலையிலே வசிக்கும் வேடர். செய்வினைகாட்டும்-செய்தொழிலைப் பயிற்றிக் கொண்டிருக்கும்.

## 8. வள்ளியம்மை திருக்கலியாண அத்தியாயம்.

1. பவக்குறும்பு - பிறவிப்பகை. இனிது - இனிமையுடையதாகிய. எந்தை-எங்கள்பிதாவே. உண்டு-இருக்கிறது.

2. முத்தலையிருதலை வேலோன்-மூன்றுதலையை யுடைய சூலத்தையும், இரண்டுதலையை யுடைய வேலையுமுடைய குமாரக்கடவுள்., எனவே சிவபிரானுங் குமாரக்கடவுளும் வேறல்ல வென்பதாயிற்று. பேரானந்த வெள்ளம் சிந்தனை என்ற பான்மையின் வீட்டில் வேலோன் செலுத்துமெனக் கூட்டிமுடிக்க. பேரானந்த வெள்ளமாவது, குமாரக்கடவுள் சரிதமாகிய பேரானந்தப் பெருக்கு. சிந்தனை (அடியேன்) மனத்தில்.

3. கிராதன்-வேடன். வனமுலை-(அன்மொழித் தொகை) வேடராசன் மனைவி. தளிர்க்கை - தளிர்போலுங் கரங்களால். சூடகம்-(வள்ளியம்மை). கையிலணியுமோ ராபரணம்.

4. இம்பர் - இவ்வுலகத்தவர். மோக்கம்-மோக்ஷம்.

5. முசுக்கலை - ஆண்குரங்கு. தகை-அழகு முறையிடும்-குறைபாடு கூறித்துதிக்கும். எயினர்-வேடர்.

6. ஆர்வம்-ஆசை. வன்னம்-நிறம். புளினர்-வேடர் அழன்று-கோபித்து. சொப்பதை-இதில் ஐ-சாரியை.

7. சிந்தையின் - மனத்தைப்பார்க் கினும். தெரிக்குதும் - தெளிவிப்போம். இந்திரசாலம்-பொய்யை மெய்யாகக் காட்டுவார் வித்தை.

8. தாரு - (வேங்கை) விருக்ஷம். நாரி-வள்ளியம்மை. அற்புதம் - அதிசயம். படலம் - கூட்டம். கற்பகத்தின்-கற்பகவிருக்ஷம்போல. வேரி-வாசனை. தைவர-(மேலே) பட. எல்லை-சமயத்தில்.

9. குறைவு அரும் - குறைவற்ற. (அருங்கேடனென்றாற்போல). இன்னல்-துன்பம். குறிச்சி-சிற்றூர். நாடுதும்-ஆராய்வோம். அற்றம் - தளர்ச்சி. நினையா-நினைத்து.

10. கலினம் - கடிவாளம். மா-குதிரை. தாருவின்-மரம்போல. மாயம்-வஞ்சகம். அறையா-சொல்லி. குறைப்பன்-வெட்டுவேன். பாசு - மழுவாயுதம். கரந்தான்-மறைந்தான்.

11. மாமுதல் - மாமர வடிவாகிய சூரபன்மன். தாமமென்குழற்காக-மாலையணிந்த மெல்லிய கூந்தலையுடைய வள்ளியம்மைக்காக. மைத்துனற் பகைத்து - (மன்மதனாகிய) மைத்துனனால் வருந்தி. காம்-காமம். ஒளிப்ப - மறைய. புற்குடில் - புல்லான்மேய்ந்த வீடு. சுறுக்கொடு-விரைவாக.

12. மடந்தை-வள்ளியம்மை. பேதுற்று-மயங்கி.

13. உடைந்து-தோற்று. கடம்-மதம். புங்கவன் - விநாயகக்கடவுள். பருவரல்-துன்பம்.

14. துணைவன்-தம்பியாகிய முருகக்கடவுள். தென்றலங்கன்று - இளந் தென்றற்காற்று.

15. இளைய சேவகன்-தம்பியாகிய அடியேன். எண்ணினையாகி - நினைத்து. உள்வெருவ-மனம் அஞ்ச. மத்தம்-வெறி. மால் - பெரிய. கடம்கான்று-மதத்தைக்கக்கி.

16. அன்னமென்னடை - (அன்மொழித்தொகை) வள்ளியம்மை. அளியன் - அன்பை யுடைய அடியேன். தோற்றம்-காட்சி. வெருவி - பயந்து. காமநாடகம்-மன்மதன் கூத்து.

17. தலை - இடம். படலை-மாலை. மோலி-மகுடம். போந்து-வந்து. இரந்தான்-யாசித்தான்.

18. கற்றை-திரட்சி. இன்று-இல்லாமல். மடந்தை - வள்ளியம்மை. சூழல்-இடம். கொற்றம் - வெற்றி. கிம்புரி-தந்தத்திலணியும் பூண்.

19. கொம்பு-(ஆகுபெயர்) வள்ளியம்மை. வெம்பு-வாடுகின்ற. தஞ்சம்-பற்றுக் கோடு. இன்று - இன்றைத்தினம். சஞ்சலித்து - துன்ப முற்று. பயோதரம்-கொங்கை. சும்மை-சுமை. ஆற்று து-பொறுமல். வஞ்சியின்-வஞ்சிக்கொடிபோல். துவண்டுதள்ளாட-அசைந்துதளா.

20. வேளை - மன்மதனை. இந்த வேளை - இந்தச் சமயம். வந்தவேள் - வந்துநின்ற முருகக்கடவுள்.

22. வெருண்டவேழம்-பயப்படுதற்கே துவாகிய யானை. வீங்கி - பருத்து. இறுமாந்து-கருவமுற்று. இளமுலை வேழத்துக்கு - இளங் கொங்கைகளாகிய யானைகளுக்கு. ஓ-அசை.

23. வாகைப்போதின் - வாகைமலர்போல. முத்தம் -(உருவகம்) பல். செவ்வாம்பல்- (உருவகம்) சிவந்த வாயிதழ். சிறுகாற்று-தென்றல்.

24. மால்-மேகம்போலும். மால்-மயக்கம்.

25. ஆய்-ஆராயப்பட்ட. மயிலாட்கு-மயில்போலும் வள்ளிநாயகிக்கு. உயிர்ப்பன்னி-பிராண நாயகி.

26. இளையன் - குமாரக்கடவுள். கன்று-பிள்ளை, வள்ளிநாயகி. ஒன்றும்-பொருந்தும்.

27. மூக்கின் ஓட-நாசியினுனியிற் செல்ல. முகிழ்த்து - (சிறிது) மூடி. வேள் - முருகக்கடவுளை. நோன்மையர்-தவசிகள் வாக்கினூடு-வாக்கினிடு விலும். பெருக்கு - பெருகுதல். தேக்கும்-நிறையும். தேறல்-தேன்.

28. அன்பினர்க்கும் - அன்பினரிடத்தும். செலாது உளம்பேதுறும்-போகமாட்டாது மனமயங்கும். ஆறும்-என்பதில்-உம்-அசை.

29. தாயின்-இதில் இன்சாரியை. தோன்றுகை - தோன்றுதல். பாயும்-பாந்த. பூதங்களாதி மூலப்பகுதியின் றோற்றங்கட் கேதுவாமெனக் கூட்டுக. மூலப்பகுதி-மூலப் பிரகிருதி.

30. ஓம்புதற்கு - பேணுதற் பொருட்டு. அயர்ந்து - செய்து. ஐயனும்-குமாரக்கடவுளும். கலவி வேட்பது-போகத்தைவிரும்பியது.

31. செய்கை-செய்தி. நாடி-ஆராய்ந்து. கதிர்-சூரியனும். கடவா - கடந்துசெல்லக்கூடாத.

32. ஓங்கல் - மலை. மதத்தோங்கல்-மதத்தையுடையயானை. தேங்கு-நிறைகின்ற. தெய்வதம் - தெய்வம். திரு-(இங்கே) வள்ளியம்மை.

33. ஆலம்-விடம். அழன்று-கோபித்து. மொய்த்த-கூடிய. கேள் - சுற்றம்.

34. கூசி - நாணி. கவிழ்ந்தாள்-தலைகுனிந்தவளாகி.

35. கவல் ஒரீஇ-கவலை நீங்கி.

36. அமைய-பொருந்த. ஆறணிந்தான்-சிவபெருமான்.

37. உதயங்காட்டுதல்-உதித்தல். துகிர்வரை-பவளமலை. வரைச் சீறாரசன்-மலைப்பக்கத்துள்ள சிற்றூர்வேடராசன். உயர் வரை-உயர்ந்த இமயமலை.

38. பருகுவான்போல - உண்பவனைப்போல. குழலாள்-கூந்தலையுடைய வள்ளியம்மை.

39. மட்டு-அளவு. மயூரம் - மயில். கட்டழகு-பேரழகு. மயிர்க்கூச்சு-மயிர்ச்சிலிர்ப்பு. எறிதர - (ஒளியை) வீச. சிட்டருள் - ஞானிகளிருதயம். சேய்-குமாரக்கடவுள்.

40. புலமை-அறிவு.

41. கோரம்-அச்சம். சூர் - சூரன். குருதி-இரத்தம்.

42. குழூஉக்கொடு - கூட்டங்கொண்டு. முறை - விதி. மன்றல்-விவாகம். வருதி-வருவாய. ஆல்-அசை.

43. தந்தி-யானை. கோட்டுக்கால்-கொம்பாகிய கால்கள். துணர் - பூங்கொத்து. கொம்பர் சாய்த்து - கொம்புக்களை வளைத்து. விந்தை-விந்தைமலை. தோகைப்பீலிவேய்ந்து-மயிற்றோகைகளாலே மேய்ந்து. பந்தர் - பந்தல்கள்.

44. ஆக்க-ஆக்கும்பொருட்டு. ஆக்கப் போந்தானெனக் கூட்டுக.

45. கேசம்-கூந்தல். கேழ் கிளர்-நிறம் விளங்குகின்ற. கவின் திருத்தி-திருத்தமாகப் புனைந்து. காதிற்பூசலார்-காதுகளோடு போர்செய்கின்ற. சந்தம்-சந்தனமரம். தழையுடுத்தி-இலையைச் சூழச்செருகி. ஈசன்-முதன்மையானவன.

46. குனிக்கும் - வளைக்கும். குலமுறைமை-குலத்தின் வழக்கம். தருகுவன்-கொடுப்பன். தருகுவன் என்பதில்-கு-சாரியை.

47. வன்னவான்-அழகிய பெரிய.

48. போந்து - வந்து. தோமுறும் அணிகள் - குற்றம்பொருந்திய ஆபரணங்கள்.

49. கங்குலின் - இருள்போலும். கவின-அழகுபெற. மங்கலம்-நன்மை.

50. நானம் - கத்தூரி. நாப்பண்-நடு. வானவிற்சுட்டி - இந்திர தநுசு போன்ற நெற்றிச் சுட்டி. சங்கிலி-மயிர்மாட்டி. சேர்த்த - சேர்க்கப் பட்டன. உண்டானது உண்டாகில் - இருந்தது உளதானால். அதற்கு - அம்பின்னலுக்கு. இணை - (அச்சுட்டி சங்கிலிகளை) உவமானம்.

51. மான் அத்திங்களை -(சந்திரனிடத்துள்ள) மானானது அச்சந்திரனை. கொள்ளுதி - கொள்ளுவாயாக. திலகமாய் - பொட்டாகி. இலவுவன்-பிரகாசிப்பேன். தொல்நாள்-பண்டைக்காலம். உற்றிடுதல்-(அவ்வாறு) வந்திருத்தல்.

52. உருவகப்படுத்தின் - (குணமுதலியவற்றால்) ஒன்றையொன்றாகச் சொல்லப் புகுந்தால். உரோணியை-உரோணி நட்சத்திரத்தை. மதியம் எந்தி முத்தாடும் ஆறாய் - சந்திரன்தாங்கி முத்தமிடு முறையாக. ஆகவென்பது. ஆயெனத் திரிந்தது.

53. சுருதியுங் கருதா - வேதங்களாலு நினைத்தற்குக் கூடாத. கூலம்-கரை. கண்ணேறு - திட்டி தோஷம். ஆற-தீர.

54. வண்டெனா-வண்டின் (இசை) என்றுசொல்ல. கபோலச் செவ்வி - கன்னத்தினழகு. ஒதிமக் கொல்லன்-அன்னவாகனதலைசயுடையகம்மியன், பிரமன். கஞ்சனம்-கண்ணாடி.

55. விளர்ப்ப-வெளுக்க. உள்ளம்-அகம். காமர்ஓதி - அழகிய கூந்தலையுடைய வள்ளியம்மை. குழை - காது. மணித்தோடு-இரத்நமிழைக்கப்பட்ட தோடு. திருவினிற்பொலியும் - சிறப்போடு விளங்கும்.

56. பூவை-காயாமலர். இதழ்-அதரம். யாவகம்-செம்பஞ்சு. எழுதும்-தீட்டும். வான் கிளிக்கு-நாயகனாகிய கிளிக்கு. கோவைக்கனி நேரென்ன (அவ்இதழுக்கு) கோவைப் பழம் ஒப்பென்று.

57. ஓதை-ஒலி. கந்தரம்-கழுத்து. பூசும் (அக்கழுத்திற்) பூசப்படும் சாந்து அகிற்கலவியின்-வயிரமுள்ள அகிற்குழம்பினழகால். மூந்து - முற்பட்ட. சேதகம்-சேறு.

58. முகையின்-அரும்புபோலும். மருப்பின்-கொம்புபோலும். மதர்ப்பு-செருக்கு. தணிப்பான்-நீக்குதற் பொருட்டு.

59. வாரி-அள்ளி பகலாயசேடி-பகற்காலமாகிய பாங்கி. மேரு - மகாமேருமலை

60. வெயில் - பிரகாசம். மேகலை-மேகலாபரணம். பொன்பயில்வுறு - பொன்னூற் பற்றுதலுற்ற. பூண்சேர்த்து-பூண்பிடித்து.

61. துகிர்-பவளம். தேவர்மூவர்-திரிமூர்த்திகள். உளகுணம் (அவருக்கு)ள்ள நிறங்கள். மூன்று-வெண்மை, செம்மை, கருமை.

62. வசந்தகாலப் பாவை - வசந்தகாலமாகிய பெண்ணினுடைய. பூங்கொம்பில்-பூங்கொம்பாகிய (கைவிரல்களில்). பூப்ப-பொலிவாக

63. முண்டகம்-தாமரை. தளிமம்-கோயில். அன்னம் - அன்னப்பறவை. விண்டு-வாய்திறந்து. ஆற்றுதல் - ஒலித்தல்.

64. வான்-பெருமை. கதிர்வனப்பு-ஒளியழகால். ஒளிய-பிரகாசமுடைய. நீலம்-நீலமணிகளை. அழுத்த - பதித்தற்கு. கேவணம்-மணிகள் பதிக்குங்குழி.

65. வாய்ப்பச்செய்த கோலச்செவ்வியின் செய்கையை எனக் கூட்டுக. எவ்வம்-துன்பம். உள்ளம்வைத்தான்-உட்கொண்டான்.

66. வாரி-கடல். வயா-வருத்தம். பெயர் - பெருமை. திரிசுதந்திரத்தர்-முக்காணிப் பிராமணர்கள். காரிகைச் சடங்கு-அழகிய (கலியாணக்) கிரியை. காட்ட - (தாற்பரியர்) செய்ய.

67. இருக்கியம் - இருககிருத்திய மடங்கிய நூல். சுருதி - விதி. நியதி- கிரமம்.

68. குறக்கோமாட்டி - வேடராச ன்மனைவி. ஆசமனம், அருக்கியம்-பெ ரியவருக்குச் செய்யுமுபசாரம் (பூசாவி தியிற்காண்க). மாதவன்-பெருந்தவத் தையுடையவேடராசன். மதுபருக்கம்- பால் பழம் தேன் சருக்கரை கலந்து பிசைந்த வுணவு.

69. இருக்கியத்தின் - இருககிருத்தி யநூலின். ஆசமமரபின் - சிவாகம மு றையின். செய்வினைச் சமிதை - செய் தொழிற்கு வேண்டுஞ் சமித்துக்கள். அரிணம்-மான்.

70. கந்தரம் - கழுத்து. புனைவித் து-பூட்டுவித்து. ஐய-அழகிய. சுலன ன் - அக்கினி.

71. மனமாம்-மனம்போலும். தூ ன்முறை - சாஸ்திர விதிப்படி. உள் ளம்-மனம். நோன்மை-வலிமை. வான்- ஆகாயத்தில். சாலி-அருந்ததி. பார்த் து-(பிறவினை) பார்க்கச் செய்து.

72. பணை - குழல். ஓதை - ஓசை. ஆர்த்த-நிறைந்தன. கணம்-கூட்டம். தூர்த்த-சொரிந்தன.

73. விந்தைக்குன்றவர் - விந்தைம லைவேடர். சாபம்நீங்கி -(தங்களுக்கு எமமுனிவனாற்கொடுக்கப்பட்) சாபத் தைவிடுத்து. வேனுலகம் - கந்தலோ கம். மருங்கு-இடை. விசாகன் - குமா ரக்கடவுள்.

74. தோகை-மயில். சாரல்-மலைப் பக்கம். கந்தமாதனம்-செயந்தி நகரத் திலுள்ள சந்தனசைலம்.

75. காடி தக்கை - இவையனைத் தும் பலவாத்தியங்கள். பரவையின் - கடல்போல.

76. வேள்வி-விவாகம். தெய்வவா ரணத்தணங்கு - தெய்வயானையம்மை. நோற்று - தவஞ்செய்து. அன்னாள்மு ன்-அத்தன்மையான அவளுக்கு எதி ரே. கொண்டான்-கொண்டிருந்தான்.

77. கலுழி கான்றநால்வாய்-மதச லத்தைக் கக்கிய தொங்கியை வாயை யுடைய. களிறு-யானை. சுந்தரி - தெய் வயானையம்மை. ஆன்ற - நிறைந்த. எ ன்ற-பொருந்திய.

78. மாது - வள்ளிநாயகி. செம் மை - ஒழுங்கு. சிந்தனைசெய்ய - தியா னிக்க. புத்தேள்-கடவுள்.

79. கோலம்-அழகு. வெள்ளைவா ரணன் குமாரி - தெய்வயானையம்மை. உளங்களித்தாள் - மனத்திற் (கண்டு) மகிழ்ந்தாள். குறிப்பு - எண்ணத்தின் பாற்படும் விஷயங்கள்.

80. அத்தன்-பிதா. நாதன் - கட வுள். சூலி-பார்வதி. காதலன்-நாயகன்.

81. முழுத்த - பூரணமாகிய. மூர் த்தி-மூர்த்தியே இலிங்கத்து - இந்த இலிங்கத்தினிடமாக விருந்து. அண் டச் சூழல் - அண்டத்தினிடங்களில். உள்ள அளவும்-உள்ள உயிர்களனைத் தையும்.

82. சேய் - பிள்ளையாகிய குமாரக் கடவுள்.

83. கேளா - கேட்டு. பேதுறல் த விர்தி - வருந்துதல் நீங்குவாய். திண் ணம்-உறுதி.

84. குஞ்சிதசரணம் - தூக்கியபா தம். சந்தம்-சந்தனவிருக்ஷம்.

85. மேருவின் - மேருமலையைப் போலும்.

86. உழை-மான். விழைவு-விருப் பம். வேழமான்-தெய்வயானையம்மை. குழைவு - உருக்கம். குவித்தவள்- குவித்தனளாகி.

87. கடவு-செலுத்திய. வலக்கை- (தெய்வயானை யம்மை) வலப் பக்கத் துக்கையை. இடது - இடப்பக்கத்து- கோலம் - அழகியதோற்றம்.

88. வான்-அரசு. சுவர்க்க இராச்சி யம் - அளித்த-(இந்திரனுக்குச்) கொடு த்த. போதும் ஆறு-வருமுறை.

89. சீயம் - சிங்கம். சோதிவேலு டையகாளை எங்கோன் எனக்கூட்டுக.

90. ஞானசத்தியின் - (விட்டுநீங்காத) ஞானமாகிய சத்தியோடு. நவை-குற்றம். பாகம் - (இரண்டு) பக்கம். வேற்படை - வேலாயுதமாகிய ஞானசத்தி. வள்ளிநாயகியுந் தெய்வானைநாயகியும் - இச்சாசத்தி, கிரியாசத்தியென்க.

91. வேட்டகாதலி (தான்) மணந்தநாயகி. ஞானச்சிந்தை - ஞானம்பொருந்திய மனம்.

92. தாரகம் - பிரணவம். குழைத்தான் - வளைத்த சிவபெருமான். அருளோடு-அருள் விரும்பதலுடன்.

93. தாபதர் - முனிவர். மோனயோகம்-ஞானயோகம். இசைய - பொருந்த. சினகரம்-கோயில்.

## 9. பிரமாவுக்கு வரங்கொடுத்த அத்தியாயம்.

1. நான்கென விதித்துள-நான்காகவகுத்த. ஆதி - சிவபிரான். உதவும்-(வரம்) -கொடுக்கும். சுகன்அறைதியென்றானென்க.

2. பரன்குரு - சிவபிரானுக்குக் குருவாகிய குமாரக்கடவுள். வழாது-தவறாது. சுருதியொடு-வேத(விதி)யுடன். அருகு (மேரு) பக்கம்.

3. என்றும்-எக்காலமும். மன்ற-மிக. தென்கால-தென்றற்காற்று. உலவும்-சஞ்சரிக்கும்.

4. நல் நம்பொருளும்-நல்ல நம்முடைய திரவியங்களையும். மாதரையும்-பெரிய நிலங்களையும். சீரியன - சிறப்பாயுள்ள (பிற) பொருள்கள். சும்மைகொடு-பாரமாகக் கொண்டு. (அஃதாவது: கடமையாக வெண்ணிக் கொண்டு என்றபடி. தொழிற்கு- (திரிசுந்திரர்களேயுங்கள்) வேலைக்கு. உரியது - உரிமையுடையது. இம்மை-இப்பிறப்பின்பம். அம்மை - வருபிறப்பின்பம்.

5. அதில்-அவ்விரண்டாயிரத்துள்.

6. சந்ததமும்-எப்பொழுதும். தரிசித்து-பார்த்து.

7. உள் நவிற்றாது - மனத்திலேதியானியாமல். ஈனம் - குற்றம். மானம்-அன்பு. மேனிலை-மோக்ஷம்.

8. பரிசு-தன்மை. வீடேம்-(விகாரம்) விடேம். மன்னுதொழில் - நிலைபெற்ற (வழிபாட்டுச்) செய்கை. விடேமாயினுமெனக் கூட்டுக.

9. நித்தமும்-தினந்தோறும். மூழ்க- (யாங்கள்) ஸ்நானஞ் செய்யவும். சித்தி - இட்டசித்திகள். விழை - விரும்புகின்ற. பவுத்திரர்கள்-பேரர். புண்ணியம் அருத்தம் - அறம் பொருள். அத்தகைய- அந்தத்தகுதியையுடைய. மூலமும் - காரணமும். அது-பகுதிப்பொருள் விகுதி.

10. நல்குரவு-தரித்திரம். ஞானம்-அறிவு. காட்டி - விளக்கி. செல்வம-ஆக்கம். வர தீர்த்தம்-சிரேட்டமுள்ள தீர்த்தம்.

11. வேலை-(இங்குள்ள) சமுத்திரம். விதித்தார்-(ஒவ்வொரு புண்ணியகாலங்களை) விதித்தனர். (ஆதலால்) ஏழையர்-அறிவிலிகளாகிய யாங்கள். வாலிய - வெள்ளிய. மூலம் - ஆதி. இடை-மத்தி. ஈறு-அந்தம்.

12. கட்டுரை-உறுதிமொழி. சிலையின்-வில்லால். இருநூறு அளவு-இருநூறு இடையிட்ட தூரத்தில். இலைகொள்-இலைவடிவுகொண்ட. விட்டான்-செலுத்தினான்.

13. அளாவி - கலந்து. தொட்டவழி - தோண்டிச் சென்ற மார்க்கம். கங்கை-(திரிசுதந்திரர் கேட்டுக்கொண்ட) தீர்த்தம்.

14. வேலைகரை-சமுத்திரக்கரை. மீமிசை - மேலும் மேலும். வாலிய - வெள்ளிய. மூலம் இன்று-(தனக்கொரு) காரணமில்லாமல். மூந்துற-முதலாவது.

15. இந்திரப் பெருவள இன்பத்து உய்த்தலால் - (தன்கண்மூழ்குவாரை) இந்திரனது பெரிய செல்வத்தோடு கூடிய சுகபதவியிற் செலுத்துதலால். கந்தபுட்கரிணி - கந்தபுட்கரிணி யென்னும் பெயருடைய தாகி.

16. திரிபுவனங்கள்-திரிலோகங்களினுமுள்ளவர்கள்.

17. முன் அருளி-முன்பு உண்டாக்கிக்கொடுத்து. பதசேவை - திருவடிவழிபாடு. எவரும்-எல்லாரும். இதிகாசம் - பண்டைக்கதை. கூறுவரன் (பின்பு) சொல்லத்தொடங்கினன்.

18. திரை-அலை. தீர்த்தத்து-தீர்த்தத்தில். வழாது-வழுவாது. மறைச்சுருதி-(இருபெயரொட்டு) வேதவிதிப்படி.

19. நனைமுறுக்கு - பூ அரும்பின் கட்டு. அவிழ்தரு-விரிகின்ற. முனம் உளகற்பம்-பழைய கற்ப காலத்தில். முராரி-விஷ்ணு. பனகாப்பண்-ஆதிசேடனடுவில். நீத்து - விட்டு. வான் தனு-பெரிய வில்.

20. செற்றம்-கோபம். கொற்றம்-வெற்றி. அற்றம்-அழிவு. ஆதிசேது - முதல்அணை. கோலினன்-வளைத்துக் கட்டினன்.

21. மாதவன்-ஸ்ரீராமன். மூன்று-மூன்று கற்பாந்தங்களில். (இது தொகைக்குறிப்பு). இவண்-இவ்விடத்தில். ஆதியில் - முதலிலே. பூதலத்தமரர் - பூசுரர், திரிசுதந்திரர்.

22. சந்நிதிச் சிந்து - சந்நிதிமுன்னேயிருக்கப்பட்ட கடலில். அலால்-அல்லாமல்.

23. சந்தன வரை - கந்த மாதன மலை. செரு - யுத்தம். பிறங்கல் - மலை. முயன்று-முயற்சியாற் செய்து. தேம்பி-இளைத்து. ஆடகத்து அருவரை - (அந்தப்) பொன்மயமாகிய அரியமலை. ஆக-(தான்) ஆக.

24. தவத்தினுல்- தவத்தாலாகிய சோகவெப்பத்தால். வயின் - இடம். நோற்றலும் - தவஞ்செய்திருத்தலும். நோன்மை - வலிமை. காற்றினின் - வாயுதேவனால். முத்தலைக்கவின் - மூன்று சிகரத்தின் அழகு. ஆற்றல்சால்-பலமிகுந்த. வாயுவினுல் சிகரமிழந்த கதை கந்தபுராணத்துட் காண்க.

25. சந்தச்சாரல் - (அண்மைவிளி) சந்தனசலமே. பொற்றையாய்-சிறுமலையாகி. நவிற்றுதி-வாழ்த்துவாயாக.

26. நடந்துள-நிகழ்கின்ற. மிடைந்த- நெருங்கிய. துணிவு-உறுதி.

27. வாரிசம்-தாமரை.

28. தருக்கு-மகிழ்ச்சி. சாரல் - மலையும். இருக்கினுல் - வேதவிதிப்படி. பெட்பு-ஆசை.குருக்கும்-உண்டாகும்.

29. அகந்தை-கருவம். பன்னகம்-பாம்பு. பழித்து-நிந்தித்து.

30. என்றலை - என்றிங்ஙனமாக தலை. காரி - (வயிரவரை நோக்கி) வைரவனே. கன்றலை - கோபமுடையையாகி. சோரிநீர்-இரத்தசலம். நின்று-(தலையி) னின்று. உகிரின் நீக்குவாய் - நகத்தாற் கிள்ளியெறிவாய்.

31. நளினப்பூ - தாமரைப்பூ. செ ன்றனன் செயிர்த்தனன் :- (முற்றெச்சங்கள்) சென்று கோபித்து.

32. ஈர்ந்தபின் - (வயிரவர்பிரமன் றலையைக்) கிழித்தெறிந்தபின். சுதனைத்தேற்றப் பாகந்தேர்ந்தன னெனக் கூட்டுக. தேர்ந்தனன் - ஆராய்ந்தான்.

33. பெண்மையில் (மோகினியாகிய) பெண் தன்மையினுலே. பேதுற-மயங்க. ஓர் - ஒப்பற்ற. மண்மயில்-பூமிதேவியாகிய மயிலிடத்து. வான் முகில் - பெரியமேகம்போலும். தண் மயில் - குளிர்ந்தமயில் வாகனத்தையுடைய. ஓதுவேனென-உபதேசிப்பேனெனநினைத்து.

34. ஆர்வம் - அன்பு. அம்புயக்கணே-தாமரை மலரிடத்தே. ஓர்வுற-உணர.

35. ஒருதலை - உறுதியாக. போயுளது - போனதாகிய. உனதுசென்னி-உன்னுடையதலை. வருதலை - வரவை. மாமுதல் - மாமரமாகிய சூரனை. புலவு-புலால் நாற்றத்தை. இருதலை-இரண்டுபக்கமுந் தலைகளையுடைய. (இதனை முருகக்கடவுள் வேலுக்குச் சிறப்புப்பெயரென்பாருமுளர்) "இருதலை படைத்த வெஃகம்" என்னுங் கந்தபுராணம் சூரபன்மன் வதைப்படலத்துட் காண்க.

36. மரபின்-முறையாக. உரு அகத்துஎற்று-பலதரம் மனத்தில் எண்ணித் தியானிப்பாய்.

37. தியானித்தான் தவம் - (அங்ஙனம்) தியானித்த பிரமாவின் தவத்தை. நோற்பது எதென - தவஞ்செய்வது என்னையென்று கேட்க.

38. சேதிப்பாகலின் - அறுபட்டமையினாலே. யான் வருத்தமுற்றேனெனக்கூட்டுக. நோற்ற ஆறு-தவஞ்செய்தவிதத்தால். என - வேண்டாகூறலால். அசையாக்குக.

39. நெஞ்சு அழிந்தனன் - மனநிலை கெட்டவனாகிய. எற்றொழுது-என்னைவணங்கி.

40. மேருபுயம் - மகாமேரு மலைபோலுந் தோள்கள்.

41. சவுரியீசன் - உமாமகேசுரர். இனியபேர் வாஞ்சைமணி - இனிமையுள்ள பெரிய ஆசையாகிய இரத்நம். வினையில் - நல்வினை தீவினையென்பவையில்லாதொழிதற்கு. தாரகமாக - மூலமாகியபிரணவசொரூபமாக. பேடகம்-பெட்டி.

42. திருவருளனுவால் - சிறிது திருவருளால். மூவரில் - (நான்முதலிய) திரிமூர்த்திகளாலே. ஞானம் - அறிவு வடிவம்.

43. வெளி-ஆகாயம். மகத்துவம் ஆங்காரம்-மான், அகங்காரமென்னுந் தத்துவங்கள். பூந்தோடு - பூவினிதழ்களால். அண்டம்-முட்டைவடிவமுள்ள உலக (மாகிய மலர்கள்). ஒன்று-(அவற்றுள்) ஒன்று. நான் - (பிரமனாகிய) நான். பான்மை ஆம் - பகுப்புண்மையாம். ஈதுபோலாம் - இதுபோலாகும்.

44. ஐயன்நீ-குருவாகியநீ. பீடம்-ஆதனம். முடிவுசேரு - அளவு அறியமாட்டா. யாவர்க்குங் குருவானோர்-சிவபிரான்.

45. உன் - உன்னுடைய. வசிய சூரணத்தால் - வசிய மந்திரத்தினால். வல்லாள்-வல்லமையுடையாளானாள்.

46. மூன்றும் - மூன்றுலகத்தாருக்கும். தருதற்கு - (ஐசுவரியத்தைக்) கொடுப்பதற்கு.

சமலை - இலக்குமி. தியானம் - (வேறுவேறாகச்) சிந்தித்தவற்றை. மலைவற-மாறுபாடு இல்லாமல்.

47. தத்துவத்தாங்கம் - (தொண்ணூற்றாறு) தத்துவங்களாகிய அலை. தணப்பு - பிரிவு. மோகம் - ஆணவம். மாயம்-மாயை. வித்து-கன்மம். இடங்கர்-முதலை. வேள்மதி - மன்மதனாகிய சந்திரனை. ஆசைகண்டு - ஆசையுடன் பார்த்து. நாவாய்-தோணி.

48. வீர ஆசனம் - யோகாசனத்தினொன்று. வாமம்-இடப்பக்கம். ஞான முத்திரை- சின்முத்திரை. உவாமதி-பூரணசந்திரன். வடிவமாகி-திருவுருக்கொண்டு.

49. வானவன்-சிவபிரான். குறித்தமேலவர் (தன்னைமனத்திலே) தியானித்த உயர்ந்தோர். சிவகுரு-சிவாசாரியார். மூலம்-காரணப்பொருளே.

50. சரீரம்-பிணம். துன்- (அப்பிணத்தினிடத்து) நெருங்கிய. நோக்கவும் - (அருவருத்துப்) பார்க்கவும். துணிவு - துண்டலை. தேற்றும்- (தாற்பரியம்) ஆக்கும்.

51. தேறலாம்-தேனுண்டாகும். இபவுள்-கடவுள். தியானத்துஎன்பதில்-அத்து-தவிர்வழிவந்த சாரியை. குளிர்ச்சி-(பிறவிவெப்பம் நீங்குந்) திருவருள்.

52. நெக்கு-நெகிழ்ந்து.

53. கொடுப்பது-(நாம்) தருவது.

54. பேதுறேல்-மயங்காதே. வேட்ட-விரும்பிய. முனர்-முன்னர். மீள-(அது) மீண்டெய்த. அருள்-கருணையால். இரங்குக-இரக்கஞ் செய்வாயாக.

55. முராரி-விஷ்ணு. காதலன்-மைந்தன். எய்துகாலம் (சிரசு) வருங்காலத்தை. ஓங்காரம்-பிரணவத்தோடு. ஓர்-உணரப்பட்ட. அறிவும் கழறி-ஞானத்தையும் போதித்து. காமர்-அழகு, ஆசையுமாம். பகர்ந்தவா (முருகக்கடவுள்) அருளிச்செய்த விதம். தன்ஆல்-அசைகள்.

56. வரமம்-அழகு வயா-ஆசை. நோற்றற்கு-தவஞ்செய்தற்கு. மூலம்-முதலாகிய. ஓம்-பிரணவம்.

57. அடைவினுல்-முறைப்படி. முன்னம்-(அப்பிரமன்) எதிரே.

58. ஆன்ற-அமைந்த. அயர்வு-தளர்ச்சி. எம்முன் கொண்டிருந்த தெனக்கூட்டுக. என்ற உரை-பொருந்திய வார்த்தை. கான்ற-கக்கிய. சோர-ஒழுக.

59. அருத்தியின்-ஆசையோடு. திருத்து, பொருக்து-விகாரமொழிகள்.

60. அவிரும்-விளங்கும். சிவணும்-பொருந்தும். சிறப்ப-விசேடமாக.

61. ஆய்-ஆராயப்படும். கதிரின்-பிரகாசத்தையுடைய. பாம்பொடுமதியும் நதியுமெனக்கூட்டுக.

62. ஆலகாலம்-விடம். ஓர்கோலம்-ஒப்பற்ற அழகு. கொள்கை-குணம். புரத்து-(திரி) புரத்தில். ஏல-பொருந்த.

63. கனற்றும்-சுடும். தாபம்-(வாசனைப்) புகையுண்ட. சாமகானனே-சாமவேத கீதத்தையுடையவரே. தகைய-தகுதியுடைய.

64. தரு-கற்பகம். தேனு-காமதேனு. பண்-சீர். மணி-சிந்தாமணி., இவைகள் கேட்டவற்றைக் கொடுக்கும் பொருள்கள்.

65. எள்ளல்-இகழ்ச்சி. சென்னி-தலை. தேம்பினேன்-வாடினேன். அதுவுமன்றி-அத்தலைபெற்று. பண்ணினேன், இனவெதுகை.

66. நாகுஇளம்-(இருபெயரொட்டு)-மிக இளைய. கோடி-கொள்வாய்.

67. சிந்துபுரம்-திருச்செந்தூர். ஏற்றம்-உயர்வு. மாற்றம்-மாறுபாடு.

68. என்ன-என்று முன்-முதலில். ஆறுமுகக் குமரேசன்-ஆறுமுகங்களையுடைய குமாரக் கடவுளுக்குப் பிதாவாகிய சிவபிரான். (பின்) அன்னவன்-அத்தன்மையுடைய குமாரக்கடவுள். தணப்பு-நீக்கம். விமானவுரு-விமானவடிவம்.

69. வேத-பிரமனே. அம்மானத வாவியுளாய்-அந்தமானத தடாகத்தையுடையவனே. உனக்குளகற்பம்-பிரமகற்பம். மேல்நன்றெனக் கூட்டுக.

70. நம்முள சாரூபம் (அக்காலத்தில்) மேவுதினெனக் கூட்டுக. கள்நளின ஆலய-தேனொழுகுகின்ற தாமரைக் கோயிலையுடையபிரமனே. கந்தவரை-கந்தமாதனமலை. பொருக்கென்று-விரைவாக.

71. தலைமை புரிந்திட-(நம்முதவியின்படி சமுத்திர ஸ்நானஞ்செய்து விமானவடிவா யிருக்கும்) முதன்மையைச் செய்ய. சாரூப நிலைமை யடைந்திடில்-(நாமுற்கூறியபடி) சாரூபத்தன்மையை (நீ) அடைந்தால், உன்தலை-உன்னிடத்தில. நோாம்-நோாக வந்து பொருந்தும். ஆழியில் நித்தமும்-(விதிவிலக்கு நோக்காது சந்நிதிச்) சமுத்திரத்தில் தினந்தோறும்.

72. மாயன் - விஷ்ணு. இராமாவதாரமூன்று-பரசுராமாவதாரம், பலராமாவதாரம், தசரதராமாவதாரம். இது-இச்சேது.

73. திரை - கடலில். சேதுவும்-அணையும். கண்டு - உண்டாக்கி. புரிந்தனன் - (அவ்விஷ்ணு) செய்தான். அயன் - பிரமனே. தலைப்பான்மை - தலையை விரும்பிச்செய்யும் தன்மையான. வதனாரம்பம்-(சந்நிதியிலுள்ள கடலாகிய) முகாரம்பம். முகத்துக்குந் தலைக்கும் வேற்றுமையின்மையுணர்க.

74. முற்று-முழுவதும்.

75. சோற்றிய - (செய்யியவென்னும் வினையெச்சம்) (இட்டகாமியங்களின் பிரயோசனம்) தோன்றும்பொருட்டு.

76. தரு-கற்பகவிருக்ஷத்தை. குளகென-உணவென்று. பணை-பருத்த. புடை-இடம். கலுழி-(மதமாகிய) கலங்கல் நீரை. தமிழ்ச்சாரல் - பொதியமலைப்பக்கம்.

77. மூலம் - அடிவாரத்தில். ஆடுவான் - ஸ்நானஞ்செய்யும் பொருட்டு. மாதவனுகிய அயக்கிரீவனெனக் கூட்டுக. (இவர்விஷ்ணுவினவதாரமானவர்) பாரா-பார்த்து. தெரிவை - கனகசுந்தரி. பரிமுகமாகென - குதிரைமுகமாகப்பிறப்பாய் என்று.

78. தவிர்பகல்-நீங்குங்காலம். மாதவனுபி யுதித்துளான் - பிரமன். போந்தலை - (முன்னாளிலே) இழந்துபோனதலை. வருதலை-வரவைப்(பெற).

79. உளது - உள்ளதாகிய. அவ்வரைக்கண் - அவ்வெல்லையினிடத்து. இடை - நடுப்பக்கமாக. மந்திரத்தின்-கோயிலின். முந்து-எதிரே.சிந்துவின்-சமுத்திரத்தில். மொய்குழல்-கனகசுந்தரியே. போய்-(வருஞ்சனனத்தில் நீ) போக. போய்-நீங்க. அந்தமுகம்-பண்டைய முகம். போய் இரண்டும், எச்சத்திரிபுகள்.

80. சனனச்சுமை-பிறவிச் சுமை. மேனி-சரீரத்தால். முகம்பரி போன்று ஆயினள்-முகம் குதிரையையொத்து (உள்ளாள்) ஆனுள். (குதிரைமுகத்தோடு பிறந்தாளென்றபடி).

81. அந்தரவாணி-அசரீரி. சுதை-மகள். மா-குதிரை. ஆனனம்- முகம். நல்முகன்-நல்லமுகம். ஆக-ஆவதற்கு.

82. மாபின்வழி - வம்மிசத்தின் பரம்பரை. சுழிஎறியும் - நீர்ச்சுழிகளை வீசும்.

83. தாரகம்-பிரமப்பொருள். சங்கமவேலை - நதியுங் கடலுஞ் சந்திக்குமிடம்.

84. வதனாரம்பம் (சந்நிதியிலுள்ள) சமுத்திர தீர்த்தம். கோடகம் - குதிரை. உவாமதி-பூரணசந்திரன். உளம் துளங்கினள் - (தாற்பரியம்). மனம் சிறப்புற்றாள்.

85. மடவால்-அங்கசுந்தரி. மீழ்கி-(மீட்டும்) ஸ்நானஞ்செய்து. ஒற்றர்-தூதர். கடிது - விரைவில். உய்த்தாள்-அனுப்பினுள். பஞ்சவர்கோன்-உக்கிரப்பெருவழுதி.

86. கவுரியர்-பாண்டியன். உவரி-வதனாரம்பக்கடல்.

87. வாஞ்சா தீர்த்தம் - வாஞ்சை தீர்த்தம். (நினைத்தவற்றைக் கொடுக்குந் தீர்த்தமென்றபடி).



## 10. திரிசுதந்திரர் வரலாறுரைத்த அத்தியாயம்.

1. பற்று-அன்பு

2. சுகமுனி-சுகமுனிவனே. ஒன்றாக - ஒற்றுமையுடையவராக. முகமன்-உபசாரம். மோனத்தாண்மை-மௌனத்தாற் பெறப்படும் ஞானம்.

3. முதுக்குறை - பேரறிவு. முனிவர்குழு - முனிவர்கூட்டங்கள். தாம்-அசை. மகி-பூமி.

4. ஆறெனுங் கருமம் - ஓதல்முதலிய அறுவகைத்தொழில். ஆற்றுவார்-செய்வாராய். உளர் இவர் மும்மையார்க்கு-உள்ளாராகிய இந்தமூவகையார்க்கு. ஆய்ந்திடா-ஆய்ந்து.

5. வான்பிரமசரியத்தால்-பெரிய பிரமசரிய நிலையில். பெட்பு - ஆசை. கருமம் ஆற்றுவார் - (அப்போதப்போது செய்யவேண்டிய) தொழில்களைச் செய்வார். ஆர்வம்-அன்போடு. ஊட்டுவார்-(அவர்களை) உண்பிப்பார். வரு-(தாங்கள் இல்லறத்தையடைந்து அதனால்) பெற்ற. சுதரைக் கொண்டு-பிள்ளைகளைக்கொண்டு. அவாசிக்கண் உள்ளார் - தென்றிசையிடத்துள்ளாராகியபிதிரர்கள்.

6. தருமம் - (சிராத்தாதி) புண்ணியங்களை. அக்குரம்பு-அந்தப்பகை. செய் - செய்ய. கமலத்தனைநோற்கும்-பிரமதேவனை (நோக்கித்) தவஞ்செய்யும்.

7. புகழ்ச்சி-வழிபாடு. தேவன்இறைவனெனக் கூட்டுக.

8. தஞ்சம்-பற்றுக்கோடாக. விஞ்ஞையாய்-அறிவையுடையவனே.

9. புடவி-பூமி. சுவர்க்கம்-பொன்னுலகம். நின்உலகம்-சத்தியலோகம். காமுற்றேம்-விரும்பினோம். அவண் இடைதோறும்-அவ்விடங்கடோறும். சுதந்திரம்-சுவதந்திரம், பிறராலேவப்படாதிருத்தல். அருள்என-அருளென்றுகேட்க.

10. அக்கினி வெம்பும் அவர் (யாகாக) கினியை விரும்பும் அம்முனிவர். வேட்டமூவரம்- (பிரமாவினிடத்தில்) விரும்பிய (அந்த) மூன்றுவரங்களையும். சூலபாணியும் அளித்தனனெனக் கூட்டுக.

11. உளம் கூட்டுற-மனம்பொருந்த.

12. முப்புவனம்-பூமி, சுவர்க்கம், சத்தியலோகம். பொருநையங்கரை - தாம்பிரபருணி நதிதீரத்தில்.

13. இலக்கம்-தொகை.

14. முதுகுன்று - விருத்தாசலம். சூழ்-சூழ்ந்த. வினைக்கருமலம் - வினையாகிய கரிய (மாயா) மலம். இருமை-இரண்டு.

15. தறுகண்-அஞ்சாமை. யானை-(விநாயகராகிய) யானை. தாரம்-வள்ளிநாயகியாகிய மனைவி.

16. பத்திமை - பத்தித்தன்மை. வித்தகர் - (அந்தச்) சதுர்ப்பாட்டையுடைய திரிசுதந்திரர்.

17. புண்டரீகம் - வியாக்கிரபாதமுனிவர். புண்டரீகப்புரம் - புலியூர்; சிதம்பரம். பொதுவில்-திருஅம்பலத்தில். புண்டரீகத்தடி - தாமரைப்பூப்போலுந் திருவடி. செய்திடா-செய்து

18. மும்மை-மூன்று. வேள்வியில்-(ஞான)யாகத்தால். தியானம்-யோகம். தம்மை - (அத்) திரிசுதந்திரர்களை.

19. தளம்-இதழ். கமலாசனபுரம்-பிரமபுரம்; இது: விஷ்ணுக்ஷேத்திரம். மாதவனை-விஷ்ணுவை.

20. அல்உறழ் - இருளையொத்த. அருணவெற்பு-அருணாசலம். மல்லல்-வளம்.

21. புவிக்கடவுளர்-பூதேவர்; திரிசுதந்திரர். பிரசத்தும்பி - தேனைவிரும்பும்வண்டு.

22. வாழிய - (உலகெல்லாம்) வாழும் பொருட்டு. வேதத்தன்மை-சுருதிவிதி. மாதொருபாகனென்றதும், ஏழையோர்பாகனென்றதும். ஒன்று

23. கூடல் - மதுரை. பீடு-பெருமை. எடுஅவிழ்-இதழ்கள் விரிந்த.

24. தண்டகவனம் - தண்டகாரணியம். அவண்- அவ்விடத்தில்

25. கோகுலம்-பிருந்தா வனத்தில். உழுவலன்பு-எழுமையுந் தொடர்ந்த அன்பு.

26. வதரிகாச்சிரமம் - இலந்தை மரங்களாற் சூழப்பட்டதலம். ஐந்துடன் குறிக்குமாறு - பதினொன்று.

27. துதிதரும்-புகழப்படும். முகிலரு-மேகமுழக்கம் நீங்காத. சுவாமிமாமலைப்பதி - திருவேரகம். விதி-பிரமன். முடிக்கொடு-உச்சியிற்கொண்டு.

28. அளவு - (கூடிய) தொகை. தளிரியல்-பூமிதேவி. மல்குற - வளம்பெற.

29. பாவனை-தியானம். தாழினும்-வணங்கினாலும். மூவர்க்கும் - திரிமூர்த்திகட்கும். சிறப்புச் செய்துள்ளார்-வழிபாடு செய்தவர்களாவார்.

## 11. மாதபூசை விதியுரைத்த அத்தியாயம்.

1. பொறி-இந்திரியம்; மெய்வாய் கண் மூக்கு செவி. புலன்-அறிவு. குறித்து-கருதி.

2. குழுவோர்-கூட்டத்தார். அம்-அழகிய. புலம்-அறிவு. அங்கம்-வேதாங்கம்.

3. மகத்தின் கருமம் முற்றும் - யாககாரியங்களைமுடிக்கும். ஓது - படித்த. பற்று இகல்-விருப்பு வெறுப்பு. முத்தேவர்-பிரமவிஷ்ணுருத்திரர்.

4. சுக்கிலம் - சுக்கிலபக்கம்; பூருவபக்ஷம். சுப்பிரபச்சம் - பூர்வபக்ஷம். சுவேதபக்கம் - பூர்வபக்ஷம் யுசாதி- மேற்கூறிய நான்கு மதிகளிற் கூறிய பக்கங்கள் (நான்கு). நான் மூன்று- பன்னிரண்டு. பூர்ணமி-பூரணை; பௌர்ணமி.

5. மனு-மேற்கூறிய பூரணை பன்னிரண்டு, தைமாதத்தில் வரும் ஏழு, பதினொன்றாகிய பக்கங்களென்னும் பதினான்கு. பிற்பக்கம் - அபரபக்ஷம். தொட்டு - தொடங்கி. சுவேதபக்கம் முன் - பூர்வபக்கத்துக்கு முந்தி. ஆருமானையம - ஆகிய பதினைந்து. நாளாகிய மானையபக்ஷம். பிற்பக்க உவா- அமாவாசை. சங்கிராமம்-சங்கிராந்தி. பொழுது - காலம். வைதிருதி, விதிபாதம்; இவ்விரண்டும் ஒவ்வொருயோகங்கள். நாலாறு மூன்று. இருபத்தேழு; இவற்றுள். வைதிருதி பதின்மூன்று விதிபாதம் பதினான்கு.

6. தனு-மார்கழி. மகாம்-தை. குடம்-மாசி. மீனம் - பங்குனி. சத்தமி- ஏழாந்திதியும். சார் - அடுத்த. நவமி- ஒன்பதாம் பக்கமுமாகிய. அனுவெனும் அட்டகை - அனு அட்டகை. இவை-மேற்கூறிய சத்தமி நவமி. ஊடுவரும் அட்டமி-நடுவேவரும் எட்டாந்திதி; இந்நான்கு அட்டமியும் மகா அட்டகை. இடும்-செய்யும். சிராத்தம்-சிரத்தையோடுஞ் செய்யுங்கிரியை. வழங்கும்-செயயும்.

7. சுவாகாகாரம் (இறுதியில்) சுவாகா என்னும் வடிவுடைய மந்திரம். சுதாகாரம்-சுதாஎன்னும் வடிவுடைய மந்திரம். வவுஷ்ட்காரம்-வவுசடுவடிவுடைய மந்திரம். இறுதியிலென்பதனை யிம்மூன்றிற்குங் கூட்டுக. ஆகாரம்-வடிவு. மிக்க- (ஒன்றைவேறுபட்டால் ஒன்றற்கொன்ற) உயர்ந்த, ஆயவிதி-

ஆகியகிரமம். மந்திரம் (ஏனை) மந்திரங்களினும். கொடி - காக்கை. அதிதியர்-விருந்தினர். வவுஷடாகாரமென்பது - வவுஷ்ட்காரமென விகாரமாயிற்று.

8. இருக்கால் - இரண்டுதரம். காலும்-வீசும். ஒருக்கால் (மன) வொருமைப் பாட்டால். இருக்காலும் ஒருக்கால் உண்ணினைப் பவரை யெனக் கூட்டுக. உலப்புஇன்று - வரையறையில்லை.

9. காட்சி - தோற்றம். சார்ந்துசார்ந்து-சென்று சென்று. கவளம் - ஒரு திரளை; உண்டை. சிறங்கைநீர் - ஒரு உள்ளங்கைக்குள் அடங்கிய சலம். கவற்சி-கவலை.

10. பூசுரர் வத்திரசததளம்-(இந்தத் திரிசுதந்திராகிய) பிராமணர்களுடையமுகமாகிய தாமரையை. குத்திரம்-வஞ்சகம். முளரி-தாமரை.

11. இடுக்கண்-துன்பம். வெருவரும்-பயங்கரமாகிய. சேதகம்-சிவப்பு.

12. வந்தனை-வந்தித்தலையுடைய. உள்அகம் - மனத்தினுள்ளே. நிந்தை-அவமதிப்பு.

13. சததளம் - நூறுஇதழ். செஞ்சுடர்விளக்கு - சிவந்தஒளியையுடைய தீபம்போன்ற பிரமன்.

14. தாமரை-தாமரைப் பூவாகிய. செந்தி-திருச்செந்தூர்.

16. முதல் - முதலிய. ஒண் பொருள்-ஒள்ளியதிரவியத்துள். எத்தனை-எவ்வளவு (சிறியதென்றபடி).

17. உலப்பு இன்று - (அளவுள்ளடங்கி) முடிவுறுதல் இல்லை. சீர்-(தாற்பரியம்) திருவருள். இசைவித்த-கூட்டுவித்த.

18. கார்த்திகைக் கார்த்திகை - கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நட்சத்திரம். புணரி-சமுத்திரம்.

19 பரவுவார் - (முருகக்கடவுளையுந் திரிசுதந்திரர்களையும்) துதிப்பவர். இருமை - அறம், இன்பம். அம்மை-மறுமை. புரை-ஒத்த.

20. திங்கள்-மாதம் அன்னநாள். அத்தன்மையாகிய தினம். பன்னகப்பகை-பாம்புக்குவிரோதம். பகவன் - குமாரக்கடவுள்.

21. மாகம்-மாசி. திங்கள்-மாதம்-ஓகை-மகிழ்ச்சி. போகம் - (தரிசனமாகிய) ஆனந்தம். உண்டார் - நுகர்ந்தவர்.

22. முத்தர் - பிரியமுள்ளவர். முருகன்முத்தி-முருகக்கடவுளாற் கொடுக்கப்படுமோக்ஷம்.

23. மாகநாள் - மாசிமாதத்தினம். முன்னர் - முதன்மையானவர். வந்து-(அவர்முன்பு) வந்து. மாமுகத்தினால் அஃதாவது: பெருமை தங்கிய காட்சியினால். மலினம்- (தமது) பாவம்.

24. வேள்மைத்துனர் - மன்மதனுக்கு மைத்துனராகிய குமாரக்கடவுள். வாசபேயம் - ஓர் யாகம்.

25. சங்கிரமம்-சங்கிராந்தி.

26. ஓதனம்-சோறு. அமுதுசெய்வித்தோர் - நிவேதித்தவர். மகம் - யாகம்.

27. ததி-தயிர். கோடல்-செங்காந்தள்.

28. ஒவு - நீக்கம். எச்சம் - யாகம். தா-கேடு.

29. கன்னியின் - புரட்டாசி மாதத்தில். காமுறு - விருப்பமுற்று. ஆற்றுவார்-செய்வார். ஆற்றுவார் குலப்பிதிர்களெனக்கூட்டுக.

30. துலை-ஐப்பசி. திங்கள் - மாதம்.

31. ததி ஓதனம் - தயிர்ச்சாதம். உவப்பித்து-மகிழும்படி நிவேதித்து. மதுசூதனன்-விஷ்ணு. பதம் - பதவி. சூழ்ந்து - சூழ; இது: எச்சத்திரிபு.

32. மகாம்-தைமாசம். முப்பது-முப்பதுநாளிலும். மணிபொன் -இரத்நம், சுவணம். அயம்-(சந்தனங்கலந்த) நீர்; சந்தனக்குழம்பு. அகருவின் தூபம்-அகிற்கட்டைப்புகை. (இவற்றால்) அமைத்து-அலங்காரஞ்செய்து. குலங்கொடு - கூட்டங்கொண்டு. தகைய - தகுதியையுடைய. வான்-பெருமையாகிய. சிவன்பதம்-சிவலோகம்.

33. சேய்-குமாரக்கடவுள். மான்மகள்-வள்ளியம்மை.

34. மெய்ப்படும் ஆவினெய்-உண்மையாகிய பசுவினெய்.

35. ஆரல் - கார்த்திகை நட்சத்திரம். போர்த்த - பொதிந்த. புண்டரீகம்-தாமரை. ஆர்த்திடு நிரயத்தாடு அட்டையிற்படு குழிக்கண் எனக்கூட்டுக. ஆர்த்தல்-ஒலித்தல். நிரயம் - நரகம். அட்டை-ஒருவகைக்கிருமி. குழி-பள்ளம்.

36. நிலே - உறுதி. இலேகொடு - இலேயால். இறைத்துளோர் - அருச்சனைசெய்தவர். மகம்-யாகம்.

37. காதை-கதை.

---

## 12. விபூதி அத்தியாயம். விபூதி: சொரூபம்.

1. ஒருங்கு - ஒருப்பாடு. சொல்தரு -கீர்த்தியைத்தருகின்ற. தகைய-தகுதியையுடைய. மறைமூலம் - பிரணவம். வருதி-வருவாய்.

2. சூர்-சூரபன்மன். அறம் மறை-தருமமும் வேதமும். இகல்-வலி. மானின் இடை-மானிடத்தில். இன்-தவிர்வழிவந்தசாரியை. தேனே-தேன்போன்ற வள்ளியம்மையை.

3. பெருமிதம் - கௌரவம். பிற்பட- கழிய. பருமிதம் - இறுமாப்பு. பரிவாரம்- (தன்னைச்) சூழவிருக்குந்தேவதைகள். திரு - சிறப்பு. நாப்பண்-நடு. இதம்-நன்மை. மதத்திறல் - (இருபெயரொட்டு). மிக்கவலி. வாகு-வீரவாகுதேவர்.

4. மானம்-வலி. கூன - வளைவுடைய. மிலேச்சிய-அணிந்த. மோனம்-மௌனம். திருக்கோலம்-திருமேனி.

5. எங்கும் - எல்லா உலகினிடத்தும். ஆக - உண்டாக. இயற்றுதற்கு-செய்தற்கு. அருட்கோலச்சங்கை - திருவருட்டிருமேனியினளவு.

6. நம்விபூதி - நம்முடைய சொரூபம். வரனம் பொருத்தும் - ஆகாயத்தையளாவும். அருநிழல் - அரியநிழலிடத்து. யோக ஆசனம ஆகி - யோகாசனத்திலிருந்து. அருத்தி-ஆசை. ஞான முத்திரை - சின் முத்திரை. பொருத்தும்-விகாரம்.

7. வலவயின் - வலப்பக்கம். நேரும் - பொருந்தும். வடிவிலா (இயற்கையில்) சொரூபமில்லாத. நின்மலப்பொருள் - மலரகிதவஸ்து. அருள்கொடு - திருவருளால். பொருளாகுந்தாதைக்கு எனக்கூட்டுக.

8. கருமம்-செயல். முதற்றொழில்-சிருட்டி. அத்திரி-மலே.

9. பொன்னவன் - வியாழன். மாதலி-இந்திரன் தேர்ச்சாரதி. புட்பகம்-சித்திரவிமானம். கானம்-இசை.

10. களக்கு (விகாரம்) குற்றம். கலேயவை-கலேகள். வளம்செழு - மாண்புபொருந்திய. பிரச ஓசை-உயர்ந்த ஓர்சுரம்.

11. எழுத்து அவை - அக்ஷரக்கூட்டங்கள், அழுத்தம் - பதிதல். விழு-சிறப்பு. முழுத்த-பூரணமான.

12. புரியவை - நகரங்கள். பனிவரை-இமயமலே. சிருட்டிதனில்-சிருட்டித்தொழிலால். இரணியகருப்பன்-பிரமன்.

13. காலத்தீக்கடவுள் - காலாக்கினிருத்திரன். மிடல்-வன்மை. வடிவு-அழகு.

14. வேதஆரிடர் - பிரமருஷிகள்.

15. கடவுளர்-தேவர். படவரவம்-படத்தையுடையபாம்பு; ஆதிசேடன். பரிக்கும் - சுமக்கும். மதமா - யானை. சாருவபௌமம்-வடதிசையானை. செருத்தல்-முலைமடி. சுரபி-காமதேனு.

16. எழுநாம வாம்புரவி - எழென்னும் பெயரையுடைய பெரிய குதிரை; சூரியன் குதிரை. கேசரி - சிங்கம். பீடு - பெருமை. சரபம் - எண்காற்பறவை.

17. பாதலம் - பாதாளம். மாதர் - ஆசை. ஓடை-தடாகம். போதம்-அறிவு. பேதம்-பலவிதம். பிப்பலம்-அரசமரம்.

18. சுசி - சுத்தம். மாருதி - அநுமன். சிலைவலி - வில்லின் வலிமையுடையார்.

19. மல் உற்ற-மல்யுத்தமபொருந்திய. அற்றம்-சோர்வு. பரியின்வேள்வி - அசுவமேதம்.

20. வியப்பு-மகிழ்ச்சி. தமனியம்-பொன். நயப்பு-விருப்பம். அபயதானம்-பயத்தைநீக்குந்தானம். யதுகுலம்-யதுவென்னும் அரசவமிசம். கண்ணன்-கிருஷ்ணன்.

21. வாக்கு - சத்தியம். தேக்கு - நிறைந்த. தசகங்கை-பத்துவிதகங்காநதி. வாரிதி-கடல். தரங்கம் - அலை. மீ-மேலே. கிளர்-விளங்குகின்ற. தாரகை-நட்சத்திரம்.

22. இருது - பருவம். வசந்தன்-இளவேனிற்காலம். மோகனம் - மயக்கம். தவத்தினில்-தவத்துக் குரியவற்றுள். பிராணயாமத்து இயல்-பிராணயாமஇலக்ஷணம். பரவை-சமுத்திரம்.

23. ஆவாணம் - உடை. வனப்பாருங்கலை - பீதாம்பரம். பிதிரர் - பிதிர்தேவதை. அரியமா - ஒருயர்ந்தபிதிர்தேவதை.

24. வனம்-சோலை. சயித்திரதம்-ஒருசோலை. ஒள்ளொளியில் - மிக்கவொளிப் பொருள்களில். வித்தை - கல்வி. இந்தியம் - இந்திரியம். ஏது-(இந்திரியங்களை யியக்குதற்குக்) காரணம்

25 புரவலன்-அரசன். அற்புறுத்த - அன்பை உறச்செய்யும். மணிகர்ணிகை-ஒரு தீர்த்தகட்டம். எல்-ஒளி. நிவப்பு-உயர்வுப் பொருள்கள்.

26. தெறு-வருத்துகின்ற. பவநாசனம் - பாவங்களை அழிப்பனவாகிய தீர்த்தம். விறல்-வென்றி. விது-சந்திரன்.

27. அவத்தை - துன்பம். யௌவனம்-வாலிபம். மானசம்-மனத்தாற்செய்யும் பூசை.

28. சாடராக்கி - உதராக்கினி கீதை-சிவகீதை.

29. வரகவி - தெய்வப்புலமையாளர். நயனமானவைகட்கு வரனுரிய அணிசெழுபொருள்க ளெனக் கூட்டுக. கண்களுக்கு விடயமாக வரும் அலங்காரம்பொருந்திய பொருள்களெல்லாமென்பது பொருள். புரிகுதி-செய்வாய். சிரம்-தலை.

30. விபூதியியல் - சொரூபலக்ஷணம். அமர-இருக்க. கணத்தலைமை-கணங்களுக்குண்முதன்மை. வித்தகமை - சதுரப்பாட்டின்றன்மை. வீரன்-வீரவாகு. நின்புலன் அருந்த-உன் மனம் உட்கொள்ள.

## 13. விசுவரூப அத்தியாயம்.

1. சதுர்மறை-நான்குவேதம். கலபம்-மயிற்றோகை. ஓங்காரம்-பிரணவம்.

2. ஏந்தல்-வீரவாகுதேவர். வாகை-வெற்றி. மன்றல்-வாசனை. வாரீசம்-தாமரை. சொலும்-(நீர்) சொல்லிய.

3. பொருளென-பொரு(ளொன்)றென்று. தூண்டும் ஆறு-எடுத்துக்கூறும்விதம். மாணாக்கரிற் பூண்ட நின் பொற் புறுந்தோற்றப் பேருருவாய்-சிறுவர்போலக் (குமாரப்பருவம்) கொண்ட உனது அழகுபொருந்திய காட்சியாகிய பெரியவடிவாய்.

4. தோற்றமாம்-காட்சியினாலாகும். உள்ளம்வைத்தேனை-மனம் வைத்த சிறியேனை. வான்-பெருமை.

5. சொல்-சொல்லால். கருதுதற்கு-(தாற்பரியம்) பேசுதற்கு. தோற்றம்-(விசுவரூப) வடிவம்.

6. உட்படாது-தோன்றாது. தருதும்-கொடுப்போம். மானம்-வலிமை. காண்டி-காண்பாய்.

7. பயனும்-பிரயோசனமும்.

8. இருவிழி-இரண்டு கண்களின். கு-சாரியை. ஆறு-வழியே. அருவிநீர்-அருவிபோலும் (ஆனந்த) நீர் ஈராறென-இரண்டு நதிபோல. களி-மகிழ்ச்சி

9. கொதது-கூட்டம். ஒத்த-(ஒருவருக்கொருவர்) சமானமாகிய. உளர்-உள்ளவர்.

10. எழு-எழுந்த. மால்-பெரிய. வரைகளும்-எட்டுப் பருவதங்களும், அட்டகுலாசலங்களும். எமலான்குன்றம்-பொன்மயமாகிய மகாமேருமலை. மால்சூழும்-பெருமை பொதிந்த. கோடியாம்-பலவாம். சுரநதி-தெய்வத்தன்மையுள்ளயாறு. ஊழியான்-சிவபெருமான்.

11. ஆற்றல்-வலி. திகிரி-சக்கராயுதம்.

12. வசிட்டனை-ஐ, சாரியை. இருடி-ரிஷிகள்.

13. மனுவின்-மனுநீதியால். பூரணத்து-நிறைவினால். நதி-(சிற்)றாறு. வரைத்தலை-மலையிடம். கடற்றலைவரை-கடலிடம் அளவ (உள்ள). தொகுதி-கூட்டம். இனநதி-பெரிய ஆறுகளின். கு-உருபுமயக்கம்

14. போர்-யுத்தகளம். செரு-யுத்தம். பொருவரு-ஒப்பற்ற. வான்புவனம்-(வீர) சொர்க்கம்.

15. கதிர்க்கு-சூரியனுக்கு. குழைக்குண்டல வெயிற்சுடர்ன் சோடிசூரியர்களெனக் கூட்டுக. குழை-காது

16. மதனஆகாரர்-மன்மதன்போலும் உருவம். ஒளிகள்-சூரியர்கள். ஒள்அழல்-ஒள்ளியபிரகாசத்தை. சொலும்-(தன்னிடத்து) அகப்படுத்தும். ஆர் அழலெலாம்-அரிய அக்கினியெல்லாம். நயனமாம்-கண்களிடத்தாகும். சிவபிரான்றிருவுருவாதலால், அவர்கண்கள்போலக் குமாரக்கடவுள் கண்களிடத்தும் அக்கினியுண்டாமென்றபடி. உள்ளை-இருக்கிறாய்.

17. கோரம்-அச்சம். விண்ட-வாய்திறந்து பேசிய. இடிக்கண்ணும்-இடியினிடத்தனவாம (இடிமுழக்கம் போலுமென்றபடி).

18. செற்றின-நெருங்கின. பற்று-விருப்பு. இகல்-வெறுப்பு. மூலம்-ஆதி. நடு-மத்தியம். மூர்த்தமே-மூர்த்தியே.

19. ஆனனம்-முகம். குழை-காது. வடிவு-உருவம். நாடு அரிது-ஆராயதற்கு முடியாது. முடியாதென்னும் பயனிலைக்கு, முகமுதலிய தனித்தனி எழுவாய்கள்.

20. புண்டரீகம் - தாமரை. தகைவ - ஆணைசெய்யப் படுவனவாகிய. அழலினில் துகள் எழ - அக்கினிப்பொறி பறக்க. பல்லின்வீழ்சொனி - பற்களினின்றும் உண்டாம் ஒலி.

21. கோரம் - பயம் மீக்கிளர்தர - மேற்பட. ஆரை யென்பதில் - ஐ, சாரியை.

22. பிரபஞ்சம் - உலகம். தனு - வடிவம்.

23. குறிக்கொள் - கருதிக்கொள்வாய். வெருக்கொடு - பயங்கொண்டு.

24. கெழுமி - பொருந்தி.

25. ஏங்கும் - கலங்கும். வாய்மை(யும்) - சொல்லும் சஞ்சலமாம் - (தடுமாறித்) துன்பப்படும். விதிக்கரு - (ஒருவரால்) உண்டாக்குதற்கரிய. ஆறு குணங்களால் - (முற்றறிவு, வரம்பிலின்பம், இயற்கையுணர்வு, சுதந்திரமுடைமை, அழிவிலாற்றல், வரம்பிலாற்றல் என்னும்) ஆறு குணங்களால்; மெய்க்கு - திருமேனிக்கு. அலங்காரமாக - அழகுண்டாக.

26. சராசரம் - சரம் அசரம் என்னும் நிலையியற்பொருளும், இயங்கியற் பொருளுமர். பரபரம இயற்கை - பதிப்பொருளாந் தன்மை. விராவிய - கலந்த. மெய்யின் தோற்றம் - (விசுவ) ரூபத்தின் காட்சி. மராமலர் - கடம்பமலர்.

27. வயம் - வெற்றிமாலை. பொருநர் - போர்த்தலைவர். வில்லோர் - வில்வித்தையிலுயர்ந்தோர். யானென்று - நான் (சிறந்தவ) னென்று. சூர்த்தானை - சூரபன்மன் சேனை.

28. உளம் - மனத்தில். மேம்பாடு - பெருமை. புல்லுணர்வு - சிற்றறிவு. வாளா - வீணே. குழைய - நெகிழ. காணு - காணப்படாத. நீத்து - விட்டு.

29. பையுள் - துன்பம். மோலி - முடி. தெண்டமிட்டு - தண்டஞ் செய்து; வணக்கஞ்செய்து.

30. ஒளிதிகழ் - பிரகாசம் விளங்குகின்ற. நிரை - வரிசை. குழை - காது. முன்னரின் வடிவாம் - முன் புள்ள இனியதிருமேனி களிமகிழ்சிறந்து - மிக்கமகிழ்ச்சியாற் சிறப்புற்று.

31. துளக்கி - அசைத்து. மொழிதும் - சொல்வோம்.

32. முற்று ஒருங்க - முழுதும் ஒற்றுமைப்பட. இந்தக்கோலத்தை - இந்த விசுவ ரூபத்தினழகை.

33. இனியதோற்றத்தின் னலம் - இனிமையாகிய (விசுவரூபக்) காட்சியின் நன்மை. இனி - இனிமேல். முன் - முற்படும். ஆதியுகத்தினில் - முதல்யுகத்தில். (அவருக்குக் காட்டுதற்காக) சொன் - பெருமை. வேண்டினம் - விரும்பினோமாகி. மிக்கால - மிகுதிபால்.

34. எவ்வம் - குற்றம். வடிவம் - (விசுவ) ரூபம். கவ்வை - துன்பம். தோற்றம் - (விசுவ ரூபக்) காட்சி.

35. எடுத்தனம் - கொண்டோம். படைத்தி - படைத்தாய்.

36. எழுத்து ஆறு - சடாக்ஷரமந்திரம் அற்புதத்து - ஆச்சரியத்துடன். அழுத்தி - (மனத்திலே) பதித்து. மெய்த்தியானம் - (எமது) விசுவரூபத்தின் தியானத்தை. ஓதுதி - ஓதுவாய். அவா - இட்டகாமியங்களை. முடித்தி - முடிப்பாய்.

37. அந்தத்தில் - இறுதியில். தளம் - இதழ். வீடு - மோக்ஷம். குளம் - நெற்றி.

38. விபூதி - சொரூபலக்ஷணம். சததளம் - நூற்றிதழ்த்தாமரை. அற்புதப்புணரி - ஆச்சரியக்கடலில்.

39. கோரம் - அச்சம். பவம் - பாவம் கீண்டு - கிழித்து.

40. வஞ்சனை - (பிறர் செய்யும்) வஞ்சகத்தாலும். தீ நீர் - அக்கினியாலும் சலத்தாலும். அவமிருத்து - துன்மரணங்களாலும். கேட்போர் - (குமாரக்கடவுள் விசுவசொரூபச்சிறப்பைக்) கேட்பவரும். விஞ்சை - அறிவு.

41. முற்ற - சித்திக்க. ஒருங்கு - ஒருமிக்க. முற்றவென்பதில் - அகாரங் கெட்டது. தூண்டுதி - செலுத்துவாய்.

## 14. சுவாமியின் மந்திர மகிமையுரைத்த அத்தியாயம்.

1. மகமாயை ஆதிமலம்-மூலமல முதலிய (ஏனைய) மலங்களின். மூடு-வேர். காதை-கதை. குகன்ஆண-முருகக்கடவுள் (கொண்ட) தாகிய. முத்திவடிவாயது-மோக்ஷரூபமாகிய விஸ்வரூபமானது. பாரவ-வியாபிக்க. அருத்தி-ஆசை.

2. தாபதர்க்கு ஆதியான்-முனிவர்களுக்குள் தலைவன். ஆறுத-நீங்காத. வாறுறு-ஆகாயகங்கை. அரும்ப-சிலிர்ப்ப புகழால்-தோத்திரத்தோடு. தான்ஆன-தனக்குத் தானே சமானமாகிய. ஆனந்தம்ஞானம்-இன்பமும் அறிவும். பெருக்குஆழி-பெருகுகின்ற சமுத்திரம். பெருக்கு-விகாரம்.

3. சரற்காலம்-கூதிர்ப்பருவத்து. நிலவ-பிரகாசிக்க. பீடு-பெருமை. தரங்கம்-அலை. உந்த-தள்ள. வானமுனிவன்-நாரதமுனிவன். மூடும்-மொய்க்கும். பிரான்விண்டு-கடவுளாகிய விஷ்ணு. பாடு-பெருமை. பரிவு-அன்பு. அடைந்துளன்-சேர்ந்தான்.

4. சுவேதச்செழுந்தீவு-சுவேதமென்னும் வளந்தங்கிய தீவு (உள்ளது). தீவினிடை-(அந்தத்) தீவின்மத்தியில். மூலாகமக் கோயில்-ஆதியாகமவிதிப்படி அமைக்கப்பட்ட ஆலயங்கள். அவையூடு-அவற்றினடுவே. படிகத்தின்-பளிங்குக் கற்களால். கனிந்தஆன் பயத்தின் நுரைபோல்-முதிர்ந்தபசுவம்பாலி னுரைபோல. கனிந்தஎன்பதில்-அகரங்கெட்டது.

5. மெலிது-மிருது. சேடபரியங்கம்-ஆதி சேடனாகிய சயனத்தின். மிசை-மேல். இருபாலின்நிலவ-இரண்டுபக்கமும்பிரகாசிக்க. அனுசந்தர்-கிரமமாகச் சிந்திப்பவர்.

6. மலினம்-குற்றம். ஆதரம்-விருப்பம்.

7. அருக்கியம்-முனிவர்கட்குச் செய்யுமுபசாரத்தொன்று. இருக்கொடு-வேதமந்திரத்துடன். கனகம்-பொன். மேதகையமணி-மேன்மைதங்கிய தகுதியையுடைய ரத்நம். விழைந்த-விரும்பிய.

8. அரிணவொண்டொடி-மான் மகளாகிய வள்ளியம்மையையும். யானைமகள்-தெய்வயானையம்மையையும். கமை-பொறுமை. கொண்டு-(பிறவினை) கொள்வித்து. அணைந்து-(விகாரம்) சேர்த்து. வைப்பு-நிலம். அமைவின்று-அடங்குதலில்லாமல். சிமையம்-சிகரம். சாரல்-மலைப்பக்கம். உறையா-தங்கி.

9. கொற்றம்-வெற்றி. வான்-அந்த வடிவம். பெரிய அளவினையுடைய ரூபத்தின்கண்-உற்றுநின்றெழுவடிவம்-பொருந்திநின்று தோன்றுகின்ற (பிரபஞ்சங்களின்) உருவங்களெல்லாம். மற்ற-அசை. உரைப்பான்பொருட்டு-சொல்லுதல காரணமாக.

10. தனஞ்சயன் - அருச்சுனன். பாலித்தவடிவு-கொண்ட விசுவரூபம். சூர்-அச்சம். மாதவன்-மாதவனாகிய உன்னுடைய. தோழற்கு-சிநேகிதனாகிய அருச்சுனனுக்கு. திருக்கோலம்-(விசுவரூபத்துச்)சிறப்புக்காட்சி. அச்சுற-பயப்பட. வதரிகாச்சிரமம்-இலந்தைவனம். நரநாரணர்-கிருஷ்ணன் அருச்சுனன்.

11. காலாக்கினிக்கடவுள்-காலாக்கினிருத்திரர். பிரியாது-நீங்காது. பிரமன் தொழிற்கூட-பிரமதேவன் சிருட்டித்தொழில்தெரியும் பொருட்டு. ஒருவாது-நீங்காது.

12. இது-இதனை. அண்டினேன்-அடுத்தேன்.

13. முழங்கி - ஆரவாரஞ்செய்து. நிலவு-பிரகாசம். கருப்பூரவெள்ளை - கருப்பூரம்போலும் சுண்ணச் சாந்தால். புதுக்கினன்-புதுப்பித்தனன்.

14. விழியின்கத்தூரியால் - கண்ணாகிய கஸ்தூரியினால். மேனிக்கு - (வெள்ளிய) திருமேனியிடத்தில். இலேபனம்அப்பி - பூச்சுப்பூசி. (உற்றுநோக்கி யென்றபடி) திருவிருந்தின் - இலக்குமி (நாடோறும்) புதிதுபோலும். விண்டான் - திறந்தான்.

15. தத்துவக்கடல் - பிரபஞ்சசாகரம். தகைமை - (தாற்பரியம்) சன்மார்க்கம் வித்தகம் - சதுரப் பாட்டினையுடைய. (சதுரப்பாடு-விநோதம்.)

16. துயிலும் - (பாற்கடலி) லுறங்கும். ஒன்றாகி-ஒன்றுபட்டு. குகனுருப்பயிலும் - குமாரக்கடவுள் வடிவம் பொருந்தும். பசுபதி-சிவபிரான்.

17. மட்டு - தேன். நறை - நல்ல மணம். மூன்னான்கதாம் - (குமாரக்கடவுளுக்குப் புயங்கள்) பன்னிரண்டாகும். அம்புயம்-(அவ்விறைவராகியசிவபிரான்) அழகிய புயத்தில். பொறைகொள் ஆழி-(நம்முடைய) பொறுமை கொண்ட சக்காராயுதமும். சத்தியாய்-வேலாயுதமாகி.

18. ஏகமாக-ஒன்றாக. இருதலைச் சூலமேயாகும் - இரண்டு தலையையுடைய சூலம்போலாகும். கலையாகிய-அமிசமாகிய. சுடராய் - சூரியனாகி. பாகமாகி-பக்குவப்பட்டு. இவ்வெச்சம், உற்றனரென்பதனோடு முடியும். எழும்-(சிருட்டியிலே) வரும்.

19. விட்சேபத்து -(பாசங்களைக்) கெடுத்தலால். உயர்-உயர்ந்த. சத்தி - (விட்சேப) சத்தியே. விண்டு-ஆகாயத்தில். இன் - இனிய. எண்தரும் - எண்ணப்படுகின்ற. சந்திரகலை-சந்திரனுடைய அமிசம். என்பதாய்-என்று சொல்லப்படுவதாகி.

20. இயவுள்ஆய் - (மேற்கூறிய சந்திரகலையே) சிவ (கலை) ஆகி. இடக்கண் எனும் - (நமது) இடப்பக்கத்து நேத்திர (த்திலுண்டாதலால்) மென்று சொல்லப்படும். பரிபூரண உயர்வு-வியாத்தியின் உயர்ச்சியை. உள்-உள்ளதை. ஆவரணம் - மறைத்தலால். பெயர் - (அப்) பெயர். உயர்வுஆகிய சத்தி - உயர்ச்சியாகிய (திரோதான) சத்தி.

21. தெய்வகுஞ்சரமாது - தெய்வயானை யம்மை. மாறு - உவமானம். அந்தமாதரே - அவ்விரு பெண்களே. இருசத்தியும் - இச்சாசத்தி, கிரியாசத்தியும் (ஆவர்). வேறு இலாது - (சிவபிரானோடு) வேறுபாடில்லாமல். பிரமம் - பரப்பிரமப் பொருளாகிய குமாரக்கடவுள்.

22. பதமூன்று-சொற்கள்மூன்று. அரும்பதம்-அரிய (பிரமனென்னுஞ்) சொல். ஈற்றின் மெய்ப்பதம் - இறுதியிலுள்ள உண்மைச்சொல்லாகிய யவ்வென்னும் விகுதி. சிவனையேத்தும் விண்டுவின் வடிவாம்- (அதுவே) சிவபிரானைத் துதிக்கும் (நாமாகிய) விஷ்ணுவின் ரூபமாகும். முன்னஞ்செப்புறு-முதலிலேசொல்லுதலுறும். பதம்-சொல்; (சு). இரண்டு பதங்களைச் சேர்த்துக்காட்டி-பிரமங்ய, என்னும் இரண்டு சொற்களையுமியைத்து விளக்கி. சு, பிரமந், ய. என்பது, வடமொழிவிதிப்படி புணரும்போது சுப்பிரமணிய என்றாயிற்று.

23. ஐக்கம்-ஒற்றுமை. மூலம்-ஆதி. முடிவு-அந்தம். சுப்பிரமணியனாக-சுப்பிரமணியக்கடவுளாக.

24. சலம்-நாரம், நீர். வநம் - வநமென்பது இருப்பிடம். அரிது-அரியதாகிய. பார்க்கில் - (சேர்த்து) - அன்மொழித் தொகையாக்கிப்பார்த்தால். அருத்தம்-பொருள். நாராயணன்-என்பதற்குச் சலத்தில் வாசஞ் செய்பவனென்பதாம். வநம் - அநயமென்றாகி

நாரமென்பது சேர வடமொழிவிதிப்படி நாராயணனென்றாகும்.

25. மயல்-மயக்கம். ஆறெழுத்து-சரவணபவ என்னும்ஆறுஅக்ஷரங்கள். பயன் - (இவ்வக்ஷரங்களின்) பிரயோசனம். சிவனதுஆய-சிவபிரானுடைய தாகி. சுயவடிவு-சொரூபம்.

26. குகன்மலர்தானம் ஆவ-முருகக் கடவுளுடைய விரிந்த இடங்கள் ஆவன. சுக்குப்பாறை - பாற்பாறை. குலம் அவை - கூட்டமாகிய அந்நான்கு. நிலன் - நிலசம்பந்தமாகிய இடங்கள். நாம்-நமது வடிவம். பருப்பதம் - மலைகளினிடங்கள். ஆகாரம்-வடிவம். இடன்-இடங்கள். அது-பகுதிப்பொருள் விகுதி. பரல்-ஒருவிதக்கல்.

28. வேங்கடவரை-திருவேங்கடமலை. அசலத்தாடு - (அம்) மலையினடுவே. மூர்த்தி-திருவுருக்கொண்டிருக்குந் தெய்வம். பன்னிருபுயனும்-முருகக்கடவுளும். யானும்-நானாகிய விஷ்ணுவும். ஆய் - ஆகி. சிறந்துளோம் - சிறப்புற்றிருக்கின்றோம்.

29. நெருப்பு-கார்த்திகை நட்சத்திரத்தை. உறு-பொருந்திய. மூன் - மூன்று கலை - முதலாவது மூன்று அமிசங்களும். நிலமகள் கமலை நீலி - பூமிதேவி, இலக்குமி, பார்வதி. ஆவது-ஆகிய பின் மூன்று அமிசங்களும். முறை-கிரமமாக. உருத்திரன் ஈசன் சிவன்-உருத்திரன், அநந்தேசன், சிவபிரானும். இவ்வாறு-இந்தவிதம். கார்த்திகை - கார்த்திகை நட்சத்திரம். சிவனும் மால்வடிவும் - சிவவிஷ்ணுரூபமும்.

30. ஆரல் நாளில்-கார்த்திகைநட்சத்திரத்தில். சேயினுக்கு - முருகக்கடவுளுக்கு.

31. அகரம், உகரம், மகரம், ஆகிய இம்மூன்றும் (முறையே.) எகினவாகனன் - பிரமன். நாம் - விஷ்ணு. ஈசன்-சிவபிரான்.

32. உரைதரும்-சொல்லத்தரும். எழுத்து மூன்றும்-அகர, உகர, மகரமாகிய மூன்றக்ஷரங்களும். பிரணவவடிவாம் - பிரணவமந்திர சொரூபமாகும். ஒன்றாய்த்தனித்தது-ஒன்றுபட்டுத் தனித்திருந்தது. ஓங்காரமாகும் - (அப்) பிரணவ மந்திரமாகும்.

33. நாரணன் -விஷ்ணு. முனிவன்-நாரதமுனிவன். தாரகன் - தாரகாசுரன். தடிந்த-கொன்ற. சரிதம்-(அற்புதச்) செய்கை. காருடம்-கருடன்.

34. முறை - (மாமனுமொன்னுங்) கிரமம். பிறழாது - வழுவாமல். குருபரன் - (பரமா) சாரியனாகிய குமாரக்கடவுள்.

35. விமானமாக-விமான வடிவாக. விளங்கிய-பிரகாசிக்கின்ற. சிமயம் - உச்சி. கந்தமாதனத்திருந்தான் - கந்தமாதனமலையில் (முன்னமே) இருந்தான். சகந்நாதமூர்த்தி-உலகநாதராகிய சிவபெருமான். ஆதரத்து-அன்புடன். அளித்தான்-(அங்கிருந்து) காத்தான். புக்கான்-புகுந்திருந்தான்.

36. அச்சாரல்- அந்தமலைப்பக்கத்தில். விசையம்-வெற்றி. கண்அகல்-இடமகன்ற. பாங்கர்-பக்கத்தில்.

37. ஆற்ற-செய்தலால்.

38. தந்தை-பிதாவாகியவியாசன்

## 15. பலகதையுபதேசித்த அத்தியாயம்.

1. குருக்குமதி - இளஞ்சந்திரன். (தருத்தல்-முளைத்தல்.) கோடீரம்-சடை. உளம்பிடித்தான் - மனங்கொண்டான்.

2. துண்டமதி- பிறைச்சந்திரன். மாது-(ஒரு) பெண்.

3. சதமகத்தன் - நூறுயாகஞ்செய்த இந்திரன். அயிராவதம் - இந்திரனுடைய வெள்ளையானை. எருத்தம்-பிடரி. உம்பர்முனி - மேலாகிய துருவாசமுனி. பாலானைமத்தகம் - வெள்ளையானையின்பிடரி. பதித்தான்-வைத்தான்.

4. உகைக்கும் - செலுத்தும். புழை-துவாரம். குழங்கல்மாலை - (இருபெயரொட்டு) பூமாலை (அணிந்த). குறைபடுத்த-அழிவுபடுத்த. அழல் - (கோ) பாக்கினி. சினந்திருக-கோபக்குறிதோன்ற.

5. அகந்தை-செருக்கு. பொறையாக - பாரமாக. பூண்டு - பொருந்தி. தணவாது-நீங்காது. அவுணர்-அசுரர். கவர - கிரகிக்க. அலமந்து - சுழன்று. சிறியோரில்-சிறியவர்களைப்போல.

6. குலிசம்-வச்சிராயுதம். போல், ஆம். அசைகள்-கிறிபிறழ்ந்து - பொய்யாகப் பிறழ்ச்சியுற்று. கீழ்மைபுரிந்தது - அவமதித்தது. மதிப்பார்-கடைவார். கமலை - இலக்குமி. உளவாய் - உள்ளனவாக. ஆய் - ஆகஎன்பதின்றிரிவு.

8. சுரபி - காமதேனு. புலோமசை-இந்திராணி. செரு - யுத்தம். வெவ்அவுணரர் - கொடியஅசுரர். மறுகி - சுழன்று.

9. பாலுததி-பாற்கடல். மதிப்ப-கடைய. ஏதாடு-பூவிதழ். கிடைத்து-கைவரப்பெற்று.

10. அத்தகைமை- (இந்திரன்சாபமேற்றமையாகிய) அந்தத் தன்மையை. வெண்களிற்றரசு - வெண்ணிறயானைகளுக்குத் தலைமையாகிய அயிராவதம். சஞ்சலம் - துன்பம். எறிந்ததனில்- எறிந்ததனாலே. நாகம்-விண்ணுலகம். அத்தன்-(எனது) தலைவனாகியஅவன். வெருவி-பயந்து. வாய்விளம்புமெனக்கூட்டுக.

11. வையம் - உலகம். கையெடுத்த- (துருவாசமுனிவர் கொடுத்த மாலையைக்) கரத்தாற்றாக்கிய.

12. உணர்ந்துள - அறிந்திருக்கிற. ஒன்றும்-பொருந்தும்.

13. கிளர்ந்து-விளங்கி. காழ்த்த-முதிர்ந்த. கவல்-கவலை. வீழ்த்த-சொரிந்த.

14. குரோசம்-கூப்பிடுதூரம். மந்தாகினி-கங்காதீர்த்தம். பயந்த-தோற்றுவித்த.

15. அருச்சித்திடா - அருசித்து. போதனை - தாமரைப்பூவிலுள்ள பிரமாவை. மோது-குட்டிய. போதகம் - யானை.

16. வைகல்-நாள். தந்தி-யானை. தணந்து-நீங்கி. மொய்ம்பு - வலிமை.

17. கேதம் - துன்பம்.

18. அருத்திமுற்ற- ஆசைமுதிர. ஆற்றினால் - வழியால். பொருத்து - (விகாரம்)பொருத்திய. பூசை - பூசனை (செய்யப்பட்டு). மகிழ்பூப்பது.- மகிழ்ச்சியைத்தருவதாம்.

19. சீலர் - நல்லொழுக்க முள்ளோர். சீரிய-சிறந்த. பாலர் - பகுப்புடையவர். ஆற்றினர்-செய்தவர்.

20. முதற்காலம்-முதற்சாமம். முகை-உண்டாகின்ற கமலன்-பிரமன். திக்கிறைவர் - திக்குப்பாலகர். மகவான்-இந்திரன். பரிந்த-அன்புற்ற.

21. ஐந்தாங்காலம் - (இராத்திரியின் முதற்காலமாகிய) ஐந்தாஞ்சாமம். அவுணர்-அசுரர். பணி - பாம்பு. கண்ணன்-விஷ்ணு.

22. காலம் - சாமமும். (உம்மை விகாரத்தாற்றொக்கது) கண்ணீர்விட்டு - (ஆனந்தக்) கண்ணீர்சொரிந்து. கோகனதம்-தாமரை. வீடு - கோயில். கட்டாரி-வாளாயுதம். முட்டாத-முட்டுப்பாடில்லாத.

23. வேதம் முறைவிதித்த- வேதத்தை வரிசைப்படுத்திய. கவுதமன்-கவுதமமுனிவன்.

24. புலியூர் - சிதம்பரம். பொது-திருவம்பலம். தண்டல்-நீங்கல் புண்டரிகம் - புலி. தாள்-கால். முனிவன்-கவுதமன். கவற்சி-கவலை.

25. சதி-தாளவொற்று வகிர் - பிளவு. கடவுள்நதி-தெய்வத்தன்மையுள்ள ஆறு. பாணிமுகிழ்த்து - கைகுவித்து.

26. அன்னபரிசு - அத்தன்மை. வியாக்கிரத்தாள்-புலிக்கால். பன்னு - சொல்லுகின்ற. வேலை - சமுத்திரம். முகில்தளைபடுத்து-மேகத்தைச்சிறைப்படுத்திய. நாடி-தேடி. ஆடி-ஸ்நானஞ்செய்து.

27. சோமாரணியம் - ஒரு சிவஸ்தலம். சிந்து-கடலானது. மணி-இரத்நங்களை.

28. ஐந்துகூப்பிடு - அஞ்சுகூப்பிடுதூரம். (கூப்பிடு-விகாரம்.) நந்தல்-குறைதல். வேள்வி-யாகம். மீதூர-அதிகப்பட. செறி-நெருங்கிய. நடுப்புடை-நடுப்பக்கம். வைப்பின்-இடத்தில்.

29. வேள்விச் சாலை - யாக சாலை. பணித்து-அமைத்து. ஆரிடர் -முனிவர். கவின-அழகுற. வலனுயர்த்த - வலப்பக்கத்தில் உயர்த்தப்பட்ட. வில்வடிவு - சதுரரூபமும். முக்கோண வடிவு-மூன்றுகோணரூபமும். மனு-மனுநூல். குண்டம்-ஓமத்தீவளர்க்குங்கிடங்கு.

30. சோதா - ஹோதா: இருக்குவேதஞானி. உற்காதா - சாமவேதம் வல்லான். பெயர்பரா - புகழ் பரந்த. வியானன் - ஒருவாயு. பிரமா- யாகபுரோகிதனாகிய பிரமனும். அச்வரியுயசுர்வேதப்பயிற்சியிற்றெளிந்தோன். யசமானன்-யாககருத்தா.

31. கோதாவரி மாநதியாஞ் சுருதிமாது எனக்கூட்டுக. திருத்தாதை-சிறப்புற்ற(தனது)பிதாவாகியகவுதமமுனிவன். அளியின்-அன்புடன் புரிவித்தான் -செய்வித்தான். அவபிருதஸ்நானம்-யாகம் நிறைவேறியபின் முடிவில் செய்யும் ஸ்நானம். ஆறு - நதி. போதும்-போவோம். மகசாலை- யாகசாலை.

32. மரபு - முறைப்படி. பெண் - புத்திரி. சீர்த்தி - புகழுடன். ஓங்க - உயர்க.

33. வேதமாது-வைதிகப்பெண். அருத்தி - ஆசை. துணைவி - தங்கை. திரு-செல்வம். தகுநற்சிறப்பு-தகுந்த நல்லமேன்மை. ஆக-உண்டாக. பொருத்தி - சேர்ப்பித்து; சமர்ப்பித்து. கிரணம்-பிரகாசம்.

34. நிமலம் - சுத்தம். ஓங்காரம் - பிரணவம். சிவகலை-சிவாம்சம். வைப்பு-இடம். அவண்-அவ்விடமே; பொன்னம்பலம். பரபோகபதம் -பேரின்பவீடு.

35. சங்கம்- சங்கமதீர்த்தம். சோமவாவி - சோமாரணியத்துள்ள தீர்த்தம். அரிது-அரியதாகிய.

36. சுத - மைந்தனே. அகப்பூங்கமலம் - இருதயமாகிய பொலிவுற்ற தாமரை. ஆதரத்தின் - விருப்பத்துடன். பகுத்த-விரித்த.

37. மாயை காதல்- மாயையாகிய மனைவியின் ஆசை. வேதத்தில்-வேதப்பயிற்சியிலே. கூனல்-வளைவு. கீறு-பிளவு.

38. நாட்பூ - அன்றலர்ந்த மலர். ஏலும்-பொருந்தும் இயல்பு-தன்மை. முறை-கிரமம் மூலம்-காரணம்.

39. பெற்ற - (திருச்செந்தூரை யடையப்) பெற்ற. பெயர்வு - நீக்கம் சுற்றும்-சூழும். தரங்கம்-அலை. தூற்றும்-வீசுகின்ற. முற்றும் -முதிர்விக்கும்.

40. உவமை யில்லாச் சுடர்கொண்ட எனக்கூட்டுக. துண்டமதி - பிறைச்சந்திரன். கோடீரன் - சடையை யுடையவன்.

41. பேசல் பாவர்-பேசுதலையுடைய பாவிகள். உபவசிக்கில்-பட்டினிவிரதமிருந்தால். வேதம் வரையறுக்கும்-வேதங்களால் அளவுபடுத்திச் சொல்லும்.

42. பலவும் - பலவற்றையும். கடற்பாலின் - கடற்பகுப்பின். எடைப்பார்க்கில்-நிறுத்தால். இதில் பகரவொற்று விரித்தல்.

43. காறும்-அளவும். பிரயாகை-கங்கையிலோர்ஸ்நாந விசேஷ இடம். ஆடி-மூழ்குதலால். வான்கதி-பெரிய பயன். ஆர்கலி-சமுத்திரம்.

44. பருவம் - வருடம். மணிகன்னிகை-ஸ்நாநவிசேடமுள்ள கங்கையிலோரிடம். நீர்மை - பயன். விரிவு-விரிவாக. தழும்ப-தழும்புபட.

45. மழைதிறம்ப - (வான) மழை பெய்யாது மாறுபட. அறம் திறம்பி-தருமமும் பிறழ்ந்து. வாம்பு - அளவு. உள்ளாக-(தன்) னுள்ளடங்க. தழையும்-வளரும். வரையாமல் - நீங்காமல். உமைமகள் - மான்மகள்., வள்ளி. திவசம்-நாள்.

46. கோலிய-சுற்றிய. மோனம்-மௌனம். பருவம் - வருடம். ஏமப்பொருப்பு-இமயமலை. புகழ்-பயன்.

47. வியப்பு உறுத்த - விம்மிதம் அடையப்பட்ட. மிக்கா - மிகுதியாக. நயப்பு-நற்பயன். அயக்கடவுள் - பிரமதேவன்.

48. அரித்துவாரம் (விஷ்ணுக்ஷேத்திரத்திலுயர்ந்த) ஒருதலம். கேசவன்முன்-விஷ்ணுவுக்குஎதிரே. மாகம்-மாசிமாதத்தில். வேல்துளக்க-(குமாரக்கடவுள்) வேலாயுந் துளைத்தலால்.

49. பின்னவர் - சூத்திரர். வாஞ்சை-விருப்பம். அளவளாவுறும்-கலந்துதோயும். கைம்மையர்-விதவைகள். புருணகத்தி-கருச்சிதைத்தல். உணர்வுரைத்த-ஞானோபதேசஞ்செய்த.

50. இருப்பால் - வசித்தலினால். பாவவினை - (மேலேசொல்லப்பட்ட) பாவங்களாகிய வினை, பாகதிவானகம் திருந்து-மோக்ஷமாகிய பெரியவுலகம் (போலத்) திருந்திய.

51. பொற்பு - அழகு. போற்றா-துதியாத. கற்பினர் - கல்விமான்கள். வற்பு-வலிமை வேசரி-கழுதை.

52. வாலேயம் - கழுதை. மூத்த-முதிர்ந்த. வேதவிழுத்தகுமெய்ப்பொருளான காதையினும் பகர்வனெனக் கூட்டுக.

53. சந்தான விரதமெனப் போராங்கதை யொன்று அருளேபோலாந் தொடர்ந்து கேளெனக்கூட்டுக. இம்பர்-இவ்வுலகத்தவர். இணங்க-பொருத்தமாக.

54. மைந்தர் - பிள்ளைகள். சிறுரில்-பிள்ளைகளுக்குள்.

55. தந்திரி-நரம்பு. சந்தான விரதம்-புத்திரரைப்பெறும் விரதம்.

56. பெட்பு-ஆசை. திங்கள் - மாதம். பூரணை - பௌர்ணமி. விட்புலவர் - தேவர். கௌமாரி - உமாதேவி. குமார-புத்திரனே. கட்பொதி-தேன்பொதிந்த. ஆக - (பிரீதி) யாக. பருவம்-வருடம்.

57. மறை - மந்திரம். அறைகூஉய்-வலிந்தழைத்து. மன்னி-பொருந்தி. மாப்பாடி - சூரசங்காரம் செய்த இடம்.

58. அணுமிகையில்-ஆழிவிரலால். குடபாலின்-மேல்பக்கத்தில். சுதரிச னம்-சக்கரம். முச்சூலம் - திரிசூலம். நடு - நடுப்பக்கத்தில். சத்தி - வேலாயு தம். இவ்வாறு - இவ்விசவடிவங்கள். முப்பால் தரையில் - (மேற்கூறிய) மூ ன்றுவகுப்பாகிய நிலத்தில். தீட்டி- எழுதி தேக்கு அருளின் - நிறைந்தக ருணையால். மிடறு - கண்டம். அறை கூஉய-பெருமுழக்கிட்டழைத்து.

59. சூர்-சூரன். அவ்வயின் - அவ் விடத்து.

60. குருமுகமாக - ஆசாரியன்மு ன்னாக.

61. ஊட்டுவித்து - புசிப்பித்து. உபவசித்து-உபவாசவிரதமிருந்து. கழித்து - (அற்றைநாளைப்) போக்கி. பாரணையூண்-விரதமுடிக்கும் உணவு. முற்ற-முடிய. நோற்று- அநுட்டித்து.

62. விருச்சிகத்திங்கள் - கார்த்தி கைமாதம். சோ-பசு நோற்றவர்கள்- விரதமநுட்டித்து முடித்தவர்கள்.

63. சிலேடைக்கு - கவர்பொருளு க்கு. ஒவ்வாத-இசையாத. கலை-நூல். (என்வே தெளிவாகிய சாத்திரங்களெ ன்பதாயிற்று). சந்தானம் - புத்திரப் பேறு. மை-கரிய. வாரி - சமுத்திரம். செவ்வாம் - செவ்வையாகும். மன்னி லை-இராச்சியநிலைமை., அஃதாவது: செங்கோல்.

64. தணிவு அரு - குறைவற்ற. வளம்-செல்வம். அதிதி - காபசிமுனி வர்மனைவி. காரதமாமுனி ஆசிரியனாக வெனக்கூட்டுக.

65. நோன்பு-விரதம். திருவின்- செல்வத்துடன். சோர்வு - தளர்ச்சி. உற்றான் - (தாற்பரியம்) வாழ்ந்தாள். அயிலாற்கு - வேலாயுதத்தை யுடைய முருகக்கடவுளுக்கு. தாள்வீடு - திரு வடிமோக்ஷம்.

66. அங்கம் - வேதாங்கம். ஒருங் கு-முழுவதும் ஆக்கி-அமைத்து. வி யப்புமேலாய்ப் புகழ்நிறுவினெனக் கூட் டுக.

67. வதிந்து-(அவ்வேதியன் அவ் வாறுவாழ்ந்து) இருந்து. பவத்தின் - (பூருவத்திற்செய்த) பாவத்தால். மூத்து-முதிர்ந்து.

68 இவ்வாறு சொற்றிடு மனைத் துமெனக் கூட்டுக. நிந்தனையே-நிந்தி த்தலையே. என்று - பொருந்தி. கண் பால் உற்றன-பிரத்தியக்ஷத்திற் கண் டபொருள்கள். சாணுசஉறுபொருள்- சாணைக்கூடாமற் பொருந்திய பதார்த் தங்கள். அரு-அருமையாகிய. நிரயம்- நரகம். அவண் - அவ்விடங்கள்; மோ க்ஷநரகங்கள். இவண்-இவ்வுலகிடம். சகந்தெரிய-உலகறிய.

69. தன் தன்னுடைய - வேதமு றைதிறம்பி-வைதிக வொழுங்கு வழு வி. மூத்து-முதிர்ந்து. ஊழ்முற்ற-ஊ ழ்வினைமுடிக்க. வினையுழன்று-வினை யால்வருந்தி. சுழன்ற - சுற்றிவருகின் ற. கறங்கு-காற்றாடி.

70. இயமபடர் - இயமதூதர். பா சம்-கயிறு. காலன் - இயமன். தாவு. கேடு. குரல்-ஒலி. வாலேயம்-கழுதை.

71. ஒவற-நீங்குதலில்லாமல். வேதம்அதிகரித்த-வேதம்(ஓதுதற்கு) அதிகாரம்பெற்ற. நாவலந்தீவு - சம்பு த்தீவு. அணித்து- சமீபம். மேவரும்- பொருந்தும். சும்மை-சுமை.

72. தாரு-கற்பகம். ஊடாடும்-உ ள்ளேவிளையாடும். உய்த்தான் - வாழ்ந் திருந்தான்.

73. நாஞ்சில் - கோட்டை. இடும் பை-துன்பம்.

## 16. இயமனுக்குச் சிந்துபுரவைபவம் உரைத்த அத்தியாயம்.

1. புகும்பரிசு-அடையுந்தன்மை.

2. வங்கம்-மரக்கலம். வாணிகம்-வியாபாரம். புலால்-(ஊன) மாமிசம்.

3. உள-இருந்த. மிலேச்சன்-(ஒரு) வேடன். அதுகாலை-அக்காலம். உள்ள-இருந்த. செற்றம்-கோபம் துணிவிப்பான்-அறுக்கச் செய்விப்பவன்.

4. நடாத்தும்-நடத்தப்படும். மறைவாணர்-வேதியர். தசை-மாமிசங்களை. கறி-கறியாக. காமுற-விருப்பம் பொருந்த. கிளை-சுற்றம். நுகர்விப்பான்-உண்பிப்பவன்.

5. தன்உள-தனக்குள்ள. புலைச்சமயர்-கீழ்மையாகிய கொள்கை. சமயத்தோர்-(நற்)சமயத்தவர். செருக்கு-சருவம்.

6. இவிடம்-இந்த இடம். முப்புவனவைப்புத்தானம்-மூன்றுலகத்தினிடார். அந்தணர்-(அம்மூன்றிடங்களையுமுடைய) பிராமணர்; திரிசுதந்திரர்.

7. ஆன உரு-ஆகிய (இங்குள்ள) வடிவம்.

8. குழுவுக்கு-கூட்டத்துக்கு. அரசன்-பதி; தேவசேனாபதி. துங்கம்-உயர்வு.

9. உளவாசை-மனவிருப்பம். தடுத்தும்-தடைசெய்தும். சாற்றும்-(அவ்வேடன்) சொல்லுவான்.

10. சீறினன்-கோபித்தவனாகி.

11. முடியாதபாவி-கெடாதபாவமுடையவேடன். தாம்உன்பு-(தன்) வலிமையை நினைந்து. உன்பு, செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். பணிவோரின்-நமஸ்காரஞ் செயபவரைப்போல. மேவர-பொருந்த.

12. பாசம்-கயிறு. யமபடர்-யமதூதர். வாழ்வுபெறுவோன்-வாழ்வு அடைவோனாகிய இவ்வேடன். நீசர்-கீழோர்களே.

13. அன்னவர்-அந்த யமதூதர். ஆணை-(சிவபிரான்) ஆஞ்ஞை. கொடுசைக்கொண்டு. போற்றும்-காக்கும். முறைகூற-(அத்தூதர் நடந்தவற்றை) வரிசையாகச்சொல்ல. வளி ஏற்ற-காற்றிலெதிர்ப்பட்ட. முகில்-மேகம்.

14. பற்று-அன்பு.

15. வேல் நகு-வேலாயுதம்போல் விளங்குகின்ற. வேழம்-அயிராவதயானைவளர்க்கப் பட்ட. மாது-பெண்; தெய்வயானை. தானம்-வலி. ஞானமுத்திரையின்-சின்முத்திரையுடன்.

16. மன்றல்-மணம். வாரிசம்-தாமரை.

17. கலன்-(தாலியாகிய) ஆபரணம. நீக்குங் கடவுள் தாட்பூ மறையுரைகாணுவென வியந்துஎனக் கூட்டுக. மறையுரை-வேதவசனமாகிய வாக்கு. தருமன்-யமன்.

18. இழுதையர்-அறிவில்லாதவர். எந்தை-எங்கள்பிதாவே. துதித்த-துதிக்கப்பட்ட. முதியோர்-பெரியோரும். வழிபட (அவ் இழுதையரை) வணங்க. இயற்றிய-செய்த. மயூர-மயில்வாகனத்தையுடையாய். கூற்றிறை-யமராசன்.

19. தேவசேனாபதி ஆக-தேவசேனாபதி (என்னும்) பெயரும் (உமக்கு) உண்டாக. நிற்கொடு-உம்மால். ஆடல்-வெற்றி.

20. பகவதி-பார்வதி. ஞானம்-ஞானத்தால். அருணோதய-சூரியோதயம்போன்றவரே. சொல்-புகழப்படும். புகல்-அடைக்கலம். யாமியம்-தென்றிசை. புலம்-இடம்.

21. தானவர்கள் ஆய-அசுரர்களா லாகிய. புலவர்-தேவர். கயம்-தெய்வ யானை. பரம-நாயகனே.

22. வாலாறு-(நீ) வந்தவிதம்; வந்தகாரியம்.

23. மௌலி-சடை. நியமம் - நாத ம். படர - செல்ல. ஈரேழ் - பதினாலு (மனுக்கள்). கரியாக - சாட்சியாக. உறுவித்திடல-சேர்ப்பித்திடுதல்.

24. முறை - (எனது) நீதி. மனு வேந்தர் - பதினான்குமனுக்கள். மதி மாலைபுனைவோர்-சிவபிரான். சிந்தனை மருண்டு-மனம்அஞ்சி. வினைச்செயல்-(உயிர்களுடைய) நல்வினை தீவினைச் செய்கைகள். உணர்ந்து - அறிந்து (நடத்தப்படும்).

25. பாதகன்-(இந்தப்) பாவியாகி யமிலேச்சன். என-என்று. விடுத்தன ன்-அனுப்பினேன். விடுத்தவர்-அனு ப்பப்பட்ட தூதர்.

26. இடித்து - தள்ளி. தழுவிப்ப து-தழுவும்படி செய்விப்பது. கேளா-(முருகக்கடவுள்) கேட்டு.

27. அழுக்கின்முறை-அசுத்தமா ர்க்கம். தம் - தங்கள் தங்களுடைய. இயற்றொழில்-சாதியாசாரச்செய்கை.

28. முந்துபவம்-முற்பட்டபாவங் கள். ஊழ்முறை - ஊழின்கிரமப்படி. நோக்கின்-தரிசித்தால்.

29. மேவர-பொருந்த. முகம்ஆறு ம்-(நம்முடைய) ஆறுமுகங்களையும். தாஅற-குற்றமில்லாமல். விழித்தவுட ன்-தரிசித்தவுடனே.

30. பரிபவம்-இழிவு.

31. எண்- வலிமை. சாணுவின்ம கன் ஆறுமுகவேலோனெனக் கூட் டுக. சாணு-சிவபிரான். மணிசிகாமம் வாணி-இரத்நத்துக் கொப்பாகிய (குமாரக்கடவுளது) திருவாக்கு.

32. மூவர் - திரிமூர்த்திகள். தவ த்தர்-முனிவர். விந்தை-ஆச்சரியம்.

33. நிலையார்- நிலைத்திருக்கின்ற.

34. சேயின்-முருகக்கடவுளு டைய.

## 17. பிரமன் றேவர்கட்கு உபதேசித்த அத்தியாயம்.

1. பரிந்த-விரும்பப்பட்ட.

2. பாவகாரி - பாவஞ்செய்பவன். மூவர் - திரிமூர்த்திகள். மாதிரத்தி றையவர்-திக்குப்பாலகர். மூத்து - விருத்தனாய்.

3. வாணிகம்- வியாபாரம். சோர ம்-களவு. தூணி - ஓரளவு. ஆய்-தாய். மா-ஒரு சிற்றெண். காணி - ஒருமாவி ல் ஐந்திலொரு பாகம். செட்டு-இலா பம்.

4. பேழ்வாயன் - பிழந்தவாயை யுடையவன். (பெருவாயனென்றபடி). ஒரீஇ-நீங்கி. அவம்-தீமை.

5. வருணம்-குலம். இருள்-மயக் கம். நயந்தது-விரும்பியதாகிய. பொ ருள்-(விசேடித்த) அர்த்தம். இன்று-இல்லை. நால்வகை என-நான்கு பிரி வாக (வெவ்வேறு அபிப் பிராயத் தை). பூண்டோர்-தரித்தோர். தரு ணம்-சமயம். வேடத்தின் தகைமை - (வெவ்வேறு) வேஷத்தின் றன்மை (யுடையராய்). கூத்தாடுவோர்-நாட கமாடுவர் (ஆவர்).

6. பெரியவான்சிலை -மிகப்பெரிய கல்லின். உருவமும் - விக்கிரகமும். தாமிரம்-செம்பு. நவிற்றுதல் - (அவை கள்) பேசுதல். நாலைபரவை-(இருபெ யரொட்டு) சமுத்திரம். இயல்பு - உ ண்மையால். உள ரென்பது - (அவர் தெய்வமாக) உள்ளவரென்பது. படி றே-பொய்யே.

7. சேயர் - பிள்ளைகள். மாதவர் - (சத்த) இருடிகள். மாய்வு இலா-அழி வற்ற. சொன்னம்-பொன்.

8. யாரையும் - (மேற்கூறியவரல்லாத) எல்லாரையும். யாவையும்-எல்லாப் பொருள்களையும். பன்னகம் - ஆதிசேடன. ஆற்றிய-சுமந்த. புடவி-பூமி. பாரம்-பாரம். புணரி-கடல்.

9. தீபாந்தரத்திடம் - தீவுகளின் இடம். கணிதம்-அளவு.

10. வங்கம்-கப்பல். ஓவாது - நீங்காது. சூறைமாருதம்-சூறுவளி. எறிதர-வீச. தோணி-கப்பல். சலதி அங்கு-சமுத்திரத்தின் அவ்விடத்தில்.

11. ஈர்த்திட-இழுக்க. தாழ்ந்த - வணங்கப்பட்ட. வதஞாம்ப சநந்தி - வதஞாம்ப தீர்த்தத்தில (சுவாமி) சந்நிதானம்.

12. ஈமம் - சுடுகாடு. நாய்கனுக்கு செட்டிக்கு. அழற்கருமம் - அக்கினி காரியம்.

13. மட்டு-அளவு. வறந்து-வற்றி. இட்ட-(கொண்டுவந்து) தந்த.

14. காந்தியின் - கிரணத்தைப் போல. காரின்-மேகத்தைப்போலும்.

15. வரை-அளவு. பவம்-பாவம். மூத்தவோர்வணிகன் - முதிர்ந்த ஒரு செட்டி. துரியம் எய்திடில் - மரணமுடைந்தால்.

16. உவமித்து-ஒப்பாக்கி. தகவினோர்-இயல்பினோர். சலதி-சமுத்திரம். மிகை-துன்பம்.

17. சடமெடுத்துளோர் - (தன்னிடத்து) உடலெடுத்தவர்; தோன்றினவர். எணணியோர் - நினைத்தவர். வடவை-வடவாமுகாக்கினி. வதிவார்-தங்குவார்.

18. செய்கை - வரலாறு. பரிவாய் இசைத்தான் எனக்கூட்டுக. பரிவு - அன்பு.

19. பிரமபுரம் - சீகாழி. அடல் - வலி. புடார்ச்சுனம்-திருக்குற்றாலம். கழைவனம் - திருநெல்வேலி. சோராடவி - களாவனம்; கருவைநல்லூர். தலை-முதன்மை.

20. தென்றிசைச் செல்வோர் - யமபட்டணத்துக்குப் போவோர். செயந்தி-திருச்செந்தூர். அம்பதி - அழகியதலம். அன்றி-அல்லாமலும். இதயகோகனதம்-இருதயதாமரை(யாகும்).

21. திங்கள்-மாதம்.

22. மாகமாதமுப்பது மெனக்கூட்டுக. மாகம் - மாசிமாதம். ஏதிலா - குற்றமில்லாத. எத்தலம் - எந்தத்தலத்தில். போதுதற்கு - நீங்குதற்கு. அரிதாம்-கூடாததாகிய.

23. வேள்வி-யாகம். விதிமரபு-விதிமுறை. நீள்கதிக்கு - உயர்ந்தபயனுக்கு. மாகமுகாரம்பம்-மாசிமாசம் வதஞாம்ப (ஸ்நானத்தினாலாகும்). பலனை -பயனை. கோடி - கோடி (மடங்கதிக) மாகச். சூள்-சபதம்.

24. ஆறுநிலாமுகமண்டலம் - (குமாரக் கடவுளுடைய) ஆறு சந்திரன் போன்றமுகமண்டலங்களை. பெட்பு-ஆசை. உறைந்து-(செயந்திப்பதியில்) தங்கி.

25. மல்லால் -வளத்தால். ஆன் - பசு. வான்பரிவேள்வி - பெரிய அசுவமேதம். விந்தையால் - உபாயத்தால்.

26. அற்றைநாள் -அந்தக்கார்த்திகை தினத்தில். தீபம்பார்க்கும்- விளக்கு (ஏற்றி) த்தரிசிக்கும். கடைநிலம்-கீழ்த்தரம்.

27. அம்நிலை - அழகிய (பத்தி) நிலைமையை. கடவுளோர் - தேவர். பதுமம்-தாமரை. தளிமம் - கோயில். கோமான்-பிரமன்.

28. கன்றிய-வருந்திய.

29. கருதரு-நினைத்தற்கரிய. மேலைவீடு-மோக்ஷவீடு. தேற்றினன்-தெளிவித்தான். பரிவு-அன்பு. தொகுத்துப்பகுத்தனன்-சுருக்கிக்கூறினான்.

## 18. சுகப்பிரமரிஷி பூசைசெய்த அத்தியாயம்.

1. நாடரு - ஆராய்தற்கரிய. சுரப்ப-பெருக. நிலாவேணி-சந்திரனைத் தரித்தசடையையுடையசிவபிரான். உள்ளம்வைத்தான - மனங்கொண்டான்.

2. நவை-குற்றம். மூத்து - முதிர்ந்து நாரண வடிவம் - விஷ்ணு அரிசம். காதை அவை - கதையாகிய அவைகளை. அறிவுபதேசம் - ஞானோபதேசம். ஒருங்கு-முழுதும்.

3. உற்ற-பொருந்தின. பேரினை-(அத்தலங்களின்) நாமங்களை. புலரிக்காலை-விடியற்காலத்தில்.

4. படலை-கூட்டம். தூங்கும்-தங்கும். ஆடியின்-கண்ணடியைப்போல.

5. ஆர்வம்-அன்பு.

6. நவிற்ற-துதிக்க.

7. கனகலதிரம் - ஒருநகரம். தாதை-பிதாவாகிய சிவபிரான். மங்கலமரபின்-நல்லமுறையாக.

8. மலையம்- பொதியமலை. மேல்பால் - மேல்பக்கம். நிலையம்- இடம். வேதஆரிடர்-வேதமுனிவருக்கு.

9. உருச்சொல்லி-பாடஞ்சொல்லி. பெருந்தகை-பெரியதகுதியுடையான்.

10. பனி-குளிர்ச்சி. படலை-கூட்டம். சாரல்-மலைப்பக்கம். நாப்பண்-நடுவிடம். சினகரம்-கோயில்.

11. தொல் - பழைய. மறைமுடிவு-வேதாந்தம். மூத்த-முதிர்ந்த. சின்மயம்-ஞானசொரூபம். ஓங்காரம்-பிரணவம்.

12. வேட்டு-விவாகஞ்செய்து.

13. தினகான்மரபு - சூரியகுலம். அண்ணல்-அரசன். ஞானவரை-திருப்பரங்குன்றம். நோற்கும்-தவஞ்செய்யும். வேட்டது - இச்சித்தது. நவில்வது ஆனுன்-(அவ்வரசன்) கூறத்தொடங்கினுன்.

14. (சிவபெருமான்) அறுபானுன்காயாடின நடனக்கோலமெனக்கூட்டுக. நாடகச்சுருதியாச - நாடகநூலின்படி. (நீர்) காட்ட - (பிறர்க்) கறிவிக்க.

15. கூறரு - சொல்லுதற்கரிய. காலகக்க.

16. தேறல் - தேன். ஆறுடனைந்து-பதினைன்று அரன்பதி-சிவஸ்தலம். மங்கலச்சாரல் - மங்கலமலைப்பக்கம். அகிலம்-உலகம்.

17. போதனம்-போதித்தல்.

18. பொருநைச்சங்கமம்-தாம்பிரபருணி நதிகூடுமிடம். பொலன்குவடு-பொன்மயமாகியசிகரம். சந்தவரை-சந்தனசலம். எஞ்ஞான்றும் - எந்நாளும்.

19. பிரிந்து - நீங்கப்பட்டு. ஒள்-ஒளி. நால்வாக்கியம்-நான்குவேதத்திலுண்மை. பரித்து-தாங்கி.

20. தாழ் - தங்கிய. மகேந்திரம் - மகேந்திரமலை. குருங்கம்-ஒரூர். கூர்மச்சிலை-ஆமைவடிவமானபாறை. இரண்டுமாதர் - தெய்வயானை, வள்ளியம்மையார்.

21. சையம்-சையமலை. சித்தகேத்திரம் - சிததக்ஷேத்திரம். சித்தர் - (எனைய) சித்தர். மேல் கிமிர்-மேலேயெழும். குளிகாசித்தி, பாதுகாசித்தி, பிராணயாமசித்தி, இம்மூன்றையும் யோகநூலிற் காணக.

22. என்றறைந்த-என்றுசொல்லப்பட்ட. நந்தல்-கெடுதல். அறைந்த எனபதனிறுதியில் அகரங்கெட்டது.

23. முத்தேவர் - திரிமூர்த்திகளிடத்தும். மூவர் ஆவதும் - மூன்றுதொழிலுடையவரா யிருப்பதும். சுருதியின்-வேதங்களைப் போதித்தால்.

24. தட்ட - தடைசெய்ய. கொந்து-பூங்கொத்து. கவடு - கொம்புகளை. போக்கும் - வளர்க்கும். சந்தகோபாலர்-இடையர். கதிர்-சூரியன். கோமான்-தலைவன்.

25 நாடகத்தியற்கை - நாடகமுறை.

26. கோகுலம்-பசுக் கூட்டத்தையுடைய. ஆபன்-(மேலேகூறிய) இடையர் தலைவன். ஓகையின்-மகிழ்ச்சியால். கண்ணன் - கிருஷ்ணன். சாயுச்சியம்-மோக்ஷம்.

27. குகற்கு - குகனென்னும் பேருடையவனுக்கு. சோராது - சோர்விலாது.

28. வாய்ந்து-பொருந்தி.

29. முதுகிரி-விருத்தாசலம். பொன்னன்-வியாளபகவான். அகாரமூன்றும்-ஆகருடணம், அதிரிச்சியம், அஞ்சனம் என்னுமந்திரவித்தை கண் மூன்றையும். வகாரமூன்று - வசியம், வாதம், வயத்தம்பம் என்னு மந்திரவித்தைகண் மூன்றையும். வகைபட-முறையாக. குருபரன்-குமாரக்கடவுள்.

30. காலன்-யமனுடைய. ஆணை-ஆஞ்ஞையை. தகைய-தகுதியுடைய. சொல்வாய்ந்த-பதஞ்சிறந்த. தந்திரம்-சாஸ்திரம். பசும்பூடு-பசியபுல். ஆதித்தொகை - முதலிய (பிரபஞ்சத்) தொகுதியை. சொல்லி-உபதேசித்து.

31. பரம்பிய-பரந்த. தரங்கம்-அலை.

32. ஆரிடர் - முனிவர்களே. மூவாறன - (மேற்கூறிய) பதினெட்டாகிய. சந்தசசாரல்-சந்தனசலமலைப்பக்கம். தகைய - அழகுடைய. காட்டல்-காட்டுதலே. உளங்கொடு-உள்ளத்திற்கொண்டு. குறிப்பால்சொற்றான் - (வியாசமுனிவர் சுகமுனிவருக்குத்தமது மனக்)குறிப்பினாலே கூறியருளினர்.

33. சூர்-சூரபன்மன். உரம் - மார்பு. வை-கூர்மை. இனி முன்னுங் கற்பத்தெனக் கூட்டுக. கோகனதம்-தாமரை. அற்புடன்-அன்போடு. நடிக்கும்-நடித்துக்காட்டுவன். என்ன - என்று. அறிவு-(திருச்செந்தூர் விஷயமாகிய) ஞானத்தை. ஒருங்கு-முழுதும். உணர்த்தினன் - (வியாசமுனிவர் சுகமுனிவருக்குக்) கூறியருளினர்.

34. வதரிகாச்சிரமம் - இலந்தைக்காட்டிலுள்ள இடம். இது:முனிவர்கள் வசிக்கும் பெரியதானம்.

35. கழி- மிக்க. கடவுளர்க்கு-தேவர்களுக்கு. தந்தை-பிதாவாகிய வியாசமுனிவர். மாந்தினன்-உண்டவராகி. மகிழ்வுபூத்தான் - (சுகமுனிவர்) சந்தோஷித்தார். இயலாகிய மதுவெனக்கூட்டுக.

36. பனிவரை - இமயமலை. தூங்கும்-தங்கும். மீதூர்ந்து - அதிகமாக. எண்ணியாங்கே-நினைத்தபடியே.

37. பிராணாயாமம் - பிராணவாயுவை இரேசகபூரக கும்பகஞ்செய்தல்; இஃது: அட்டாங்கயோகத்தொன்று. பிராணம் - இந்திரியங்களாகிய. மாயை-வஞ்சகத்தையுடைய. குழுவினை-கூட்டங்களை. ஒன்றதாக - ஒருவழிப்பட - கூட்டமிட்டு. சேர்த்து. அவையை-அவற்றை. மேலை - மேலுள்ளதாகிய. சுழுமுனை-நடுநாடியில். கூட்டி-நடப்பித்தலைச்செய்து; இங்ஙனஞ்செய்தலைப்பிரத்தியாகாரமென்பர். தொடர்வினை - மேல்வரும் தீமையை தூயோன்-பரிசுத்தமுள்ள சுகமுனிவர்.

38. அந்தரத்திடை-ஆகாயத்தினிடம் ஆறு-வழி. செல்வுழி-போகுமிடத்து. முந்து - பழைய. ஆற்றின் - வழியில்.

39. தாழ்-தங்கிய. வரை-மலையைச்சார்ந்த.

40. அடல் - வலி. அட்சயவடம் - ஒருதலம். தென்பார்க்குரியார்-தென் புலத்தார்; பிதிரர். தழைகதியெனக் கூட்டுக. கெயை-கயாதீர்த்தம். அரிபாதம்-விஷ்ணு திருவடி.

41. முனிவன்-கௌதமமுனிவர். வான்-பெரிய. துகள்-குற்றம். தீர்தரு-நீங்கிய. குகனேரி - திருப்பதியிலுள்ள ஒரு தீர்த்தம். ஐந்து - பஞ்சேந்திரியம்.

42. புடை-பக்கத்தில். அச்சத்து-பயத்தையுடைய. ஒருமானை - (மாரீசனாகிய) ஒருமானை. அம்மான்- அந்தப் பெரியோனாகிய. பதுமத்திருமான் - தாமரையிலிருக்குமிலக்குமி. வயின் - வயிற்றில். பிறவான்- (இனி)ச்சன்மமில்லாதவராகிய சுகமுனிவர்.

43. சொல் - சொல்லப்பட்ட. அசோபலம் - ஒருவிஷ்ணுதலம். அ- அந்த. தூ-புனிதமுள்ள. வல-வலியுடைய. புகழ்வலம்நாடு - புகழின் வெற்றியினை விரும்புகின்ற. சுவாலே-ஒரு விஷ்ணு க்ஷேத்திரம். பிரமஅம்பிகை- சிவமும் பராசத்தியும். பெட்பார்-ஆசையுடனிறைந்திருக்கின்ற.

44. திருமுட்டம் - ஒரு விஷ்ணு தலம். வராகத்திருமால் - பன்றிவடிவமாகிய விஷ்ணு. இலந்தைத்தரு- வதரியாச்சிரமம். அச்சுதன் - திருமாலாகிய. திரை-அலைகளிலுள்ள.

45. தரங்கத்து - அலைகளினிடத்து. இரை-ஒலியையும். பணிலத்து - சங்குகளின். பரம்ப - நிறைய. பவம்-சனனம். கவின-சிறப்ப.

46. நேமிப்பெயர்வனம் - நைமிசாரணியம். பீடு-பெருமை. கோடும் -வலையும். முதுகுன்றம் - விருத்தாசலம். குழகன்-பேரழகுடையவன.

47. அண்ணமலைச் சுருதித் தலையெனக்கூட்டுக. சுருதித்தலை-வேதத் தலைவன். அனவரதம் - எப்போதும். பணி-பாமபு.

48. முத்தாங் கனி - வெண்ணிறமுள்ள பழம். நாவல்-நாவல்மரம். கைமுகிழுத்தான் - கும்பிட்டான். அடவி-காடு. தெத்தாத்திரேயன் - ஒரு முனிவர். விரை-மணம்.

49. ஆழிப்புயல் - சக்கரத்தைத்தாங்கிய மேகம்போலுந்திருமால். தரம்-தகுதியாகிய. எறி-வீசுகின்ற. தரங்கத்திரை - (இருபெயரொட்டு) அலை. பொன்னி-காவிரியாகிய. இடபக்கிரி- இடபமலை. ஆயன்-விஷ்ணு.

50. கடம்பாடவி - கடம்பவனம். காமாரி - காமனையெரித்த சிவபெருமான். களி-மகிழ்ச்சி. துளங்க-விளங்க.

51. விதியால் - முறைப்படி. வேதாகமவிதியெனக்கூட்டுக. நவைதீர் - குற்றநீங்கிய.

52. சங்கமம் - கூட்டம். புணரி - கடல். களம்-விடம். மரு-வாசனை.

53. மீதுஆறினன்-(ஆகாயத்தின்) மேல்வழியிலேயுள்ள சுகமுனிவர். இருந்து - (திருச்செந்தூரெல்லையிலே கீழிறங்கி) இருந்து. கந்தவெற்பு-சந்தனசலம். ஓதாதுணர்வான்-தாமேயெலாமறிபவராகிய வியாசமுனிவர். உளங்கொண்டு -மனத்திலே தியானித்து. தாதால் - பொன்னால். பூசுரர்-திரிசுதந்திரர். கோது-குற்றம். மதம்-கருவம்.

54. தோய்ந்து - கலந்து. சந்தஇரவிவரை யெனக் கூட்டிச் சந்தனசலமென்னுமலையெனப்பொருள்கொள்க. இரவி-மலை. கடிது-சீக்கிரம். இழிந்து-இறங்கி. அவ்வழி - அவ்விடத்து. ஆறு-நீங்காத.

55. விகற்பம் - வேறுபாடாகிய வகை. திங்கட்பிளவு-அர்த்தசந்திரன். அளவும்-கலக்கும்.

56. பேர்-பெரிய. ஆதரம் - ஆசை. ஆராதனை-பூசை. ஆராஅமுது - உண்ணக்கூடாத அமுதம்போன்ற உமாதேவியார்.

57. துயில்மாலே- நித்திரையிலிருக்கிற விஷ்ணுவை. சூழ்தேவர்-பரிவாரதேவதைகள். செயிர்-குற்றம். மனு-மந்திரம்.

58. நீடு பொன்விமானம் எனக்கூட்டுக. நல்நேயம் - நல்லன்புக்குரிய. சகந்நாத-உலககருத்தாவாகிய. சோடசவிதி-பதினறு உபசாரம். அலர்-மலர்களை. இறைத்தான் - வீசியருச்சனைசெய்தான்.

59. தணிப்பான்-தணிக்கும் பொருட்டு. மோனம்-மௌனம்.

60. பதினரும்விதி-சோடசோபசாரம். பரிவின்-அன்போடு. கூர்த்து-மிகச்செய்து. கோகனதம் - தாமரை. மயிர்க்கூச்சுப் போர்த்தல்-மயிர்க்கால் தேகமெங்குந் தடித்தல்.

61. பொன்-அழகு.

62. இருவினை-நல்வினை, தீவினை. வரன்முறை-கிரமப்படி.

63. அலேத்து-நிரைத்து. நோன்-வலிமை. தேவி - பார்வதி. சிறுகுருந்தே-சிறுபிள்ளையே.

64. வானப்பரிதியின்-(நித்) ஆகாயத்தில் விளங்குஞ் சூரியனுகிய சிவபெருமானுடைய. அம் கதிரின் மூத்து-(அருளாகிய) அழகியபிரகாசத்தில் முதிர்ந்து. படிவம் அளவையாப்போம் மூ இருசுடர் அவையும் - (அளவுபடாத) உருவம் அளவுபடும்படி வெளிவரும் ஆறு அக்கினிப் பொறிகளையும். ஒன்ருயியற்றி-ஒன்ருகச்செய்து. ஓர்-ஒப்பில்லாத. பரம் - மேலான. மகா-பெரிய. பரமமகா என்பது, செய்யுள் பற்றிப் பரமமாக என்ருயிற்று.

65. இருமைஇல் - இருவினையுமில்லாத. நுண்மைமூவா-(மதி) நுணுக்கம் கெடாத. மேய இந்திரியத்தால்-(மற்றையோர்) பொருந்திய பஞ்சேந்திரியங்களால். தேற்றுஅரு-தெளிதற்கரிய. நுட்பம் - நுண்பொருளாகிய. தளிமம்-கோயில்.

66. காமமே முதல - காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம். பருவம் ஆறு - உற்பத்தி, பாலியம், யௌவனம், வயோதிகம், விருத்தம், மரணம். ஓமெனும்பொருள்-பிரணவம். முன்னுன-(அது) முதலாகிய. கோசம் ஆறு - பிரணவகோசம், அன்னமயகோசம், பிராணமயகோசம், மனோமயகோசம், விஞ்ஞானமயகோசம், ஆனந்தமயகோசம்; இவைகளைக் கட்டளைக் கொத்திற் றெளிவாகக் காணலாம். தோம்-குற்றம். சுவைகளாறு - தித்தித்தல் முதலியவை. சூத்திரம் ஆறு - (ஆபத்தம்பர்முதலிய ஆறுமுனிவர்கள் கருமகாண்டம் பற்றிக்கூறிய) விதிநூல் ஆறு. ஆக-உண்டாக.

67. ஆறுவிதம்-(ஐசுவரியம், வீரியம், திரு, ஞானம், புகழ், வைராக்கியம். ஆகிய) ஆறுவகை; இவற்றை முற்றறிவுமுதலிய ஆறென்பாருமுளர். முக்குணம் - இராசதம், தாமதம், சாத்துவிகம்.

68. மகம்-யாகம். ஈட்டும் - சம்பாதித்துக்கொண்ட. ஆகுதி - அவிப்பாகம். அன்னூர்க்கு-அம்மறையவருக்கு. நறை-மணம். மலர்-விரிந்த.

69. குகைஎனும் இதயவீடு - (பிரமாண்டசரீரத்தித்தின்) இருதயஸ்தானத்தில். குகம் - இரகசியம். குகைவரை-குகையுடைய மலைகளில்.

70. பரன்-சிவபிரான். குடுமி-உச்சி. வேள்வி-யாகம் உரம்-வலி. நிரந்த-கலந்த. அச்சுவினிப்புத்தேள் - தேவவைத்திய ரிருவர். நாப்பண் -நடு., இடை. புரிந்த-விரும்பிய.

71. வாற்கணு - வாலிலுள்ள (முதலாங்) கணு. அனல் - அக்கினி. வான்-பெரிய. பால் - பகுப்புடைய. பத்துப்பிரமர் எனக்கூட்டுக. மேல் - மேலாகிய. அபயத்தெய்வம் - அபயதேவதை. மேய - (ஆக) மேவிய. சிஞ்சுமாரத்து-முதலைவடிவோடிருந்து. எற்புற-

பொருந்துமாறு. புடவி - பூமியை. முதலேவடிவாயிருந்து பூமிகாத்தல் முதல்நூலிலில்லே.

72. ஓர் வடிவமராம்-ஒருடம்பாகிய மரம். ஆர் - நிறைந்த. காமமுதலாருந் தழையெனக்கூட்டுக. எழுதாது - இரத்தம், உதிரம், என்பு, தோல், இறைச்சி, மூளை, சுக்கிலம். (ஆகிய) தோல்-மரவுரி. ஏர் - அழகிய. புரியட்டகம்-சூக்குமதேகம். எண்பூ - எட்டுவிதமலர்; பூசாவிதியிற்காண்க. வாயில்-துவாரங்களாகிய. கணு-கணுக்கள். நிழலாம்-நிழலேச்செய்வதாம். இனசீர்பெருக்கு எனக்கூட்டுக. இன-இவ்வியல்புடைய.

73. கம்ஒளியாகி - கம்மென்னுஞ் சூரியனுகி. ககம் - பறவையாகிய. புகல்-(கற்பித்துச்) சொல்லப்பட்ட. ஆற்றல்-வலிமை.

74. இனன்-சூரியன். குழு - கூட்டம். நடததி-பிரேரித்து. கோவாகி-தலேவனுகி. கூடாகி - கூடுதலாகி; கூடி. கோவாகி-நாயகனுகி. அளியன்-அன்புடைய அடியேன்.

75. நன்னுதல் - நல்லநெற்றியையுடைய உமாதேவி. ஞானம் - ஞானநூல். பெரியர் ஞானநிழலா யெனக்கூட்டுக. ஞான-அறிவுடைய. இருசத்தி - தெயவயானேயம்மை, வள்ளியம்மை. வடம் - (கல்) லாலவிருக்ஷம்.

76. கதிர்-சூரியன். சுடரை - சூரியனே. விளக்குவிக்கும் அவனுகி- (கலந்து) பிரகாசப் படுத்தும் அக் கடவுளாகி. கதிரால் - பிரகாசத்துடனே. உற்பவமுதல ஆறுரும் பருவம் - 66-ஆம் பாட்டுரையிற் காண்க. இருக்கு-வேதம்.

77. பக்கம்-(பூர்வ, அபர) பக்ஷம். கார்ப்பாசம்-பருத்தி. இருநூல் - (வெள்ளே கறுப்பு என்னும) இரண்டுநூல். அதிலே-அந்தச்சாட்டிலே. தினமணிக்குவை-நாட்களாகிய இரத்நக்கூட்டங்கள். கோவை-கோத்தல். ஒன்றல-ஒன்றேயன்றி. சாத்தி-புனேந்து. சாரும் - பக்கமும். கொக்குவரை - மலேபோலும் மாமரவடிவமாகிய சூரபன்மனே. துணே - தம்பியாகிய தாரகாசுரன். குருகுவரை-கிரௌஞ்சமலே. பெயரா-நிலேகுலேந்தழிய.

78. அறுபதுஇதழ் - அறுபது (நாளாகிய) இதழ். திங்களிரண்டாகிய பருவமெனக் கூட்டுக. அறுபது-அறுபதுவருடம். கொங்கு-வாசனே. உயிர்த்த-தந்த. வாகை-வெற்றி. இரண்டுமுனே-இரண்டுபக்கமுங்கூர்மை;இதுபற்றியே முன்பலஇடங்களில்ருதலேவேலெனக் கூறினர். வேர்சூலம்-வேலாகிய சூலம். சூலமும் வேலும் வடிவத்தாலுஞ் சொல்லாலும் வேறெனினும் பொருளாலொன்றென்க.

79. தார இருசத்தி- மனேவிகளாகிய இரண்டுசத்தி. ஒருசத்தி-ஒப்பற்றவேல். செவ்விதுற - செவ்வையாக. உதவும்-கொடுக்கும். வாய்ந்து-பொருந்தி. குரவரின் - ஆசாரியரைப்போல. பிரசம்-தேன்.

80. ஆகம்-சரீரம். கருமம்-தொழில். ஆறு-காமாதிமுதலியவை. வினே-தீவினே. சேகு-வயிரம்; கடினம். முக்காணம்-மனம, வாக்கு, காயம். மலாதித்திரயம்-ஆணவம், மாயை, கனமம். தாள்-திருவடி. கும்போதயன்-அகத்தியமுனிவர். உரைகூறி - ஞானேபதேசஞ்செய்து. கேகயப்புள்-மயிலாகியபறவை. கிளர்-விளங்குகின்ற. அருணம்-சிவப்பு.

81. வருணம் - சாதி. ஆச்சிரமம்-நிலே. விரியுங்கீர்த்தி நாற்றிசையினும் விளக்கு வித்தெனக்கூட்டுக. அறமுன் ஞன்கும்-தருமார்த்தகாமமோக்ஷமும். பொருள்-(அவற்றின்) பயன் சேர-கூட.

82. பஞ்சேந்திரியன் - மனம், ஞானேந்திரியமைந்து, கன்மேந்திரியமைந்துடைய சீவன். மன்னும் - நிலைபெறும்; புறம்போகாமல் அடங்கிநிற்கும். இந்தியக்கோ ஆகி - இந்திரியங்கட்குத் தலைவனாகி. வான் - பெரிய. செபவடம்-செபமாலை. சூழ்ந்த-(விடயங்களிற்) பற்றிய. முன்னவர் - முதன்மையாகிய முனிவர்.

83. பூரணம்-நிறைபொருள். தா-கேடு. தன்னை - சுயம்பிரகாசவடிவை. வியன்-பெருமை. புத்தேள்-தேவன். முண்டகம்-தாமரை.

84. மகத்தினில் - யாகங்களிலே. (பிரயோகிக்கும்) இரண்டு நான்கு ஓரிரண்டு ஐந்தும்—, சூழ்ந்திடும் - ஆராய்ந்தெண்ணப்படும். எழுத்தாய்-(பதினேழ்) தெழுத்தாகி., பஞ்சதசாக்ஷர மந்திரமாகி. ஓம அகத்து - ஓமங்களிடத்து. மந்திரமும் - (வினை) மந்திரங்களும். ஆகுதி-(மேற்கூறிய யாககர்த்தர்கள்கொடுக்கும்) அவிப்பாகம். போற்றி- பாதுகாத்து. புக-சேரும்படி. தவா-கெடா த. முன்-நேரே.

85. புவனம்-உலகம். வறிது-அற்பம்.

86. வீட்டின் - மோக்ஷத் துக்கு. கண்-கருதுகின்ற. இன்-இனிய. ஏது-காரணம். துதிதரும் - துதிக்கப்படும். வாரிதி-கடல். அன்னா - மேற்கூறிய கடலை நீந்தினோர். நீந்துதலாவது: எல்லாங்கைவந்து தெளிதல்.

87. உடைந்த கும்பம் - உடைந்த குடத்தின். வான்போல-ஆகாயம்போல. உள்ளொடு புறமுமொன்றாய் - (உடம்பழியு மிடத்தும்) உள்ளும்புறமுமொன்றுபட்டு. வாரிதியின்-கடலில். மூழ்கும் - அழுந்தும். வாரியின் - நீர்போல. உள்ளாகி வெளியுமாய் - (உடம்புள்ளவிடத்தும்) அகத்தும புறத்துமாகி. விளங்கி - (ஆன்மாவுடன் கலந்து) பிரகாசித்து. குலைந்த-பிளந்த.

88. தத்துவம் - (பிருதுவி முதலிய) தத்துவங்கள். தத்துவத் தியல்பு-தத்துவ சொரூபம்.

89. செய்ய-செவ்வையாகிய. தொம்பதம்-துவமாகியசொற்குப்பொருள். ஆன-ஆகிய. தற்பதம் - தத்தென்னுஞ் சொற்பொருள். பிரமத்தை-கடவுளை. தொடர்பால் - தொடர்புடன். அசிபதம்-அசியாகிய பதப்பொருள். ஒன்றாக்கும்-ஏகமாகச் செய்யும். துவமெனினுந் தொம்பத மெனினு மொக்கும்-இங்கே கூறிய தத், துவம், அசி; இம்மூன்று வாக்கியமும் மகா வாக்கிய மெனக்கூறுவர். தத்துவமசி யென்பதற்கு-அதுநீயானா யென்பது பொருள்; இது: சித்தாந்தத்தின் முடிவு.

90. பிரயாகம் - பிரயாகை; ஒரு நதி. நாரணவடிவே - நாராயணரூபியே. ஊண் அருந்து - உணவையுண்ட. அரியே-விஷ்ணுரூபியே.

91. மூண்டு-முயன்று. முற்றுற-சித்திபெற. கலையின்நீதி-நூன்முறைப்படி. ஆண்டு-ஆளுதல்செய்து. அளப்போய்-(உயிர்கள் வினைப்பயன்களை) அளவுசெய்பவனே. சித்தர்-எல்லாம வல்லசித்தர். உலகவாழ்க்கை கலையினீதிமூண்டிருந்து முற்றுற வெனக்கூட்டுக.

92. வாரணவாசி - காசி. அன்னதானகாரணஉமை - அன்னபூரணியம்மை. கம்பை-கம்பாநதியில். நோற்கும்-பூசைத்தவஞ்செய்யும். பூவை-உமாதேவி. அரங்கம்-சீரங்கம்.

93. விராட் - பரமேசுரன். பெருவடிவம்-பெரியரூபம. களங்கு-களங்கம்; கள்ளம்.

94. சுடர்விளக்கு - சோதி விளக்கே. திலக - பொட்டா யுள்ளவரே. சாரம்-தெளிவாயுள்ளவரே. அல்லல்-துன்பம்.

95. அலம்பும்-ஒலிக்கும். தாழா-தாழ்ந்து. எஞ்சலில்-குறைவற்ற.

96. சுகமுனி-சுகமுனிவனே. வேத சாரமெல்லா மெனக்கூட்டுக. நன்கு-நன்றாக.

97. சொல்-(ஆகுபெயர்) நூல். தரும்-கூறும். சொற்ற-சொல்லிய. எண்ணியாங்கு-நினைத்தது போல. முற்று ஒருங்குணர்வோர்-பூரண ஞானிகட்கும். [உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது.]

98. வந்தனையாய்-வந்தாயாகி. வையகத்துக்கு-உலகத்தார்க்கு. உனது-உன்னுடைய. தரிசனம்-காட்சி. வாக்கு-பேச்சு. சிந்தனை-நினைப்பு. பரிசம்-தீண்டுதல். முந்து-முற்பட்ட. முகமன்-உபசாரவார்த்தை. தணவாத-நீங்காத.

99. முனிவீர்-(நைமிசாரணியத்து) இருடிகளே. பற்று-அன்பு. பாலித்து-அருள்செய்து. பெற்றம்-இடபவாகனம். உகைத்தான்-செலுத்திய சிவபிரான்.

100. உரைத்த-(இங்கேயான்) கூறிய. மரபின்-கிரமப்படி. இயல்-அத்தியாயங்கள். மரபின்-முறைப்படி. வேலைஞாலம்-கடல்சூழ்ந்த வுலகம். அருத்தி-ஆசை. அன்ன-அத்தன்மையாகிய.

101. புரிந்து-விரும்பி. வித்தகம்-நன்மை. வளை-சங்கு. ஆழி-சக்கரம். மணி-கௌத்துவமணியணிந்த. களிக்கும்-மகிழ்ந்திருப்பள்.

102. மான்மியம்-புராணம். நெடிது-நெடுங்காலம். அத்தியாயமுற்றனெக்கூட்டுக. வாம்-தாவுகின்ற. புரவிமகக்கதி-அசுவமேதத்தா லாகும் பயன். அளகையர்கோன்-குபேரன்.

103. நாடு-ஆராயப்படும். சகந்நாதர்-உலக காரணராகிய சிவபிரான். குருபரன்-குமாரக்கடவுள். வீரர்-நவவீரர். மின்னார்-தெய்வயானை வள்ளியம்மையார். தோகை-மயில். பால்-உரிமை. சிகரம்-தூவி. சந்தப்பருப்பதம்-சந்தனாசலம்.

104. தசர்-ஆட்டுவாகணம். வான்பயில்மை முகிலெனக்கூட்டுக. வாழி-வாழ்க.



## திருச்செந்தூர்த் தலபுராண அரும்பதவுரை

முற்றிற்று.



# பகழிக்கூத்தர்

அருளிச்செய்த

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்

# சிறப்புப் பாயிரம்.



நேரிசை வெண்பா.

*செந்தமிழ்க்கு வாய்த்ததிருச் செந்திற் பதிவாழுங்*
*கந்தனுக்குப் பிள்ளைக் கவிசெய்தா—னந்தோர்*
*திருமாது சேர்மார்பன் றேர்ப்பாகற் கன்பு*
*தருமால் பகழிக்கூத் தன்.* (க)

அவை யடக்கம்.

*அத்தனையும் புன்சொல்லே யானாலும் பாவேந்த*
*ரெத்தனையுங் கண்டுமகிழ்ந் தெய்துவார்—முத்தி*
*புரக்குமரன் றந்தகந்தன் பூணணிமுந் நான்கு*
*கரக்குமரன் பிள்ளைக் கவி.* (உ)

நூற்பயன்.

*மருநாண் மலர்ப்பொழி லுடுத்ததட மெங்குமலை வாய்கொழித் தெறியுமுத்தை, வண்டலிடு மெக்கர்புடை சூழ்திருச் செந்தில்வரு மயில்வா கனக்கடவுளெங்,—குருநாத னொருதெய்வ யானைதன் பாகங் குறக்கொடிக் குந்தமைசிறைக், கோழிக் கொடிக்குங் குமார கம்பீரன் குறும்பிறை முடிக்கும்பிரா,—னிருநாழி நெற்கொண்டு முப்பத் திரண்டறமு மெங்குமுட் டாதளக்கு, மிறைவிதிரு முலையமுத முண்டு ஞா னம்பெருகு மெம்பிரா னினியபிள்ளைத்,—திருநாம மெழுதுவார் கற்பார் படிப்பார் செகம்பொது வறப்புரந்து, தேவாதி தேவரும் பரவுசா யுச்சியச் சிவபதத் தெய்துவாரே.* (ந)



உ

குமரன்றுணை.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்.

## காப்புப்பருவம்.

### திருமால்.

பூமா திருக்கும் பசுங்களபப் புயபூ தரத்துப் பருகூதன், போற்றக் ககன வெளிமுகட்டுப் புத்தேள் பரவப் பொதிகைமலைக்,—கோமா முனிக்குத் தமிழுரைத்த குருதே சிகனைக் குரைகடற்குக், குடக்கே குடிகொண் டிருந்தசெந்திற் குமரப் பெருமான் றனைக்காக்க,—தேமா மலர்ப்பொற் செழும்பொகுட்டுச் செந்தா மரையில் வீற்றிருக்குந், தேவைப் படைத்துப் படைக்குமுதல் சேரப் படைத்துப் படைச்குமுயி,—ராமா றளவுக் களவாகி யனைத்துந் தழைக்கும் படிகருதி, யளிக்கும் படிக்குத் தனியேசங் காழி படைத்த பெருமாளே. (க)

### சிவபெருமான்.

உடல்வளை குழனி மதியமு நதியு முரகமு மொழுகு செஞ்சடைக் காட்டின, ருமைமுலை குழைய மருவிய புனித ருரைகொடு பரவு தொண்டரைக் காத்தவ, ருமிழ்திரை மகர சலதியில் விளையு முறுவிட வடவை கண்டமட் டேற்றின, ருடைமணி கனக பரிபுர முரல வொருமுறை பவுரி கொண்டமெய்க் கூத்தினர்,—வடவரை முதுகு நெளிநெளி நெளிய வரிசிலை யெனவொ ரம்பினைக் கோத்தவர், மறுவறு முழுவெ ணிலவெழு முறுவல் வளரொளி யிருள்வ னங்கெடப் பூத்தவர், மருவிய சகள வடிவின ரரிய வடகலை தமிழ்வ ளம்பெறச் சேர்த்தவர், மதுரையி லிறைவ ரிரசத பொதுவர் மணமலி பதயு கங்களைப் போற்றது,—மிடவிய மதுர வரியளி குமுறி யிடறிய களப குங்குமத் தூட்பொதி, யிமசல மொழுகு கனதன விரக மெழுகுற வனிதை சிந்தையிற் சேர்ப்பனை, யிடிபடு முரச முழவுட னதிர வெதிர்பொரு நிருதர் தம்படைப் போர்க்கள, மிடமற முதிய கழுதுகணடன மிடவடல் புரியு மொய்ம்பனைத் தூற்றிய,—கடதட வழுவை முகமுள கடவுள் கருணையின் முதிய தம்பியைப் பாப்பதி, கரமல ரணையில் விழிதுயின் மருவு களிபெறு குதலை மைந்தனைப் பூப்பயில், கடிகமழ் தருவி னிறைமகள் புதிய கலவியின் முழுகு கொண்கனைப் போற்றிசெய், கலைமகள் பரவு குமரனை மதுர கவிதரு குரிசில் கந்தனைக் காக்கவே. (உ)

---

காப்புப்பருவம்-பாட்டுடைத் தலைவரைத் திருமால் முதலியோரால் காவல்புரிவிக்கும் பருவம்.

### உமையவள்.

அரிபிரமர் சந்ததம் புகழ்ந்திடு பரசுடைய நம்பர்பங் கின்மென் கொடி யகிலலோகமு மாதரத்தாற் படைத்தவ, ளரிவைமட மங்கை மென் கனங்குழை திரிபுரைய ணங்குகங் கையம்பிகை யகளமாயனு பூதியிற்பூத் தபொற்கொடி, யபினவைமு குந்தர்தங் கைசுந்தரி யுரக பண பந்திகொண்டகங்கணி யமுதமூறிய பாடலுக்கேற் றசொற்குயி லறுசமய முங்கலந் துநின்றவண் மறலிபர வும்பரசண் டசங்கரி யழ கெலாமிது தானெனப்போற் றுசித்திர,—முரிபுருவ வஞ்சிதிங் கடங் கிய திருமுகம லர்ந்தபைங் கருங்கிளி முதல்விபூரணி ஞானவித்தாய்க் கிளைத்தவண், முருகுவிரி கொந்தளம் பிறங்கிய மணிமவுலி மண்டலங் கொள் செஞ்சடை முடிமனோன்மணி வாலைவற்றுக் குணக்கடன், முகின்முலைசு மந்துநொந் தசைந்திறு மிறுமெனம ருங்கிரங் கவின்புறு முறுவலாடிய கோமளத்தாற் பெருத்தவண், முறைமுறைமு ழங்கு கின் றகிண்கிணி பரிபுரம லம்புசெம் பதம்புரை முளரிநாண்மலர் வாழ்வெனப்போற் றிநிற்குது,—முரியபதி னெண்கணங் களுஞ்சது மறைமுனிவ ரும்பரிந் துநின்கழ லுறுதிதானென நாவெடுத்தேத் திநித்தலு, முளமிகம கிழ்ந்துசெங் கரங்களின் மலர்கொடுவ ணங்கி யஞ் சலென்றமை யுடைமையாயரு ணீயெனக்காத் தருட்பணை, யுடு முகட திர்ந்துவிண் டலங்களு மரியபகி ரண்டமும்பி ளந்திட வுதறு தோகைம யூரனைத்தோற் றமுற்றெழு, முபநிடத மந்த்ரதந் திரந்தனி லசபையில டங்குமைம் புலன்களி லுவகைகூருமு னேகரக்கூத் தனைப் பொரு,—தரியலர்நெ ருங்குசெங் களம்புகு நிசிசரர்து ணிந்தவெம் பறந்தலை தழுவுபாடல்வி சாகனைப்பாற் கடற்றரு, தரளநகை செங் கருங் கணிந்திரை குறமகண்ம ணம்புணர்ந்த தின்புய சயிலமோகன மார்பனைத்தோட் டிதழ்ப்பொதி, தழைமுகைபு டைந்துவிண் டரும் பிய புதுநறவு சிந்துபைங் கடம்பணி தருணசீதள வாகனைக்கோட் டகத்துயர், சரவணமி லங்கவந் தகந்தனை முருகனைவி ளங்குசெந் தில் வந்திடு சமரமோகன வேலனைக்காத் தளிக்கவே. (3)

### கணபதி.

கருணையின் வழிபடு முதியவ டனையுயர் கயிலையி னொருமுறை யுய்த்த விதத்தினர், கனவட கிரிமிசை குருகுல மரபினர் கதைதனை யெழுதிமு டித்த கருத்தினர், கலைமதி யினையிரு பிளவுசெய் தொரு புடை கதிரெழ நிறுவிய வொற்றை மருப்பினர், கடுநகர் பரமனை வல

முறை கொடுநிறை கனிகவர் விரகுள புத்தி மிகுத்தவர்,—பொருவரு மிமகிரி மருவிய பிடிபெறு பொருகளி றெனமிகு பொற்பு விளைத்தவர், பொதியவிழ் நறுமல ரணைமிசை தமதுடல் புளகம தெழவொரு சத்தி தரித்தவர், பொதுவற விடுசுடர் முழுமணி யொளிவிடு பொலிவெழு பவளம தித்த நிறத்தினர், புகர்முக முடையவர் குடவயி றுடையவர் புகழிருசெவியினி றுத்தி வழுத்துது,—மிருமையு முதவிய சிவபர சமயமு மிமையவ ருலகுமளித்த களிப்பனை, யிசைமுரன் மதுகர முறைமுறை பெடையுட னிடறிய முகைவிரி செச்சை வனப்பனை, யிளகிய புளகித மலைமுலை யரமக ளிகலிய புலவிய கற்று மழுப்பனை, யிகல்புரி பரநிசி சரர்குல கலகனை யெனைவழி யடிமைப டைத்திடு நட்பனை,—யருமறை யுரைதரு பிரமனை யமரரு மடிதொழ விடுசிறை விட்டதி றத்தனை, யடிவயர் கொடுவினை துகள்பட நடமிடு மழகிய சரணம ளித்த வரத்தனை, யளவறு கலவியின் முழுகிய குறமக ளழகினி லொழுகியி ருக்கு மயக்கனை, யலையெறி திருநகர் மருவிய குமரனை யறுமுக முருகனை நித்தல் புரக்கவே. (௪)

கலைமகள்.

அவனி பருகிய மாறிரு வுந்தியி லமரு மொருபிர மாவெனு மந்தண, னரிய சதுமறை நாவிலி ருந்தவ ளளவில் பலகலை யோதியு ணர்ந்தவ—,டவள முளரியில் வாழ்வுபு ரிந்தவ டவள மணிவட மாலைபு னைந்தவ, டவள வடிவுள வாணிசு மங்கலி தனது பரிபுர பாதமி றைஞ்சுது,—முவரி முதுதிடர் பாயவி டம்பொதி யுரகன் மணிமுடி தூள்பட மந்தர, முலைய வெறிசுழன் மாருத மெங்கணு முதறு சிறைமயில் வாகன னின்புற,—கவரில் வரிவளை சூல்கொடு தங்கிய கமட முதுகினி லேறநெ டுந்திரை, கதறு கடலலை வாய்முரு கன்பெறு கருணை தருகவி மாலைவி ளங்கவே.

அரிகரபுத்திரன்.

வரியு நீள்சடி லத்திடை மகுட ராசித ரித்தவர், வளையு நீடுகருப் புவின் மதுர வாளிதொ டுத்தவ,—ரரிய பூரணை புட்கலை யரிவை மாரிரு பக்கமு, மழகு கூரும கிழ்ச்சிய ரடிவி டாமல்வ ழுத்தது,—முரிய நான்மறை நித்தலு முறுதி யாகவ ழுத்திய, வுவகை யாகுக வித்துறை யுதவு நாவலன் முற்றிய,—பரிய வாளைகு தித்தெழு பரவை சூழுந கர்க்கிறை, பழநி வேல வனைப்புகழ் பனுவன் மாலைத ழைக்கவே. (௬)

## பகவதி.

விளையுஞ் செழுந்தே னுடைந்துமுகை விண்டொழுகு வெண்டா மரைப்பொகுட்டு, வேதா முடித்தலை முடிக்குஞ் சடாடவியள் வெங்கொலை மடங்கலேறி,—வளையும் பணிப்பிறை மருப்புக் குறுங்கணெடு மயிடாசு ரன்சிரத்தில், வலியநட மிடுகுமரி பகவதிச ரோருக மலர்த்தாள் வணக்கமுறுவா,—முளையுந் தடந்திரைத் திமிரதம ரக்குழி யுவர்ப்பரு மகரவேலை, யொலியிடுங் குண்டகழி சுவறிமே டாகவே லுள்ளுறை கழித்துநிருதக்,—களையுங் களைந்துகல னணிபுலோமசைதன்மங் கலநா ணளித்தபெருமாள், கடியமயில் வாகனப் பெருமா னுவந்தெனது கவிமாலை கொண்டருளவே. (எ)

## காளி.

காயுங் கொடும்பகைத் தாருக விநாசனி கபாலிகங் காளிநீலி, காளிமுக் கண்ணியெண் டோளிமா தரிவீரி கவுரிகலை யூர்திகன்னி,—பாயுந் தழற்புகைப் பாலைக் கிழத்திவெம் பண்ணம் பணத்திமோடி, பரசுதர னுடனடன மிடுசூலி சாமுண்டி பாதார விந்தநினைவா,—மாயும் பெரும்பனுவ லாசுகவி மதுரகவி யரியசித் திரகவிதைவித், தாரகவி யிடுமுடிப் புக்குள மயங்காம லடியவர்க் கருள்குருபரன்,—றேயும் பணிப்பிறைத் திருநுதற் கடன்மகளிர் தெண்ணித் திலங்கொழித்துச் சிற்றில்விளை யாடல்புரி யுந்திருச் செந்தில்வரு சேவகன் புகழ்பாடவே. (அ)

## ஆதித்தர்.

வெள்ளப் பெருந்துளி யிறைக்கும் பெருங்காற்று வெண்டிரையின் மூழ்கியேழு, வெம்புரவி யொற்றைபா ழித்தடந் தேரேறி வேதபா ரகரிறைஞ்சப்,—பள்ளக் கடற்றிரை கலக்கியூ ழியினிருட் படலமுழு துந்துடைத்துப், படர்சுடர் விரித்துவரு பன்னிரு பதங்கர்பொற் பாதமலர் சென்னிவைப்பா,—முள்ளக் களிப்பரு வரிவண்டு பண்பாட வோதிம நடிக்கமுள்வா, யுட்குடக் கூன்வலம் புரிமுத்த முமிழநீ ரோடையிற் குருகுகாணக்,—கள்ளக் கருங்கட் சிவந்தவாய் வெண்ணகைக் கடைசியர் நுளைச்சியருளங், களிகூரு மலைவா யுகந்தவே லனையெங்கள் கந்தனைக் காக்கவென்றே. (கூ)

முப்பத்துமுக்கோடி தேவர்கள்.

பொதுவி லாடு மத்தற்கு நீடு பொருளை யோதி யொப்பித்த சீலர்
புணரி தோய்ந கர்க்குச்ச காயர் புலமை நீதி யொப்பற்ற கேள்வர்
குதலை வாய்மொ ழிச்சத்தி பாலர் குருதி பாய்க திர்க்கொற்ற வேலர்
குறவர் பாவை சொற்கத்தின் மோகர் குமரர் காவ லுக்கொத்த காவ
மதுர கீத விற்பத்தி வாணர் மகுட வேணி முத்துத்த ரீகர் [ன்
மவுன மோன பத்திக்க லாபர் மனையில் வாழ்வு வைப்புற்ற நேயர்
முதுமை யான சொற்பெற்ற நாவர் முனிவர் வேள்வி யிச்சிக்கு மூணர்
முடிவி லாத கற்பத்தி னூழி முதல்வர் தேவர் முப்பத்து மூவரே. ()

காப்புப்பருவம் முற்றிற்று.

---

## இரண்டாவது: செங்கீரைப்பருவம்.



வெங்காள கூடவிட மொழுகுபற் பகுவாய் விரித்துமா சுணமு மிழிந்த, வெங்கதிர் மணிக்கற்றை யூழியிரு ளைப்பருக வேய்முத் துதிர்ந்துசொரியக்,—கங்காளர் முடிவைத்த கங்கா நதிக்கதிர் கடுப் பக் குறுங்கவைக்காற், கவரியின் பருமுலைக் கண்டிறந் தொழுகுபால் கதிர்வெயிற் படமுரிந்து,—மங்காம விரசதத் தகடெனச் சுடர்விட மலைக்குறவர் கண்டெடுத்து, வண்டினைக் கெருவிடுஞ் சாரலிற் கரிய குற மகளிருள மூசலாடச்,—செங்காவி விழிபருகு பன்னிருகை மேகமே செங்கீரை யாடியருளே, திறையெறியு மலைவா யுகந்தவடி வேலனே செங்கீரை யாடியருளே. (க)

கறைகொண்ட முள்ளெயிற் றுத்துத்தி வரியுடற் கட்செவிப் பஃ றலைநெடுங், காகோ தரச்சிர நெளிக்கவட பூதரங் கால்சாய மகரமெ றியுங்,—துறைகொண்ட குண்டகழ்ச் சலராசி யேழுஞ் சுறுக்கெழ முறுக்கெயிற்றுச், சூரன் பயங்கொளச் சந்த்ரசூ ரியர்கள்செந் தூளி யின் மறைந்திடத்திண்,—பொறைகொண்ட சுரர்மருவு மண்டகோ ளகைமுகடு பொதிரெறிய நிருத ருட்கப், பூச்சக்ர வாளகிரி கிடுகி டென வச்சிரப் புருகூதன் வெருவிவேண்டுந்,—திறைகொண் டளக்க வரு மயிலேறு சேவகா செங்கீரை யாடியருளே, திரையெறியு மலைவா யுகந்தவடி வேலனே செங்கீரை யாடியருளே. (உ)

ஏர்கொண்ட பொய்கைதனி னிற்குமொரு பேராசி னிலைகிழ் விழிற்பறவையா, •மிதுநிற்க நீர்விழிற் கயலாமி தன்றியோ ரிலையங்கு மிங்குமாகப்,—பார்கொண்ட பாதியும் பறவைதா னாகவப் பாதியுஞ் சேலதாகப், பார்கொண் டிழுக்கவநு நீர்கொண் டிழுக்கவிப் படிகண்ட ததிசயமென,—நீர்கொண்ட வாவிதனி னிற்குமொரு பேழ்வாய் நெடும்பூத மதுகொண்டுபோய், நீள்வரை யெடுத்ததன் கீழ்வைக்கு மதுகண்டு நீதிறான் மங்காமலே,—சீர்கொண்ட நக்கீ ரனைச்சிறை விடுத்தவா செங்கீரை யாடியருளே, திரையெறியு மலைவா யுகந்தவடி. வேலனே செங்கீரை யாடியருளே. (௩)

கந்தமலி நெட்டிதழ்க் குறுமுகைப் பாசடைக் கமலமல ரைக்க றித்துக், கடைவாய் குதட்டும் புனிற்றெருமை தன்குழக் கன்றுக் கிர ங்கியோடிக்,--கொந்தவிழ் கருங்குவளை யோடைத் தடாகக்குரம்பைக் கடந்துசெந்நெற், குலைவளைக் கும்பழக் குலைமடற் கதலிக் குருத்தற மிதித்துமீளப்,--பந்தரிடு சூலடிப் பலவுதரு முட்குடப் பழமெலா மிட றிவெள்ளைப், பணிலஞ் சொரிந்தநித் திலமுறுத் தப்பதை பதைத்து முலை பாலுடைந் து,--சிந்தமக ராழியலை யொடுபொருத செந்தூர செங்கீரை யாடியருளே, செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய் செங்கீரை யாடியருளே. (௪)

வீறுட வெங்கதிர்ப் புகர்முகக் கூரிலை மிகுத்தவே லுறைகழித்து, வெவ்வாய் பிளந்துசிறு கட்பே ரிடாகினிகள் விளையாட வெங்கவந்த,--மாறுட முதுபகட் டுயர்பிடர்க் கரியநிற மறலியிரு கைசலித்து, மன் றுட வுடல்விழிக் குரிசில்கொண் டாடநெடு மாகமுக டிடைவெளிய றப்,—பாறுட வம்பொற் கிரீடம் பரித்தலகை பந்தாட விந்தாடவிப், பாலைக் கிழத்திமுக் கவரிலைச் சூலம் பசுங்கொழுங் குருதிவெள்ளச்,— சேறுட வென்றுசிறு முறுவலா டுங்குமர செங்கீரை யாடியருளே, செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகையாய் செங்கீரை யாடியருளே.

மகரசல ராசிதனில் வருணன்வந் தடிபரவி வைத்தமணி முத்து மாலை, வடபூ தரத்தில்விழு மருவியென வுத்தரிக மார்பிலூ டாடமன் னுந்,—தகரமல ரிதழ்முருகு கொப்புளிக் குஞ்சிகைத் தமனியச் சுட்டி யாடத், தவளமுழு மதியமுத துளியெனத் திருமுகத் தரளவெயர் வாடமுழுதும்—பகரவரு மறைமுனிவர் கொண்டாட மழுவாளி பங்காளி திருமுலைப்பால், பருகக் குழைந்துசிறு பண்டியுந் தண்டை யும் பாதமும் புழுதியாடச்,— சிகரவரை யரமகளிர் சிற்றுறுவ லாட நீ செங்கீரை யாடியருளே, செந்நிறக் குடுமிவெண் சேவற் பதாகை யாய் செங்கீரை யாடியருளே. (௬)

வேறு.

இந்திர னுஞ்சசி யும்பர ரும்படி யிங்கே வந்தார்கா
ணிந்திரை யுங்கர சங்கமு குந்தனு மிந்தா வந்தார்பா
ரந்தண னுங்கலை மங்கையு நின்சர ணஞ்சேர் கின்றார்போ
யண்டரு டன்பல தொண்டர்ப ணிந்தன ரஞ்சே லென்றாளாய்
முந்துத டந்திரை யுந்துவ லம்புரி மொண்டே கொண்டேக
முன்றிரு ரூந்தர ளங்களு மிழ்ந்திட முந்தூர் நந்தூருஞ்
செந்தில்வ ளம்பதி வந்தரு ளுங்குக செங்கோ செங்கீரை
தென்றன்ம ணங்கமழ் குன்றுபு ரந்தவ செங்கோ செங்கீரை. (எ)

வரைபொரு புளகித மலைமுலை யரிவையர் வந்தார் பந்தாட
மறிகட லிறைதரு நவமணி வடமது வண்டார் தண்டார்பா
ருரை பொரு கவிஞரு முனிவரு மமரரு முன்போ லுண்டோதா
னுரையெமர் வழிவழி யடிமையி துளதென வுன்பா லன்பானார்
கரைபொரு கடறிட ரெழுமயின் மிசைவரு கந்தா செந்தூரா
கழிமட வனமொடு முதுகுரு கொருபுடை கண்சாய் தண்கானற்
றிரைபொரு திருநகர் மருவிய குருபர செங்கோ செங்கீரை
செருவினி லெதிர்பொரு நிசிசரர் தினகர செங்கோ செங்கீரை. (அ)

வேறு.

உரைசெய் வரையர மகளிர் முறைமுறை யுன்பேர் கொண்டாட
வுலகு மிமையவ ருலகு மரகர வுய்ந்தோ மென்றாட
வரைசெய் வனமுலை மகளி ரெழுவரும் வந்தே பண்பாட
மலய முனியொடு பிரம முனிதொழ வந்தார் கண்டாயே
கரையின் மணலிடு கழியி னெடியக லஞ்சே ருஞ்சார்பிற்
கரிய முதுபனை யடியில் வலைஞர்க ணஞ்சூழ் மென்கானிற்
றிரையில் வளைதவழ் நகரில் வருகுக செங்கோ செங்கீரை
செருவி னிசிசர திமிர தினகர செங்கோ செங்கீரை. (கூ)

வேறு.

குறுமுகை விண்ட நெட்டிலைத் தாழை யடியில்வி ளைந்த முட் குட்க் காயி லினிய குவளை யோடையில் விண்டோ யுந்தேவர், குண லைபு ரிந்த கற்பகச் சோலை நிழலிடு பந்த ரிட்டபொற் றாணி லளவர் குடிலில் வாசலி னின்றே டுந்தோணி, குழுவொடு வந்து விட்டிளைப் பாறு துறைமணல் வண்ட லிட்டுவற் றுத பழைய குமிழி வாவியில்

மண்டா னந்தாவுங், குரவுநெ ருங்கு மெக்கரிற் கான லுழுநர்ப ரம்பி னெற்குலைத் தாளி லிளைய குமர ரூர்கிறு திண்டேர் மென்காவி,—விறு குகு ரும்பை யொத்தபொற் பார நகிலரி ருந்து வைத்தவைப் பூச லருகி லிளைஞ ரூடலில் வண்டார் தண்டாரி, லெவரும கிழ்ந்த சித்தி ரச் சாலை நிழன்மணி துன்று தெற்றியிற் றேவர் மகுட மிடறு பூமி யில் வங்கா ளஞ்சீன, மெனமொழி தங்கு மற்புதத் தீவில் வணிகரின் வந்த மிக்கபட் டாடை வகையி லெறியு மாரவ டம்பூ ணும்பூணி, விரைகவர் ஞெண்டு முக்குளித் தூறு மளறுகி டங்கில் வித்துவித் தாரத் துரவி விடுமுள் வேலியில் வெங்கா மன்காண,—முறுகவி ளைந்து முற்றி முத் தேறு கரியக ரும்பு சுற்றுசிற் றூலை நிலையின் முதிய தாழியில் வெந் தா றும்பாகின், முடியைவி ளம்பி வைத்துமுட் டாது கடைசித ருகின் ற கட்குடப் பாணை முதுகின் முளைகொள் சாலியின் மென்பூ கந்தோறு முருகுது ளும்பு கொத்துடைப் பாளை சிதரியு திர்ந்த பித்திகைப் பீட மறுகின் முதல்வர் தேவியர் பந்தா டுங்காவின், முனிவர்வி ரும்பு கற்பு டைப் பான்மை மகளிர்கள் மொண்டெ டுத்தகைச் சாலின் மடுவின் முழுகு மேதியில் வம்பே செஞ்சேல்பாய்,—செறுவில்வி ளைந்த நெற் குலைக் காயி லுழவிலு டைந்த கட்டியிற் பார மதகு செறியு மேரியின் மண்டு கம்பானல், செருமிமு ழங்கு கற்பிளப் பான புடையின்வி மும்பு னற்பெருக் கான தமர திமிர வாவியி லெங்கே யுந்தாவுந், திரை யில்வ லம்பு ரிக்கணத் தோடு பணிலமு ழங்கு பட்டினக் காவற் றிகிரி முருக வேலவ செங்கோ செங்கீரை, தினகர ரஞ்ச விட்புலத் தேவர் மகபதி முன்கு வித்த வித்தார மவுலி திறைகொள் சேவக செங்கோ செங்கீரை. (ம)

செங்கீரைப் பருவம் முற்றிற்று.

## ஆகத்திரு விருத்தம் - உ௰.

---

செங்கீரைப்பருவம் - செவ்வியமதலைச் சொற்களைப்பேசும் பருவம். கீர் - சொல். இப்பருவத்தின் செயல் - ஒரு காலைமடக்கி ஒரு காலைநீட்டி இரு கைகளையும் நிலத்தி லூன்றித் தலைநிமிர்ந்து முகமசைய ஆடுதல்.

## மூன்றாவது: தாலப்பருவம்.

அடரும் பருகவ மணிமுடி யமரரு மமரர்க் கிறைவனுநீ
டளகைந ராதியு மீரோன் பதின்மரு மருமறை முனிவோருஞ்
சுடருந் தருமிரு சுடரும் பரவிய தோகைய ரெழுவருமுத்
தொழின்முக் கடவுளு மவரவர் தங்குறை சொல்லித் துதிசெய்தார்
படருங் கிரணப் பரிதி நெடுங்கதிர் பாயும் பகிரண்டம்
பழுமர மென்னப் பனையென நிமிரும் பாழிக் கைநீட்டித்
தடவும் புகர்முக தந்திக் கிளையாய் தாலோ தாலேலோ
சந்த மணங்கமழ் செந்திற் பதியாய் தாலோ தாலேலோ. (க)

கங்குல் பொருந்திய குவளைக் குழியிற் கழியிற் பழனத்திற்
கரையிற் கரைபொரு திரையில் வளைந்த கவைக்கால் வரியலவன்
பொங்கு குறுந்துளி வாடையி னொந்து பொருதே வெயில்காயும்
புளினத் திடரிற் கவரிற் றரவிற் புன்னை நறுந்தாதிற்
கொங்கு விரிந்த மடற்பொதி தாழைக் குறுமுட் கரியபசுங்
கோலச் சிறிய குடக்கா யிற்புயல் கொழுதுஞ் செய்குன்றிற்
சங்கு முழங்கிய செந்திற் பதியாய் தாலோ தாலேலோ
சமய விரோதிக டிமிர திவாகர தாலோ தாலேலோ. (உ)

வேறு.

தண்டே னொழுகு மொழிமடவார் தாமங் கொழுதிச் சுருண்டிருண்டு
தமரக் களிவண் டடைகிடந்து தழைத்து நெறித்த குழற்பாரங்
கொண்டே மெலிந்த தல்லாது குரும்பைக் களப முலைசுமந்து [லைக்
கொடிபோன் மருங்குல் குடிவாங்கக் குழையிற் குதித்த விழிக் கய
கண்டே வெருவிக் கயன்மறுகக் கனக வெயின்மா ளிகையுடுத்துக்
ககனந் தடவுங் கோபுரத்தைக் கருதி வடவெற் பெனக்கதிரோன்
றிண்டேர் மறுகுந் திருச்செந்தூர்ச் செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த சிறுவா தாலோ தாலேலோ.

---

தாலப்பருவம் - தாலாட்டுப்பருவம். தாலாட்டு - ஓர்வகையாக நாவசைத்துப் பாடும்பாட்டு.

பாம்பா லுத்தி தனைக்கடைந்து படருங் கொடுங்கார் சொரிமழைக்கு
பரிய வரையைக் குடைகவித்துப் பசுக்கள் வெருவிப் பதறுமற் [ப்
காம்பா லிசையின் றெனியழைத்துக் சதறுந் தமரக் காளிந்திக்
கரையி னிரைப்பின் னேநடந்த கண்ணன் மருகா முகைப்புடைக்கும்
பூம்பா சடைப்பங் கயத்தடத்திற் புனிற்றுக் கவரி முலைநெரித்துப்
பொழியு மமுதந் தனைக்கண்டு புனலைப் பிரித்துப் பேட்டெகினந்
தீம்பால் பருகுந் திருச்செந்தூர்ச் செல்வா தாலோ தாலேலோ
தெய்வக் களிற்றை மணம்புணர்ந்த சிறுவா தாலோ தாலேலோ.

வேறு.

மங்கல மங்கலநூ லெங்குமொ ழிந்தனர்காண் வானோ ரேனோர்
போய், வந்துவ ணங்கினர்மே லந்தர துந்துபிகேள் வாரூ டாடாகே,—
கொங்கைசு மந்திடைநூ லஞ்சும ணங்கனையார் கூடா துடாரோ,
கொண்டவ ரந்தருவா யண்டர்பெ ருநதவமே கோமா னுமாநீ,—செங்
கம லந்தனிலே பைங்குமு தங்களிலே சேல்பாய் வானாடா, தென்ற
லு டன்றமிழ்தேர் தென்பொதி யம்பயில்வாழ் தேனார் தார்மார்பா,—
சங்குவ லம்புரிசூழ் செந்தில்வ ளம்பதியாய் தாலோ தாலேலோ, சங்
கரி தன்குமரா மங்கையர் தங்கணவா தாலோ தாலேலோ. (௫)

வேறு.

மரகத வடிவஞ் செங்கதிர் வெயிலால் வாகாய் வாடாதோ
மதிமுக முழுதுந் தண்டுளி தரவே வார்வேர் சோராதோ
கரமல ரணைதந் தின்புறு மடவார் காணா தேபோமோ
கனமணி குலவுங் குண்டல மரைஞா ணோடே போனல்வார்
பொருமிய முலைபுந் தந்திட வுடனே தாய்மார் தேடாரோ
புரவல ரெவருங் கண்டடி தொழுவார் போதாய் போதாநீள்
சரவண மருவுந் தண்டமிழ் முருகா தாலோ தாலேலோ
சதுமறை பரவுஞ் செந்திலை யுடையாய் தாலோ தாலேலோ. (௬)

வேறு.

கூருமிகல் சாய்த்த வீரா தீரா தார்மார்பா
கூறுமியல் பார்த்துன் மேலே யாரார் பாடாசூர்
மேருவரை நாட்டி வாழ்வார் வானா டாள்வார்போல்
வேலையென மீட்டுன் மேலே வீழ்வார் சூழ்வார்பா
ராருமிரை பார்த்து நீணீ ரூடே தாராமே
யானகழி நீக்கி மேலே நாவா யோடேசேல்
சேருமலை வாய்க்கு நாதா தாலோ தாலேலோ
தேவர்சிறை மீட்ட தேவா தாலோ தாலேலோ. (௭)

வேறு.

அரைவடமுந் தண்டையு மின்புரை யரைமணியுங் கிண்கிணி யுங்கல னணியு மாறு வீறார்சீ, ரறுமுகமுந் தொங்கல்சு மந்தபன் னிரு கரமுங் குண்டல முங்குழை யழகு மாரார் பாராதார்,—விரைபொரு மென் குஞ்சிய லம்பிய புழுதியுமங் கங்குழை பண்டியு மெலியு மேலே வீழ்வார்பார், வெருவிதமுங் கொண்டுத வழ்ந்திடி லவரவர்தங் கண் களப டும்பிழை விளையு மேதே னேகாதே,—வரைமணியுந் தங்கமு மொன்றிய கனபரியங் கந்தனி லின்றுகண் வளர வாராய் வாழ்வேநீ, மணிநகையுங் கொண்டுது யின்றிலே விரலமுதங் கொண்டுகி டந்தனை மதுர மாய்நீ பேசாயோ,—திரைபொருதென் செந்திலவ ளம்பதி வள ரவருங் கந்தசி வன்பெறு சிறுவா தாலோ தாலேலோ, திசைமுகனுஞ் சங்கரி யுஞ்சது மறையுமிறைஞ் சும்பரை யம்பிகை சிறுவா தாலோ தாலேலோ. (அ)

வேறு.

அரவுசிறு பிறையிதழி திரிபதகை பொதிசடிலர் பாலா வேலா தே, ரருணவெயி லிரவிசுழ லிமகிரியி லரிவைபெறு வாழ்வாய் வாழ் வோனே,—குரவருள மகிழவுயர் குருவடிவு தருபெருமை கோடாய் தாடாளா, குமரகுரு பரமுருக குதலைமொழி தெரியவுரை கூறாய் மாறாதே,—யிரவலரு முனிவர்களு மிமையவரு முனதடிமை யாமே யாமேநீ, யெமைமுனியி லொருதுணையு மிலையடிமை யடிமையென வீழ்வார் சூழ்வார்பார்,—பரசமய குலகலக சிவசமய குலதிலக தாலோ தாலேலோ, பணிலமுமிழ் மணியையலை யெறியுநகர் வரு கடவுள் தாலோ தாலேலோ. (௯)

வேறு.

பங்கயன் முதலோ ரிந்திர னிமையோர் பாரோ ரேனோர்பார்
பண்புட னுனையே சிந்தையி னினைவார் பானீ மால்கூராய்
வெங்கட கரிசூ ழெண்டிசை யுறைவார் வீணாள் காணாதே
மின்பரி புரதாள் பொன்புரை முடிவேல் வேய்வார் வீறாலே
செங்கனி மணிவாய் தங்கிய நகைதா தேவா சீறாதே
திண்டிறன் முருகா தண்டமிழ் விரகா சேரார் போரேறே
சங்கரி மருகா சங்கரி சிறுவா தாலோ தாலேலோ
சந்தத மியறோர் செந்திலை யுடையாய் தாலோ தாலேலோ. (௰)

தாலப்பருவம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - ௩௰.

## நான்காவது: சப்பாணிப் பருவம்.



பரவரிய நவமணி யழுத்துகல னுக்கழகு பாலித்து வீறுபெற்ற, பன்னிரு புயங்குலுங் காமனீள் குழைதொறும் பருவயிர குண்டலங் க,—ளிரவியொளி மட்கநின் றசையாம லமுதொழுகு மிந்துமுக மண் டலத்தி, லெழுதரிய திருநுதற் புண்டரங் குறுவெயர் விறைக்கச் சிதைந் திடாமற்,—கரகமல மலர்விரல் சிவப்புறு மற்கடக கங்கண மொலித்திடாமற், கழிவண் டலம்புங் கருங்குவளை யோடைசூழ் கழி தொறுங் கானமேறுறுங்,—தரளமுழு மணிநிலவு தருசெந்தில் வேலவா சப்பாணி கொட்டியருளே, சமரமுக ரணவீர பரசமய திமிராரி சப் பாணி கொட்டியருளே. (க)

அண்டர்தந் துயரொழித் தனமென்று கொண்டாடி யாவலங் கொட்டமன்னு, மயிராணி கலவியமு துண்டன மெனத்தேவ ரரசிரு கரங்கள்கொட்டத்,—துண்டவெண் பிறைபுரை யெயிற்றுவெஞ் சூரு ளந் துண்ணெனப் பறைகொட்ட நீள், சுருதியந் தணரிடந் தொறுமங் கலப்பெருந் தூரியங் கொட்டமுட்டப்,—பண்டரு பெருங்கவிப் புல மைக்கு நீசொன்ன படிதிண்டி மங்கொட்டவெம், பகைநிசா சரர் வளம் பதிமுழுது நெய்தலம் பறைகொட்ட வெள்வளைதருந்,—தண் டரள மலைமொண்டு கொட்டுநக ராதிபா சப்பாணி கொட்டியருளே. சமரமுக ரணவீர பரசமய திமிராரி சப்பாணி கொட்டியருளே. (உ)

பௌவமெறி கட்லாடை யுலகிலொரு வேடுவன் பறவைக்கு நிறைபுகுந்த, பார்த்திவன் பாவையு மியற்குலச் சிறையும் பணித் தருள மதுரைபுக்குத்,—தெவ்வரிடு திருமடத் தெரிசெழிய னுடலுறச் சென்றுபற் றலுமெவர்க்குந், தீராத வடவையனல் வெப்புமுது கூனுந் திருத்தியொரு வாதுவென்று,—வெவ்வழலி லெழுதியிடு மேடும் பெருக்காற்று விட்டதமி ழேடுமொக்க, வேகாம லெதிரே குடக்கேற வெங்கழுவில் வெய்யசமண் மூகரேறச்,—சைவநெறி யீடேற வருக வுணி யக்குழவி சப்பாணி கொட்டியருளே, சமரமுக ரணவீர பர சமய திமிராரி சப்பாணி கொட்டியருளே. (ங)

---

சப்பாணிப்பருவம் - இருகரங்களையும் ஒருங்குசேர்த்துக் கொட் டும்பருவம்.

## ஐந்தாவது: முத்தப்பருவம்.



சுத்துந் தரங்க மெடுத்தெறியக் கடுஞ்சூ லுளைந்து வலம்புரிகள், கரையிற் றவழ்ந்து வாலுகத்திற் கான்ற மணிக்கு விலையுண்டு,—தத்து ங்கரட விகடதட தந்திப் பிறைக்கூன் மருப்பில்விளை, தரளந் தனக்கு விலையுண்டு தழைத்துக் கமுத்து வளைந்தமணிக்,—கொத்துஞ் சுமந்த பசுஞ்சாலிக் குளிர்முத் தினுக்கு விலையுண்டு, கொண்ட றருகித் தில ந்தனக்குக் கூறுந் தரமுண் டுன்கனிவாய்,—முத்தந் தனக்கு விலையி ல்லை முருகா முத்தந் தருகவே, முத்தஞ் சொரியுங் கடலலைவாய் முத ல்வா முத்தந் தருகவே. (க)

வளைக்குந் தமரக் கருங்கடலின் வளைவா யுகுத்த மணிமுத்துன், வடிவேற் கறைபட் டுடல்கறுத்து மாசுபடைத்த மணிமுத்தம்,—துளை க்குங் கழையிற் பருமுத்தந் துளபத் தொடைமா விதழ்பருகித், தூற் றுந் திவலை தெறித்தமுத்தஞ் சுரக்கும் புயலிற் சொரிமுத்தம்,—திளை க்குங் கவன மயிற்சிறையிற் சிறுதாட் பொதிந்த குறுமுத்தஞ், செந் நென் முத்தங் கடைசியர்கா றேய்த்த முத்தஞ் செழுந்தண்டேன்,— முளைக்குங் குமுதக் கனிவாயான் முருகா முத்தந் தருகவே, முத்தஞ் சொரியுங் கடலலைவாய் முதல்வா முத்தந் தருகவே. (உ)

கலைப்பால் குறைத்த பிறைமுடிக்குங் கடவு ளுடலின் விளைபோ கங், கனலி கரத்தி லளிக்கவந்தக் கனலி பொறுக்க மாட்டாமன்,— மலைப்பால் விளங்குஞ் சரவணத்தில் வந்து புகுத வோராறு, மடவார் வயிறு சூலுளைந்து மைந்த ரறுவர்ப் பயந்தெடுப்பக்—கொலைப்பால் விளங்கும் பரசுதரன் குன்றி லவரைக் கொடுசெல்லக், கூட்டி யணை த்துச் சேரவொரு கோல மாக்கிக் கவுரிதிரு,—முலைப்பால் குடித்த கனிவாயால் முருகா முத்தந் தருகவே, முத்தஞ் சொரியுங் கடலலை வாய் முதல்வா முத்தந் தருகவே. (ங)

கத்துங் கடலி னெடும்படவிற் கழியிற் கமுநீ ரிற் சுழியிற், கான்ற கரையிற் கரைதிகழுங் கைதைப் பொதும்பிற் சுரும்பினங்க,—டத்து ங் கமலப் பசும்பொகுட்டிற் சாலிக் குலையிற் சாலடியிற், றழைக்குங் கதலி யடிமடலிற் றழைவைத் தமுத முதுகுரம்பைக்,—குத்துந் தரங் கப் புனற்கவரிற் குவளைத் தடத்தின் மடைவாயிற், குடக்கூன் சிறு

முத்தப்பருவம் - முத்தங்கொள்ளும் பருவம்.

முட் பணிலமொரு கோடி கோடி யீற்றலைந்து,—முத்தஞ் சொரியுங் கடலலைவாய் முதல்வா முத்தந் தருகவே, மொழியுஞ் சமய மனை த்தினுக்கு முதல்வா முத்தந் தருகவே. (ச)

வயலுஞ் செறிந்த கதலிவன மாடஞ் செறிந்த கதலிவன, மலர்க்கா வெங்குந் தேனினிரை மாலை தோறுந் தேனினிரை,—புயலுஞ் செறிந்த கனகவெயிற் புடையே பரந்த கனகவெயில், பொதும்பர் தோறு மோதிமமென் புளினந் தோறு மோதிமஞ்செங்,—கயலுஞ் செறிந்த கட்கடையார் கலவி தரும்போர் கட்கடையார், கருணை புரியு மடியாருன் காதல் புரியு மடியார்சீர்,—முயலும் படிவாழ் திருச்செந்தூர் முருகா முத்தந் தருகவே, மொழியுஞ் சமய மனைத்தினுக்கு முதல்வா முத்தந் தருகவே. (ரு)

தொழுதுந் துதித்துந் துயரகற்றிச் சுரருக்கிறையுஞ் சுரருமுடன், சூழ்ந்த கடம்பா டவியிலுறை சொக்கக் கடவு டனைமூன்று,—பொழுதும் பரவி யெழுத்துச்சொற் போலப் பொருளும் புகறியெனப், புகலு மாறஞ் சிரட்டிதிணைப் பொருட்சூத் திரத்தின் பொருண்மயங்கா,—தெழுதும் பனுவற் பரணன்முத லேழேழ் பெருமைக் கவிப்புலவ, ரிதயங் களிக்க விருப்பமுட னிறையோன் பொருட்குப் பொருள்விரித்து,—முழுதும் பகர்ந்த கனிவாயான் முருகா முத்தந் தருகவே, மொழியுஞ் சமய மனைத்தினுக்கு முதல்வா முத்தந் தருகவே. (சு)

வேறு.

கடுந டைச்சிந் துரம ருப்பின் கதிர்கொண் முத்துஞ் சரவைநீள், கடல ளிக்கும் பணில முத்துங் கழையின் முத்துங் கரடுவா,—னுடு மு கட்டம் புயல்க ருக்கொண் டுமிழு முத்தங் கருகறே, ஞெழுகு பொற்பங் கயம டற்றந் தொளிரு முத்தந் திருகல்காண்,—படுந ரைக்குண் டகழி நத்தின் பரிய முத்தந் தெரியவே, பரவை யெற்றுந் திரைகொ ழிக்கும் படியின் முத்தஞ் சிறமகார்,—சொடுப ரப்பும் பதிபு ரக்குங் குமர முத்தந் தருகவே, குறமு னிக்குந் தமிழு ரைக்குங் குழவி முத்தந் தருகவே. (எ)

பருவ முற்றுங் குடவ யிற்றெண் பணிலமொய்க்குந் துறையெலாம், பருமு ரட்செங் கயல்கு திக்கும் பலப டக்கெண் டிரைமுநீர்,—பொருநு குத்துந் திடர னைத்தும் புறவு மொய்க்கும் புறவுசேர், புளின வெற்பெங் கனுநி ரைக்கும் புளின மொய்க்குங் குவளைவார்,—யனும

டற்கண் டின்மெ னச்சென் றளிகண் மொய்க்கும் புதியகூ, லலவன் மொய்க்குங் குழிவ ழிச்சென் றலைகொ ழிக்குங் கலரயெலாங்,—குரு கு மொய்க்கும் ப்திபு ரக்குங் குமர முத்தந் தருகவே, குறுமு னிக்குந் தமிழு ரைக்குங் குழவி முத்தந் தருகவே. (அ)

வேறு.

பைபரவி லுச்சிகுழி யப்பொருங் குண்டகட் படுகடற் பணில முத்தம், பார்வையா லுஞ்சிறிது பாரோமி தன்றிப் பசுங்கழை வெடி த்தமுத்தஞ்,—செய்யசிந் தையினுமிது வேணுமென் றொருபொழுது சிந்தியோ முததிவட்டத், திரைமுழங் கக்கொழுந் திங்கள்வட் டக்கு டைச் செழுநிழற் சம்பராரி,—யெய்யுமலர் வாளியை யெடுத்துத் தெ ரிந்துநா ணிறுகப் பிணித்த வல்வில், லீன்றகுளிர் முத்தத்தை முத்த மென் றணுகோ மிதழ்க்கமல முகைபுடைக்குந்,—துய்யமணி முத்தந் தனைத்தொடே முன்னுடைய துகிரில்விளை முத்தமருளே, தோகை ‡மே காரவா கனசெந்தி லாயுனது துகிரில்விளை முத்தமருளே. (கூ)

இறுகல்கரு குதல்முரி விலட்சுமி புடாயமுள் ளேறல்புகை யே றல்செம்ம, ணேறல்வெச் சந்திருகன் மத்தகக் குழிவன்றி யிரவி யொளி யிற்கரத்தன்,—மறுவறு தகட்டிலோ ரத்திலுயர் தூக்கத்தின் மன்னுமா தளைகவிர்ப், மாந்தளிர் முயற்குருதி செவ்வரத் தங்கோப மருவுமணி வகையளிப்பேர்,—முறுகல்வளி யேறல்கல் லேறல்சிப் பிப் பத்து முரிதறிரு குதல்சிவப்பு, முருந்திற் குருத்துச் செருந்துருவி யிடையாடி முரிகுதை வடிவொதுங்க,—றுறுமுகங் கக்கலொளி மட்க ல்கர டென்னுத துகிரில்விளை முத்தமருளே, தோகைமே காரவா கனசெந்தி லாயுனது துகிரில்விளை முத்தமருளே. (ய)

கோதிவரி வண்டுமது வுண்டுகுடி கொள்ளுமெங் குழலுக் குடை ந்துவிண்ணிற், குடிகொண்ட கொண்டற் குறுந்துளியி னித்திலக் கோவையொரு கால்விரும்பேங்,—காதிலுறும் வள்ளைமக ரக்குழை கடக்குமெங் கண்ணுக் குடைந்துதொல்லைக், கயத்திற் குளித்தசேல் வெண்டரள மென்னிலொரு காலமுங் கருதிநயவேம்,—போதிலுறு பசும்டற் பாளைமென் பூகம் பொருந்துமெங் கந்தரத்தைப், பொருவு ற் வெள்வலம் புரியார மின்புறேம் பெற்றோே டனக்குடைந்த,—சோ திவேய் முத்தந் தனைத்தொடே நின்னுடைய துகிரில்விளை முத்தம ருளே, தோகைமே காரவா கனசெந்தி லாயுனது துகிரில்விளை முத்த மருளே. (யக)

முத்தப் பருவம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம். (ருக)

‡ மேகாரம்-மயில்.

# ஆறுவது: வாரானைப் பருவம்.

மூரிப் பகட்டு வரிவாளை முழங்கிக் குதிக்கக் கால்சாய்ந்து, முதிர விளைந்து சடைபின்னி முடங்கும் பசுங்காய்க் குலைச்செந்நெல்,— சேரிக் கருங்கை மள்ளர்குயந் தீட்டி யரிந்த கொத்தினுக்குத், தெண்முத் தளப்பச் சிறுகுடிலிற் சேரக் கொடுபோ யவர்குவிப்ப,—வேரிக் குவளைக் குழியில்வரி வெண்சங் கினங்க ளீற்றுளைந்து, மேட்டி லுகுத்த பருமுத்தை வெள்ளோதிமந்தன் முட்டையென,—வாரிக் குவிக்குந் திருச்செந்தூர் வடிவேன் முருகா வருகவே, வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே. (க)

† புள்ள மரிந்த கதிர்ச்செந்நெற் போரிற் பகடு தனைநெருங்கப்
பூட்டி யடித்து வைகளைந்து போதக் குவித்த பொலிக்குவையை
விள்ள வரிய குடகாற்று வீசப் பதடி தனைநீக்கி
வெள்ளிக் கிரிபோற் கனகவட மேரு கிரிபோன் மிகத்தூற்றிக்
கள்ள மெறியுங் கருங்கடைக்கட் கடைசி பிரித்த மணிமுத்தைக்
களத்தி லெறிய வம்முத்தைக் கண்டு குடித்த கட்குவிலை
மள்ள ரளக்குந் திருச்செந்தூர் வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே. (உ)

தேட வரிய மணியரைஞாண் சேர்க்க வருக விரற்காழி
செறிக்க வருக திலதநுத லிட்ட வருக மறுகில்விளை
யாட வருக மடியிலெடுத் தணைக்க வருக புதுப்பனிநீ
ராட்ட வருக நெறித்தமுலை யமுதம் பருக வருகமுத்தஞ்
சூட வருக வுடற்புழுதி துடைக்க வருக வொருமாற்றஞ்
சொல்ல வருக தள்ளிநடை தோன்ற வருக சோதிமணி
மாட நெருங்குந் திருச்செந்தூர் வடிவேன் முருகா வருகவே
வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே. (௩)

இறுகு மரைஞா ணினிப்பூட்டே னிலங்கு மகர குண்டலத்தை, யெடுத்துக் குழையின் மீதணியே னினியுன் முகத்துக் கேற்கவொரு,—சிறுகுந் திலதந் தனைத்தீட்டேன் றிருக்கண் மலர்க்கு மையெழுதேன், செம்பொற் கமலச் சீறடிக்குச் சிலம்பு திருத்தே னெறிந்துவிம்மி,—முறுகு முலைப்பா லினிதூட்டேன் முகம்பார்த் திருந்து மொழிபகரேன், முருகா வருக சிவசமய முதல்வா வருக திரைகொழித்து,—மறுகுமலைவாய்க் கரைசேர்ந்த மழலைச் சிறுவா வருகவே, வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருசவே. (௪)

---

வாரானைப்பருவம்-வருதலை விரும்பிய பருவம். வாரானை-வருதல்.
† புள்ளம்-அரிவாள்.

எள்ளத் தனைவன் துறுபசிக்கு மிரங்கிப் பரந்து சிறுபண்டி, யெக்கிக் குழைந்து மணித்துவர்வா யிதழைக் குவித்து விரித்தழுது,—துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து தொட்டி லுதைந்து பெருவிரலைச், சுவைத்துக் கடைவாய் நீரொழுகத் தோளின் மகரக் குழைதவழ,—மெள்ளத் தவழ்ந்து குறுமூரல் விளைத்து மடியின் மீதிருந்து, விம்மிப் பொருமி முகம்பார்த்து வேண்டு முமையாள் களபமுலை,—வள்ளத் தமுதுண் டகமகிழ்ந்த மழலைச் சிறுவா வருகவே, வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே. (௫)

வெண்மைச் சிறைப்புள் ளோதிமங்கள் விரைக்கே தகையின் மடலெடுத்து, விரும்புங் குழவி யெனமடியின் மீதே யிருத்திக் ||கோதாட்டித்,—திண்மைச் சுரிசங் கினிற்குவளைத் தேறன் முகந்து பாலூட்டிச், செழுந்தா மரைநெட் டிதழ்விரித்துச் சேர்த்துத் துயிற்றித் தாலாட்டப்,—பெண்மைக் குருகுக் கொருசேவற் பெரியகுருகு தன்வாயிற், பெய்யு மிரையைக் கூரலகு பிளந்து பெட்பி னினிதளிக்கும்,—வண்மைப் புதுமைத் திருச்செந்தூர் வடிவேன் முருகா வருகவே, வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே. (௬)

ஓடைக் குளிர்தண் டுளிப்பனியா லுடைந்து திரையிற் றவழ்ந்தேறி, யொளிரும் புளினத் திடையொதுங்கி யுறங்குங் கமடந் தனைக்கடந்து,—கோடைக் குளிர்காற் றடிக்கவுடல் கொடுகி நடுங்கி யூன்கழிந்த, குடக்கூன் பணிலத் துட்புகுந்து குஞ்சுக் கிரங்கி யிரைகொடுக்கும்,—பேடைக் குருகுக் கொருசேவற் பெரிய குருகின் சிறைப்புறத்துப், பிள்ளைக் குருகு தனையணைத்துப் பிரச மடற்கே தகைப்பொதும்பின்,—வாடைக் கொதுங்குந் திருச்செந்தூர் வடிவேன் முருகா வருகவே, வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே. (௭)

விண்டு மாவின் கனிதடத்தின் மீதே வீழக் குருகினங்கள், வெருவி யிரியக் கயல்வெருண்டு வெடிபோய் மீள மண்டூகங்,—கண்டு பாய வரிவாளை கழிக்கே பாயக் கழிக்கானற், கம்புள் வெருண்டு துண்ணெனக்கட் கடை தான் விழித்துத் தன்பார்ப்பைக்,—கொண்டு போயக் கருவாளைக் குலைக்கே பாயக் குடக்கனியின், குறுங்காற் பலவு வேர்சாய்ந்த குழிக்கே கோடி கோடிவரி,—வண்டுபாயுந் திருச்செந்தூர் வடிவேன் முருகா வருகவே, வளருங் களபக் குரும்பைமுலை வள்ளி கணவா வருகவே. (௮)

---

||கோதாட்டல்-பாராட்டல்; அஃதாவது குணத்தையெடுத்துப்பேசுதல்.

பேரா தரிக்கு மடியவர்தம் பிறப்பை யொழித்துப் பெருவாழ் வும் பேறுங் கொடுக்க வரும்பிள்ளைப் பெருமா னென்னும் பேராளா,- சேரா நிருதர் குலகலகா சேவற் கொடியாய் திருச்செந்தூர்த், தேவா தேவர் சிறைமீட்ட செல்வா வென்றுன் திருமுகத்தைப் —பாரா மகி ழ்ந்து முலைத்தாயர் பரவிப் புகழ்ந்து விருப்புடனப், பாவா வாவென் றுனைப்போற்றப் பரிந்து மகிழ்ந்து வரவழைத்தால்,—வாரா திருக்க வழக்குண்டோ வடிவேல் முருகா வருகவே, வளருங் களபக் குரும் பைமுலை வள்ளி கணவா வருகவே. (௯)

வேறு.

கலைதெரி புகலி வளமுற மருவு கவுணிய வருக வருகவே
கருணையி னுரிமை யடியவர் கொடிய கலிகெட வருக வருகவே
சிலைபொரு புருவ வனிதைய ரறுவர் திருவுள மகிழ வருகவே
சிறுதுளி வெயர்வு குதிகொள வுனது திருமுக மலர வருகவே
கொலைபுரி விகட மணிமுடி நிருதர் குலமற வருக வருகவே
குருமணி வயிர மிருசிகை நெடிய குழைபொர வருக வருகவே
மலைமகள் கவுரி திருமுலை பருகு மழவிடை வருக வருகவே
வளையுமிழ் தரள மலையெறி நகரில் வரபதி வருக வருகவே. (௰)

அணிநெடு மவுலி யெறிசிறு புழுதி யழகுட னெழுக வருகவே
யடியிடு மளவி லரைமணி முரலு மரவொலி பெருக வருகவே
பணிவிடை புரிய வருமட மகளிர் பரவினர் புகழ வருகவே
பலபல முனிவ ரனைவரு முனது பதமலர் பரவ வருகவே
*பிணிமுக முதுகி லரியணை யழகு பெறவரு முருக வருகவே
பிறைபொரு சடிலர் தமதிட மருவு பிடிபெறு களிறு வருகவே
மணியித ழொழுகு மமுதுகு குதலை மழவிடை வருக வருகவே
வளையுமிழ் தரள மலையெறி நகரில் வரபதி வருக வருகவே. (௧௧)

வாரானைப்பருவம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் - (௬௨)

---

* பிணிமுகம்-மயில்.

## ஏழாவது: அம்புலிப்பருவம்.



கலையா னிரம்பாத கலையுண் டுனக்குநிறை கலையுண் டிவன்றனக்குக், களங்கமரு குறைமா னுனக்குண்டு குறமான் கருத்துண் டிவன்றனக்குத்,—தொலையாத கணமுண் டுனக்குமங் கலகணத் தொகையுண் டிவன்றனக்குத், தூளியமுத முண்டுனக் கிவனுக்கு மாறாத சொல்லமுத முண்டுனக்குக்,—கொலையா டராவழிப் பகையுண்டு கடுவிடங் கொப்புளிக் குங்கட்செவிக், கோளரா வைக்கொத்தி யெறியுமே காரமிக் குமரனுக் குண்டுகண்டா,—யலையாழி சூழ்திருச் செந்தில்வடி வேலனுட னம்புலீ யாடவாவே, யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட னம்புலீ யாடவாவே. (௧)

மாமோக மண்டல மகற்றியறி வென்னுமுழு மண்டலத் தைத்தொடுத்து, வடவைமுக மண்டலத் தழலா லுருக்கியினன் மண்டலத் தூடுபுக்குச்,—சோமோத யக்கிரண மண்டலத் தமுதத் துளித்திவலை பருகியுடலைச், சோதிமண் டலமென விளக்குமவ ரிவனுடைய துய்யமுக மண்டலத்தை,—யேமோ கருத்துற விருத்திப் பெரும்பரத் தெல்லைமண் டலமெய்தலா, மென்றுகொண் டிவன்மண் டலச்சக்ர நிலைபா றெழுத்திலீ டேறுவருனக்,—காமோ பெருக்கமென் செந்தில்வடி வேலனுட னம்புலீ யாடவாவே, யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட னம்புலீ யாடவாவே. (௨)

முதிருமிசை வரிவண் டலம்புகம லாலய முகிழ்க்குமிரு நாலிதழ்க்குண், முக்கோண நடுவிலொரு வட்டச் சுழிக்குண்மலர் முகமண் டலத்துவெயிலா,—லெதிருமிரு ளந்தகா ரப்படலை தள்ளிவீங் கெழுமிரவி மண்டலத்தி, லின்புற்று நீவந் தொளிக்குமிட மந்தவா னிரவிமண் டலமுடிக்க,—ஞதிருமடு செருவிலிவன் வேலேறு பட்டவ ருகந்தபெரு வெளியாகையா, லொள்ளமு துருத்தபதி னறுகலை கொள்ளுமுன் னுடலினுங் குறைபடாதோ,—வதிருமக ராழிசூழ் செந்தில்வடி வேலனுட னம்புலீ யாடவாவே, யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட னம்புலீ யாடவாவே. (௩)

---

அம்புலிப்பருவம்-சந்திரனை விளையாட அழைக்கும் பருவம்.

வெறியா ரிலைத்தொடைத் தக்கனழல் வேள்வியை வெருண்டு பகல் பல்லுகுத்து, வெள்ளிவிழி யைக்கெடுத் துயிரா வதப்பாகன் வேறுருக் கொடுபறக்கச்,—செறியா டசத்தகட் டிதழ்முளரி நான்முகன் சென்னியைத் திருகிவாணி, செய்யதுண் டந்துண்ட மாக்கியத் தக்கன் சிரத்தையொரு வழிபடுத்திப்,—பொறியா ரழற்கடவுள் கைத்தலமறுத்துவிட் புலவர்முப் பத்துமுவர், போனவழி யொருவர்போ காமலுன் னுடலையும் புழுதியிற் றேய்த்ததெல்லா,—மறியாத தல்லநீ செந்தில்வடி வேலனுட னம்புலீ யாடவாவே, யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட னம்புலீ யாடவாவே. (௪)

விடமொழுகு துளைமுள் ளெயிற்றுவன் கட்செவி விரிக்கும் பணாடவியரு, மெண்பொறி யுடற்பெரும் பகுவா யராவடிவை வெம்பசியெடுத்துவெம்பிக்,—குடதிசைக் கோடையைப் பருகிக் குணக்கெழுங் கொண்டலை யருந்திவாடைக், கொழுந்தையுந் தென்றலையு மள்ளிக் குடித்துக் கொழுங்கதிரை யுண்டதின்னியுன்,—னிடமொழிய வேறேரிலக்கில்லை நீயதற் கெதிர்நிற்க வல்லையல்லை, யிவனுடன் கூடிவிளையாடிநீ யிங்கே யிருக்கலா மிங்குவந்தா,—லடல்புனையு மயிலுண் டுனக்குதவி யாகையா லம்புலீ யாடவாவே, யரவின்முடி நெளியமயின் முதுகில்வரு குமரனுட னம்புலீ யாடவாவே. (௫)

பண்டுபோ லின்னமுத மின்னங் கடைந்திடப் பழையமந் தரமில்லையோ, படர்கடற் குண்டகழி யளறுக வற்றியிப் பாரினிற் றிடரானதோ,—விண்டலத் தமரர்களு மமரேச னுஞ்சேர வீடிநீ டந்தகார,மேவியெழு பகிரண்ட கூடம்வெளி யானதோ விடமொழுகு நெட்டெயிற்ற,—மண்டுவா சுகிதுண்ட மானதோ வின்னமொரு வாலிக்கு வாவில்லையோ, மதியிலா மதியமே யிவனிணைந் தாலெந்த வகைசெலாதீாகையானீ,—யண்டர்நா யகனெங்கள் செந்தில்வடி வேலனுட னம்புலீ யாடவாவே, யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட னம்புலீ யாடவாவே. (௬)

வட்டமா கத்துள்வெளி வடிவுகொள லாமென்று மானைத் தரித்திடுகையான், மந்தா கினித்தரங் கத்துவள மெய்தலான் மன்னுங்கணஞ்சூழ்தலா,—லிட்டமொடு பேரிரவில் வீறுபெற லானுலகி லெவருங் துதித்திடுதலா, லிரவிகண் ணுறுதலா லிடபத்தி லேறலா லேமமால் வரையெய்தலான்,—முட்டாமறை வெள்ளிக் குரித்தாகை யால்

வெய்ய மூரியர வுக்குடை தலான், முக்கணுமை பங்கனொ ரொக்குநீ யென்றுதிரு முகமலர்ந் துணையழைத்தா,—லட்டபோ கம்பெறுவை செந்திலவடி வேலனுட னம்புலீ யாடவாவே, யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட னம்புலீ யாடவாவே. (எ)

காதாலா லெறிதிரைக் கடன்மகளிர் சிறுமகார் கரையிற் குவித்த முத்தும், கருவாய் வலம்புரி யுமிழ்ந்தமணி முத்துமுட் கண்டன் மடல் விண்டசுண்ணத்,—தாதலர விளவாடை கொடுவருங் கானல் வெண் சங்குநொந் தீற்றுளைந்து, தனியே யுகுத்தபரு முத்துமுந் தன்னிலே சதகோடி நிலவெறிக்கு,—மீதலா லொருசிறிது மிரவில்லை யெவருக்கு மிரவில்லை தீயுமிங்கே, யேகினு லுனதுடற் கறைதுடைத் திடுதலா மென்பதற் கையமில்லை,—யாதலா னீதிபுனை செந்திலவடி வேலனுட னம்புலீ யாடவாவே, யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட னம்புலீ யாடவாவே. (அ)

கடியவளி யெறியுந் தழைச்சிறைக் கூருகிர்க் கருடவா கனனுமிகல்கூர், கட்டைமுள் ளரைநாள நெட்டித முடித்தபொற் சமலயோனியுமெழுந்து,—கொடியவெங் கொலைபுரி வராகமென வொருவனெழு குவலைய மிடந்துதேடக், குறித்தொருவ னெனமா யண்டபகிரண்டமுங் கொழுதிக் குடைந்துதேட,—முடியவிது சாறுமவர றிவுறாவகைநின்ற முழுமுதற் கடவுளடியு, முடியுநீ கண்டனை யெனக்கருதியின்றுதிரு முகமலர்ந் துணையழைத்தா,—லடியவரை வாழ்வித்த செந்திலவடி வேலனுட னம்புலீ யாடவாவே, யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட னம்புலீ யாடவாவே. (கூ)

பெரியமா கத்துனீ வருவையிவன் வஞ்சகம் பேசுமா கத்துள்வார்ான், பெருகநீ வேலையிற் புகுவா யிவன்பார் பிளக்கவோ வேலைவிட்டா,—னுரியமா குணவரையி லுறுவைநீ யிவனன் புறுதகுண வரையேயுறு, னுடலிலே முழுமறு வுனக்குண் டிவன்றனக் கொருமறுவுமில்லைமீளக்,—கரியமா முகிலிலே மறைவைநீ யிவனெடுங் கரியமா முகிலின் மறையான், கருதிநீ யிவையெலா முணரினின் பெருமையைக் கண்டுநீ யுங்கிராதே,—யரியமா தவனெங்கள் செந்திலவடி வேலனுட னம்புலீ யாடவாவே, யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட னம்புலீ யாடவாவே. (ய)

பரியநிழ றன்னைச் சுளித்துவெயி லொடுபொருது பாதசங் கிலியை நூறிப், பாரிசா தத்தருவை யிடுகுள கெனக்கவட் பகுவாய் புகக்குதட்டித்,—தரியலர் நகர்ப்புறத் தெயிலிடு கபாடந் தனைத்தூள் படுத்தியவர்பொற், றருணமணி முடியிடறி முறைமுறை யழைக்குந் தழைச்செவிப் பிறைமருப்புச்,—சொரியுமத தாரைக் குறுங்கட் பெருங்கொலைத் துடியடிப் புகரொருத்த, றங்கவே ளிவனுடைய முன்றிற் புறத்திற் றளைக்கர நிமிர்த்துநிற்கு,—மரியகரு நாகமென வெருவல்கொல் லிவனுட னம்புலீ யாடவாவே, யருவரைகள் கிடுகிடென மயில்கடவு முருகனுட னம்புலீ யாடவாவே. (௰௧)

அம்புலிப்பருவம் முற்றிற்று.

## ஆகத் திருவிருத்தம். (எ௩)

## எட்டாவது: சிறுபறைப்பருவம்.



பொருவாகை சூடுமர வக்கொடிக் குருகுலப் பூபால ரேறுமந்தப் பூபால னுக்கிளைய துணைவர்நூற் றுவரும்பொ ருபதினெட் டக்குரோணி,—யொருவாய்மை சொற்றபடை வீரருஞ் செருவினி லுருத்தெழலு நீதியைவ, ருடனுக நின்றுபற் குனன்மணித் தேரினுக் குள்ளசா ரதியாகியம்,—மருவார்க டானையிற் பட்டவர்த் தனர்மகுட வர்த்தன ரடங்கலும்போய், மயங்கவொரு நாள்விசைய னுக்குவிசை யம்பெருக மண்ணேழு முண்டுமிழ்ந்த,--திருவாய் வலம்புரி முழக்குதிரு மான் மருக சிறுபறை முழக்கியருளே, செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே சிறுபறை முழக்கியருளே. (௧)

முருந்தாரு மணிமுறுவ னெய்தனில மகளிரிள முகிழ்முலை தனக்குடைந்து, முளரிமுகை நீரிற் குளித்துநின் றொருதாளின் முற்றிய தவம்புரியவெங்,—கருந்தாரை நெட்டிலைப் புகர்வே லெனப்பொருங் கட்கடைக் குள்ளுடைந்து, காவிமலர் பங்கப் படக்கருங் குழல்கண்டு கரியமுகி லுடல்வெளுத்துப்,—பொருந்தாம லோடியந் தரசாரி யாயொரு பொருப்பேற வளமையேறும், புகழேற வாழுந் திருச்செந்திலாயுனது பொற்றாள் வணக்கமுற்றுத்,—திருந்தார்க ணெஞ்சம் பெரும்பறை முழக்கநீ சிறுபறை முழக்கியருளே, செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே சிறுபறை முழக்கியருளே. (௨)

---

சிறுபறைப்பருவம்-சிறியதோற்கருவி தட்டி விளையாடும் பருவம்.

கங்கையணி புஞ்சடையில் வைத்தகுழ விப்பிறைக் கடவுளா லயமனைத்துங், கங்குற் கருங்கடல் கழிநதவை கறையிற் கலித்தவால் வளைமுழக்கும்,—பங்கய மலர்ப்பொகுட் டிதழ்வாய் துளிக்கும் பசுந் தேற லுண்டுமௌ்ளப், பலகோடி சஞ்சரீ கப்படலை பெடையொடு படிந்துபல கான்முழக்கும்,—வெங்கய முடக்கும் புழைக்கர நிமிர்த்து வெளி மேகநீ ரைக்குடித்து, வீதிவாய் நின்றுபிளி றித்தின முழக்கும் வெறி வெண்டிரைக் குண்டகழியிற்,—செங்கயன் முழக்குந்திருச்செந் தில் வேலனே சிறுபறை முழக்கியருளே, செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே சிறுபறை முழக்கியருளே. (௩)

காவான பாரிசா தத்தருக் குலநிழற் கடவுடெரு வீதிதோறுங், கடிமணப் புதுமங் கலத்தொனி முழக்கமுகை கட்டவிழ்த் திதழுடை க்கும்,—பூவா ரிலைத்தெர்டைய லளகாபுரேசன் புரந்தொறுங் குளிறு முரசம், பொம்மென முழக்கமன் மதனுடைய பல்லியப் பொங்கு தெண் டிரைமுழக்கப்,—பாவாணர் மங்கலக் கவிவாழி பாடிப் பரிந்து திண் டிமமுழக்கப், பரவரிய திருவிழா வென்றுபல பல்லியம் பட்டி னந் தொறுமுழக்கத்,—தேவாதி தேவருயர் சதுமறை முழக்கநீ சிறு பறை முழக்கியருளே, செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலக னே சிறுபறை முழக்கியருளே. (௪)

வரைவாய் முழக்குங் கடாயானை வெங்கூன் மருப்பில்விளைமுத்து மிளவேய், மணிமுத்து மடபாலை வனசுரத்திற்கரு வராகத்தின் முத்து மண்ட,—ருரைவாய் முழக்கும்பெரும்புறவி லுந்திநத் துமிழுமணி மு த்துமள்ள, ரொளியறு மருதவே லிச்செங்நெல் கன்னறரு மொளிமுத் து மோங்குநெய்தற்,—கரைவாய் முழக்குமுட் கூனல்வெண் பணிலங் கடுஞ்சூ லுளைந்துகான்ற, கதிர்முத்து மொக்கக் கொழித்துவரு பொரு னையாய் கழிதொறுங் கயல்குதிக்கத்,—திரைவாய் முழக்குந் திருச்செ ந்தில் வேலனே சிறுபறை முழக்கியருளே, செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே சிறுபறை முழக்கியருளே. (௫)

முனைவாளை வடிவேலை வடுவைவெங் கடுவையிதழ் முளரியைப் பிணையை மதவேள், மோகவா ளியையடு சகோரந்தை வென்றகு ழை முட்டிமீ ளுங்கண்மடவார்,—நினைவாளை வாண்முறுவ லாடியிள முலையாண நேர்நேர் நிறுத்திநெய்த, னீடுமள காடவி வனத்திற் பிணித்துவெண் ணிந்நில வடந்தெரிந்து,—புனைவாளை நாண்முடி

விளம்பிநடு வரீளமென் போதிலுறை வானையொப்புப், பொலிவானை நின்றுகனை கனைவானை நாடிவினை போங்கழி கடந்துமெள்ளச்,—சினை வானை பாயுந் திருச்செந்தில் வேலனே சிறுபறை முழக்கியருளே, செருவிலெதிர் பொருதபரநிருதர்குல கலகனே சிறுபறைமுழக்கியருளே.

அறந்தரு புரந்தரா தியருலகி லரமகளி ராடுமணி யூசல்சிற்றி, லம்மனை கழங்குபல செறியுந் தடஞ்சார லருவிபாய் பரங்கிரியுமுட்,—புறந்தரு புனிற்றுவெள் வளைகடற் றிரைதொறும் பொருதசீ ரலைவாயுமென், போதுகமழ் திருவா வினன்குடியு மரியமறை புகலுமே ரகமுமினிமைக்,—குறந்தரு கொடிச்சியர் பெருங்குரவை முறைகுலவு குன்றுதோ ருடலுந்தண், கொண்மூ முழங்குவது கண்டின மெனக்கரட குஞ்சரம் பிளிறுமரவஞ்,—சிறந்தபழ முதிர்சோலை மலையும் புரந்த நீ சிறுபறை முழக்கியருளே, செருவிலெதிர் பொருதபர நிருதர்குல கலகனே சிறுபறை முழக்கியருளே. (எ)

எழுமிரவி மட்கவொளி தருமணி யழுத்துமுடி யிமையவர் மகிழ்ச்சிபெறவே, யிருகுழை பிடித்தவிழி யரமகளிர் சுற்றிநட மிதுவென நடித்துவரவே,—வழுவறு தமிழ்ப்பனுவன் முறைமுறை யுரைத்துவெகு வரகவிஞ ருட்குழையவே, மகபதியு மிக்கமுனி வரர்கணமு மிச்சையுடன் வழியடிமை செப்பியிடவே,—பொழுதுதொறு மொக்கவிதி முறையுனை யருச்சனைசெய் புனிதசிவ விப்ரருடனே, புகலரிய பத்தசன மரகர வெனக்குலவு புரவலர் விருப்பமுறவே,—செழுமறை முழக்கவரு முருககும ரக்கடவுள் சிறுபறை முழக்கியருளே, திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப சிறுபறை முழக்கியருளே. (அ)

தவனனிர தப்புரவி வலமுறையில் வட்டமிடு தருணவட வெற்பசையவே, தமரதிமி ரத்துமித மெறியுமக ரப்பெரிய சலதியொலி யற்றவியவே,—புவனமுழு தொக்கமணி முடிமிசை யிருத்துபல பொறியுரக னச்சமுறவே, புணரியிடை வற்றமொகு மொகுமொகு வெனப்பருகு புயலுருமு வெட்கியிடவே,—பவனனு மிசுத்தகடை யுகமுடிவெனப்பெருமை பரவியடி யிற்பணியவே, படகநிபி † டத்துழனி யசுரர்வெரு விக்கரிய பரியவரை யிற்புகுதவே,—சிவனருண் மதிக்கவரு முருககும ரக்கடவுள் சிறுபறை முழக்கியருளே, திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப சிறுபறை முழக்கியருளே. (கூ)

---

† நிபிடம்-நெருக்கம்.

சகரமக ரச்சலதி யுலகுதனி லிப்பொழுது சருவிய புறச்சமயநூ, றலையழிய முத்திதரு சிவசமய முத்தர்பெறு தவநெறி தழைத்துவர வே,—யகரவுக ரத்தில்வினை பொருளடைவு பத்தியுறு மடியவர் தமக் கருளவே, யமரருல கத்தவரு மெவருமரு விப்பரவி யடியிணை தனைப் பணியவே,—பகரவு நினைத்திடவு மரிதுனது சொற்பெருமை பரகதி யளிக்குமெனவே, பலபல முனித்தலைவ ரனைவரு முனக்கினிய பணி விடை தனைப்புரியவே,—சிகரபர வெற்பில்வரு முருககும ரக்கடவுள் சிறுபறை முழக்கியருளே, திரளுமணி முத்தையலை யெறியுநக ருக்கதிப சிறுபறை முழக்கியருளே. (ய)

சிறுபறைப்பருவம் முற்றிற்று.

## ஆகத் திருவிருத்தம் (அரு)

## ஒன்பதாவது: சிற்றிற்பருவம்.

பொன்னின் மணக்கும் புதுப்புனலிற் புடைசூழ் பணில முத் தெடுத்துப், புறக்கோட் டகமுண் டாக்கிவலம் புரியைத் தூதைக் கல மமைத்துக்,—கன்னி மணக்குங் கழனியிற்செங் கமலப் பொகுட்டு முகையுடைத்துக், கக்குஞ் செழுந்தே னுலையேற்றிக் கழைநித் திலவல் சியைப்புகட்டிப்,—பன்னி மணக்கும் புதுப்பொழிலிற் பலபூப் பறித்துக் கறிதிருத்திப், பரிந்து சிறுசோ றடுமெங்களமை பாரா யயிராவதப்பாகன்,—சென்னி மணக்குஞ் சேவடியாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே. (க)

தையன் மடவா ரிழைத்தவண்ட றன்னை யழிக்கு மதுக்கல்ல, தரள முறுத்தி யுனதுபொற்பூந் தண்டைத் திருத்தா டடியாதோ,— தூய்யதவளப் பிறைமுடிக்குஞ் சோதி யெடுத்து முகந்த ணைத்துத், தோளி லிருத்தும் பொழுதுமணித் தோளிற் புழுதி தோயாதோ,— வைய மனைத்து மீன்றெடுத்தும் வயது முதிரா மடப்பாவை, மடியி லிருத்தி முலையூட்டி வதனத் தணைக்கி லுன்கழற்காற்,—செய்ய சிறு தாள் செறியாதோ சிறியேஞ் சிற்றில் சிதையேலே, திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே. (உ)

---

சிற்றிற்பருவம் - மகளிர்கட்டி விளையாடுஞ் சிறுவீட்டை யழிக்குஞ் சிறுகுறும்பு செய்து விளையாடும் பருவம்.

தௌவுங் கரட மடைப்புடைக்குந் தந்திப் பகடு பிடிபட்டுத், தரு வு மமுது மிருநிதியுந் தனியே கொள்ளை போகாம,—லெவ்வ முறவிட் புலத்தமர ரேக்க முறும லயிராணி,—யிடுமங் கலநா ணழியாம லிமை யோ ரிறைஞ்சு மரமகளிர்,—பௌவ மெறியுந் துயராழிப் பழுவத் தழுந்தி முழுகாமற், பரக்குஞ் சுருதித் துறைவேள்வி பழுதா காமற் பரவரிய,—தெவ்வர் புரத்தை யடுஞ்சிறுவா சிறியேஞ் சிற்றில் சிதை யேலே, திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச் செல்வா.சிற்றில் சிதை யேலே. (௩)

ஆடுங் கொடித்தே ரெழுபுரவி யருண னடத்து மகலிடத்தை, யடைவே படைத்தும் படைத்தபடி யளித்துந் துடைத்து முத்தொழி லுங்,—கூடும் பெருமை யுனக்குளது கூடார் புரத்தைக் குழாம்பறிக் கக், கொள்ளுங் கருத்து நின்கருத்துக் கொங்கை சுமந்து கொடிமருங் குல்,—வாடுங் கலக விழிமடவார் மலர்க்கை சிவப்ப மணற்கொழி த்து, வண்ட லிழைத்த மனையழிக்கை வன்போ சுரரு மகவானுந்,— தேடுங் கமலத் திருத்தாளாற் சிறியேஞ் சிற்றில் சிதையேலே, திரை முத் தெறியுந் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே. (௪)

புற்றி லரவந் தனைப்புனைந்த புனித ருடனே வீற்றிருக்கப், பொலியுந் திகிரி வாளகிரிப் பொருப்பை வளர்த்துச் சுவ ராக்கிச்,—சுற் றில் வளர்ந்த வரையனைத்துஞ் சுவர்க்கா லாக்கிச் சுடரிரவி, தோன்றி மறையுஞ் || சுருப்பைவெளி தொறுந்தோ ரணக்கா லெனநாட்டி,— மற்றி லுவமை யெனுங்கனக வரையைத் துளைத்து வழியாக்கி, மாக முகிலை விதானமென வகுத்து மடவா ருடன்கூடிச்,—சிற்றி லிழை த்த பெருமாட்டி சிறுவா சிற்றில் சிதையேலே, திரைமுத் தெறியுந் திருச்செந்தூர்ச் செல்வா சிற்றில் சிதையேலே. (௫)

மிஞ்சுங் கனக மணித்தொட்டின் மீதே யிருத்தித் தாலுரைத்து
வேண்டும் படிசப் பாணிகொட்டி விருப்பாய் முத்தந் தனைக்கேட்டு
நெஞ்சு மகிழ வரவழைத்து நிலவை வருவா யெனப்புகன்று
நித்த லுனது பணிவிடையி னிலைமை குலையே நீயறிவாய்
பிஞ்சு மதியி னொருமருப்புப் பிறங்கு மிருதாட் கவுட்சுவடு
பிழியுங் கரட மும்மதத்துப் பெருத்த நால்வாய்த் திருத்தமிகு
மஞ்சு கரக்குஞ் சரத்துணையே யடியேஞ் சிற்றி லழியேலே
யலைமுத் தெறியுந் திருச்செந்தூ ரரசே சிற்றி லழியேலே. (௬)

|| சுருப்பு-மலை; சுரும்பின்விகாரம்.

துன்று திரைக்குண் டகழ்மடுவிற் சூர ஞெளிக்கப் பகைநிருதர்
தொல்லைப் பதியு மவரிருந்து துய்த்த வளமுந் தூளாக்கி
வென்று செருவிற் பொருதழித்தாய் வேதா விதித்த விதிப்படியை
விலக்கி வெகுண்டு மீண்டளித்தாய் வேண்டு மடியார் வினையொழித்
கன்று மமணர் கழுவேறக் காழிப் பதியில் வந்துதித்துக் [தாய்
கள்ளப் பரச மயக்குறும்பர் கலக மொழித்துக் கட்டழித்தா
யன்று தொடுத்துன் வழியடிமை யடியேஞ் சிற்றில் சிதையேலே
யலேமுத் தெறியுந் திருச்செந்தூ ரரசே சிற்றில் சிதையேலே. (எ)

களிப்பா ருனைக்கண் டவரவரே கண்ணு மனமும் வேறாகிக், கள்ள னிவனை நம்முடைய காதல் வலையிற் கட்டுமென,—விளிப்பார் விரக மங்குரித்த வேடப் பலிப்பைப் பாரென்று, மெள்ள நகைப்பா ரிவருட னே விளையா டாமல் வேறாகித்,—துளிப்பார் திரைக்குண் டகழுடுத்த தொல்லைப் பதியும் பகிரண்டத், தொகையுந் தொகையில் பல்லுயிருந் தோற்ற மொடுக்கந் துணையாய்நின்,—றளிப்பா யழிக்கை கடனலக்கா ணடியேஞ் சிற்றி லழியேலே, யலேமுத் தெறியுந் திருச்செந்தூ ரரசே சிற்றி லழியேலே. (அ)

கூவிப் பரிந்து முலேத்தாயர் கூட்டி யெடுத்து முலேயூட்டிக், குடுமி திருத்தி மலர் சொருகிக் கோலம் புனைந்து கொண்டாடிப்,— பூவிற் பொலிந்த திருமேனிப் புனிதா வண்டற் புறத்தெயிலிற், புகுந் தா லினியுன் னுடலேறப் புழுதி யிறைத்துப் போகாமற்,—காவிக் குறுந்தோட் டிதழ்நெருக்குங் கண்ணி தனைக்கொண் டோச்சிவளைக், கானற் றரளத் தொடையாலுன் கைத்தா மரையைக் கட்டிவிடோ,— மாவித் துணையே வழியடிமை யடியேஞ் சிற்றி லழியேலே, யலேமுத் தெறியுந் திருச்செந்தூ ரரசே சிற்றி லழியேலே. (௯)

பொய்யா வளமை தரும்பெருமைப் பொருநைத் துறையி னீரா ட்டிப், பூட்டுங் கலன்கள் வகைவகையே பூட்டி யெடுத்து முலேயூ ட்டி,—மெய்யா லணைத்து மறுகுதனில் விட்டா ரவரை வெறுமலு ன்னை, வெறுக்க வேறு கடனுமுண்டோ விரும்பிப் பாலேக் கொழித் தெடுத்துக்,—கையா லிழைத்த சிற்றிலேநின் காலா லழிக்கை கடன லக்காண், காப்பா னழிக்கத் தொடங்கிலெங்கள் கவலே யெவரோ டினியுரைப்போ,—மையா வுனது வழியடிமை யடியேஞ் சிற்றி லழி யேலே, யலேமுத் தெறியுந் திருச்செந்தூ ரரசே சிற்றி லழியேலே. (௰)

சிற்றிற்பருவம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம் ௬௰.

# பத்தாவது: சிறுதேர்ப்பருவம்.



தண்டே னுடைந் தொழுகு மருமாலை நீண்முடி தரிக்குஞ் சதக் கிருதுசெந், தருணமணி யாசனத் தேறமா தலிசெழுந் தமனியத் தே ருருட்டப்,—பண்டே பழம்பகை நிசாசரர்க ளூட்கப் பரப்புநிலை கெ ட்டதென்று, பரவுங்கு பேரன்வட பூதரம் பொருபுட் பகத்தே ருருட் டவீறு,—கொண்டே யுதித்தசெங் கதிரா யிரக்கடவுள் குண்டலங் திருவில்வீசக், கோலப்ர பாமண் டலச்சுடர் துளக்கமுட் கோலெடுத் தருணவருணன்,—றிண்டே ருருட்டவளர் செந்தில்வாழ் கந்தனே சிறுதே ருருட்டியருளே, சேவற் பதாகைக் குமாரகம் பீரனே சிறுதே ருருட்டியருளே. (க)

வாராரு மிளமுலை முடைத்துகிற் பொதுவியர் மனைக்குட் புகு ந்துமெள்ள, வைத்தவெண் டயிருண்டு குடமுருட் டிப்பெருக வாரி வெண் ணெயையுருட்டிப்,—பாராம லுண்டுசெங் கனிவாய் துடைத் துப் பருஞ்சகடு தன்னையன்று, பரிபுரத் தாளா லுருட்டிவிளை யாடு மொரு பச்சைமான் மருகபத்தி,—யாராமை கூருமடி யவர்பழ வினைக் குறும் பறவே யுருட்டிமேலை, யண்டபகி ரண்டமு மனைத்துலக முஞ் செல்லு மாணையா ழியையுருட்டிச்,—சேராநி சாசரர் சிரக்குவ டுரு ட்டநீ சிறுதே ருருட்டியருளே, சேவற் பதாகைக் குமாரகம் பீரனே சிறுதே ருருட்டியருளே. (உ)

கொந்தவிழ் தடஞ்சாரன் மலயமால் வரைநெடுங் குடுமியில் வள ர்ந்ததெய்வக், கொழுந்தென்ற லங்கன்று மாடகப் பசுநிறங் கொண் டுவிளை யும்பருவரைச்,—சந்தன நெடுந்தரு மலர்ப்பொதும் பருமி யற் றண்பொருநை மாநதியுமத், தண்பொருநை பாயவிளை சாலிநெற் குலையுமச் சாலிநெற் குலைபடர்ந்து,—முந்தவிளை யும்பரு முளிக்கரும் பும்பரு முளிக்கரும் பைக்கறித்து,—முலைநெறிக் கும்புனிற் றெரு மைவா யுஞ்சிறுவர் மொழியும் பரந்தவழியுஞ்,—செந்தமிழ் மணக்குந் திருச்செந்தில் வேலனே சிறுதே ருருட்டியருளே, சேவற் பதாகைக் குமாரகம் பீரனே சிறுதே ருருட்டியருளே. (ங)

---

* சிறுதேர்ப்பருவம் - பருவத்துக் கேற்ற கைத்தேருருட்டி விளை யாடும் பருவம்.

பெருமையுட னீடலத் திருவர்பர சமயமும் பேதம் பிதற்றிவிட்ட, பிறைமருப் புக்கரும் பகடுமூங் நீரிற் பிழைத்துநீள் கரையிலேறப்,— பொருவருஞ் சன்னிதியி லெய்துவது போன்மணி புடைக்குமிள நீரிரண்டு, புணரியின் மிதந்துசன் னிதியேற விந்நாட் பொருந்தவினை யாடி முன்னு,—ளிருதிரையி னிற்சந் தனக்கொடி மரத்தினை யிழுத்துவரு மெருமையேற்றை, யெப்பொழுது முதியகற் பகடாக வுலகத்தி லியாவருங் காணவென்று,—திருவுள மகிழ்ந்துதிரு விளையாடல் கண்டநீ சிறுதே ருருட்டியருளே, சேவற்! பதாகைக் குமாரகம் பீரனே சிறுதே ருருட்டியருளே. (௪)

ஆதிநூன் மரபாகி யதனுறும் பொருளாகி யல்லவை யனைத்துமாகி, யளவினுக் களவாகி யணுவினுக் கணுவா யனைத்துயிரு மாகியதனின்,—சாதியின் பிரிவாகி வெவ்வேறு சமயங்க டாளுகி நாளுகிமெய்ச், சாலோக சாமீப சாரூப சாயுச்ய தன்னொளியி லீலையாகி,— யோதிய தனைத்தினு மடங்காமல் வேருகி யுள்ளும் புறம்புமாகி, யொளியிலொளி யாகிமற் றிரவுபக லற்றவிட மொப்புவித் தெனையிருத்தித்,—தீதினை யகற்றிநின் றிருவருள் புரிந்தவா சிறுதே ருருட்டியருளே, சேவற்ப தாகைக் குமாரகம் பீரனே சிறுதே ருருட்டியருளே. ()

வேறு.

புலமை வித்தக மயூரவா கனவள்ளி போகபூ ஷணசூரன், சலமொ ழித்தவ நிசாசரர் குலாந்தக சடாக்ஷர காங்கேய, குலவு கொற்றவ குமாரகண் டீரவ குருபர புருகூத, னுலக ளித்தவா செந்தில்வாழ் கந்தனே யுருட்டுக சிறுதேரே,—யுரக நாயகன் பஃறலை பொடிபட வுருட்டுக சிறுதேரே. (௬)

வீதி யங்கல விழாவணி விரும்பிய விண்ணவ ரரமாதர், சோதி மங்கல கலசகுங் குமமுலை தோய்ந்தகங் களிகூரச், சாதி மங்கல வல்லம்புரி யினமெனத் தழைச்சிறை யொடுபுல்வி, யோதி மந்துயில் செந்தில்வாழ் கந்தனே யுருட்டுக சிறுதேரே,—யுரக நாயகன் பஃறலை பொடிபட வுருட்டுக சிறுதேரே. (௭)

விரைத்த டம்பொழில் வரைமணி யாசனத் திருந்துவிண் ணவர்போற்றி, வரைத்த டம்புரை மழவிடை யெம்பிரான் மனமகிழ்ந் திடவாக்கா, விரைத்த பல்கலைப் பரப்பெலாந் திரட்டிமற் றிதுபொரு ளெனமேனு, ளுரைத்த தேசிகா செந்தில்வாழ் கந்தனே யுருட்டுக சிறுதேரே,—யுரக நாயகன் பஃறலை பொடிபட வுருட்டுக சிறுதேரே. (௮)

மாது நாயக மெனவடி வுடையசீர் வள்ளிநா யகமன்னி, வீது நாயக மெனவுனை யன்றிவே றெண்ணநா யகமுண்டோ, போது நாயகன் புணரியி னுயகன் பொருப்புநா யகன்போற்றி, யோது நாயக செந்தில்வாழ் கந்தனே யுருட்டுக சிறுதேரே,—யுரக நாயகன் பஃறலை பொடிபட வுருட்டுக சிறுதேரே. (௯)

தக்க பூசனைச் சிவமறை யோர்பெருந் தானநா யகர்தம்பேர்
திக்க னைத்தினு மெண்முத லிமையோர் தேவர்தந் திருமேனி
மிக்க மாலிகை தருபவ ரடியவர் மின்னனூர் சமயத்தோ
ரொக்க வாழ்கெனச் செந்தில்வாழ் கந்தனே யுருட்டுக சிறுதேரே
யுரக நாயகன் பஃறலை பொடிபட வுருட்டுக சிறுதேரே. (௰)

சிறுதேர்ப்பருவம் முற்றிற்று.

---

## ஆகப்பருவம் ௰-க்குத் திருவிருத்தம். (௱௩)

சிறப்புப்பாயிரவிருத்தம் (௩)

## ஆகத் திரு விருத்தம் (௱௬).

திருச்சேந்தூர்ப் பிள்ளைத் தமிழ் முற்றிற்று.



வேலுமயிலுந்துணை.

## ஆண்பாற்பிள்ளைக் கவியி னிலக்கணம். சக



• இரண்டா மாதத்திற் காப்புக் கூறுதலும், ஐந்தா மாதத்திற் செங்கீரை கூறுதலும், ஆறுமாதத்திற் சொல்லுவதைப்பழகுதலும், எட்டாமாதத்தில் தாலாட்டுதலும், ஒன்பதாமாதத்தில் சப்பாணி கொட்டுதலும், பதினொரா மாதத்தில் முத்தங் கூறுதலும், பன்னிரண்டா மாதத்தில் வாரானை கூறுதலும், பதினெட்டா மாதத்தில் சந்திரனை யழைத்தலும், இரண்டாமாண்டில் சிறுபறை கொட்டலும், மூன்றுமாண்டில் சிற்றில் சிதைத்தலும், நாலாமாண்டில் சிறுதே ருருட்டலுமாம், இவ்வாறு பிங்கலந்தையிற் கூறப்பட்டது.

---

உ

குமரன்றுணை.

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழருளிச்செய்த
# பகழிக்கூத்தர் சரித்திரம்.

இவர், சேதுமன்னர் அரசாட்சிக்குள்ளாகிய செம்பிநாட்டைச் சேர்ந்த *சன்னுசிக் கிராமத்தில் வைணவப்பிராமண குலத்தினராகிய தர்ப்பாதனரென்னு மறையவரருந்தவத்தால் அவருக்கு மைந்தராகப் பிறந்து வளர்ந்து வேதாங்கங்களை யுணர்ந்து மெய்ப்பொருளை யறிந்த துபோலவே, தமிழிலக்கிய விலக்கணங்களையும் ஐயந்திரிபறக் கற்று வல்லராய் எல்லாரும் நன்குமதிக்கத்தக்க வித்துவானாகி விளங்கியிருந் தனர்.

அங்ஙனமிருக்குங்காலத்தி லொருநாள் வயிற்றுவலி நோயாற் பீடிக்கப்பட்டுப் பெரிதும்வருந்தி, அந்நோய் நீங்குதற்குத் தக்கமருந்து கள் பலவாகவுண்டும் நீங்காமையால் இனி, எம்பெருமானாகிய திருச் செந்தூரிலெழுந்தருளி யிருக்குங் குமாரக்கடவுளைப்பாடி யிந்நோயைத் தீர்த்துக்கொள்ளுவேனென்று நினைத்துப் பிரார்த்தித்து, அக்கடவுள் மீது பிள்ளைத்தமிழ் எனப்பெயரிய இவ்வருமைப் பிரபந்தத்தைப் பாடிமுடித்து நோய் நீக்கம்பெற்று மனமகிழ்ச்சியடைந்து திருவருளை வியந்து திருச்செந்தூருக்குச்சென்று முருகக்கடவுளைத் தரிசனஞ் செய்து அவர்திருச்செவிகளுக்கின்பந்தருமாறு, அவர்சந்நிதியிலேயநே கவித்துவான்களும் அடியார்களும் திரிசுதந்திரர்களுஞ் சூழவிருந்து இது, பிள்ளைத்தமிழாயினும் பெரியதமிழெனப்பிரமிக்க அரங்கேற்றி யானந்த பரவசமடைந்து அவ்வெம்பிரானை யாராதித்தனர்.

பின்னர் சபையிலிருந்த திரிசுதந்திரரும் பிறரும் பிள்ளைத் தமிழ்ப் பிரபந்தத்தில் சொற்சுவை, பொருட்சுவை, பற்பலசந்தச் சுவை, கற்பனை, அலங்காரம் முதலிய பல நலமும் பத்திப்பெருக் குங்கேட்டார்ப்பிணிக்குந் தகையவாய் நிரம்பியுள்ளன வென்பதையு ணர்ந்திருந்தும் பகழிக்கூத்தருக்குச்செய்யவேண்டிய மரியாதையொன் றேனும் செய்யாமற் பராமுகமாவிருந்துவிட்டனர். அங்ஙனமிருத்தற் குக் காரணம் இவர் வைணவராயிருந்த தென்று சிலர் கூறுவர்; அது

---

* சன்னுசிக்கிராமம் இப்போது சதுர்வேதமங்கல மெனவுங் கூறுவர்; இது: காமங்கோட்டைச் சேகரத்தைச் சார்ந்துள்ளது.

நிற்க. பகழிக்கூத்தர் சபையார் செய்யுமரியாதையைப் பொருட்படுத்தாது தமக்கு வயிற்றுநோயைத்தீர்த்த ஞானபண்டிதராகிய குமாரக்கடவுள் திருவருளையே பொருளாகக்கொண்டு தமதிருப்பிடஞ்சென்று நித்திய கன்மாநுட்டானஞ்செய்து பேரின்பப் பெருவாழ்விலழுந்தி நித்திரை செய்வாராயினர்.

அப்போது கலியுகவரதராகிய குமாரக்கடவுள் பகழிக்கூத்தரது மெய்யன்பையும் தமிழால் தம்மைப்பாடுவார்க்குத் தாம் செய்யுந்திருவருளையும் பிறருக்கறிவிக்கும் பொருட்டுத் தமது திருமார்பில் விசேஷாலங்காரமாகச் சாத்தப் பெற்றிருந்த விலையுயர்ந்த மாணிக்கப் பதக்கத்தைக்கொண்டு வந்துநித்திரைசெய்து சயனித்திருந்த பகழிக்கூத்தரது மார்பிலணிந்துவிட்டுச் சென்றனர். மறுநாள் திருவனந்தற் பூசை செய்யவந்த பெரியவர்களுங் கோவிலதிகாரிகளுஞ் சுவாமிமார்பிலிருந்த பதக்கத்தைக்காணாமல் மதிமயங்கி யிதைத்திருடிச் சென்றவன் யாவனென்று ஊரெங்குந்தேடுவாராய் எங்குங்காணாமல் பகழிக்கூத்தர் மார்பிலிருக்கக்கண்டு, இக்காரியஞ்செய்தவன் உயிர்தொறுமொளித்திருந்த நம் குமாரக்கடவுளே யன்றி வேறில்லையென்று முன்னைநாழ் நிகழ்ச்சியாலறிந்து பகழிக்கூத்தரை வணங்கி யும்முடையபெருமையை யறியாதிருந்த எங்கள் அபராதத்தைப் பொறுத்துக்கொள்ளல்வேண்டுமென்று பிரார்த்தித்துப் பல்லக்கிலேற்றி யநேகவிருதுகள் வாத்தியங்கள் சூழ வெகு விநோதமாக நகர்வலஞ் செய்வித்துச் சந்நிதானத்திற் கொண்டுபோய்த் தீர்த்தம், விபூதி, சந்தனம், மாலை, பரிவட்டம் முதலியவைகளாலுபசரித்தனுப்பினர்.

அன்றுமுதல் இவர் சுப்பிரமணியபத்தியில் சிறந்து திருவருள் பெற்ற அருள்வித்துவானாக மதிக்கப்பட்டுள்ளார்; இவரது திருவாக்காகியபிள்ளைத்தமிழ் திருச்செந்தூர்க்கோயிலில் குமாரக்கடவுள் பூசையின் முடிவில் ஓதுவார்களால் திருப்புகழோடு சேர்த்து ஓதப்பட்டுவருகின்றது. இவ்வுண்மையை நம்பியின்றுந் தீரா நோய்தீர நினைப்பார் இப்பிள்ளைத்தமிழைப் பாராயணஞ்செய்து எத்தனையோபேர் நோய் தீரப்பெற்றுச் சுகமடைகின்றார்கள். நிற்க.

இனி, பகழிக்கூத்தர் அருங்கலை விநோதராகவிருந்து சங்கநூலாராய்ச்சிசெய்து அச்சங்கநூற் பஞ்சகாவியத்துள்ளே தலைமைவாய்ந்த சிவகசிந்தாமணியிலுள்ள அளவிடற்கரிய பெருங்கதைகளைச் சுருக்கிப்பரோபகாரங்கருதிச் சிந்தாமணிச்சுருக்கமெனப் பெயரிட்டு அந்தாதித் தொடராகத் திருத்தக்க தேவராகிய சிந்தாமணி நூலாசிரியர் கருத்துக்களைப் பெரும்பாலுந்தழுவிப்பதினான்குசீர்க் கழிநெடிலடி ஆசிரிய விருத்தத்தால் மதுரை மாநகரத்திலிருந்து பாடிமுடித்தனரென்பது இவர் கூறிய அந்நூல் அவை யடக்கத்திலுள்ள வொருபாடலாற் றெரியவருகிறது. அந்நூல் இதுகாறும் வெளிப்படாமலேட்டுச் சுவடியாகச் சிற்சில இடங்களிலேயுள்ளது; இது: படிப்பவர்க்கு மிகவினிமையான சுவையுடைத்தென்பது தாவிபுலாக நியாயமாகக் காட்டுதற்குத் திருச்செந்தூர்ப்பிள்ளைத்தமிழிலொரு பாடலே போதும். இன்னும் இவர்பாடிய நூல்கள் இன்னின்னவை யெனத்தெரியவில்லை. யென்னுடைய நூலாராய்ச்சியில் இனித்தெரிந்தாலப்போது வெளியிடுவேனாக. இதுகாறுங் கூறிவந்தவை: கன்னபரம்பரையாலும் மதுரைத்தமிழ்ச்சங்கம் செந்தமிழ்ப்பத்திராசிரியர் ஸ்ரீமாந் மு. ராகவையங்காரவர்கள் பலபிரபல நியாயங்கள்கொண்டு எழுதிய செந்தமிழ் ஆறாந்தொகுதி 131-முதல் 134, முடிவு பக்கங்களிலுள்ள வசனங்களாலுங் கண்டவை.

இவர் காலமின்னதென்பது இவர் பாடிய நூல்களாலும் பிறவற்றாலும் பலவழியால் ஊகித்தாலுங் குறிப்பாகக் கூடவிளங்கவில்லை. அறிஞர்களாராய்ச்சி செய்வாராக. சுபம், சுபம், சுபம்.

இங்ஙனம்.

மதுரைத்தமிழ்ச்சங்கம்

வித்துவான்.

**மு. ரா. அருணாசலக்கவிராயர்.**



உ

குமரன்றுணை.

துறைமங்கலம்

சிவப்பிரகாசசுவாமிகளருளிச்செய்த

# திருச்செந்தினிரோட்டகயமகவந்தாதி

## மூலமும் அரும்பத உரையும்.



காப்பு.

கொற்ற வருணனை நின்றன் றுழக்கிய கொக்குருவைச்
செற்ற வருணனை யன்னசெவ் வேற்படைச் செந்திலர்க்கு
முற்ற வருணனை யந்தாதி யென்று முதிர்மதப்பேர்
பெற்ற வருணனை யானனத் தாதியைப் பேசுவனே. (க)

நூல்.

யானைக்கண் டங்கரி சென்றேறத் தெழிற்செந்தி லின்றடைந்தே
யானைக்கண் டங்கரி யற்கங்க யிலையை யேத்ததகை
யானைக்கண் டங்கரி சேரெண்டிக் காக்கினற் கிநலிசை
யானைக்கண் டங்கரி தாகிய சிர்க்கதி யெய்தினனே. (க)

---

(க) கொற்றம் - வெற்றி. வருணன்-கடற்கிறைவன். உழக்கிய-வருத்தப்படுத்திய. கொக்குஉருவை - மாமர வடிவமாகிய சூரபன்மனை. செற்ற - கொன்ற. அருணனை - சூரியகிரணத்தை. முற்ற - முடியும் பொருட்டு. வருணனை - வருணித்தல்; சிறப்பிததுச் சொல்லுதல். மதப்பேர் - மதமென்கிற பெயரை, அருள் - கிருபையில். நனை - தோய்கின்ற. ஆனனத்து - முகத்தையுடைய - ஆதி - விநாயகக்கடவுள்.

(க) யானைக்கண் (வெள்ளை) யானையின்மேல். அரி - இந்திரன். யான்-நான். ஐ - அழகிய. கண்டம் - கழுத்து. கரியற்கு - கருநிறமுடைய சிவபிரானுக்கு. கயிலையை - கயிலாசமலையை. ஏத்த - ஒத்த. தகை - அழகு. ஆன் - இடபவாகனத்தையுடைய. ஐக்கு - கடவுளுக்கு. கரி-(திக்கு)யானைகள். ஆக்கினற்கு - உண்டாக்கியமுதல்வனுக்கு. ஈ - (பிரணவப்பொருளை) யுபதேசித்த. கண்டு - தரிசித்து. அங்கு - அத்திருச்செந்தூரில்.

தினகர னந்த நனியிலங் காநின்ற செய்யநற்செந்
தினகர னந்த நிதியா யினனடற் சிரயிலேந
தினகர னந்த கனைச்செற்ற தாளர் திகழ்கனகா
தினகர னந்த நடனர் தனயனென் சிந்தையனே. (உ)

சிந்தனை யாகத் திசையந் தணர்க்கிறை சேரகங்க
சிந்தனை யாகத் தரையளித் தாடரை சென்றிரந்த
சிந்தனை யாகத் திடையியைந் தான்றந்த சேயளியாற்
சிந்தனை யாகந்த நற்செந்தி லாய்நினைச் சேர்ந்தனனே. (௩)

தனத்தலங் கார நிறைநா ரியரந் தரத்தசைகே
தனத்தலங் கார நிகழரங் காடச்செய் தன்னினயத்
தனத்தலங் காரத ராயியங் கத்தக்க தண் செந்திற்கந்
தனத்தலங் காரனை யானய னேத்திடத் தங்கினனே. (௪)

---

(உ) தினகரன் - சூரியகிரணம். நந்த - கெட. நனி - மிக. செந்தில் - திருச்செந்தூரென்னும். நந்தம் - நம்முடைய. நிதி - செல்வம். அடல் - வலிமை. அந்தகன் - யமன். செற்ற - (உதைத்துச்) சயித்த - திகழ் - விளங்குகின்ற. கனம் - மேன்மையுடைய - காதில்,— அனந்த - ஆதிசேடனாகிய (குண்டலத்தையுடைய.) நடனர் - நடராசப்பெருமானது. தனயன் - புத்திரன்.

(௩) சிந்தனை - மனம். யாகத்து,— இசை - பொருந்திய. அந்தணர்க்கு - பிராமணர்க்கு. சேர் - பொருந்திய. அகம் - மனம். அனையாக - தாயாக. தரை - பூமியை. அளித்தாள் - தந்த உமாதேவியையும். தரை - பூமியை. இரந்த - (மாவலிச்சக்கிரவர்த்தியிடம்) யாசித்த - சிந்தனை - குள்ளவடிவாகிய விஷ்ணுவை. ஆகத்திடை - (சமது) திருமேனியிடத்தில். இயைந்தான் - (இடப்பக்கத்தும் வலப்பக்கத்துமாகப்) பொருந்திய சிவபிரான். சேய் - முருகக்கடவுளே. அளியால் - கருணையால். சிந்து அனையா - கடல்போன்றவரே.

(௪) தனத்து - முலையினிடத்து. அலங்கு - அசைகின்ற - ஆரம் - முத்தாபரணம். அந்தரத்து - ஆகாயத்தில். கேதனத்து - கொடிகளின். அலங்காரம் - அழகு. அரங்கு - நடனசபையில். செய்தன்னில் - வயல்களில். நயத்த நத்து - நன்மையையுடைய சங்குகள். அலம் கார் - கலப்பைச்சாலிலுள்ள நீர் - அதரா (நடக்கும்) வழியாக. இயங்கத்தக்க - ஊர்ந்து செல்லத்தக்க. அத்தலம் - அத்திருச்செந்தூரில் - காரனையான் - மேகம்போன்ற விஷ்ணு.

தங்கந் தனங்க ளடையத் தனியெனைத் தள்ளியங்கே
தங்கந் தனங்க டரச்சென் றனரறிந் தாரிலைகா
தங்கந்த னங்க ளலர்காக்க ணாரெழிற் றண்செந்திலார்
தங்கந் தனங்க நிகர்செக்கர் செய்சஞ் சலத்தினையே. (ரு)

சலந்தர னாகந் தரித்தார்தந் தாதன் றனதிடைச்சஞ்
சலந்தர னாகந் தரைநடந் தாலெனச் சார்ந்தசண்டன்
சலந்தர னாகந் தளரச்செற் றார்தன யன்றலநச்
சலந்தர னாகந் தனக்கிறை சேர்செந்தில் சார்ந்திடற்கே. (சு)

சாரங்கஞ் சங்கரி கட்கிச்சித் தேய்ந்தகைச் சங்கரனார்
சாரங்கஞ் சங்கரி தாஞ்சக் கரங்கையிற் றாங்கினன்சேய்
சாரங்கஞ் சங்கரி யாநண்ணி னர்க்கந்தத் தந்திரத்தா
சாரங்கஞ் சங்கரி தேயெனச் செய்நின் சரண்டைந்ததே. (எ)

---

(ரு) தங்கம் - பொன்போலுந்தேமல். தனங்கள் - (என்) முலைகள். தங்கு - தரித்திருக்கின்ற - அம்தனங்கள்தர - அழகியதிரவியங்கள் கொண்டு வந்து கொடுப்பதற்கு (பொருள்சம்பாதித்துக்கொண்டு வருதற்கு). காதம்- காததூரம். கந்தம் - வாசனைசெய்கின்ற. நம் - நமது. கள்அலர் - தேனிறைந்த பூக்கள். காக்கண் - சோலையினிடத்து. ஆர் - பொருந்திய. செந்திலார் தம்கந்தன் - திருச்செந்தூரிலுள்ளாருடைய முருகக்கடவுள். அங்கம்-(தமது) திருமேனியை. செக்கர்-செவ்வானம் - சஞ்சலம் - துன்பம். [இது, தலைவிதலைவனைப் பிரிந்து மாலைப்பொழுது கண்டிரங்கல்.]

(சு) சலம் - கங்கை - தாம் - தலைமாலை. நாகம் - பாம்பு - தாதன் - தொண்டனாகிய மார்க்கண்டமுனிவன் - சஞ்சலம் - துன்பம். நாகம் - யானை. சண்டன் - யமனையும் - சலந்தரன் - சலந்தராசுரனையும். ஆகம் - சரீரம் - செற்றார் - கொன்றசிவபிரான். தனயன் புத்திரன். தலம் -இருப்பிடம். நச்சலம்- விரும்பினேனுமில்லை, தரநாகம் - தகுதியையுடைய மலைகளுக்கு. இறை - தலைவராகிய முருகக்கடவுள். தனையனாகிய நாகந்தனக்கிறைசேர் செந்திற்றலமெனக்கூட்டுக.

(எ) சாரங்கம் - மான். சங்கரிகண் - உமாதேவியின் கண்களுக்கு. இச்சித்து - ஆசைப்பட்டு. ஏய்ந்த - (வந்திருந்தாற்போலப்) பொருந்திய. சாரங்கம் - வில் - சங்கு;— தாங்கினன் - தரித்தவிஷ்ணு. சேய் - மன்மதனாகியபிள்ளை. சார் - பொருந்திய. அங்கம் - சரீரத்தை. சங்கரியா - சங்காரஞ்செய்து. நண்ணினர்க்கு - (முன்போல) யோகத்திலிருந்தசிவபிரானுக்கு. தந்திரத்து- (சைவாகம) நூலின். ஆசாரம் - ஒழுக்கத்தை. கஞ்சமலர் - தாமரை மலரை. சரண் - (உமது) திருவடி. 2-அடி சார்ங்கமென்பது சாரங்கமென்றாயிற்று

தந்தனஞ் சங்கை யணிகரர் சேர்க்கத் தடங்கணலே
தந்தனஞ் சங்கை யலரென்செய் யாடங்கச் சற்சனர்நித்
தந்தனஞ் சங்கை யகலறத் தீசெந்திற் சார்கதனித்
தந்தனஞ் சங்கை யநக னிளையனற் றுடரற்கே. (அ)

தரங்கனந் தார னணியேற் றெழிற்செந்திற் றந்தைநிரந்
தரங்கனந் தாரக நாடினென் றேநினை சத்தியரந்
தரங்கனந் தார நகரீசர் சேய்கிரித் தையலர்க்கந்
தரங்கனந் தாரள கஞ்சிற் றிடைசல சங்கண்களே. (௯)

சங்கங் களங்கழ னிக்கரை சேர்செந்திற் றங்கினநஞ்
சங்கங் களங்கர நண்ணரன் சேயெய்தச் சார்ந்தனஞ்சற்
சங்கங் களங்க னியைநிகர் தண்ட தரற்கினிய
சங்கங் களங்க ரெனநின்ற யாங்களொஞ் சங்கரைந்தே. (௰)

---

(அ) தம்தனம் - தங்களுடைய கொங்கையில். சங்கை - சங்குவளை யலே. கார்-கையையுடைய பெண்கள். தடம்கண் -(அப்பெண்களது) விசால மாகியகண் (வலையிற்சிக்கி). அலைதந்தனம் - அலைந்தோம் (மனமே). சம்-(அப் பெண்களது) சுகத்தை. கை - வெறுத்துவிடு. (அப்படிச்செய்தால்வரும்) அலர் என் - பழிச்சொல்யாது. செய்யாள் - இலக்குமி. தங்க - வசிக்க. சற் சனர் - சன்மார்க்க முடையபெரியோருக்கு. சங்கை - சந்தேகததை. அறத்து ஈ-தருமவழியிலே கொடுப்பாய். சார்க-சேர்வாய்-தனித்தந்தன் - ஒற்றைக் கொம்புடையவரும். அஞ்சு அம் கை அநகன் - ஐந்து அழகிய கையையும் பாவமில்லாமையையுமுடைய விநாயகருக்கு. இளையன்- தம்பியாகிய முருகக் கடவுள்.

(௯) தரங்கம் - கடலலைகள். நந்து - சங்குகளை - ஆரல் மதிலின்மேல். நணி - மிக. எற்று - வீசுகின்ற. நிரந்தரம் - எப்பொழுதும். கனம் - மேன மை. தாரகம் - பிரணவப்பொருளை - நாடின் ஆராய்ந்தால். என - என்று. அந்தரங்கம் - இரகசியத்தில் (இருதயத்தில்). நந்தார் - கெடாமலிருப்பவர்- அநகர் - பாவமில்லாதவர். சேய் - பிள்ளையாகிய முருகக்கடவுள். கிரித்தை யலர்க்கு - மலையிலுள்ளபெண்ணுக்கு. அந்தரம் - ஆகாயமும். கனம் - மேக மும். அளகம் சிற்றிடை - கூந்தலும் சிறிய இடையும் (போலும்). சலசம் - தாமரை மலர் [இது, பாங்கனுக்குத்தலைவன் தலைவியியவிடங்கூறுதல்].

(௰) சங்கங்கள்-சங்குகள். கழனிக்கரை-வயல்வரப்பு. நஞ்சம்-விஷமும். கம்-பிரமகபாலமும். களம்-கழுத்திலும். காம்-கையிலும். சேய்-பிள்ளையாகிய குமாரக்கடவுள். களங்கனி-களாப்பழம். தண்டதரன்-யமன். அசங்கம் - பய ப்படமாட்டோம்.

கரத்தரிக் கங்கணங் கட்டா ரழகர்தந்த கந்தரழ
கரத்தரிக் கங்கணங் கண்டசெய்ச் செந்திலெங் காங்கெயர்சா
கரத்தரிக் கங்கணங் கட்கய ரார்க்கெழிற் காசணிசே
கரத்தரிக் கங்கணங் கற்றிடத் தாங்கினர் கைச்சத்தியே. (௯க)

சத்திக் கரத்த னகச்சேயங் கத்தினைத் தந்தனனற்
சத்திக் கரத்த னகச்சிலை யாளிதன் றாளிணைநே
சத்திக் கரத்த னகத்தியைந் தேத்தரன் றந்தகதிர்ச்
சத்திக் கரத்த னகசெந்தி லாய்நின் சரண்சரணே. (௯உ)

சரிதங்கை யாரக் கலன்றந் தனந்தரித் தார்நரகே
சரிதங்கை யாரக் கரிடத்தி னார்தந்த தண்செந்தினே
சரிதங்கை யாரக் கணத்தின்னல் கைத்தல் சரதந்தஞ்சேர்ச்
சரிதங்கை யாரக் கசிந்திசைக் கின்ற தகையினர்க்கே. (௯௩)

---

(௯க) அரிக்கங்கணம்-பாம்பாகியகங்கணம். அழகர்-அழகையுடையவர். இக்கு-கரும்புகள். அங்கணம் - சேற்றினிடத்து. கண்ட - உண்டாகப்பெற்ற. செய்-வயல். அரிக்கு-விஷ்ணுவுக்கு. கணம் - தேவர்முதலியகணங்கள். காசு - இரத்நமாலை. சேகரம்-தலை. அரிக்கு - இந்திரனுக்கு. அணங்கு- (சூரனாலுண்டாகிய) வருத்தம். காங்கேயரென்பது-செய்யுள் விகாரத்தாற் காங்கெயரென்னப்பட்டது. மேலிங்ஙனம் வருவதுமது.

(௯உ) சத்தி-பலமுடைய.கர-முதலையினது. அக வயிற்றினுள்ளேபுகுந்த. சேய்- (பிராமணப்)பிள்ளை. அங்கம் - உடல். நற்சத்தி - நல்லவுமையவளுக்கு. (வலப்பக்கத்திலே) அரத்தன்-சிவப்புநிறமுள்ளவன். நேசத்து-அன்பால். இக்கர்-கருப்புவில்லையுடைய மன்மதனாது. அத்தன்-பிதாவாகியவிஷ்ணு. அனக-பாபமில்லாதவரே. சரண்-அடைக்கலம்.

(௯௩) சரி-வளையலை. தம் கை-தமதுகையிலும். ஆரக்கலன்-முத்துமாலையை. தம்தனம்-தமதுகொங்கையிலும். நரகேசரி-நரசிங்கமாகியவிஷ்ணு. அக்கர்-சங்குமணியையுடையவர். இன்னல்-துன்பத்தை. கைத்தல்-வெறுத்துநீக்குதல். கைஆர-ஒழுக்கம்பொருந்த. தகையினர்-அழகுடையவர். அக்கர்இடத்தினரென்பதை, இடத்தினர் அக்கர் எனமாற்றிப் பொருள்கொள்க.

இன்னந்தி யங்கி நிகர்த்தசெங் கேழன்கை யீரிரண்டா
யின்னந்தி யங்கிரி யைச்சிலை யாக்கிதன் சேயெழிற்செய்
யின்னந்தி யங்கி யிருங்கஞ்சஞ் சேர்செந்தி லெந்தைதளை
யின்னந்தி யங்கிசை யக்கதி யீந்தன னென்றனக்கே. (ருச)

தனக்கடங் காவெயில் செற்றகங் காளன் றனயனங்கந்
தனக்கடங் காதிழி தந்திக் கிளையன் றளிரெழிற்சந்
தனக்கடங் காநிறை செந்திலி னற்சேய் சயிலநங்கை
தனக்கடங் காணினச் சாரிலை யண்ணா றரணியிலே. (ருரு)

தரணி யனைய நிறத்தன்னை லாரிரந் தன்றளந்த
தரணி யனைய னிறைஞ்சயி லார்நற் றனிச்சிலையாந்
தரணி யனைய னகனனை யந்தரி தந்திடுகந்
தரணி யனையனெஞ் சேயலர்த் தாள்க டரித்திறைஞ்சே. (ருசு)

தரிக்கனந் தங்கலை நீள்சடைக் கைக்கனற் சங்கரனந்
தரிக்கனந் தங்கலை நீதிகள் சாற்றரன் றந்தநற்கந்
தரிக்கனந் தங்கலை நீர்ச்செய்க்க ணஞ்செந்தி லார்தளையா
தரிக்கனந் தங்கலை நீத்திழந் தேங்காச் சங்கங்களே. (ருஎ)

---

(ருச) அந்தி - செவ்வானம் - அங்கி - நெருப்பு. கேழன் - நிறமுடைய வன். ஆய் - தாய் - இல் - இல்லாத. நந்தி,— கிரி - (மேரு) மலை - சிலை யாக்கி - வில்லாகவளைத்தவர். செய்யில் - வயலில். இரு - பெரிய. கஞ்சம் - தாமரைமலரில். தளையில் - பாசத்தால். நந்தி - கெட்டலைந்த. நான்குகை, அபயம், வரதம், மான், மழு; இந்நான்குந்தனித்தனியுடைய நான்குகைகள்.

(ருரு) அக்கடம் - அந்தமதம். காதுஇழி - காதினின்றும் ஒழுகப்பெ ற்ற. தந்தி. யானைமுகவிநாயகக்கடவுள். கடம்-காடு. கா - பூஞ்சோலை. சயி லம் - மலையிலிருக்கிற. தனக்கடம் - முலையாகியகுடத்தை. நச்சார் - விரும் பாதவர். அண்ணலே - தலைவனே. [தலைவியி னிலக்கணத்தைத் தலைவன் பாங்கனுக்குக்கூறுதல்].

(ருசு) தரணி - சூரியன். தரணியன் - பூமியையுடைய விஷ்ணு. சிலை - வில். தரணியன் - மலையையுடைய சிவபிரான். ஐ - அழகு. கந்தர் - முருகக் கடவுளே. அணி - நன்மை. அல் - அரணுவர்; (காவலாவர்). நையல் - வருந் தாதே.

(ருஎ) தரிக்க. (தன்னைச்) சூடிக்கொள்ள. (உடனே) நந்து - விளங்குகி ன்ற - அம்கலை - அழகிய சந்திரகலையையுடைய. அந்தரிக்கு - பார்வதிக்கு. இக்கு - கரும்பானது. தளை - (ஆகுபெயர்) மாலையை. நந்தம் - நம்முடைய. சங்கங்கள்- வளையல்கள். [இது முருகக்கடவுள் பவனிகண்டபெண்கள் சொல் லியது].

சங்கரி யக்க நிகர்த்தநின் ருளைத தகையதென்னச்
சங்கரி யக்க ரிறைஞ்செழிற் செந்திற் சடானனசஞ்
சங்கரி யக்கதிர் தானிசை கின்ற சரணத்திஞற்
சங்கரி யக்கனைத் தேயெற் செறியந் தகற்சினந்தே. (யஅ)

தகர னலங்க நிறைநிறத் தான்செந்திற் றந்தைசங்கெய்ந்
தகர னலங்க னளிஞ தனத்தினன் ருழளகந்
தகர நலங்க டரநின்ற சத்தியன் ருளெனினந்
தகர னலங்கனன் ருலெனச் சிறிடத் தக்கரன்றே. (யகூ)

தக்க னுருத்தி னடறணித் தானயன் றன்கதிசந்
தக்க னகத்தி கிரிக்கர ஞக்கங்க டந்தளிக்கத்
தக்க னகத்தி யனையாளி யென்னெஞ்ச தாஞ்சலசந்
தக்க னகத்தி னகரன்றன் செந்திலைச் சந்திக்கினே. (உய)

---

(யஅ) சங்கரி - உமாதேவி. அக்கம் - கண். தகையதென்ன - குணம் போல. சங்குஅரி - சங்கத்தையுடைய விஷ்ணு. இயக்கர் - தேவசாதியிலொரு பிரிவார். சடானன - ஆறுதிருமுகங்களுடையவரே கதிர் - பிரகாசம். சங்கரி - சங்காரஞ்செய்வாயாக. எற்செறி - என்னிடத்தில் நெருங்கும்.

(யகூ) தகரன் - ஆட்டுவாகனத்தையுடையவன். நல் - நல்ல. ஏய்ந்த - பொருந்திய- அலங்கல் - விளங்குதலையுடைய. தாழ் - வணங்குகின்ற. அளகம் - கூந்தல் - தகரம் - மயிர்ச்சாந்தின். சத்தியன் - கிரியாசத்தியாகிய தெய்வயானையம்மையுடையவன். தாளெனின்-திருவடியென்று சொன்னால். அந்தகர் - யமனுர் - அனலம் - தீ - கனன்ருலென - சுட்டாற்போல. தக்கர் - தக்கவர்.

(உய) அகத்தின் அகங்காரத்தின். தணித்தான் - கெடுத்த உருத்ரமூர்த்தி. கதி - பதவி. சந்தம் - அழகு. திகிரி - சக்கரம். ஆக்கம் - செல்வம். தக்கன் - தக்கவன். ஆளி - ஆண்டவன். சலசம் - தாமரையில் - தக்கு - தங்குகின்ற. அனக - பாவமில்லாத. தினகரன் - (ஞான) சூரியனுகிய குமாரக்கடவுள். தங்கு - என்பது எதுகை நோக்கித்தக்கு எனவிகாரப்பட்டது.

சந்தத் தனத்திக டந்திறத் தாசை தலத்தினிச்சை
சந்தத் தனத்தி னசைதீ ரடியன் றனதிலிற்சேர்
சந்தத் தனத்தி யதளான் றனய தடக்கயல்கஞ்
சந்தத்த நத்தி னினங்கி ழிழிசெந்திற் றங்கினற்கே. (உக)

தங்கச் சினகர நேராக் கலந்திச் சகநிறைந்தார்
தங்கச் சினகர நேயர் தனயன் றனக்கினிதாந்
தங்கச் சினகர நீள்செந்தி னாட்டிற் றனகரிதந்
தங்கச் சினகர நற்கன னென்னங்க டையலர்க்கே. (உஉ)

அலரி னனந்தலை யாழிகண் டாங்குச் சிகியினிடை
யலரி னனந்த நிகரயி லான்செந்தி லாயிழையை
யலரி னனந்த நினைநிலந் தேர்ந்ததற் கன்றயலா
ரலரி னனந்தஞ் சொலற்கிட னைநெஞ் சழிகின்றதே. (உங)

---

(உக) சந்தத் தனத்திகள் - சந்தனமணிந்த கொங்கையுடைய பெண்கள். திறத்து - காரணத்தால் (ஆகும்). தலம் - பூமி. சந்தம் - நிறம். நசை - ஆசை. தீர் - நீக்கியருளுவாய். அடியன் - தொண்டராகிய சுந்தரமூர்த்திநாயனார் - இல்-மனைவியாகிய பரவைநாச்சியார். இல் - வீட்டில். சந்து - தூதையுடைய. அத்திஅதள் - யானைத்தோல் - தனய - புத்திரனே. தடக்கயல் - வாவியிலுள்ள கெண்டைமீன்கள். கஞ்சம் - தாமரையில். தத்த - தாவ. நத்தினம் - சங்கத்தின் கூட்டங்கள் - கீழ் இழி - (அப்பூவைவிட்டுக்) கீழேயிறங்குகின்ற. தங்கினற்கு - வந்திருந்த அடியேனுக்கு.

(உஉ) அச்சின் - உயிரெழுத்துகளுக்குள்ளே. அகரம் நேரா - அகரவெழுத்தொப்பாக. கச்சிநகரம் - காஞ்சிபுரம். தனயர் - புத்திரன். சினகரம் - ஆலயம். செந்தில் நாட்டில். பாண்டிநாட்டிலே. தன கரி தந்தம் - முலையாகிய யானைக் கொம்பு. கச்சில் நகா - கச்சைவிட்டெப்பிதுங்க. நற்கனம் - நல்ல பாரம். என்-யாதுகாரணத்தாலுண்டாகியது. (பாங்கியேகீசொல்). [செவிலித்தாய் தலைவியினது முலையிறுமாப்பைக்கண்டு சந்தேசமுற்றுப் பாங்கியை வினவுதல்]. எல்லாவெழுத்துக்களும் வாய்திறப்பினொலிவேறுபாடுகளாலாதலால் அவ்வாய் திறப்பேவடிவாகிய அகரம் எல்லாவெழுத்துக்களிலுங்கலந்து நிற்பதுகாண்க.

(உங) அலரி - சூரியன். நனந்தலை - நடுவிடம் - ஆழி - கடல். கண்டாங்கு - தோன்றினாற் போல. சிகி - மயில். அலர் - விளங்குகின்ற. இனன்-தலைவனாகிய(முருகக்கடவுள்). அந்தம்-அழகிய. நிகர்-பேரொளியுடைய. ஐ-ஐந்து. அலர் - புட்பபாணங்களின். இனல்-துன்பம் - நந்த - கெட. நிலம் - (இந்) நாட்டில். தேர்ந்ததற்கு - தெளிந்து தேடியதற்கு. அயலார் - பக்கத்திலுள்ளவர் - அலரின் - பழிமொழிகளில் - அனந்தம்,—இடனை - இடமாக. ஆழி நனந்தலையெனக் கூட்டுக.

தேயத் தியங்கி யலகி றலங்களிற் சென்றடிக
டேயத் தியங்கி யலைய றிடங்கதி சேர்தலறைந்
தேயத் தியங்கின நித்திலந் தானெறி செந்திலடைந்
தேயத் தியங்கி தரித்தான் றனயற் றெரிசிக்கினே. (உச)

சிக்கத் தனங்க டிறக்கின்ற கன்னியர் சிந்தைகணே
சிக்கத் தனங்க ளளித்தழிந் தேற்கெழிற் செந்திறரி
சிக்கத் தனங்க ழுலையேத்த நல்கினன் சீர்நிறைகா
சிக்கத்த னங்க ளகிலேசன் றந்த திறற்கந்தனே. (உரு)

கந்தரங் கானந் தனிற்சென் றடங்கிலென் காசிக்கநே
கந்தரங் கானந்த நண்ணிலென் கன்னியர் கட்டளக
கந்தரங் கானந்த நின்ற டெழிற்செந்தில் கண்டிறைஞ்சிக்
கந்தரங் கானந்த நல்கச் சனனங் கடந்திலரே. (உசு)

கடனந்தி னுகத் ததளாடை யாயெனைக் காக்கனிற்கே
கடனந்தி நாணிறத் தாயென நாரணன் கண்டிறைஞ்செங்
கடனந்தி நாதன் றனயனற் செந்திலிற் காரிகையே
கடனந்தி னுயகங் காதலர் தேரிற் கலிக்கின்றதே. (உஎ)

---

(உச) தேயத்து - தேசங்களில் - இயங்கி - சஞ்சரித்து. அலகு - எண். தலம் - க்ஷேத்திரம். தியங்கி - மயங்கி - அலையல் - அலையாதே (மனமே). அறைந்து - முழங்கி. அத்தி - கடல். அங்கு,— இன நித்திலம் - கூட்டமாகிய முத்துக்களை. எய் - பொருந்திய. அத்தி - எலும்பு - அங்கி - அக்கினி. தனயன் - புத்திரனுகிய குமாரக்கடவுளை. மூன்ருவது - அடிமுதலிலிருக்கிற ஏ - அசை.

(உரு) சிக்க - (கண்டவர்கள்) வசப்பட. அழிந்தேற்கு - கெட்டஎனக்கு. தன் - தன்னுடைய. நல்கினன் - அருள்செய்தான் - அகிலேசன் விசுவேசன்.

(உசு) கந்தரம் - மலைக்குகை. அடங்கிலென் - ஐம்புலன்களை யொடுக்கியிருந்ததனுற் பயன் யாது. கால்,— நந்த - வருந்த. அளககந்தரம் - கூந்தலாகிய மேகம். கான் - வாசனை. நந்த - மிக.

(உஎ) கடம் - மதம். நந்து - கெடுதல் இல் - இல்லாத. நாகத்து - யானையின். அதள் - தோல். காக்கல் - காத்தல். கடன் - முறை. அந்தி - செவ்வானம் - நாண் - வெட்கப்படுகிற. நிறத்தாய் - செந்நிறமுடையவனே. தன் - சாரியை. நந்திநாதன் - நந்தியென்னும் பெயருடைய சிவபிரான். கடல் - சமுத்திரத்திற்றேன்றிய. நந்தின் நாயகம் - சங்குகளுக்குத்தலைமையாகிய வலம்புரி. கலிக்கின்றது - முழங்குகின்றது. [பாங்கிவலம் புரி கேட்டுத் தலைவன் வரவைத்தலைவிக்கறிவுறுத்தல்].

கணக்காக நாய்கடின் காய நிலையெனக் கண்ணியென்ன
கணக்காக நானலைந் தெய்த்தே னெழிற்செந்திற் கந்தநெற்றிக்
கணக்காக னூர்தந்த நின்றனை யேயினிக் காதலினாற்
கணக்காக னுநிகர்த் தேயழி யங்கத்தின் காதலற்றே. (உ அ)

காதலை யானின் றனக்காக் கினனினிக் காயந்தந்தே
காதலை யானின் றனக்கா ரணனடிக் கஞ்சங்கணீங்
காதலை யானின்ற கங்கரைந் தேத்தரன் கண்ணியராக்
காதலை யானின்ற சங்கரன் சேய்செந்திற் காங்கெயனே. (உகூ)

காயங் கலைய நலியந் தகனனை காலஞ்செய்ய
காயங் கலையத ளானில நீரழல் காற்றெழிலா
காயங் கலைய னலரிசித் தாயினன் காதலழ
காயங் கலைய திருஞ்செந்தி லாயென்க கன்றனெஞ்சே. (ஙம)

---

(உமஅ) கணம் - கூட்டமாகிய. கண்ணி - கருதி. கணக்காக - (தாற்பரியம்) பிரயோசனத்தின் பொருட்டு. அக்கு ஆகனூர் - சங்குமணியைத்திருமேனியிற்றரித்தவர். கண - நினைக்கும்படி. கா - காப்பாய். கண - இடைக்குறை.

(உமகூ) காதலை - ஆசையை. காயம் - சரீரம். தந்து. சிருட்டித்து. காதல் - கொல்லாதே. ஐயான் - சூக்குமசொரூபி. இன் - இனிய. தனக்காரணன்-(திருவருட்) செல்வத்துக்குக் காரணமானவன். அலையான் - திருப்பாற்கடலிலுள்ள விஷ்ணு. நின்று,— கண்ணி அரா - மாலையாகியபாம்பு. சாலு - சாதில் - அலையாநின்ற - அசைகின்ற.

(ஙம) காயம் - சரீரம். கலைய - கெட. நலி - வருத்துகின்ற. செய்யகாயம் - சிவந்ததழும்பு (சாக்கியநாயனூர் கலலாலெறிந்தபுண்). கலை அதள் - கலைமான்றோல். கலையன் - கலைநிறைந்த சந்திரன். அலரி - சூரியன். சித்து- ஆன்மா. ஆயினன்-ஆனசிவபிரானுடைய. காதல்-புத்திரனுகிய முருகக்கடவுளினது. அழகு,— ஆய்-ஆராய்வாய். என் - என்றுசொல்லுவாய். கன்றல் - வருந்தாதே. அழகாய்தல் - திருவுருவத்தைத்தியானித்தல.

திருச்செந்தி லந்தாதி முற்றிற்று.



இவ்வரும்பதவுரை எழுதினவர்

☞ மு. ரா. அருணசலக்கவிராயர்,

மதுரைத் தமிழ்ச்சங்கவித்துவான்.

௧.

குமரன்றுணை.

# திருச்செந்தில் நிரோட்டக யமகவந்தாதி யருளிச்செய்த

# சிவப்பிரகாச சுவாமிகள் சரித்திரம்.

இவர் சற்றேறக்குறைய முன்னூறு வருடங்களுக்குமுன் குமார சுவாமி தேசிகரருந்தவப்பேற்று லவதரித்துச் சிவப்பிரகாச ரென்னுந் திருநாமம்பெற்று வளர்ந்து, "இளமையிற்கல்" லென்ற தெய்வத் தமிழரசி திருவாக்குக்கேற்பச் சிறுபிராயத்திலே செந்தமிழிலக்கிய நூலாராய்ச்சியிற் றிறமையுற்றுத் தித்திக்குந்தேனுந் தெள்ளமுதும்போலச் சிலேடை, கற்பனை, திரிபு, யமக முதலிய சிறந்த நயங்களெல்லா மமையுஞ் செய்யுள்பாடுந் திறமை மிக்காராய் நல்லொழுக்கத்திலே பழகி, எல்லாருஞ் சிவப்பிரகாச சுவாமிகளெனக் கொண்டாடப் பெற்றுத் * துறைமங்கலத்தில் வாழ்ந்திருந்தனர்.

அக்காலத்தில் துறைமங்கலங் கிராமாதிபதியாயிருந்த அண்ணாமலை ரெட்டியார் சிவப்பிரகாசசுவாமிக ளருமை பெருமைக ளெல்லாவற்றையுந் தெரிந்து அவரிடத்திலே யணுக்கத் தொண்டராய்ச் சன்மார்க்கங்களை விசாரித்தறிந்து வேண்டிய வுதவிசெய்து வந்தனர். அவ்வுதவிகளைப்பெற்று மிகமகிழ்ந்திருக்குஞ் சிவப்பிரகாச சுவாமிகள் செந்தமிழிலக்கண நூலிற் சிறந்த நூல்களையெல்லாந்தெரிந்துகொள்ள வேண்டுமென்று சிந்தித்துத் தமது அபிப்பிராயத்தை ரெட்டியாருக்குச்சொல்லி அவர்கொடுத்துதவிய திரவியத்தைப் பெற்றுக்கொண்டு தமது சகோதரரிருவருடன் பாண்டிநாட்டையடைந்து திருநெல்வேலியில் தாம்பிரபருணி நதித்துறைகளிலொன்றாகிய சிந்துபூந்துறையைச் சார்ந்து ஸ்நானஞ்செய்து நித்தியகன்மானுட்டான முடித்துக்கொண்டு வந்து அவ்விடத்திலிருக்கின்ற தருமபுராதீன மடாலயத்தில் வீற்றிருக்கும் வெள்ளியம்பலவாண தம்பிரான் மூர்த்திகளைத் தரிசித்துத் தாமெண்ணிவந்த காரியத்தை விண்ணப்பஞ்செய்தனர்.

---

* துறைமங்கலம் வாலிகண்டபுரத்துக்குத் தென்பாகத்திலுள்ளது.

அத்தம்பிரான் மூர்த்திகள் அதுகேட்டு மகிழ்ந்து இலக்கியப் பயிற்சியைச் சோதிக்கும்பொருட்டு முதலிலும் ஈற்றிலும் கு. எனபது வர இடையிலே ஊருடையா னென்பதை வைத்து ஒரு வெண்பாப் பாடுகென்று கட்டளையிட்டனர். அவர் ஆஞ்ஞைப்படி சிவப்பிர காச சுவாமிகள்

குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைதோன் மேற்கொள்ள
லூருடையா னென்னு முலகு.

என்னும்வெண்பாவைப்பாடியருளினர். அப்பாடலைக்கேட்டதம்பிரான் மூர்த்திகள் ஆனந்த பரவசமடைந்து "சூரியனுடனே கொடுத்தும்பழகுக" என்பதற்கு இலக்கியமாகிய சிவப்பிரகாச சுவாமிகளை மகிழ்ந்து அவருக்கும் அவர் சகோதர ரிருவருக்கும் பதினைந்து நாளுக்குள்ளே பஞ்சலக்ஷணங்களையும் பாடஞ்சொல்லி யருளினர். இங்ஙனம் போதனா சத்தியிற் சிறந்த ஆசிரியராகிய வெள்ளியம்பலவாண தம்பிரான் மூர்த்திகளை வியந்து சிவப்பிரகாச சுவாமிகள் பத்திபண்ணிக் குருதக்ஷிணையாக முந்நூறு பொன்னை வைத்து உபசரித்து வணங்க, அம்மூர்த்திகள் இத்திரவியம் எமக்குப் பெரிதன்று. உமதன்பே போதும்., ஆயினும் நீர் செய்யவேண்டுவ தொன்று; அஃதாவது: திருச்செந்தூரிலே வித்தியா கருவமுடையவ னொருவனிருக்கிறான் அவனை விவாதத்தால் வென்று நமக்கடிமையாக்குவதே யென்றருளிச்செய்தனர்.

சிவப்பிரகாச சுவாமிகள் அதுகேட்டு நமது திருவருள் வலிமையால் அங்ஙனஞ் செய்வேனென்று விடைபெற்றுத் திருச்செந்தூரை யடைந்து முருகக் கடவுளைத் தரிசனஞ்செய்து தமதெண்ண நிறைவேற்றி யருளவேண்டுமென்று பிரார்த்தித்துப் பின்னர் வித்தியாகருவப் புலவரைக்கண்டு பேசும்போது தம தாசிரியராகிய தம்பிரான் மூர்த்திகளைப் புலவர் தூஷித்தனர். அது பொறுக்கமாட்டாத சிவப்பிரகாசசுவாமிகள் அவரோடு விவாதஞ்செய்து சபையார் முன்னர் நமது குமாரக்கடவுள் மீது † நிரோட்டகயமகமாக அந்தாதிக் கலித்துறை முப்பது பாடல் முந்திப்பாடி முடித்தவருக்குப் பிந்தியுள்ளார் அடிமையாகவேண்டுமென்று வாக்குத்தத்தஞ்செய்து திருவருளால் இந்நூலா

† நிரோட்டம்-இதழொடிசழ் சோமற் பாடுவது.

கிய திருச்செந்தி னிரோட்டக யமகவந்தாதியைப் பாடி முடித்தனர். ஒரு பாட்டேனும் பாட முடியாமலிருந்த புலவர் அம்முப்பது பாடலை யுங் கேட்டு மகிழ்ந்து தாமே அவை யார் சொல்லுதற்கு முன்னரே சுவாமிகளுக்கு நான் அடிமையாயினே னென்றனர்.

உடனே சிவப்பிரகாச சுவாமிகள் தம தடிமையாகிய புலவரைச் சிந்துபூந்துறைக்கு அழைத்துவந்து தமது போதகாசிரியராகிய வெள் ளியம்பலவாண தம்பிரான் மூர்த்திகளுக்கு அடிமையாக்கி மகிழ்வித்து அம்மூர்த்திகளிடம்விடைபெற்றுக்கொண்டு மீண்டுவந்து அவரதாஆஞ் ஞையின்படி சிதம்பரத்திலே சிலகாலம் வசித்திருந்தனர். இவர்பாடிய நூல்கள் சீகாளத்திப் புராணம், பிரபுலிங்க லீலை முதலியனவைகளாம். அவைகளின் பெயர்களைச் சிவப்பிரகாச சுவாமிகள் பிரபந்தத்திரட்டு என்னும் நூலிலே கண்டுணர்க. அந்நூலிலே இவர் சரித்திரம் முழு தும் விடாமல் விரித்தெழுதி யிருத்தலா லிங்கே வேண்டியமட்டிற் சுருக்கிக் கூறியுள்ளேன். சுபம்! சுபம்! சுபம்.

---

இங்ஙனம்,

☞ மு. ரா. அருணாசலக்கவிராயர்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்.

உ

குமரன்றுணை.

திருவாவடுதுறை ஆதீனம்

# சுவாமிநாத தேசிக ரருளிச்செய்த

திருச்சேந்திற் கலம்பகப்

# பாயிரம்.



மதிக்கும் பரிதிக் கடவுளுக்கும் வழங்கும் விழியா னருண்மதலைக்
கிதக்கும் படக்குங் கலம்பகப்பா விசைக்குந் தமிழா லினிதிசைத்தான்
புதுக்குந் தமிழ்த்தென் கடல்கடக்கப் பொருத்துந் தோணி போலியல்
துதிக்குந் தமிழார் துறைசைநகர்ச் சுவாமி நாத தேசிகனே. [செய்

உ

குமரன்றுணை.

திருவாவடுதுறை ஆதீனம்

## சுவாமிநாத தேசிக ரருளிச்செய்த

# திருச்செந்திற்கலம்பகம்

### விநாயக வணக்கம்.

நிலம்பக வீழ்சடை நீறணி வான்மைந்த னீடயிலோன்
கலம்பகஞ் செந்தமிழ்ப் பாமாலை யாற்செந்திற் கண்மருவு
சிலம்பக மெல்லடி வல்லபை கேள்வனைத் திங்கள்வெண்கோட்
டிலம்பக யானை முகத்தானை வாழ்த்தி யியம்புவனே.

### நூல்.

மயங்கிசைக் கோச்சகக் கலிப்பா.

நாலடித்தரவு—உ.

சொல்வாய்மை தருங்கடவுட் சுருதிகரு தியபொருளைப்
பல்சான்ற பெருங்கேள்விப் பனிமலய முனிவினவ
வம்புபனு மறியாது வறமுதலாந் தமிழ்மூன்றுஞ்
சம்புவுமன் றடனுணரத் தருவோய்நீ முருகோனே

கண்சுருங்க விரித்தபசுங் கலவமயி லெனத்திருமுன்
மண்சுருங்க விரித்தகுணா மணியாழி யெழுபரித்தே
ரந்தினக ரணைத்தடுக்கு மணிமணிமா ளிகைப்புரிசைச்
செந்தினகர்ச் சினகரத்துத் திருத்தகவீற் றிருந்தனையால்.

ஈரடித்தாழிசை—சு.

ஊனாகி யுயிராகி யுணர்வாகி யுணர்வுதவுங்
கோனாகி வினையளவுங் குணத்தளவுந் தனக்களவாய்

---

[அரும்பதவுரை.]

பக-பிளக்க. சிலம்பு-பாதசரம். அகம்-உள்ளிடத்தில். மெல்-மிருதுத்தன்மையுடைய. கேள்வன்-கணவன். இலம்பகம்-நெற்றிப்பட்டம்.

விரவாதி யந்தமிலா வெளியாகித் தெளியாது
பரவாதி யருமூலவாப் பாமறையுந் தாமறைய
வாக்குமன முங்கடந்து மண்ணொடுவிண் ணிடத்தியற்றும்
போக்குவர வொழிந்துவிழிப் புலத்துருவு மருவமுமாய்
வேதாந்தஞ் சித்தாந்தம் விளங்குகலாந் தந்தெளிந்த
போதாந்த நாதாந்தப் புறத்தினுமப் புறம்போகி
யுணர்ந்தாரு முணராரு முணராம லுயிர்க்குயிராய்ப்
புணர்ந்தாலு மாறுறூ புலனலமுங் கலவாது
நின்றதனிப் பரம்பொருளா நினக்கொருபே ரிலையெனினு
மின்றுகுக னெனப்பெறுவ தினையோய்நின் விளையாட்டே.

ஓரடி அராகம்—௪.

அருமறை முறையிட வறைகழல் பறையிட வடியரு ணினைவ துன்னடி
யொருமையி னிருமையு முதவிய மதியென வொளியொடு குளிர்வ துன்முகம்
வருமுலை வனிதைய ரிருவரு மயிலின மழையென விழைவ துன்னெழில்
பெருகலை செழுகலி கடலினு மெழுமடி பெருகுவ துருகு நின்னருள்.

பெயர்த்தும் ஈரடித்தாழிசை—௫.

தாயென்றுந் தந்தையென்றுஞ் சகமீன்று தருமுனக்குச்
சேயென்று பின்னுமொரு திருநாமம் வருமாறென்?
முந்திலென்றே யடியருள முளரிதொறு மிருந்தாய்க்குச்
செந்திலென்றே யுரைக்குமொரு திருப்பதியும் விருப்புளதே!
மயிலேற்று வருங்கால மல்லானீ கொல்லாயோ
மயிலேற்ற மேனுனக்கு மற்றேற்றம் பெற்றிலையோ?
வோராறு பனிமதியி னொடுபவள வரையினிரைத்
தீராறு தினகரரு மிடையிடையே யுதித்தாங்குக்
கருணைபொழி திருமுகமுங் கணமணிக்குண் டலநிரையுந்
திருநெடுந்தோள் களுங்கமலச் சேவடியுந் தூவடிவும்
பாடாது நினையாது பரவாத வெனக்குவினை
கூடாத தொண்டரொடுங் கூட்டியுநீ காட்டினையால்.

நாற்சீரடி அம்போதரங்கம்—௨.

பிறந்ததும் பிறந்ததும் பெருமநின்புகழ்
மறந்தது மல்லது வணங்கி லேனினைக்
காமமும் வெகுளியுங் கனிமயக்கமுந்
தாமிடை கலந்தெனைத் தலைமயக்கலால்.

நாற்சீரடி அம்போதரங்கம்—௪.

உண்பது முடிப்பது முவந்து தேடினேன்
கண்படை நனவினிற் கலங்கி வாடினே
னுய்திற மிதுவென வுணர்வு போயினேன்
செய்திற மிதுவெனுந் தெரிவில் பேயினேன்.

முச்சீரடி அம்போதரங்கம்—௪.

எவ்வா றெனையுய் யக்கொள்வா
யெழுதா மறையின் றிறத்துள்ளாய்
செவ்வா னனையான் றிருப்பிள்ளாய்
தெரியா தினியுன் செயல்வில்லாய்.

இருசீரடி அம்போதரங்கம்—அ.

மெய்யுநீஇ பொய்யுநீஇ விண்ணுநீஇ மண்ணுநீஇ
மையைநீஇ செய்யைநீஇ யாதிநீஇ சோதிநீஇ.

தனிச்சொல்.

என வாங்கு.

ஆறடிநேரிசையாசிரியப்பா—சுரிதகம்.

நீயல தில்லை யாவையு முலக
மற்றவற் றிடையா னவத்துடற் பொறையொடு
கறங்கெனத் திரியாது பிறங்குசுற வெறியு
நந்தூர் கடற்றுறைச் செந்தூர் பரவுவன்
காமரு பூந்தொடைக் கடம்பநின்
றாமரை மலரடி தருகமா வெனவே. (க)

---

நூல்.

(க) கடவுள்-தெய்வத்தன்மை. சான்ற-உயர்ந்த. கேள்வி - கல்வியறிவு. அறமுதலாந்தமிழ் மூன்று-தருமநூல், பொருள்நூல், இன்பநூல். கலவம்-மயிற்றோகை. ஆழி-கடலில். தினகரனை-சூரியனை. புரிசை-கோட்டை. விரவு-கலந்துநிற்கின்ற. பரவாதியர்-அன்னியசமயவாதிகள். உலவா-கெடாத. பாமறை விரிந்த வேதம். தாம் அறைய-தாமேமுழங்காநிற்ப. விழிப்புலத்து-கட்புலனுக்கு. கலாந்தம்-சாத்திரமுடிவு. ஆறாறுபுலன்-முப்பத்தாறு தத்துவம். பறையிட-முழங்க. ஒருமையின் - ஒற்றுமையோடு. மழையென - மேகத்தை விரும்பினாற்போல. கலி-ஒலிக்கின்ற. எழுமடி-எழுபங்கு. முந்துஇல்-முதன்மையானவீடு. இருந்தாய்க்கு-இருந்தவுனக்கு. ஏற்றம்-உயர்ச்சி. நிரை-வரிசை. தூ-பரிசுத்தம். காட்டினை-(அத்தொண்டாது நிலைமையினைக்) காண்பித்தாய். தலைமயக்கல் - தடுமாற்றஞ்செய்தல். கண்படை-நித்திரை. கனவு - சாக்கிரம். பிள்ளாய்-பிள்ளையே. கறங்கு-காற்றாடி. சுறவு-சுறாமீன். மா-அசை.

வெண்பா.

¶ எனதே குகன்செந்தி லேத்துதொழி லன்னோன்
றனதே யெனையாளுந் தன்மை—வினவின்
மறத்திமண் ணாள்புமுதல் வாழ்வையெலா நெஞ்சே
குறத்திமணா ளன்புகழே கொள். (உ)

கலித்துறை.

¶ கொள்ளார் பவப்பிணி கூற்றுக்கஞ் சாரன்பர் கூட்டமல்லா
னள்ளார் பிணியி னலிவு படார்தெய்வ நாளுமற்றோன்
றுள்ளார் முருகன்செந் தூர்பிரி யாதவ ரெண்கமலக்
கள்ளார் விரைமலர்த் தண்டையந் தாடொழக் கற்றவரே. (௩)

ஆசிரியவிருத்தம்.

¶ கற்றாலு நீடூழி கழித்தாலுங் கழியாத கரையில் வாழ்வு
பெற்றாலு முருகனடிக் கன்புபெறா தவருலகிற் பிறவி தீரா
ரிற்றாலுங் கலிநலிய விரந்தாலும் பேதையரா யெழுத்தா றுள்ளத்
தற்றாலு மவனிருக்குஞ் செந்திலென்றார் முந்திலென்று மடைவர் தாமே.(௪)

ஆசிரியப்பா.

தாமரை பயின்ற நான்முகக் கடவு
ளெழுதா மறைப்பொருட் பழுதாங் குரைப்ப
வீங்குமணிக் கடகந் தாங்குதிணி தடக்கை
முன்வருத் தியவா றின்னமும் வருத்த
விரும்பிய தாலெனத் திரும்பிட நஞ்சேய்
பாயிருள் பருகும் பல்கதிர்க் குழவி
ஞாயிறுசுற வெறி நாண்முரி திரைமுகட்
டெழுவது போல மழைதழை கலாபச்
செறிமயிர்ச் சிறையார் பொறிமயிற் புறத்துச்
சேயொளிமேனி திகழவீங் கெழுந்தனை
தெய்வவான் கரிணியு மொய்வரை யரிணியுந்
தாவலங் கபிலுஞ் சேவலங் கொடியு
மாறு முகமு நீறணி புயங்களும்

---

(உ) மறத்தி-மறப்பாய். மண்ஆள்-பூமியையாளுகின்ற.

(௩) நள்ளார்-சிநேகியார். நலிவு-வருத்தம். விரை-மணம்.

(௪) கரை-அளவு. இற்றாலும்-கெட்டாலும். கலி-வறுமை. இரந்தாலும்-யாசித்தாலும். எழுத்தாறு-சடாக்ஷரமந்திரம். முந்தில்-முதலாகிய மோக்ஷவீடு.

பண்டைய மறைபுகழ் தண்டையந் தாள்களுங்
கந்தநின் றுமைமுஞ் செந்திலம் பதியும்
வணங்கவு நினைக்கவும் வாழ்த்தவு
மிணங்கலிற் பரவினே னெனைவிதித் ததற்கே. (ரு)

வெண்பா.

அதற்கிதற் கென்றுள் ளவம்போக்கி யாக்க
முதற்பொருட்கு மின்றி முயன்று—நுதற்கணவன்
சந்ததியா னஞ் செய்யான் றானுவந்து செந்தினகர்
வந்ததியா னஞ்செய்யா மல். (சு)

புயவகுப்பு-ஆசிரிய வண்ண விருத்தம்.

¶ மலர்தலை ஞாலத் தலகில வாமுற் றுயிர்களு முந்திக் கண்பண்டு தந்தன, மறைபகர் வாய்மைத் திசைமுக னோவுற் றிடுமுறைதண்டித் தன்றங்கை கன்றின, மகபதி வானத் தரசுவ மூமற் றிருமுடி யன் பிற் கொண்டும்பு னேந்தன, வழிபடு கீரற் கழிசிறை தீரப் பரிவொடு முந்திச் சென்றஞ்ச லென்றன, குலமட மான் மெய்ப் புதல்வியும் யானைக் குமரியு மொன்றுறத் தின்பங்க வர்ந்தன, குழையுமென் வாய் மைத் தமிழுந னீபத் தொடையலு மொண்பொற் சந்துந்த வழ்ந் தன, குரைகழ லுடித் தொழுநெறி சேர்கொத் தடியவர் தங்கட் டுன் பங்க ளேந்தன, குவிமுகை வேலைக் கவிழிணர் மாவைத் தடி தலு மன்றிக் குன்றும்பி ளந்தன, வுலகுண ராமுத் தமிழுணர் நீதிக் குறுமுனி வந்தித் தென்றும்பு கழ்ந்தன, வுலைமலி வாகைத் திருநெடு

---

(ரு) கடகம் - கங்கணம். திணி-பலம். திரும்பிட-அசைய. ஏய்-ஒத்த. பருகும்-கெடுக்கும். குழவிஞாயிறு-இளஞ்சூரியன். எறி-வீசுகின்ற. முரி-வளை வரகிய. மழை-குளிர்ச்சி. கலாபம்-தோகை. செறி-நெருங்கிய. பொறி-புள்ளி. புறத்து-முதுகில். கரிணி - பெண்யானை. அரிணி - மான்பெற்றவள்ளிநாயகி. தூ-ஊன். அலங்கு-விளங்குகின்ற. இணங்கலின்-இணக்கத்தோடு. விதித் ததற்கு-சிருட்டித்ததனுல்.

(சு) அதற்கு-அக்காரியத்தின்பொருட்டு. உள்-மனத்தை. அவம்-வீணு க. ஆக்கம் - இலாபங்கருதி. முதற்பொருட்கும் - முதற்பொருளிருத்தற்கும். இன்றி(இடம்) இல்லாமல். முயன்றும். 'முயற்சித்தலைந்தோம்., அஃதாவது: "ஆக்கங்கருதி முதலிழக்குஞ் செய்வினை" என்றபடி, இருக்கிறமனத்தையு மிழந்திருத்தல். நுதற்கண் அவன் - நெற்றிக்கண்ணுடைய அச்சிவபிரான [illegible] சந்ததியான்-புத்திரனையுள்ளவர். அம்-அழகிய. செய்யான் - [illegible] வர். வந்தது-வந்திருந்தது. தியானஞ்செய்யாமல் (இன்னதற்கென்று) ஆராய் ந்து நினையாமல்-வந்ததென்பது, ஈறுகெட்டு வந்தென நின்றது.

வேலிற் கிரமவி தங்கட் கங்கங்கி லையந்தன, வுமைமுலை பீர்விட் டொ கிய பாலுக் கழுதுயர் பொன்றக் கொண்டங்க ணுந்தின, வுருகெழு கோலத் திருமுது சூரைக் கிளையொடு மஞ்சக் கொன்றங்கண் வென் றன, கலவம யூரத் துரகத மேறிப் புவனியு மெண்டிக் கெங்குந்தி ரிந்தன, ககனவ ளாகத் தளவிய கோழிக் கொடிவளர் கம்பத் தம்பம் பொ ருந்தின, கலைமதி போலத் திருமுக நீள்கட் கடையருள் பொங் கிச் சிந்துந்தி பம்பின, கடலலை வாய்முத் தினவலைவீசிக் கரைபொரு செந்திற் கந்தன்பு யங்களே. (எ)

கலித்துறை.

புயமா றிரண்டுக்கும் பொன்னணி யாம்புள்ளி மான்மகட்குங்
கயமான் மகளுக்குங் கண்ணிணை யாங்கடுங் கூற்றுவந்தா
னயமாய தொண்டர்க்கு நற்றுணை யாஞ்செந்தி னன்னகர்மே
வியமான் மருகன் றிருக்கரத் தேந்திய வேற்படையே. (அ)

கலிவிருத்தம்.

படைக்கணார் மையனேய்ப் படுவ தல்லது
கடைக்கணான் பரகதி காணு மாறுண்டோ
வுடைக்கண திபன்றனக் கிளஞ்செந் தூர்த்தமிழ்த்
தொடைக்கணன் றுயர்புயத் தோகை பாகனே. (கூ)

---

(எ) உந்தி-செலுத்தி; படைத்து. பண்டு-முற்காலம். கண் தந்தன-சித் திரைசெய்தன; இளைப்பாறியிருந்தன. முறை-விதம். அங்கு-அவ்விடத்து. ஐ-அழகு. கன்றின-வாடின. மகபதி-இந்திரன். அழி-கெடுதற்கேதுவாகிய. ஒன் றுஒத்து-நேர்சமமாக. கவர்ந்தன-கிரகிக்கப்பட்டன. நீபத்தொடை-கடம்பமா லை. கொத்தடியவர்-குலமுழுதுமடிமையாகவுடையார். முகை-அரும்பு. வேலை-கடலில். கவிழ்-தலைகீழாய்நின்ற. இணர்-பூங்கொத்து. மாவை-சூரனாகிய மாம ரத்தை. வாகை-வெற்றி. விதம்-வகை. உந்தின-செலுத்தப்பட்டன. உரு-அச்சம். கெழு-பொருந்திய. மயூரத்துரகதம்-மயிலாகிய குதிரை. ககனம்-ஆகா யம். வளாகம்-இடம். தம்பம்-தூணகை. உந்தி-காட்டாறு. பம்பின-நெருங்கப் பட்டன.

(அ) கயமான்-வெள்ளையானை.

(கூ) படை-ஆயுதம்போலும். கணார்-கண்களையுடைய பெண்கள். கடைக்கண் - இறுதிக்காலத்தில். நான்,—உடை-உடைய. கணதிபன்-விநாயகர். இளம்-இளையவனாகிய. தொடைகள்-மாலைகள். நான்று-தொங்கப்பட்டு. தோகைபாகன்-மயிலூர்தி. தொடைகளென்பது, எதுகைச்சிறப்புநோக்கித் தொடைக்கணென்றாயிற்று.

குறளடிவஞ்சிப்பா.

பாகந்தரு பனிவான்மதி
தாரகையொடு கார்முகிலிடைப்
பொருதெனவளை யுடனிலகிய
நவமணியுமிழ் கலிசெழுபுனற்
றிரைபொருமொலி முரசுடனதிர்
பைந்தமிழ்வளர் செந்திலின்வரு
சேயோன்
றிருந்தடி துணையெனச் சேர்பவர்
பொருந்துவர் யாரும் புகலரு நெறியே. (ய)

கலிப்பா.

¶ நெறிக்குஞ்சித் தலைமறலி நெருங்கியெதிர் வருங்காலஞ்
செறிக்குஞ்சித் திகடருநின் செந்திலுமென் புந்தியதே
பொறிக்குஞ்சித் திரத்தினுடுப் பொரியாகப் புகுந்து கொத்திக்
கொறிக்குஞ்சித் திரச்சரணப் படைச்சேவற் கொடியோனே. (யக)

வஞ்சோச்சி மருங்கணைதல்—ஆசிரியவிருத்தம்.

கொடியாநின் றிடைதேய்ந்து கொழுங்கலவைத் துணைமுலையுங் குழலுந் தாங்கி, யொடியாநின் றளதின்னு முமக்கு மிரங் காதவுள் ள முளவோ வண்டீர், வடியாநின் றிலங்கிலைவேல் வலனேந்தி செந்தி லரு மருந்தன் னுடன், முடியாநின் றளியெனுஞ்சொன் முடியாநின் றநுராக முயல்கின் றீரே. (யஉ)

---

(ய) பாகம்-பாதி. பனி-குளிர்ச்சி. தாரகை-நட்சத்திரங்கள். பொருதெனி-மோதினாற்போல. வளை-சங்கு. உமிழ்-தருகின்ற. கலி-ஓசை. செழு-பொருந்திய.

(யக) நெறி-நெறித்தல். குஞ்சி-குடுமி. செறிக்கும்-(அவனை) நெருக்கும். சித்தி-வலிமை. பொறிக்கும்-எழுதும். உடு-நட்சத்திரத்தை, கொறிக்கும்-கடித்துண்ணும். சரணப்படை-காலாயுதம். சேவல்-கோழி.

(யஉ) கொடியா-கொடிபோல. வடியா-கூர்மையாக. வலன்-வலதுதிருக்கரத்தில். ஏந்தி-தாங்கிய குமாரக்கடவுளது. முடியா-கூந்த (லிடத்) தாக. அளி-வண்டு (அன்பு). முடியாநின்று-நிலைநிறுத்தாமலிருந்து. அநுராகம்-காமவின்பம்.

வண்டுவிடுதூது—வெளி விருத்தம்.

ஈர நாண்முகை யிளமுலைப் பசப்பொழித் தளியீரே
சூர ஞள்விழித் துணையிணை கொள்வதற் களியீரே
நார நாளமென் னளினநீர்ச் செந்தில்புக் களியீரே
யார ஞள்வரு வேங்கையின் மலர்கொணர்ந் தளியீரே. (௰௩)

வஞ்சித்துறை.

¶ அளியாலுஞ் சோலை
யொளிசேர்வான் செந்தூர்
தெளிவாயா னெஞ்சே
யழியாவீ டுண்டே. (௰௪)

மேகவிடுதூது—கலித்துறை.

உண்டு வாரிதி பசுஞ்சிறைக் கிளிமயி லுருவாகி
யெண்டி சாமுகம் புதைத்தயி லெனமினி யிரைத்தீரேற்
கண்டு நானிரு கண்களு முள்ளமுங் களிகூரக்
கொண்டல் காளினிச் செந்தில்வாழ் குமரனைக் கொணர்வீரே.()

அம்மானை—மடக்குத்தாழிசை.

வீரனெடு வெள்வேல் வியன்செந்தி லெம்பெருமான்
பாரினுயி ரெல்லாம் படைத்தனன்கா ணம்மானை
பாரினுயி ரெல்லாம் படைத்தனனே யாமாகி
லாரணங்க ளன்கு மறிவனோ வம்மானை
யறிந்து சிறையயனுக் காக்கினன்கா ணம்மானை. (௰௬)

---

(௧௩) நாண்முகை-மலரும்பருவத்தரும்பு. அளியீரே-வண்டுகளே. சூர்-தெய்வப்பெண்ணை. அனள் - ஒத்ததலைவின். விழித்துணை- இரண்டுகண்களை. அளியீர்-அன்புடைய நீங்கள். இணைகொள்வதற்கு-ஒப்பாதற்பொருட்டு (ஆவது). நாரம்-(ஆகுபெயர்) குளிர்ச்சி நாளம்-தாமரைத்தண்டு. நளினம்-தாமரை ஆரல்நாள்-கார்த்திகை நட்சத்திரத்தில். வரு-பவனிவருகின்ற. வேங்கையின்-வேங்கைமரமாகிய குமாரக்கடவுள். மலர்-(ஆகுபெயர்) கடப்பமாலையை. அளியீர் அளியீர்-கொடுங்கள் கொடுங்கள். எனவே, மாலையைக்கொண்டு வந்து கொடுத்தால் தன் கண்களுக்கு உங்களை ஒப்பாகச்செய்வாளென்பதாம்.

(௧௪) ஆலும்-முழங்கும். ஒளி-புகழ்.

(௧௫) திசாமுகம்- திக்கினிடம். புதைத்து-மூடி. மினி - பிரகாசித்து இரைத்தீர்-முழங்கியவர்களே. எல்-அசை.

(௧௬) வியன்-பெருமை. ஆரணம்-வேதம். சிறை-சிறைச்சாலை.

இரங்கல்—வஞ்சிவிருத்தம்.

பான்மகள் காதலர் மஞ்சூருந்
தேன்மலி காவுயர் செந்தூரர்
கான் மண நாறு கடம்பேனும்
யான்மகிழ் கூர விரங்காரே. (மஎ)

ஒரோலி வெண்டுறை.

காரேய் நிறத்தறுகட் கறுவுடைக் கடுங்கூற்றங் கலந்த காலை
யாரே விலக்குவா ரந்தோ நமரங்கா ளறிதி ரன்றே
நீரே யுயப்போமா நின்று வலித்தீரேற்
கூரேய் வடிவேற் குமரன் குடநாட்டுச்
சீரேய் திருச்செந்தில் சென்று தொழுமினே. (மஅ)

வெண்பா.

தொழுதிரந்து வெம்பசியாற் சோர்ந்திடுவார் கைபார்த்
தழுதலமந் தேங்கி யலைவார்—முழுதும்
பெருகுகனை வாரிமணி பெய்திரைக்குஞ் செந்தில்
வருகுகனை வாழ்த்தாத வர். (மகூ)

கலிப்பா.

¶வரங்கொண்ட வுமைமுலைப்பான் மணங்கொண்ட செவ்வாயும்
பரங்கொண்ட களிமயிலும் பன்னிரண்டு கண்மலருஞ்
சிரங்கொண்ட மறையிறைஞ்சுஞ் சேவடியுஞ் செந்தூரன்
கரங்கொண்ட வேலுமென்றன் கண்ணைவிட்டு நீங்காவே. (உம)

பாங்கி—கலித்துறை.

நீங்காத நேயத்தி னீதைத்த தையலு நின்னையன்றிப்
பாங்காய பாண பிரிந்ததென் றூலுமை பாலன்செந்தில்

---

(கஎ) மஞ்சு-மேகங்கள். கடம்பு-கடப்பமாலை. இரங்கார்-இரக்கஞ்செய்துகொடார்.

(கஅ) ஏய்-ஒத்த. தறுகண்-அஞ்சாமை. நமரங்காள்-நம்மவர்களே. அறிதிர்-தெரிந்துகொள்ளுங்கள். உயப்போமா-பிழைக்கப்போகும்விதம். வலித்திரேல்-நினைந்தீரானால். குடநாடு-மேல்நாடு.

(கக) அலமந்து-சுழன்று. கனை - முழக்கத்தையுடைய. வாரி - கடல். இரைக்கும்-ஒலிக்கும்.

(உம) பரம்-மெய்.

யாங்கா ணலமெனி லெம்மை விளைவுதி யேதிலரைத்
தாங்காது நின்மதி துன்னூசி யின்றிறந் தான்பிழைத்தே. (உ௧)

ஆசிரியவண்ணவிருத்தம்.

பிழையாத தொண்டர் சிறிதேசெ யன்பு பெரிதாக நெஞ்ச மகிழ்வா
ருழையினு மெங்கள் குறமாது கொண்க ருமைபாலர் தங்கு மிடமாம்
புழைவாய் திறந்து வளைசூலு ளைந்து பொழியார மிந்து வெனவே
மழைபோன்முழங்கி யலையாழி சிந்து வளமேவு செந்தி னகரே. (உஉ)

தலைவிகூற்று—வெண்பா.

நகைமதிய மேவடவை நாப்போலிவ் வண்ணந்
தகைமதியா நின்று தழல்வா—யகமகிழ்ந்து
கற்பசலை தந்தார் கடற்செந்தில் வாயெமக்குப்
பொற்பசலை தந்தார்முன் போய். (உ௩)

கலித்துறை.

போய்வத னாரம்ப மாடார் திருச்செந்தில் புக்குறையார்
சேய்மலர்த் தாளிணை சிந்தைசெய் யார்திரு மான்மருகன்
காய்சின வேலு மயிலுமென் னார்கடல் சூழுலகிற்
பேயறி வாளரெவ் வாறுறப் பார்தம் பிறப்பினையே. (உ௪)

---

(உ௧) தைத்த-பொருத்தப்படுத்திய. தையலும்-பெண்ணாகிய பாத்தையும். பாண-பாணனே. பிரிந்ததென்றால்-(தலைவனைவிட்டுப்) பிரிந்தாளானால். செந்தில்-திருச்செந்தூரில் (காணலம்) (அத்தலைவனைப்) பார்க்கமாட்டோம். எனில்-ஆனால். விளைவுதி-(பொருத்தப்படுத்துமாறு) கேட்கின்றாய். நின்மதி-உன்னறிவு (உன்சொல்வழிநிற்பாரை). துன்னூசியின்றிறம்-தைத்தல்; அஃதாவது: பொருத்துப்படுத்துதல். பிழைத்து-செய்வதுதவறி. ஏதிலரை-அன்னியாரை. தாங்காது-செய்யாது. இது, தூதுவந்த பாணனுக்குத் தலைவியிணங்காமைகூறியது. இங்கே இசைபாடுகின்ற பாணனைச் சிலேடைவகையாற் தையற்பாணனாக்கிக் கூறியதுங் காண்க.

(உஉ) பிழையாத-குற்றஞ்செய்யாத. உழை-மான். கொண்கர்-கணவர். புழை-துவாரமாகிய. ஆரம்-முத்து.

(உ௩) நகை-பிரகாசம். வடவை - வடவாமுகாக்கினியின். நா-நாக்கை. தகை-தகுதியை. மதியா-மதியாமல். தழல்வாய்-சுடுவாய். கற்பு-கலங்காநிலையின். அசல்-உயர்ந்ததாகிய. ஐ-அழகை. பொற்பசலை - பொன்போலும் பசிய நிறம்.

(உ௪) வதனாரம்பம் - சந்நிதிமுன்னிருக்குந் தீர்த்தம்; அது: கடல். பேயறிவாளர்-மூடர்.

தலைவிநெஞ்சொடுகிளத்தல்—ஆசிரியத்தாழிசை.

பிறர்வாய் வசையடங்கப் பிஞ்ஞகன்சேய் திண்டோ
ணறவார் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
சிறைவான் புனற்செந்தில் சேருதுமா னெஞ்சே
குயில்வா யொலியடங்கக் கூத்தன்சேய் திண்டோ
ணயமாந் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செயிர்தீர் புனற்செந்தில் சேருதுமா னெஞ்சே
முந்நீ ரொலியடங்க முக்கணன்சேய் திண்டோ
ணன்னீர்த் துணர்க்கடம்பு நாம்பெறுதல் வேண்டிச்
செந்நீர் புனற்செந்தில் சேருதுமா னெஞ்சே. (உரு)

கைக்கிளை—மருட்பா.

நெஞ்சே நுதல்வியர்க்கு நீடுகுகன் செந்திலன்னாட்
கஞ்சேல் விழிக ளவையிமைக்கும்—பஞ்சே
ரடிநிலந் தோயு மதனாற்
கமழுங் குழலிவள் கடலிடத் தணங்கே. (உசா)

பாங்கிவேண்டல்—வெண்பா.

அணங்கா மிவளுக் கவிர்மதிய மொன்றோ
வணங்கா வருந்தென்ற லொன்று—வணங்கூ
ரிளமுருகா செந்தினக ரெந்தாய்வந் தாளா
யுளமுருகா வேயிசையு மொன்று. (உஎ)

தலைவியைவியத்தல்—கலித்துறை.

ஒன்றுடை யான்புலித் தோலுடை யான்மைந்த னேங்குபரங்
குன்றுடை யான்றிருச் செந்திலன் னார்குல வாழையிள
மென்றுடை யானடை யாலிடை யால்விழி வேற்கடையா
னின்றுடை யானிற்ப ராலெவ ரேனு நிலைகுலைந்தே. (உஅ)

---

(உரு) நறவு-தேன். துணர்-பூங்கொத்து. கடம்பு-கடப்பமாலை. சிறை-காவல். சேருதும்-சேர்வோம். கூத்தன்-சிவபிரான். செயிர்-குற்றம். நீர்-குணம். செம்-செம்மை.

(உசா) நுதல்வியர்க்கும் - நெற்றிவேர்க்கும். விழிகளவை-கண்களிரண்டும். கடலிடம்-பூலோகம்.

(உஎ) அணங்காம்-தெய்வப் பெண்ணாகும். அணங்கா-நோயாக. வணம்-(இடைக்குறை) அழகு. கூர்-மிகுந்த. ஆளாய்-ஆள்வாய். வேயிசை-மூங்கிற் குழலோசை.

(உஅ) ஒன்று-(அன்பரிடத்துப்) பொருந்துதல். அன்னார்-ஒத்தபெண்கள். குலம்-நன்மை. உடையாநிற்பர்-தளர்ந்துநிற்பர்.

### மதங்கியார்—கலித்தாழிசை.

குலைகுலுங்கு வாழையின் கோழிலைப் பசுங்கொடைக்
குளிர்நிழற்கண் ணிரவிதேர்க் குரகதங்க ளருவிபா
யலைகுலுங்கு நறவமுண் டயர்வுயிர்த்த காவுசூ
ழங்கணைந்தை செந்தில்பாடி யாடுமோ மதங்கியார்
முலைகுலுங்கு மாகின் மாரன் முடிகுலுங்கு மமுதவாய்
மொழிகுலுங்கு மாகிலாவி பழிகுலுங்கு மல்குலங்
கலைகுலுங்கு மாகிளுடு நிலைகுலுங்கு மாமுகக்
கஞ்சமுங் குலுங்குமாகி னெஞ்சமுங் குலுங்குமே. (உகூ)

### இரங்கல்—இன்னிசை வெண்பா.

குலுங்கு முலைமேற் குளிர்பசலை கண்ணீ
ரலங்கு மருநாணு மாய்வளையு நீங்கு
மிலங்கிலைவே லோனை யெறிகடற்செந் தூர்வாய்
வலங்கொளமுன் போமடவார் மாட்டு. (௬ய)

### சித்து—ஆசிரியவிருத்தம்.

மாட்டே மல்லேஞ் சித்துவித்தை மகனே செந்திற் குகன்பாணுங்
கேட்டே யறிந்த தூனக்குரைப்பக் கேளா யிதுபொ யல்லமெய்யே
வேட்டேம் பசியா லுண்ணவின்று விளங்குங் கஞ்சந் தனிலேபொன்
காட்டே மாகி னீபடைத்த கறியுஞ் சோறும் வேண்டாவே. (௬க)

### இரங்கல்—கலித்துறை.

வேண்டின ராறு லூனகு வேலர் வியன்செந்தி
லாண்டைகை யானர் மானனை யாரை யகல்வாரோ

---

(உக) குலுங்கு-அசைகின்ற. குரகதம்-குதிரை. அருவி-அருவிபோல. அயர்வுயிர்த்த-சிரமபரிகாரஞ்செய்த. அங்கண்-இழகியஅடத்தையுடைய. மதங்கி-புகழ்துபாடும்பெண். ஆவி-உயிருக்கு.

(௬ய) பசலை-பசந்தநிறம். அலங்கும்-விளங்கும். அருநாண்-அருமையானநாணம். வலங்கொள-பிரதக்ஷணஞ்செய்ய.

(௬க) மாட்டேம் அல்லேம்-(சொல்ல) மாட்டாதவரில்லை. மகனே-புத்திரனே. வேட்டேம்-விரும்பினேம். கஞ்சம்-வெண்கலம்(தாமரை). பொன்-தங்கம் (இலக்குமி). வேண்டா-வேண்டுதலில்லை. சித்தர்கள் மனிதரைமகனேயென்றழைப்பது பழையவழக்கு.

கூண்டடல் வில்லிட் டம்பு சொரிந்தே கொலைவேடம்
பூண்டு நெருங்கிக் கொண்டன் முழங்கிப் பொழிநாளே. (௩௨)

பனிக்காலம்—வஞ்சித்தாழிசை.

நாள்வனச முகங்கூம்ப நீள்குளிர்செய் பனிக்காலம்
வேண்மருவு செந்திலினெங் கேள்வர்தமை நினையாவே
மகன்றிலொடும் பெடைசேவல் புகன்றணையும் பனிக்காலங்
குகன்றனது செந்திலினெம் மகன்றவரை நினையாவே
தொலைபவர்மெய் குனியமதன் சிலைகுனியும் பனிக்கால
மலைமகள்சேய் செந்திலினெந் தலைவர்தமை நினையாவே. (௩௩)

வெண்டாழிசை.

நினைவு மொன்றே யுரையு மொன்றே
பனவன் செந்தில் பணியா தொன்றே
வினையில வீழ்ந்தவர் பால். (௩௪)

கலிப்பா.

¶ பால்வெள்ளை நீற்றானும் பல்லுயிரும் படைத்தானுஞ்
சூல்வெள்ளை மணிப்பணிலஞ் சுமந்ததிருக் கரத்தானுஞ்
சால்பெள்ள லில்லாத தனிநெடுவேற் படையானுஞ்
சேல்வெள்ளம் பரந்துலவுந் திருச்செந்தி லிடத்தானே. (௩௫)

---

(௩௨) வேண்டினர்-விரும்பினர். நகு-விளங்குகின்ற. கூண்டு - கூடி. அடல்-வலி. வில்-இந்திரதநுசு. அம்பு-நீர்(பாணம்). கொண்டல்-மேகம். கொலைவேடமாவது: பிரிந்தாரை வருத்துகின்ற வேஷம்.

(௩௩) நாள்வனசம்-அன்றலர்ந்த தாமரைப்பூ. கூம்ப-வாட. கேள்வர்-கணவர். மகன்றில்-அன்றில். பெடையொடும்-பெண்ணுடன். சேவல்-ஆண். புகன்று-விரும்பி. தொலைபவர்-(நாயகனைப்) பிரிந்தவர். மெய் - (ஆகுபெயர்) தலை. குனிய-வளைய. நினையாவென்பதற்குப் பனிக்காலங்கள் எழுவாய். கணவரை நினைந்தால் அவரையும் வருத்துமென்பது கருத்து.

(௩௪) உரை-சொல். பனவன்-முருகக்கடவுள். ஒன்றேவினையில்-ஒரே வினையில்; தீவினையில். பால்-பக்கம். நினைவுசொல்ஒன்றுவன: ஒருவர் திருத்தினுல் திருத்தப்படாரென்பதாம்.

(௩௫) மணி-முத்து. பணிலம்-சங்கு. சால்பு-மாட்சிமை. எள்ளல்-இகழ்தல்.

கலித்துறை.

¶இடத்தான மாறெழுத் தெண்ணக்கண் ணார்நின் னிணையடிகும்
பிடத்தான மாறும் பிரியா திருக்கப் பெருங்கருணைக்
கடற்றா னெனக்கருள் வாய்செந்தில் வாய்த்தென் கலைமுழுதுங்
குடத்தான மாதவற் கோதிய ஞானக் குருபரனே. (௬௬)

மடக்கு—ஆசிரியவிருத்தம்.

பரவு வாரி வளையீரே பரவு வாரி வளையீரே
பட௫ நாக வரும்பீரே பட௫ நாக வரும்பீரே
யரவப் புணரி மகரமே யரவப் புணரி மகரமே
யவலங் கழிய நந்தனமே யவலங் கழிய நந்தனமே
பிரமாத்தண் டலைப்பு டைத்தான் பிரமாத்தண் டலைப்பு டைத்தான்
பிறவா னுழைசெந் தினகரனே பிறவா னுழைசெந் தினகரனே
யுரவ ராலே நாவாயே யுரவ ராலே நாவாயே
யோதக் கடனீர்க் குருகீரே யோதக் கடனீர்க் குருகீரே. (௬௭)

---

(௬௬) தானம்இட-கொடைகொடுக்க. ஆறெழுத்து-சடாக்ஷரமந்திரம். கண்ணார்-கருதார். (அவர்கிற்க). தானம் ஆறும்-மூலதாரமுதலிய ஆறிடங்களிலும். பிரியாதிருக்க - (விநாயகர் முதலிய ஆறுதெய்வங்களாக நீ) பிரிவில்லாதிருக்க. குடத்து ஆன-கும்பத்திற்றோன்றிய.

(௬௭) பரவு-விரிந்த. வாரி-கடலிலுள்ள. வளையீரே-சங்குகளே. பரவு-புகழப்படு. வாரி-மதில்போல். வளையீர் - (தலைவர்வந்தால்) வளையுங்கள். படு-உண்டாகின்ற. அரு-அரிய. நாகஅரும்பீரே-புன்னையரும்புகளே. படரும்,—நாக-இளமையுடைய. பீர்-பசலைநிறம். அரவம்-ஓசை. அரவ-தேய்த்தற்காக. புணர்-(என்னைச்) சேர்கின்ற. இமகரமே-சந்திரகிரணமே. அவல்-நீர்நிலையிலும். அம்- அழகிய. கழிய-கழிநிலத்திலுமுள்ள. நந்து அனமே-மிகுந்த அன்னப்பறவைகளே. அவலம்-துன்பம். கழிய-மிகுந்தன. நம்-நம்முடைய. தனம்-முலைகள். பிரமா-பிரமனது. தண்-குளிர்ந்த. தலைப்புடைத்தான்-தலையிற் குட்டினவரும். பிரமா - பிரமமையச்செய்யும். தண்டு-(சூரபன்மன்) சேனையின். அலைப்பு-வருத்தத்தை. உடைத்தான்-கெடுத்தவருமாகிய. செந்தினகரன்-செந்திற்றலத்தையுடைய முருகக்கடவுள். உழை - (என்னிடத்து) பிறவான். தோன்றமாட்டார் பிற-அசை. வான் - ஆகாயத்தில். நுழை - நுழைந்து செல்லும். செந்தினகரனே-சிவந்தசூரியனே. உரவராலே-வலியவரால் மீன்களே. நாவாயே-மரக்கலமே. ஓதக்கடல் நீர்க்குருகீரே - ஒலியுடைய கடற்சலத்தின் பக்கமேதிரியும் நாரைப்பறவைகளே. உரவர்ஆலே-(உங்களில்) அறிவுடையவராலே. நாவாய்-நாவாலும் வாயாலும். ஓதக்கடன் - (என்றுன்பத்தை). அச்செந்தில் நகருடைய குமாரக்கடவுளுக்குச் சொல்லக் கடமைப்பட்டுள்ளீர். நீர்க்கு-(உங்கள்) குணத்துக்காக. உருகீர்-உருகுங்கள்.

தலைவியையவியந்தல்—கலிப்பா.

கீரமவை யோரிரண்டுங் கிளவிதனக் கிணையாகு
மாரமவை யோரிரண்டு மல்முலைமே லணியாமாற்
றூரமவை யோரிரண்டுந் தாமுடையூான் செந்திலன்ன
கோரமவை யோரிரண்டுங் கொண்டமதர் விழியார்க்கே. (௩௮)

ஊசல்.

ஆர்க்குமது கரமாட மாலை யாட வணிகலையு மேகலையு மிடையு மாட, வார்க்குவிமென் முலையுமணி வடமு மாட மதிமுகமு நுதல்வெ யர்வு நகையு மாடத், தார்க்கமல வடிச்சிலம்பு புலம்பி யாடத் தாழ்கு ழையு நீள்விழியுந் தழுவி யாடக், கூர்க்கதிர்வேற் குகன்செந்தில் பாடி யாடிக் கோகனகத் திருவனையி ராடி ரூசல். (௩௯)

ஆசிரியவிருத்தம்.

ஊச லாட்டெனப் போய்வரு பிறப்பெனு மூடற்பொறைச் சிறுவீட் டிற், றேசி லாதபுல் லறிவுடை வாழ்க்கையின் றிறந்திறந் தொழிவே னோ, காசி லாநெடுங் கடலலை வாய்த்தடங் கரைவரி வளையின்ற, மாசி லாமணி யேய்செந்தின் மேவிய வானவர் பெருமானே. (சும)

களி—தாழிசை.

பெருமை மாநிலம் வலம தாய்வரு பீலி மாமயி லூர்தியார்
பிள்ளை யார்வளர் செந்தி லம்பதி யுள்ள மேதகு களியரேம்
பரைம னோன்மனி புவனி நாரணி பால லோசனி சூலிசாம்
பவிசு காசனி கௌரி பூசனை பண்ணு முண்மகிழ் வெளியதோ

---

(௩௮) கீரம்இரண்டு-பால், கிளி. கிளவி-சொல். ஆரம்இரண்டு-சந்தனம், முத்துமாலை. கோரமிரண்டு-பயம், கொடுமை. விழியார்க்கு-கண்களையுடைய வரது. செந்திலன்ன விழியார்க்கே யெனக்கூட்டுக. செந்தில்போலச் சுகஞ் செய்பவளென்பது பொருள்.

(௩௯) மதுகரம்-வண்டு. நகை-பல். புலம்பி-ஒலித்து.

(சும) பொறை-பாரம். தேசு-அழகு. காசு-குற்றம். வரி-இரேகை. ஏய்-ஒத்த.

மருவு கேழலு மீனு மாமையு மாய னுக்கு விருப்பமா
மாணி னக்கை விடானு ருத்திரன் மதியு நாடொறு முயலுணு
மரிய வேள்வியி லந்த ணாளர்கள் சுரபி கண்டிடின் முந்துவா
ரைய னேசுர ராயி னூர்சுரை யருந்த வானவ ரியாருமே. (௬௧)

வேற்றொலிவெண்டுறை.

யாருமிணை யடிவணங்கு மெம்பெருமான்
றம்பிமுசற் கிளையோன செந்திற்
சூருடைய சுடர்வடிவேற் றுணர்க்கடம்பந்
தொடைக்குமரற் றொழுகி லாதார்
விரிநீர் புடைசூழ் வியன்மே தினிமேற்
பரிவா லுறுநோய் பசியா லொசியா
வரைசீ ரயரா வருநாள் கழியா
வரியா ரிகழா வுணர்வோ டுயிர்போ
யெரிவாய் நிரயத் தினுழழ் குவரே. (௬உ)

கலித்துறை.

மூழ்கா நிலைப்புது நீர்வேட்டு மீனமுன் னீந்துபழந்
தாழ்கான யாறு துறந்திறந் தாங்குநின் றன்னையன்றி
வீழ்கா தலிற்றெய்வம் வேறெண்ணி யான்மெலி யாதுசெந்தில்
யாழ்கா முறுமொழி வள்ளிபங் காவுள் ளிரங்குவையே. (௬௩)

---

(௬௧) பீலி-மயிற்றோகை. ஊர்தியார்-வாகனத்தையுடையார். உள்ள-நினைத்ததனால். மேதகு-மேன்மைதங்கிய. களியரேம் - கட்குடித்த மகிழ்ச்சியுடைய யாங்கள். எளியதோ-சாமானியமோ. கேழல்-பன்றி. மதி-சந்திரன். முயல்உணும்-முயலைச்சாப்பிடுவென் (களங்கத்தையுடையவன்). சுரபி-கள். முந்துவார்-முற்பட்டுச்செல்வார். ஐயனே,—சுரர்-சுரரென்னும் பெயருடையவர். சுரை-கள். கட்குடியர் ஐயனே அப்பனே யென்று மனிதரை யழைப்பதும் பழைய வழக்கு.

(௬உ) சூர்-அச்சம். துணர்-பூங்கொத்து. புடை-பக்கம். பரிவு-துன்பம். ஒசியா-துவண்டு. வரை-எழுதப்பட்ட. அயரா-சோர்ந்து. நாள்-ஆயுள். கழியா-கழிந்து. இகழா-இகழப்பட்டு. எரி-அக்கினி. நிரயம்-நரகம்.

(௬௩) மூழ்காநிலை-மிக ஆழமாகிய நிலை. புதுநீர்-புதுவெள்ளம். வேட்டு-விரும்பிப்(போய்). நீந்து-நீந்தக்கூடிய. பழம்-பழைமையாகிய. கானயாறு-காட்டாறு. துறந்து-நீங்கி. இறந்தாங்கு-இறந்ததுபோல. வீழ்-விரும்பப்படும்,

இரங்கல்—இதுவுமது.

இரங்கி மெய்கரிந் திருஞ்சிறை யடைந்திட ரிடைமூழ்கி
வருங்க ணீரொடு நாணொடு மறுகிய வரிவண்டீர்
சருங்கண் வார்முலைக் கௌரிசேய் செந்திலிற் கார்கால
மொருங்கு நும்மையு மொழிந்தன ரோவெமை யொழிந்தாரே.

சிந்தியல் வெண்பா.

ஒழிந்தன துன்ப முவந்தன வுள்ள
மிழிந்தன நம்வினை யெல்லாஞ்—செழும்புனற்
சேந்தன் திருச்செந்தில் சேர்ந்து. (௬௫)

இரங்கல்—ஆசிரிய விருத்தம்.

சேர்ந்த போது குளிர்ந்து மன்பினர் தீர்ந்த போது கனன்றும்வா
னூர்ந்து கந்த னுகந்த செந்தி லோதுங்கு வெண்பணி லங்கள்போ
லீர்ந்து பொங்கிரு ளுங்கி யெங்கணு மெங்க ளங்க நடுங்குமா
றூர்ந்த வெம்பணி சிந்தி முந்துற வந்தி வந்தெழு மிந்துவே. (௬௬)

இதுவுமது.

இந்துவு மிரவியு நின்றென வுலவிய விம்பரி னெழுவகையா
வந்துறு பிறவியி னொந்துழ லுடறொறு மங்குத லொழிவேனோ
செந்திலு மெனதிரு கண்களு மடியவர் சிந்தையு மருமறைநூ
லந்தமு மகிழ்வொடு சந்தத முலவிய வம்பிகை திருமகனே. (௬௭)

---

(௬௪) இரங்கி-வருந்தி (ஒலித்து). சிறை-காவலிடம் (சிறகு). இடர் துன்பம் (நெருக்கம்). கணீர்-கண்ணினின் றுவருநீர் (கள்ளாகியநீர்). நாணொடு-வெட்கத்துடன் (மன்மதன்விற்) கயிறாக. மறுகிய - சுழன்ற. ஒழிந்தனரோ-விட்டுநீங்கினரோ.

(௬௫) சேந்தன்-குமாரக்கடவுள்.

(௬௬) தீர்ந்த-நீங்கிய. கனன்றும்-சுட்டும். பணிலம்-சங்கு. ஈர்ந்து-பிளந்து. துங்கி-உண்டு; கெடுத்து. ஆர்ந்த-நிறைந்த. அந்தி - மாலைக்காலத்தில். இந்து-சந்திரன். ஊர்ந்தென்பது-ஈர்ந்தென்பதனோடு முடியும்.

(௬௭) நின்றெண-நிலைத்திருந்தாற்போல. உலவிய - சஞ்சரிக்கப்படுகின்ற. இம்பரின்-இவ்விடத்தில். மங்குதல்-கெடுதல். ஒழிவேனோ-நீங்குவேனோ சந்ததம்-எப்பொழுதும்.

### கலித்துறை.

மகவா னரசு மழிவற்ற யாக்கையு மன்பதையுஞ்
செகவாழ்வு மற்றவை யாவும்பொய் யேதமிழ்ச் செந்தில்புகுந்
தகவா ரிசமலர்ந் தங்கைகள் கூப்பிகின் றுறுதிரு
முகவா னவனைப் பணிவதொன் றேமெய் முயல்பவர்க்கே. (சஅ)

### கலித்தாழிசை.

முயல்பவர் முயற்சியின் முன்னம் யாவையு
நயனுணர் செந்திலா னல்குமே
நயனுணர் செந்திலா னல்கா னுபி
னயலொரு வானவர்க ளாக்குதற்கு வல்லவரு மல்ல ரன்றே. ()

### துறட்டாழிசை.

அன்றல வின்று மஞரெய் துவர்வேண்
மன்றலஞ் செந்தூர் வாழ்த்தா தாரே. (ருய)

### இரங்கல்—அடிமறிமண்டிலவாசிரியப்பா.

தாரார் கொல்லோ தங்குளிர் தாரே
வாரா ராயின் மானனை யீரே
பாரா ராலோ பணிபடு காலே
சீரார் செவ்வேள் செந்தூ ரவரே. (ருக)

### பாங்கிகூற்று— வஞ்சிவிருத்தம்.

அவரு மங்குள ரன்பிஞ
லிவரு நெஞ்ச மிரங்கினர்
சிவன்ம கன்பயில் செந்தில்வா
யெவரு மென்செய்வ ரின்பமே. (ருஉ)

---

(சஅ) மகவான்-இந்திரன். மன்பதை - மக்கட்கூட்டம். அகவாரிசம்-இருதயதாமரை. முயல்பவர்க்கு-முயற்சிசெயது பிழைப்பவர்க்கு.

(சகூ) முன்னம்-கினைப்பு. அயல்-வேறு.

(ருய) அஞர்-துன்பம். மன்றல்-வாசனை.

(ருக) தார்-மாலை. ஆல்-அசை.

(ருஉ) இவரும்-எழுந்துவரும். என்செய்வர்-யாதுசடைசெய்வர். இன்பமே-(இனியடைவது) சுகமே.

ஆசிரியவண்ண விருத்தம்.

இன்பமுந் துன்பமுஞ் சங்கடங் கொண்டயர்ந் தங்குமிங் குஞ்சு
ழன் றிடுமாயத், துன்பவெங் கும்பியங் கந்தவிர்ந் தூன்பெருந் தொண்ட
னென் றய்ந்துளங் கழிவேனோ, புன்குருந் துந்திநன் சந்தனஞ் சிந்தி
முன் பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசித், தண்பொருந் தம்பசும் பொ
ன்சொரிந் தெங்கணுந் தந்திதென் செந்திலெம் பெருமானே. (ருக)

கார்கண்டு பாகனொடுகெழறல்—இதுவுமது.

பெருமான் மதிபொதி சடையா னுடனுறை பிணைமா னுதவிய
செந்தூரன், கருமா மயிலென வுறைவாய் சிதறிய கணமா மழைமுகில்
கண்டாலே, யொருமான் விழிவழி புனலோ வுடல்வழி யுயிரோ விடு
குவ ளங்தோயான், வருமா றறிகில னினிநீ விரைவுடன் வலவா கடவு
தி வன்றேரே. (ருச)

சிந்தடிவஞ்சிப்பா.

தேராதவன் வழிமறுகிய திரள்சோலை
வாரார்மல ரிடையொழுகிய மதுமாரி
நீரார்வயற் செந்தூரனை நினையாதார், யாரேனு
மெழுவகைப் பிறப்பினு மியங்கி
யழிகுவர் கறங்கென வவலமனி யுழந்தே. (ருரு)

கலித்துறை.

உழவாத மம்மரு முன்னுத நெஞ்சு முறுப்பசுப்பு
மிழவாத நாணுமெங் குண்டுவன் டீரியல் சேர்குறிஞ்சிக்
கிழவா னவனை யிளையோ னெனுந்தன்மை கேட்கிலராய்த்
தொழவா தரத்தொடு செந்தில்சென் றேகண்ட தோகையர்க்கே.

(ருக) அங்கும் இங்கும்-அவ்வுலகத்தும் இவ்வுலகத்தும். மாயத்துன்பம்-மயக்கமாகிய வருத்தம். கும்பி-(தாய்மார்) வயிற்றிற்பிறக்கும். அங்கம்-சரீரம். கழிவேனோ-மிகுதிபடைவேனோ. உந்தி-செலுத்தி. பொருந்தம்-தாமிரபருணிநதி.

(ருச) பிணைமான்-பெண்மான்போன்றவுமாதேவி. உறை-நீர்த்துளிகள். வாய்-இடந்தோறும். வரும்ஆறு-மேல்விளையும் விதம். வலவா-சாரதியே. கடவுதி-செலுத்துவாய்.

(ருரு) வழிமறுகிய-வழிதெரியாமல் மயங்கிய. வார்-ஒழுங்கு. மதுமாரி-தேன்மழையாகிய. கறங்கென-காற்றாடிபோல். அவலம்-துன்பத்தால். உழந்து-வருந்தி.

(ருசு) உழவாத-வருந்தாத. உன்னுத-நினையாத. உறு-அடையாத. பசப்பு-பச்சைநிறம். இழவாத-கெடாத. நாணும்-வெட்கமும். குறிஞ்சி - குறிஞ்சிநிலத்து. கிழ-உரிய (விருத்த). ஆதரம்-அன்பு.

வெண்பா.

தோகைபுற மாக்குந் துணைத்தா ளருவினையே
னோகை யகமாக்க வொண்ணுதோ—பூகமலி
தேங்கடம்பாய் செந்திற் றிருநகரில் வீற்றிருக்கும்
பூங்கடம்பா நீதான் புகல். (ருஎ)

இடைச்சியார்—கலிமுரி.

புகலும் வாய்மொழிப் பால்விலை கூறுவார் போனி லாநகை பூத்த செவ் வாய்மலர்ந், தகலும் வாண்மறு கெல்லா மறுகச்சென் றூவின் பால்விலை யாக்கு மிடைச்சியார், தகலு மாகுங் குட முலைப் பால்விலை தனைய லாற்சிவன் சந்ததி செந்தில்வா, யிகலும் வாளொடுங் கண்ணொடு நெஞ்சைபு மிவர்விற் றுலினி யார்விலை கொள்வரே. (ருஅ)

தலைவிகூற்று—ஆசிரியவிருத்தம்.

கொள்வா ரன்றோ செவிப்புலத்தெங் குலத்தார் வலித்த கொடுங் கடிப்பின், வள்வார் முரசங் கறங்கோதை மணம்வேட் டயரு மணமு ன்றிற், கள்வார் கடப்பந் தொடைச்செந்திற் கந்தன் வேல்போற் காய் கணைபாய், புள்வார் பொருவெங் களத்தோதை கேட்டே யகன்ற போரேறே. (ருகூ)

ஆசிரியவிருத்தம்.

ஏறிரும் பசலைக் கலவைமான் மதச்சே றெழுதிய வழிமதக் கலுழி யிரைத்தெறி கரடத் திரடிணி புழைக்கை யிகற்கரி மருப்புறழ் முலை ப்பூ,— ஞாறிருங் கூந்த லேந்திழையவர்பா னலந்தனக் கலந்துழன் றவ மே, நாள்கழித் தவலப் படுகுழி கிடக்கு நான்கதி காணுமா றுளதோ,—

(ருஎ) தோகை-மயில்வாகனத்தின். துணைத்தாள். இரண்டு பாதங்கள். புறம்-வெளியில். ஆக்கும்-சேர்க்கும். ஓகை-மகிழ்ச்சியுடைய. அகம்-உள்ளிடத்தில். பூகம்-கமுகமரத்தில். மலிதேம்-நிறைந்ததேன். கடம்-யானைமதம்போல.

(ருஅ) மொழிப்பால்-சொல்லாகிய பால். விலைகூறுவார் - விலைசொல்பவராகிய வேசையர்கள். நிலாநகை-சந்திரகிரணம்போன்ற சிரிப்பு. அகலும்-விரியும். மறுகு-வீதி. மறுக-சுழல. தகல்-பொருத்தமுடைத்தாதல். உம்-அசை. சந்ததி-மைந்தன். இகலும்-பகைக்கும்.

(ருகூ) செவிப்புலத்து-காதினிடத்து. வலித்த-வலிந்தடித்த. கடிப்பின்-குறுந்தடியால். வள்வார்-கட்டியவாரையுடைய. கறங்கு-முழங்கு. ஓதை-ஒலி. வேட்டு-விரும்பி. அயரும்-செய்யும். முன்றில்-முற்றத்தில்.—புள்-பறவைகள். வார்பொரு-ஒழுங்காக மோதுகின்ற. களம்-யுத்தகளத்தில். போரேறு-ஆண் சிங்கம்போன்ற தலைவர்.

யாறெழுந் துளங்கொண் டைம்புல னடக்கி யவாவறுத் தொருநெறி துருவி, யகங்குழைந் துருகிப் பருகுமன் பினருக் கானந்த ஞானவாரி தியே,— பாறெழுந் திரைக்குந் திரைப்பசுங் குருதிப் பரிதியஞ் சுடரி லை நெடுவேற், பண்ணவா விரைப்பூந் தண்ணறு வயல்பாய் பைந்தமி ழ்ச் செந்தில்வா னவனே. (௬0)

இதுவுமது.

வானமும் புவியு மாய மாறிலைம் பூத மோதி
னூனுடம் பாத னாயே னூழ்வினைப் பகுதி யன்றோ
கூனிளம் பிறைதோய் நெற்றிக் கொடிமணி மதில்சூழ் செந்திற்
றேனினந் தொகுதார் மல்கு செஞ்சுடர் வேலி னானே. (௬௧)

கார்கண்டுபோகனொடுகழறல்—இணைக்குறளாசிரியப்பா.

வேலிற் கிளரொளி மின்னொடுந் துவன்றிச், சூலிற் கடலென முழங்கி மாலிற் கருகிக், காலிற் கடுவிசைத் தெறிந்து, மேலிற் பரந்து, பாலிற் பலிறுளி சிதறிக் கோலிற் பொழிந்து, குனிசிலை வளைத்தன வாலோ, வாலிற் சிறந்தோன் மைந்தன், சேலிற் றிகழ்வயற் செந்திலிற் கொண்மூ, வுயங்கு தேரினு முந்துறு மாலோ, சால்பிற் கேள்விப்பாக, தகவினி யென்னு மாலோ, நூலிற் சிறந்த நுண்ணிடை தனக்கே. ௬௨

இரங்கல்—ஆசிரிய விருத்தம்.

தனக்கோ ருவமை யில்லாத தந்திக் கிளையான் செந்திலுமென்
மனக்கோ யிலுங்கொண் டவனிணைத்தாள் வணங்கா தவரினிணங்காரா

---

(௬0) ஏறு இரு-மிகப்பெரிய. பசலை-பசுமை. எழுதிய-பூச. மதக்கலுழி-மதமாகிய காட்டாறு. கடாம்-மதமொழுதுமடையாளம். திணி-பலம். புழை-துவாரம். உறழ்-ஒத்த. அவலம்-துன்பம். ஒருநெறி-ஒப்பற்ற மோக்ஷவழி. துருவி-தேடி. பருகும்-உண்ணும். பாறு-பருந்துகள். இரைக்கும்-முழங்கும். குருதி-இரத்தம். பரிதி-சூரியன்போன்ற. நறு-தேன்.

(௬௧) மாறு-விரோதம் ஓதில்-சொல்லுமிடத்து. பகுதி-பகுப்பு. நெற்றி-உச்சி. தேன்-வண்டு. மல்கு-பொருந்திய.

(௬௨) துவன்றி-நெருங்கி. மாலின்-விஷ்ணுவைப்போல. காலின்-காற்றைப்போல. விசைத்து-விசைகொண்டு. பாலின்-பால்போல. கோலின்-சோல்போல; நோக. குனிசிலை-வளைந்தவானவில் கொண்மூ-மேகங்கள். பாக-சாரதியே. தகவு-குணம்.

யெனக்கோ ருறுதி யியம்பாம லிதண்கா ளேனல் காள்கிளிகாள்
புனக்கோ கிலங்கா ளெங்கொளித்துப் போனு ரிருந்த மானூரே. (௬௩)

தழை—கலித்துறை.

மானூர் விழுமான் மகள்கா தலனூர் வாழ்செந்தூ
ரூனூர் வடிவே லுரவோ யினிவே றுரையுண்டோ
வானூர் விழையுந் தழையோ தந்தா யம்மாநங்
கானூர் குழலா ளுயிர்தந் தனைநீ கண்டாயே. (௬௪)

மறம்—ஆசிரியவிருத்தம்.

கண்டாலு மனம்பதைக்குங் கடுங்கூற்று நடுங்கியெமைக் கடல்சூழ் செந்தில், வண்டாலுந் துணர்க்கடம்பன் மலர்ச்சரண மறவாத மறவ ரேயாம் பெண்டாலின் றளமயங்கி யுயிரைவிடத் தூதுவிடும் பெருமான் றன்பாற், றெண்டாலெங் களுக்குரைக்க வருந்தூத வவற்கியம்பு தூத னீயே. (௬௫)

தலைவனைவேண்டல்—வெண்பா.

தூதுசொல வேண்டிச் சுரும்பினையு மானினையு
மாதுசொல விட்டாலு மாட்டாவா—லோதுசெந்திற்
காங்கையா வாரிரண்டு கைத்தலத்தாய் நின்றன்னை
வேங்கையா மென்றே வெறுத்து. (௬௬)

இரங்கல்—கலித்துறை.

வெறுப்பா ரவரென்னை மின்னனை யாரெனில் வெம்பிழையும்
பொறுப்பார் மறந்தும் புறக்கணி யார்புணர்ந் தாவிதந்துண்
ணிறுப்பார் புலவியி னூடல்செய் யார்நினை வார்வினைக
ளறுப்பார் திருச்செந்தில் வாயிவ ரார்வந் தலைப்பவரே. (௬௭)

---

(௬௩) இணங்கார்-பகைவர். இதண்காள் - பரண்களே. ஏனல்காள்-தினைப்புனங்களே.

(௬௪) உரவோய்-வலிமையுடைய தலைவனே. அம்மா-ஆச்சரியம். கண்டாய்-வேண்டா கூறலாகிய அசை நிறை.

(௬௫) ஆலும்-முழங்கும். பெண்டு-பெண். உயிரை-(தன்)னுயிரை. அவற்கு-அப்பெருமானுக்கு.

(௬௬) சுரும்பு-வண்டு. வேங்கை-வேங்கைமரம். வள்ளிநாயகியின் பொருட்டு வேங்கைமரமாகிய கதை கந்தபுராணத்துட் காண்க.

(௬௭) வெறுப்பார் - நெருங்குவார். மின் அனையாரெனில் - மின்போலும் பெண்களென்றால். புறக்கணியார்-அலக்ஷியம்செய்யார். நிறுப்பார்-நிறுத்துவார். வினைகளறுப்பார்-குமாரக்கடவுளுடைய.

எழுநர்தேன்னவேந்தலை விலக்கல்—கலித்தாழிசை.

அலைவாய்வள நந்தூரிள நிலவாய்விரி செந்தூ
ரடனாட்டிய கதிர்வேலவர் குடநாட்டன மனையாண்
முலைதாமெழு துவையேலவை குழையாமுழு மதிபோன்
முகநேரெழு துவையேனகை புரியாதிரு புருவஞ்
சிலைபோலெழு துவையேலவை குனியாவடி தளிர்போற்
றிடமாயெழு துவையேலவை நடவாகிளி துவர்வா
யிலவாயெழு துவையேலது கலவாகிறை யமுத
மெங்கேயெழு துவைநீகிழி செங்கேழயி லவனே. (௬அ)

தலைவியை யாற்றுதல்—வெண்பா.

அயில்வேற்க ணல்லா யனுர்கூர்ந் தலமந்
துயிர்வேட்கை வாட்ட மொழிவாய்—பயிலுமதன்
பூங்கைக் கடம்புண்டு போனூற் றரச்செந்தில்
வேங்கைக் கடம்புண்டு மேல். (௬௯)

விலக்கல்—ஆசிரியத்துறை.

மேல்வா னவர்தஞ் சிறையறுத் துயர்ந்த விளங்கிலை நெடுவேற் றுளங்கெழிற் குமரன் வியன்செந்திற், சூல்வாய்ப் பணிலங் கறங்குமலைவாய்த் துறைவா வினியெம் பிறைவா ணுதலின் றுணர்த்தா ரகலம் புணர்ப்போ டேகின், பால்வாய்க் குழவி மறிமான் மறுகும் பகுவாய்ப் புலியின் றொகைவால் புடைப்பப் பணைக்கோட்டு, நால்வாயிரையா வேட்டைபா யரவ நவிலும் பாலைத் தெனலாற் கவலை நளிர்நீர்ப் பொருநைத் தெளிநீர் பழன நன்னாட் டகமன்றே. (எ0)

---

(௬அ) குடநாடு-மேல்நாடு. அனம்-அன்னப்பக்ஷி. குழையா-மிருதுப்படா. நகைபுரியாது-சிரியாது. குனியா-வளையா. கிளி-கிளிமூக்கும். துவர்-பவளமும்போலும். இலவா-இலவம்பூவாக. கலவா-கலவாது. கிழி-படம். கேழ்-நிறம். கல்வா என்பது முற்றிறுதிகெட்டது.

(௬௯) அயில்-கூர்மை. அனுர்-துன்பம். வேட்கை-ஆசையால். கைக்கு-கையினிடத்து. அடு அம்பு-கொல்லுகின்ற பாணம். உண்டு,—(இங்கு நில்லாதே). வேங்கை-வேங்கைமரமாகிய முருகக்கடவுளுக்கு. கடம்பு-கடப்பமாலை.

(எ0) துளங்கு-அசைகின்ற. துறைவா-நெய்தனிலத்தலைவனே. புணர்ப்போடு-சேர்ந்தபடியே. மறுகும்-சுழலும். தொகை-கூட்டம். புடைப்ப-அடிப்ப. பணை - பருத்த. நால்வாய் - யானை. இரையா - உணவாக. நவிலும் - (தாற்பரியம்) செய்யும். பாலைத்து - பாலைநிலமுடையது. கவலை-பய (முண்டாம்.) தெளி - குழைசேறு. மான்குழவியெனக்கூட்டுக.

வெண்பா.

அகமன் றலங்கமலத் தாள்வினையே னன்பாற்
புகமன் றருமகிழ்சி பூத்தான்—றகவென்றா
மூந்தினக ரம்போ லொளிகொண்ட வேற்படையோன்
செந்தினக ரம்போற் சிறந்து. (எக)

பிரியேனென்றல்—கலித்துறை.

சிறந்தார் பரவுந் திருச்செந்தி லார்சிவன் றீ நுதற்கட்
பிறந்தா ரிணையடி பேணலர் போலப் பிணியவிழ்தார்
புறந்தாழ் குழலி புலம்பே லுனையைம் பொறிகலங்கி
யிறந்தாவி யான்படி னும்பிரி யேன்பிறப் பேழினுமே. (எஉ)

ஆசிரியவிருத்தம்.

¶ஏழுயர் கடாயானை மேல்வெண் குடைக்கி ழிணைக்கவரி யெறிய விருபா, லின்னிய முழங்கமட வன்னங் குழீஇயனைய வேழையர் மருங்கு சூழக்,—காழகி னறுங்குற டரிஞ்சுபூந் தேய்வைகடி கமழ்தடவும் வலையநிமிர்தோட், கண்ணிக் கடம்பசைய வேல்கொண்டு நீவரக் கண்கொண் டுளங்குளிர்வனே,—வாழிமுரி திரைமுகடு கிழியவெழு மெழுபுரவி யருணமிசை கொடிநெடுந்தே, ராயிரங் கதிரிரவி பாயிரும் பகலுமிருளடையமிடை சினைவிடுதடங்,—கோழிலை நறும்புன்னை துன்னுநுண் டாதுபடு குவிமுகை மருட்டு முடவுக், குடவளை மணித்தொகுதி நிலவுகாய் செந்தில்வரு குலவமரர் தம்பிரானே. (எஙு)

---

(எக) அகம் - மனத்தில். மன்றல் - வாசனையுடைய. தாள் - திருவடிகள். புக-பொருந்தியிருக்க. மன்தரும்-நிலையுறும். என்றூழ் - சூரியன். உந்தின-செலுத்தின. காம் - பிரகாசம். வினையேன் அகமெனக்கூட்டுக.

(எஉ) பேணலர் - விரும்பாதவர். பிணி - கட்டு. புறம் - முதுகில். புலம்பேல் - வருந்தாதே. ஆவியிறந்துபடினுமெனக்கூட்டுக.

(எஙு) ஏழு - ஏழுமுழம். கடா - மதம். குழீஇயனைய-கூடினாற்போல. காழ் - வயிரம். குறடு - கட்டை. தேய்வை - சந்தனம். கமழ் - வாசனைசெய்ய. நிமிர் - உயர்கின்ற. |முரி - வளைகின்ற. அருணம் - செங்கிறம். பகலும் - பகற்காலத்தும்.|மிடை-நெருங்கிய. சினை-கிளை. முகை - அரும்பு-மருட்டும்-(கன்னைமுத்தோவென்று) மயங்கச்செய்யும். முடவு - வளைந்த - காய்-பிரகாசிக்கின்ற.

### ஆசிரியத்தாழிசை.

¶ தம்பிரான் செந்திலிற் சரவணத் துதித்தோ
னம்பொனார் கழலிணை யன்புறப் பணிந்தோ
ரும்பராய் மன்னுவ ருயர்நிலை யடைந்தே. (எச)

### மாலையிரத்தல்—கலித்துறை.

அடைக்கலந் தானிவ ளானலு மார்பத் தணிகடம்பந்
தொடைக்கலந் தாருயிர் சோர்தனன் றேதொல் லவுணர்வெம்
பிடைக்கலந் தாவிப் பலியூ னுடனுண் டெழுங்கதிர்வேற் [போ
படைக்கலந் தாங்கிய கையாய்தென் செந்திற் பதிக்கந்தனே. ()

### இரங்கல்—வெண்பா.

சுந்தமல ராலக் கமழ்கூந்த லேந்திழைமார்
தந்தமல ராலத் தளருமோ—வந்தவினை
போக்குமரன் சேயொளிக்கும் பூம்புனற்செந் தூரமர்ந்த
கோக்குமரன் பூந்தார் குறித்து. (எசு)

### இதுவுமது—ஆசிரியத்துறை.

குறுமுனிவற் கறமுறைத்த குமரன்மா செந்திலினெங் கொலைவில்வே
சிறுமியைம ணம்புணர்ந்து தீர்ந்திடினு மன்பகத்திற் றீரா ரன்றே[டர்
சிறுமியைம ணம்புணர்ந் தன்பிற்றீர்ந் தாராயிற்
கறிவளர் வரைகாட்டற் கென்னு மென்னு முணர்ந்த கல்வி யாறே.(எஎ)

### வெண்பா.

¶ ஆறுமுக மேன்கண்க ளாறிரண்டு மேனடியேற்
கேறுவினை யொழிப்ப தெல்லாமோ—நீறணிவான்
கன்றே திருச்செந்திற் கற்பகமே நின்னருட்கண்
ணென்றே யமையாதோ வோது. (எஅ)

---

(எச) செந்திலிற் றம்பிரானெனக்கூட்டுக.

(எரு) அலந்து - துன்புற்றுத்தேடி. இடை. இடத்தில்.

(எசு) சந்தம்-தங்கள் தங்களுடைய. அலர்-பழிமொழி. ஆல - (வந்து) அசையாநிற்ப. தளரும் - தளர்ச்சியடைவள். சேய் - புத்திரன். கோ-தலைமை யாகிய. ஏ-அசை.

(எஎ) சிறுமி - சிறுபெண். தீர்ந்திடினும் - பிரிந்தாலும். கறி - மிளகுக்கொடி. ஆறு - மார்க்கம்.

(எஅ) ஏன் - எதற்கு. கன்றே-பிள்ளையே. அமையாதோ - போதாதோ.

இரங்கல்—ஆசிரியவிருத்தம்.

ஓது வார்கொலோ வுயிருடற் பொறைமறித் துதவுமா றுயர்ந்தோங்கி
மோது வாரிள முகிழ்முலை வனிதையர் முடிந்திறந் திடுங்காலைக்
காது வார்மணிக் கனங்குழை யுழைமகள் காதலர் திருச்செந்திற்
போது வார்குழ லாய்கல்வி வேட்டெமைப் புல்லுவிட் டகன்றாரே. ()

இதுவுமது—கலிவிருத்தம்.

அகலுறார் கனவெலா நனவெ லாந்தொடப்
புகலுறா ருளங்குடி புகுந்த காதல
ரிகலுறா வேள்செந்தி லிணங்க லாரின்யா
னுகலுறா தாவிநின் றாச லாடவே. (அ0)

சுனையாடல்கூறித்தோழிநகைதல்—இதுவுமது.

ஆடு பூஞ்சுனை சந்தணிந் தாய்மலர்
சூடி வாய்விளர்ப் புந்தரிற் றோகையாய்
சேடன் வேற்படைச் சேவகன் செந்திலி
னாடி யானுஞ்சென் றாடுவ னனமே. (அக)

தலைவன்கூற்று; இரங்கல்—இதுவுமது.

நானிலமு மெண்டிசையு நன்கிசையு நாளார்
தேனகு கடம்பருயர் செந்திநகர் போல்வார்
மானகு கருங்கணிணை வஞ்சவிட மானால்
யானுமுயி ரும்புவியு மென்கொலுயு மாறே. (அஉ)

---

(எகூ) ஓதுவார் - படிப்பார். பொறையுடல-பாரமாகியசரீரத்தை. மறித்து - மீள தருமாறு - படைக்கும் விதம். வார்-நீண்ட. உழை-மான். போது-மலர்களணிந்த. வேட்டு - இச்சித்து. புல்லு - தழுவுதல்.

(அ0) அகலுறார் - நீங்சார், புகலுறார்-பேசமாட்டார். இகல்-பகை. இணங்கலாரின்-பகைவரைப்போல.

(அக) சந்து - சந்தனம் - ஆய் - ஆராய்ந்து. விளர்ப்பு-வெளுப்பு. தோகையாய் - மயில் போல்பவளே. சேடன் - அழகுடையவனாகிய.

(அஉ) நானிலமும் - நான்குநிலத்தினும். நாள்-அன்று. நகு-விளங்குகின்ற. போல்வார் - ஒப்பாராகியமாதர். என் - எவ்விதம்.

தோழிகூற்று; இரங்கல்—ஆசிரியவிருத்தம்.

மாறு படுஞ்சூ ரோட முனிந்தார் வானுயர் செந்தூர்வா
யூறு படும்பே ராசையி னம்பா லூர ரிரங்காரே
னீறு படும்பூ ணாரமு மொன்றோ நேரிழை கண்சோர்நீ
ராறு படுங்கால் யாவ ரறிந்தா ராவி படும்பாடே. (அங)

கலித்துறை.

¶ பாடாத நாவும் பணியாத சென்னியும் பாவித்தன்பாய்
நாடாத வுள்ளமு நான்படைத் தானர கேழுஞ்சென்று
கூடா துயர்கதி கூடுவ னேகுன் றெறிந்தவைவேற்
சேடார் மதிற்செந்தி லாயென்கொ லோநின் றிருவருளே. (அச)

தலைவிகூற்று—வெண்பா.

அருட்கடல்வாழ் செந்தினக ராய்வளைக்கை நல்லாய்
பொருட்கடல்வேன் மன்னரேன் போனார்—மருட்குவளைக்
கண்பொழிய முத்தங் கனக முலைபொழிய
நண்பொழிய நாமெலியு நாள். (அரு)

பாங்கிகூற்று—கலிப்பா.

நாணளினந் தளையவிழ்ந்த நறுமலர்ப்பொற் பொகுட்டகட்டுக்
கோணளினந் துறங்குவயற் குமரன்மா செந்திலின்வாய்ப்
பாணளினந் தலரளக பாரமுகில் சோரமணிப்
பூணளினந் தனித்தாவி புல்லாது நில்லாதே. (அசு)

---

(அங) ஊறுபடும் - தழும்புபடும்; அழுத்தமாகிய. ஊரர் - மருதநிலத் தலைவர். நீறுபடும் - சாம்பராகும். ஒன்றோ - (இஃ) தொன்றுதானோ.

(அச) பாவித்து - பாவனைசெய்து. கூடாது-சோராது. சேடு அழகு.

(அரு) அருட்கடல் - கிருபாசமுத்திரமாகிய குமாரக்கடவுள். பொருட்கு - திரவியத்தின் பொருட்டு. அடல்- வலிய. முத்தம் - முத்துப்போலும் நீர்த்துளி. கனகம் - பொன்போலுந்தேமல். நண்பு - சிநேகம்.

(அசு) நாள்-தினந்தோறும். நளினம் - தாமரை தளையவிழ்ந்த. கட்டு விட்டலர்ந்த. பொகுட்டு அகடு-கொட்டையினடுவில். கோள்-வலிய. நளி-குளிர்ந்த நந்து-சங்கு. பாண் அளி-பாடல்வண்டு. நந்து-மிகு. அலர்-பூக்களையணிந்த. மணிப்பூணள்- இரத்நாபரணத்தையுடையவள். இனம்-இன்னமும். தனித்து-தனித்தால்.

### வெண்பா.

¶ நில்லாத நீயு நிலைநின்ற வென்றனக்குப்
பொல்லா தனவாம் புலனடக்கிப்—பல்பகலுங்
கார்த்திகையான் செந்திற் கடிநகரைக் கண்ணாரப்
பார்த்திகையா னெஞ்சே பணி. (அஎ)

### கலித்துறை.

¶ பணிப்பகை மயிலுஞ் சேவற் பதாகையும் பன்னி ரண்டு
மணிக்குழை களுமோ ராறு வதனமும் வாகை வேலுந்
தணிப்பசுங் கடப்பந் தாருந் தண்டையந் தாளு நாளுங்
கணிப்பருஞ் செந்தி லாயென் கருத்தைவிட் டகன்றி டாவே ()

### இரங்கல்—இதுமவுது.

அகன்று லகலும் புணர்ந்தாற் புணருமென் ஞவியம்மா
குகன்று தவிழ்பொழிற் செந்திலின் வாய்க்குளிர் மாமதிபோன்
முகன்ருழ் கனங்குழை முத்தணி மூரன் முகிழ்முலைமான்
மகன்று னெழுதிய வோவியம் போலு மயிலினையே. (அகூ)

### தலைவியையியத்தல்—ஆசிரியவிருத்தம்.

மயில்கடவி யண்டகோள முகடதிர வம்பொன்மேரு வரைபிதிர வங்கை நீடுகூ, ரயில்சுழல வும்பர்வாழ வுலகைவலம் வந்தசோதி யருள்குமரர் செந்தில் போலியார், குயின்மொழிக ளிந்தபாகு மடமயில்விளங்குசாயல் கொடியிடைது வண்டு வாடுநா, லியலுநுத லிந்த்ரசாப மிணைவிழிக ளிந்த்ரநீல மிலவிதழு மிந்த்ர கோபமே. (கூம)

---

(அஎ) நில்லாத - நிலைநில்லாமலெங்குஞ்செல்ருேடுகின்ற. பொல்லா தன-கெடுதலுடையன. புலன்-பஞ்சேந்திரியங்களை. கடி-காவல். பார்த்தி-பார்ப்பாய். கையால்-கைகளால்.

(அஅ) பணி-பாம்பு. பதாகை-கொடி. வாகை-வெற்றி. தணி-குளிர்ந்த. கணிப்பு-அளவிடுதற்கு.

(அகூ) புணர்ந்தால்-சேர்ந்தால். மூகன்-முகத்தில். முத்து அணி-முத்துப்போன்ற அழகிய. மூரல்-பல். முகிழ்முலை - அரும்புபோலுமுலையையுடையவளே. மால்மகன்-பிரமன். குகன் அகன்ருலெனக் கூட்டுக.

(கூம) கடவி-செலுத்தி. பிதிர-பொடியாயுதிர. சுழல-சுற்றிவர. சோதி-சிவபிரான். போலியார்-போன்றமாதர். இயலும்-பொருந்தும். நுதல்-நெற்றி. இதழ்-அதரம். இலவு-இலவமலரும். இந்திரகோபம்-பட்டுப்பூச்சியும்.

கார்கண்டிரங்கல்—ஆசிரியவிருத்தம்.

கோப மெழுந்தன மேக முழங்கின கோட னிரம்பினநீள்
சாபம் வளைந்தது தோகை பரந்தன தாரவர் வந்திலரா
னீப மணங்கமழ் மார்பினர் செந்திலி னேரிழை நெஞ்சிடையே
சோப மலிந்தது வாவி தளர்ந்தது சோர்வன கண்டுளியே. (௬௧)

கலித்துறை.

துளியாது கண்புனல் சோராது மெய்துதி யாதுசொன்னாக்
களியாது நெஞ்சகங் கைகுவி யாதொருக் காலுமறை
தெளியாத வானவர் சேனை பதியைத்தென் செந்திலின்வாய்
வெளியா யெதிர்ந்து தொழார்நர கேழினும் வீழ்பவர்க்கே. (௬௨)

பாங்கியாற்றுதல்—குறள்வெண்பா.

வீழ்வா ரெழார்பொருட்கு விட்டுநமை வெற்பயிலாற்
போழ்வார்செந் தூரடையார் போல். (௬௩)

பிச்சியார்—ஆசிரியவிருத்தம்.

போலிதனக் கென்றுமிலாப் புண்ணியன்கண் ணுதற்கடவுள் புதல்வன் கோலப், பீலிமயி லியற்செந்திலுலவேற்கைக் கோலவேற் கட் பிச்சி யாரே, நூலிடையைக் குறைத்துமணிப் பணைமுலையைப் பெருக்கியென்று நோயே செய்தீர், நீலமுகி லோதிகுறைத் துயிர் குறைப்ப தோவுமக்கு நீதி தானே. (௬௪)

---

(௬௧) கோபம்-இந்திரகோபம் - பட்டுப்பூச்சி. கோடல் -செங்காந்தள். நீலசாபம்-இந்திரதநுசு. தோகை-மயில்கள். தாரவர் - மாலையணிந்ததலைவர். நீபம்-கடம்பமலர். சோபம்-சோர்வு. ஆவி-உயிர்.

(௬௨) சோராது-தளராது. மெய்-சரீரம். நா-நாக்கு. ஒருக்காலும்-ஒருதரமும். மறை-வேதங்கள். வெளியாய்-வெளிப்படையாக. தொழார்-வணங்காராய்.

(௬௩) பொருட்கு-திரவியத்தின்பொருட்டாக. வீழ்வார் எழார்-விரும்புவாராயெழுந்து புறஞ்செல்லார். போழ்வார் - பிளப்பாராகிய குமாரக்கடவுள்.

(௬௪) போலி-ஒப்புப்பொருள். பீலி-மயிற்றோகை. இயல்-தன்மையும். செந்தில்-திருச்செந்தூரினிடத்து. கை-கையும். வேற்கை-வேல்போலுங் கண்ணுமுடைய. பிச்சியாரே-பயித்தியமுடையவரே. பெருக்கி-வளரவிட்டு. ஓதி-கூந்தல். (ஞானம்). பிச்சியார்: மொட்டைத்தலையுங்கையில் வேலுமுடையவர்

தலைவிபாங்கித்துரைத்தல்—கலிவெண்பா.

தானக் குனிகோட்டுத் தந்தியினை யும்விலக்கிக்
கானக் குடிஞைக் கலுழியினிற் காத்தளித்துத்
தேனக்க செச்சையந்தார்ச் செந்திலார்க் கன்பரினென்
னூனெக் குருக வுயிரிற் கலந்தார்க்கு
நானக் கமழ்கூந்த னன்னுதலே வாரலையென்
றியானுற் றுரைப்பதெவ்வா றின்று. (கூரு)

கலிவெண்பா.

இன்றுலகி னல்குரவா லீடுபடுந் தன்மையினு
லன்று மருவினையே யூன்றவறஞ் செய்யகிலே
னென்றும் பிறப்பினுமிப் பெற்றியே முற்றுமெனைக்
கன்று மனத்தாற் கவலுழந்து நில்லாது
குன்றெறிந்த செந்திற் குழகாநின் பூங்கழற்கால்
சென்றுதொழு மாறன்பு செய். (கூசா)

தாய்கூற்று—கலித்துறை.

செய்யவ னேயெனுஞ் செந்திலெந் தாயெனுஞ் செவ்வடிவேற்
கையவ னேயெனுங் கங்கைமைந் தாவெனுங் கண்டுளிநீர்
பெய்யவ நேகந் தரமெழும் போய்விழும் பிள்ளைமதி
வெய்யவ னேயெனும் வேறறி யாளென் விளங்கிழையே. (கூஎ)

தலைவிகூற்று—ஆசிரியவிருத்தம்.

இமைக்குங் கூடலு மென்னிரு கண்களி னிமைகளு மிரவெல்லா
முமைக்குங் கூடல மந்துதென் செந்திலா யொருகணங் கூடாவான்

---

(கூரு) தானம்-மதம். குனி-வளைந்த. குடிஞைகலுழி - குடிஞையாகிய விளங்கிய. செச்சை-வெட்சிப்பூ. அன்பரின்-அன்பர்போல. நெக்கு-நெகிழ்ந்து. நானம்-கஸ்தூரி. வாரலை-வாராதே.

(கூசா) நல்குரவால்-தரித்திரத்தால். ஈடுபடும்-வருந்தும். ஆன்ற-உயர்ந்த. காட்டாறு. நக்க-பெற்றி-தன்மை. கன்றும்-வாடும். கவலுழந்து- துன்பமநுபவித்து. குழகா-பேரழகுடையவனே.

(கூஎ) செய்யவனே - சிவந்தவனே எனும்-என்றுசொல்லுவள். எழும்-எழுவாள். விழும்-விழுவாள். பிள்ளைமதி - (இவையெல்லாம்). சிறுபிள்ளைப் புத்தியாம்.

மழைக்க ணம்பிகை மலர்க்கரங் கோட்டியே வார்முலை பீரோட
வழைக்க நின்றுகூத் தாடிய மணிச்சிலம் பலம்புசே வடியானே.(கூஅ)

கலிப்பா.

அடியாரி னுளமுருகன் பறியாத வென்புன்சொன்
முடியாத நக்கீரர் முருகாற்றுப் படையாமோ
தொடியார்பன் னிரண்டுதடந் தோளார்க்குத் திருச்செந்தில்
வடிவாய்வள் ளுகிர்ச்சேவல் வலனுயர்த்த கொடியார்க்கே.(கூகூ)

வெண்பா.

ஆர்க்குங் களிவண் டறையும் பொழிற்றிருச்செந்
தூர்க்கன் புடனீசென் றுள்ளமே—கூர்க்கு
மெழுமையினு நீபிறப்பி லெய்தாமற் சேயைத்
தொழுமயிலும் வேலுமெனச் சொல். (ஙா)

---

(கூஅ) கூடலும் இழைக்கும்-கைபொருந்தும் குறியும் பார்ப்பள்-என்யாதுகாரணம் - கூடு - தேகமும் - உழைக்கும்-வருத்தப்படும். அலமந்து-சுழன்று. கணம் – க்ஷணமும். கூடா-பொருந்தா. மழை-குளிர்ச்சி. கோட்டி-வளைத்து. பீரோட. பாலொழுக. அலம்பு-முழங்குகின்ற. இமைகளும் கூடாவெனக்கூட்டுக.

(கூகூ) அடியாரின்-தொண்டர்களைப்போல. முடியாத-கெடாத. தொடி-கங்கணம். வடி-கூரிய. வள்-வளம். உகிர்-நகம். வலன்-வலப்பக்கத்தில். உயர்த்த-உயர்த்திய.

(ஙா) ஆர்க்கும்-ஒலிக்கும். அறையும்-முழங்கும். கூர்க்கும்-மிகுக்கும். எழுமை-எழுவகை.

திருச்செந்திற்கலம்பகம்,
அரும்பதவுரையுடன்
முற்றிற்று.



இவ் வரும்பதவுரை யெழுதியவர்
மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,
☞ மு. ரா. அருணாசலக்கவிராயர்.

உ

குமரன்றுணை.

# திருச்செந்திற் கலம்பகம் அருளிச்செய்த
# சுவாமிநாததேசிகர் சரித்திரம்.

இவர், செந்தமிழ் நாடு மூன்றுகளில் இடை நின்றதாயும் செந்தமிழ்ச்சங்கமிருக்கப் பெற்றதாயுமுள்ள பாண்டிவளநாட்டிற் பரம்பரைச்சைவ வேளாளர் குலத்தில் சற்றேறக்குறைய இருநூறு வருடங்கட்குமுன் அவதரித்து வளர்ந்து கல்வியறிவாலுயர்ந்தவராய்த் திருக்கயிலாசபரம்பரைத் திருவாவடுதுறையாதினத்தை யடைந்து, அக்காலம் ஆங்கெழுந்தருளிய ஞானசாரியராகிய அம்பலவாணதேசிக மூர்த்திகளிடம் சிவதீக்ஷை பெற்றுத் துறவறத்தையடைந்து தவத்தால் மனந்தூயராய தம்பிரானு யிருந்தனர்.

அங்ஙனமிருக்குங் காலத்தில் இவருடைய நற்குண நற்செய்கைளையுஞ்சிவபத்தி குருபத்தி யடியார்பத்தித் திறத்தையும் பேரறிவையும் ஆங்குத்தரிசனத்துக்கு வந்திருந்த பாண்டிநாட்டின் றிலகமாய் விளங்கும் திருநெல்வேலி மயிலேறும் பெருமாள்பிள்ளை யென்பவர் அறிந்து இத்தகைய கூரிய புத்தியுடையார்க்கன்றோ நாம் கற்ற நூல்களையெல்லாம் போதிக்கவேண்டுமென்று நினைத்து ஞானசாரியர் ஆஞ்ஞையால் இவரை யழைத்துக்கொண்டுவந்து தமதருமைப்புதல்வரினுமதிகமாக அன்புபாட்டித் தினந்தோறு முபசரித்துத்தொல்காப்பிய விலக்கணத்தினரியவுரைகள் நான்கையும் மற்றையிலக்கணங்களையும் திருவள்ளுவர் குறளின் பலவுரைகளையும் திருக்கோவையாருரையையும் சங்கமருவியனவாகிய சீவக சிந்தாமணியாதிய பஞ்சகாவியங்களையும் பத்துப்பாட்டு, எட்டுத்தொகை முதலிய பல நூல்களையும் பன்னிரண்டு வருடம் ஐயந்திரிபறக் கற்பித்துப் பின்னர் திருநெல்வேலிக்குக் கீழ்பாலுள்ள செப்பறைப்பதியில் வசிக்கும் கனகசபாபதி சிவாசாரியரால் வடமொழி வியாகரண முதலிய நூல்களையும் நிரம்பக் கற்பிக்குமாறு செய்தனர். இங்ஙனம் தமிழ் வடமொழியிரண்டையுங் கற்றுத் தேர்ச்சியுற்ற தம்பிரானவர் இவ்விரண்டு வித்தியா குருமாரிடத்திலும் பெரிதும் பத்தி பண்ணியிருந்தனரென்பது தாம்கூறிய இலக்கணக்கொத்து என்னும் அரியநூலில்.

"திருநெல் வேலி யெனுஞ்சிவ புரத்தன்
ஞண்டவ மூர்த்தி தந்தசெந் தமிழ்க்கடல்
வாழ்மயி லேறும் பெருமாண் மகிபதி
யிருபத கமல மென்றலை மேற்கொண்
டிலக்கணக் கொத்தெனு நாலியம் புவனே"

"செப்பறைப் பதியில் வாழ்சிவத் துவிசன்
கனக சபாபதி கருது வடநூற்கட
றபோதனர் புகழுஞ் சைவாதி ராச
னுபய பதங்களை யுண்மையொடு பணிவாம்"

என்று சொல்லிய வித்தியா குருவணக்கங்க ளாலே நன்கு விளங்கும். பின்னர் மயிலேறும் பெருமாள் பிள்ளை இவரை அழைத்துக் கொண்டு திருவாவடுதுறைக்குப் போய்த் தமது ஞானசாரியரிடம் ஒப்புவித்த னர். அதன் மேல் இந்நூலாசிரியராகிய இவர் நிருவாண தீக்ஷை பெற்று வீடுபேற்றிற்குரிய ஞானநூல்களை யெல்லாங் கற்றுச் சிந்தித் துத் தெளிந்திருந்தனர். இவரிங்ஙன மிருக்குங்காலத்தி லொருநாள் ஆங்குவந்த இலக்கணவிளக்க நூலாசிரியராகிய வயித்தியநாத நாவலர் இவரைக்கண்டு கலந்துபேசும்போது, இவரது படிப்பின்றிறமையை நோக்கித் தொல்காப்பியமுதலிய நூல்களை யெழுத் தெண்ணிப்படித்த சுவாமிக ளிங்கிருப்பதை யறியாது காலம்போக்கினேனென்று சிலநா ளிவருடனிருந்து நூலாராய்ச்சி செய்து வந்தனரே லிவருடைய கல் வியின் பெருக்கத்தை யாவர் சொல்ல வல்லவர்.

சிலநாட் சென்றபின் ஞானாசிரியராகிய அம்பலவாணதேசிகர் இந்நூலாசிரியருக்கு மயிலேறும் பெருமாள்பிள்ளை பிரார்த்தனைப்படி ஆசாரியாபிஷேகஞ் செய்து சுவாமிநாத தேசிகரென்னு மியற்பெய ரோடு ஈசான தேசிகரென்னும் அபிஷேகச் சிறப்புப்பெயருந் தந்தரு ளித் திருநெல்வேலியிலே தமதாதீன மடாலயத்திலிருக்கும்படி கட் டளையிட்டனர்.

அவ்வாறே சுவாமிநாததேசிகர் எழுந்தருளி வந்திருந்தனர். அன்றுமுதல் திருநெல்வேலியிலிருக்கும் மடாலயத்துக்கு ஈசான மட மெனப் பெயருண்டாயிற்று. பின்னர் சுவாமிநாத தேசிகர் தாங்கற்ற இலக்கணநூல்களினுள்ள அரியவிதிகளை யெல்லாந்திரட்டி இலக்கணக் கொத்தென வொருநூல் நம்மனோர்க்குப்பயன்படும்படி பாடி யருளின துடன் அதற்கு உரையுமெழுதியருளினர், இவ்வுரை யரியதினுமரியது

பெரியதினும் பெரியது. இம்மட்டோ ஞானசாத்திரங்களி னுட்பக் கருத்துக்களை யெல்லாந் திரட்டித் தசகாரியமென்னு மொரு நூலையும் வேறுபல நூல்களையுஞ் செய்ததுமன்றி, நன்னூலுக்கு விருத்தியுரை செய்த சங்கர நமச்சிவாயப்புலவர் முதலாயினோர் பலருக்கும் போதகாசிரியராயு மிருந்தனர். இவர் போல மூன்றாசிரியராயுயர்ந்து விளங்கினோரொருவருமில்லை. இவ்வாறு பொழுதுபோக்குங் காலத்தில் சுவாமிநாததேசிகர் புண்ணிய விசேடகாலந் தோறுந் திருச்செந்தூருக்குச் சென்று முருகக்கடவுளைத் தரிசனஞ்செய்து வருவாராய் அக்கடவுண் மீது பலபாக்களுங் கலந்திருக்கு நயம்பற்றிக் கலம்பகமென்னு மிந் நூலைப்பாடி எம்பிரானாகிய குமாரக்கடவுளுக்குச் சமர்ப்பித்தனர். இந்நூல், கற்பவர் மனத்தைக் கவருஞ் செஞ்சொற்களும் செம்பொருளும் பலசந்த நயங்களும் பிறவுமமைந்து பத்திச்சுவை பழுத்துத் தித்திக்கப் பெறுங் கற்பகம் போலிருக்கிறது.

இந்நூலில் (30) தோத்திரச் செய்யுள்களுள்ளன; அவைகளை யக்காலத்திலுள்ள அன்பர்களும் அறிஞர்களும் கொண்டாடப்பெற்று க்குமாரக்கடவுள் பள்ளியறைக் கெழுந்தருளும்போது ஓதுவாமூர்த்திகளாற் படிக்கப்பெற்றுவருவது இன்றும் பிரத்தியக்ஷமாகக் காணலாம். சுவாமிநாததேசிகர் சரித்திர மிவ்விடத்துக்கு வேண்டியமட்டுஞ் சுருக்கிச் சொன்னேன் முழுதுந் தெரியவேண்டுவார் இலக்கணக்கொத்து முகவுரையிலே யாழ்பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் எழுதியுள்ளார். அதிலே தெரிந்துகொள்ளக் கடவர். சுபம், சுபம், சுபம்.

---

‡ 30 செய்யுளாவன: இந்நூலிற் புள்ளியுடையாள மிட்டுள்ளவையாம்.

இங்ஙனம்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

☞ மு. ரா. அருணாசலக் கவிராயர்.

உ

குமரன்றுணை.

## குமரகுருபரசுவாமிக ளருளிச்செய்த

# திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா.

(க) பூமேவு செங்கமலப் புத்தேளுந் தேறரிய
பாமேவு தெய்வப் பழமறையுந்—தேமேவு
நாதமுநா தாந்த முடிவு நவைதீர்ந்த
போதமுங் காணாத போதமா—யாதிநடு
அந்தங் கடந்தநித்தி யானந்த போதமாய்ப்
பந்தந் தணந்த பரஞ்சுடராய்—வந்த
குறியுங் குணமுமொரு கோலமுமற் றெங்குஞ்
செறியும் பரம சிவமா—யறிவுக்

(ரு) கநாதியா யைந்தொழிற்கு மப்புறமா யன்றே
மநாதிகளுக் கெட்டா வடிவாய்த்—தனாதருளின்
பஞ்சவித ரூப பரசுகமா யெவ்வுயிர்க்குந்
தஞ்சமென நிற்குந் தனிப்பொருளா—யெஞ்சாத
பூரணமாய் நித்தமாய்ப் போக்குவர வும்புணர்வுங்
காரணமு மில்லாக் கதியாகித்—தாரணியி
லிந்திரசா லம்புரிவோன் யாவரையுந் தான்மயக்குந்
தந்திரத்திற் சாராது சார்வதுபோன்—முந்துங்
கருவின்றி நின்ற கருவா யருளே
யுருவின்றி நின்ற வுருவாய்த்—திரிகரணம்

---

• (க) புத்தேள்-கடவுள். தேறு அரிய-தெளிதற் கரிதாகிய. பா-பாவுதல். தேம்-இனிமை. நாதாந்தமுடிவு. சிவதத்துவத் திறுச்சி. நவைதீர்ந்த-குற்ற நீங்கிய. போதம்-அறிவு. நித்தியானந்தபோதம்-ச்சிதானந்தம். பந்தம்-(மலக்) கட்டு. தணந்த-நீங்கிய. குறி-அடையாளம். செறியும்-நெருங்கும்.

(ரு) ஐந்தொழிற்கும்-பஞ்சகிருத்தியங்கட்கும்-மனாதிகள் - மனமுதலிய அந்தக்கரணங்கள். தனாது-தன்னுடைய. பஞ்சவிதரூபம்-ஐந்துவகை வடிவும்; பிரமனாதியர் திருமேனி. தஞ்சம்-ஆதாரம். எஞ்சாத-குறையாத. நித்தம்-நித்தியப் பொருள்-போக்கு வரவு. மரணமும் சனனமும். புணர்வு-சம்பந்தம். தந்திரத்திற் சாராது-உபாயத்திற் சேராமல். கரு-மூலம். உரு-வடி (வாகி). இன்றி-(மற்றொன்) றில்லாமல். திரிகரணம்-மனம், வாக்கு, காயம்.

(௯) ஆகவரு மிச்சை யறிவியற்ற லாலிலய
போகவதி காரப் பொருளாகி—யேகத்
துருவு மருவு முருவருவு மாகிப்
பருவ வடிவம் பலவா—யிருண்மலத்துண்
மோகமுறும் பல்லுயிர்க்கு முத்தியளித் தற்குமல
பாகமுற வேகவடைக்கண் பாலித்துத்—தேகமுறத்
தந்த வருவுருவஞ் சார்ந்தவிந்து மோகினிமான்
பெந்த முறவே பிணிப்பித்து—மந்த்ரமுதல்
ஆறத்து வாவுமண்டத் தார்ந்தவத்து வாக்களுமுற்
கூறத் தகுஞ்சிமிழ்ப்பிற் கூட்டுவித்து—மாறிவரும்.

(௰) ஈரிரண்டு தோற்றத் தெழுபிறப்புள் யோனியெண்பா
னூரவந்த நான்குநா றுயிரத்துட்—டீர்வரிய
கன்மத்துக் கீடாய்க் கறங்குஞ் சகடமும்போற்
சென்மித் துழலத் திரோதித்து—வெந்நிரய
சொர்க்காதி போகமெல்லாந் துய்ப்பித்துப் பக்குவத்தா
னற்கா ரணஞ்சிறிது நண்ணுதலுந்—தர்க்கமிடுந்
தொன்னூற் பரசமயந் தோறு மதுவதுவே
நன்னூ லெனத்தெரிந்து நாட்டுவித்து—முன்னூல்
விரதமுத லாயபல மெய்த்தவத்தி னுண்மைச்
சரியைகிரி யாயோகஞ் சார்வித்—தருள்பெருகு.

---

(௯) இச்சை அறிவு இயற்றல் ஆல்-இச்சா ஞானக்கிரியை யால் இலயம் ஒன்றையடைதல் - போகம் - அதையநுபவித்தல் - அதிகாரம் - தொணடெடுத்தல். பருவ-பக்குவப்பட்ட. இருண்மலம் - ஆணவமாயைகன்மமென்னும் மலம். உயிர்க்கு - சகலராகிய ஆன்மார்களுக்கு. அளித்தற்கு - கொடுத்தற் பொருட்டு. மலபாகம் - இருவினையொப்பு; அஃதாவது: இன்பமுந் துன்பமுஞ் சமமாக நினைத்தல். விந்து - சுத்தமாயை. மோகினி - அசுத்தமாயை. மான் - பிரகிருதிமாயை. பெந்தம் - கட்டு - பிணிப்பித்து - கட்டச்செய்து. மந்திரமுதலாறு-மந்திரம், பதம், வன்னம், புவனம், தத்துவம், கலை என்பன. அத்துவா - வழி. அண்டத்து உலகத்தில். ஆர்ந்த - நிறைந்த. சிமிழ்ப்பில் - கட்டில்.

(௰) தீர்வரிய நீங்கமுடியாத. கன்மத்துக்கு - வினைக்கு. கறங்கும் - காற்றாடியும். சகடமும் - பண்டியிற் சக்கரமும். திரோதித்து - மறைத்து. வெந்நிரயம் - கொடியநாகம். துய்ப்பித்து-அநுபவிக்கச்செய்து. தொன்னூல் - பழைய சாத்திரம். பரசமயம் - அந்நியசமயம், நாட்டுவித்து - நாடச்செய்து. சார்வித்து - சாரச்செய்து.

(உ௰)சாலோக சாமீப் சாரூப மும்புசிப்பித்
தாலோகந் தன்னை யகற்றுவித்து—நால்வகையாஞ்
சத்திநி பாதந் தருதற் கிருவினையு
மொத்துவருங் கால முளவாகிப்—பெத்த
மலபரி பாகம் வருமளவிற் பன்னு
மலமருதல் கண்ணுற் றருளி—யுலவாத்
தறிவுக் கறிவாகி யவ்வறிவுக் கெட்டா
நெறியிற் செறிந்தநிலை நீங்கிப்—பிறியாக்
கருணை திருவுருவாய்க் காசினிக்கே தோன்றிக்
குருபரனென் றோர்திருப்பேர் கொண்டு—திருநோக்கால்.

(உ௫)ஊழ்வினையைப் போக்கி யுடலறுபத் தெட்டுநில
மேழுமத்து வாக்க ளிருமூன்றும்—பாழாக
ஆணவ மான படலங் கிழித்தறிவிற்
காணரிய மெய்ஞ்ஞானக் கண்காட்டிப்—பூணும்
அடிஞானத் தாற்பொருளு மான்மாவுங் காட்டிக்
கடியார் புவனமுற்றுங் காட்டி—முடியாது
தேக்குபர மானந்தத் தெள்ளமுத மாகியெங்கு
நீக்கமற நின்ற நிலைகாட்டிப்—போக்கும்
வரவு நினைப்பு மறப்பும் பகலு
மிரவுங் கடந்துலவா வின்ப—மருவுவித்துக்

---

(உ௰) புசிப்பித்து-அநுபவிக்கச்செய்து. ஆலோகம் - தெளிந்த அறிவு - அகற்றுவித்து - விரியச்செய்வித்து. நால்வகை-மந்ததரம், மந்தம், தீவிரதரம், தீவிரம். சத்திநிபாதம். திருவருள் பதிகல். உளவாகி - உண்டாகி. பெத்த மலபரிபாகம் - கட்டியமலம் பக்குவப்படுஞ்சமயம். அலமருதல் - சுழன்றிருத்தலை. காசினிக்கு - பூமியினிடத்தில்.

(உ௫) உடலறுபத்தெட்டு - தூல சூக்கும தேகங்களிலுள்ள கருவிகள் அறுபத்தெட்டு; இவற்றுள் தூலதேகமாகிய புறக்கருவிகள் அறுபது. சூக்குமதேகமாகிய புரியட்டதேகத்தின் கருவி எட்டு; அவை: சத்தபரிச ரூபரசகந்தமும் மனம் புத்தி அகங்காரமும் என்பன, புறக்கருவி அறுபதுங்கட்டளைக் கொத்திற் காண்க. எழ் நிலமும்- மூலதாரமுதலிய ஆறுதாரமும், அதன் மேலோராதாரமு மில்லாத சூனியாகாசமுமாகிய எழிடங்களும். படலம்-இருள். அடிஞானம்-சிவத்தையறியுஞானம். பொருள்-பதி. தேக்கு-நிறைந்த.

(௩௰)கன்மமலத் தார்க்குமலர்க் கண்மூன்றுந் தாழ்சடையும்
வன்மழுவு மானுமுடன் மால்விடைமேன்—மின்னிடத்துப்
பூத்த பவளப் பொருப்பொன்று வெள்ளிவெற்பில்
வாய்த்தனைய தெய்வ வடிவாகி—மூத்த
கருமமலக் கட்டறுத்துக் கண்ணருள்செய் துண்ணின்
றொருமலத்தார்க் கிளைய முதவிப்—பெருகியெழு
மூன்றவத்தை யுங்கழற்றி முத்தருட னேயிருத்தி
யான்றபர முத்தி யடைவித்துத்—தோன்றவரும்
யானெனதென் றற்ற விடமே திருவடியா
மோனபரா னந்த முடியாக—ஞானந்.

(௩௫)திருவுருவா விச்சை செயலறிவு கண்ணா
வருளதுவே செங்கை யலரா—விருநிலமே
சந்நிதியா நிற்குந் தனிச்சுடரே யெவ்வுயிர்க்கும்
பின்னமற நின்ற பெருமானே—மின்னுருவந்
தோய்ந்தநவ ரத்னச் சுடர்மணியாற் செய்தபைம்பொன்
வாய்ந்த கிரண மணிமுடியுந்—தேய்ந்தபிறைத்
துண்டமிரு மூன்றுநிரை தோன்றப் பதித்தனைய
புண்டரம் பூத்தநுதற் பொட்டழகும்—விண்ட
பருவமலர்ப் புண்டரிகம் பன்னிரண்டு பூத்தாங்
கருள்பொழியுங் கண்மலரீ ராறும்—பரிதி.

---

(௩௰)கன்மமலத்தார்க்கு - ஆணவமலத்துடன் கன்மமல முடையபிரளயாக லராகிய ஆன்மாக்களுக்கு மின் - உமாதேவி, இடத்தில் - இடப்பக்கத்தில் பூத்த-தோன்றிய. வாய்த்து. பொருந்தினால். அனைய-ஒத்த. மூத்த-முதிர்ந்த. ஒருமலத்தார்க்கு-ஆணவமல மொன்றேயுடைய விஞ்ஞானகலராகிய ஆன்மாக் களுக்கு. மூன்றவத்தை-கேவலாவத்தை, சகலாவத்தை, சுத்தாவத்தை யென் பன. ஆன்ற - நிறைந்த. பரமுத்தி - திருவடிமோக்ஷம். அற்ற - கெட்ட. இடம் - தானம் - ஆ - ஆக. முடி - தலை.

(௩௫) இச்சை அறிவு செயல் - இச்சா ஞானக் கிரியை. இருநிலமே - பெரியபூமியே. சந்நிதி- ஆலயம். பிறைத்துண்டம். அர்த்தசந்திரன் நிரை - வரிசை. பதித்தனைய - பதித்தாற் போன்ற. புண்டரம். விபூதிக்குறி. பூத்தாங்கு - பூத்ததுபோல. பரிதி - சூரியன்.

(சல)பலவு மெழுந்துசுடர் பாலித்தாற் போலக்
குலவு மகரக் குழைபு—நிலவுமிழும்
புன்முறுவல் பூத்தலர்ந்த பூங்குமுதச் செவ்வாயுஞ்
சென்மவிடாய் தீர்க்குந் திருமொழியும்—வின்மலிதோள்
வெவ்வசுரர் போற்றிசைக்கும் வெஞ்சூ ரனைத்தடிந்து
தெவ்வருயிர் சிந்துந் திருமுகமு—மெவ்வுயிர்க்கும்
ஊழ்வினையை மாற்றி யுலவாத பேரின்ப
வாழ்வுதருஞ் செய்ய மலர்முகமுஞ்—சூழ்வோர்
வடிக்கும் பழமறைக ளாகமங்க ளியாவு
முடிக்குங் கமல முகமும்—விடுத்தகலாப்

(சரு)பாச விருடரந்து பல்கதிரிற் சோதிவிடும்
வாச மலர்வதன மண்டலமு—நேசமுடன்
போகமுறும் வள்ளிக்கும் புத்தேளிர் பூங்கொடிக்கு
மோக மளிக்கு முகமதியுந்—தாகமுடன்
வந்தடியிற் சேர்ந்தோர் மகிழ வரம்பலவுந்
தந்தருளுந் தெய்வமுகத் தாமரையுங்—கொந்தவிழ்ந்த
வேரிக் கடம்பும் விரைக்குரவும் பூத்தலர்ந்த
பாரப் புயசயிலம் பன்னிரண்டு—மாரமுதந்
தேவர்க் குதவுந் திருக்கரமுஞ் சூர்மகளிர்
மேவக் குழைந்தணைந்த மென்கரமு—மோவாது

(ருல)மாரி பொழிந்த மலர்க்கரமும் பூந்தொடையல்
சேர வணிந்த திருக்கரமு—மார்பகத்தில்
வைத்த கரதலமும் வாமமருங் கிற்கரமு
முய்த்த குறங்கி லொருகரமு—மொய்த்த

---

(சல) பாலித்தால் - கொடுத்தால். நிலவு-சந்திரகிரணம். புன்முறுவல்-சிறியபற்கள். பூத்து-உண்டாகி. குமுதம்-செவ்வல்லிமலர்போன்ற. சென்மவிடாய் - பிறவி வெப்பம். போற்று -தோத்திரம். உலவாத - கெடாத. வடிக்கும் - தெளித்தெடுக்கும் முடிக்கும்-ஆக்கும்.

(சரு) கதிரின்-சூரியனைப்போல. புத்தேளிர்பூங்கொடி - தெய்வயானை. கொந்து-பூங்கொத்து. வேரி-தேன். விரைக்குரவு-வாசனையுடையகுராமலரும சூர்மகளிர்-தெய்வப்பெண்கள். ஓவாது-நீங்காமல்.

(ருல) வாமமருங்கில்-அழகியஇடையில். குறங்கில்உய்த்த-தொடையிற்

சிறுதுடிசேர் கையுமணி சேர்ந்ததடங் கையுங்
கறுவுசம ரங்குசஞ்சேர் கையுந்—தெறுபோர்
அதிகே டகஞ்சுழற்று மங்கைத் தலமுங்
கதிர்வாள் விதிர்க்குங் கரமு—முதிராத
கும்பமுலைச் செவ்வாய்க் கொடியிடையார் வேட்டணைந்த
வம்பொன் மணிப்பூ ணகன்மார்பும்—பைம்பொற்

(௫௫)புரிநூலுங் கண்டிகையும் பூம்பட் டுடையு
மரைஞாணுங் கச்சை யழகுந்—திருவரையு
நாதக் கழலு நகுமணிப்பொற் கிண்கிணியும்
பாதத் தணிந்த பரிபுரமுஞ்—சோதி
யிளம்பரிதி நூறு யிரங்கோடி போல
வளந்தரு தெய்வீக வடிவு—முளந்தனிற்கண்
டாதரிப்போர்க் காருயிரா யன்பரகத் தாமரையின்
மீதிருக்குந் தெய்வ விளக்கொளியே—யோதியவைந்
தோங்காரத் துள்ளொளிக்கு முள்ளொளியா யைந்தொழிற்கு
நீங்காத பேருருவாய் நின்றோனே—தாங்கரிய.

(௬௰)மந்திரமே சோரியா வான்பதமே மாமுடியாத்
தொந்தமுறும் வன்னமே தொக்காகப்—பந்தனையா
லொத்த புவனத் துருவே யுரோமமாத்
தத்துவங்க ளேசத்த தாதுவா—வைத்த
கலையே யவயவமாக் காட்டுமத்து வாவி
னிலையே வடிவமா நின்றோய்—பலகோடி

---

செலுத்திய. துடி-உடுக்கு. கறுவு-கோபிக்கின்ற. சமர்-யுத்தம். அங்குசம்-தோட்டி. தெறு-வருத்துகின்ற. சுழற்றும்-சுற்றும். விதிர்க்கும்-அசைக்கும்.

(௫௫) புரிநூல்-பூணூல். கழல்-வீரக்கழல். நகு-விளங்குகின்ற. பரிபுரம்-சிலம்பு. தெய்வீகம்-தெயவத்தன்மை. ஐந்து ஓங்காரத்து - அகாம், உகரம், மகரம், விந்து: நாதம் என்னும் ஐந்துறுப்புகளையுடைய பிரணவ மந்திரத்தின்.

(௬௰) மந்திரம் - மந்திராத்துவா. சோரி-இரத்தம். பதம் - பதாத்துவா. வன்னம்-வன்னத்துவா. தொக்கு-தோல். பந்தனை-கட்டு. புவனம்-புவனத்துவா. தத்துவம்- தத்துவாத்துவா. சத்ததாது -எழுவகைத் தாதுக்கள்; அவை:

யண்ட முருவாகி யங்கஞ் சராசரமாய்க்
கண்டசத்தி மூன்றுட் கரணமாய்த்—தொண்டுபடும்
ஆவிப்புலனுக் கறிவளிப்ப வைந்தொழிலும்
ஏவித் தனிநடத்து மெங்கோவே—மேவ.

(௬௫)வருமட்ட மூர்த்தமாம் வாழ்வேமெய்ஞ் ஞானந்
தருமட்ட யோகத் தவமே—பருவத்
தகலாத பேரன் படைந்தோ ரகத்துட்
புகலாகு மின்பப் பொருப்புஞ்—சுகலளிதப்
பேரின்ப வெள்ளப் பெருக்காறு மீதானந்
தேரின்ப நல்குந் திருநாடும்—பாரின்ப
மெல்லாங் கடந்த விருநிலத்துட் போக்குவர
வல்லா துயர்ந்த வணிநகருந்—தொல்லுலகி
லீறு முதலுமகன் றெங்குநிறைந் தைந்தெழுத்தைக்
கூறி நடாத்துங் குரகதமு—மேறுமதந்

(௬௭)தோய்ந்து களித்தோர் துதிக்கையினுற் பஞ்சமலங்
காய்ந்தசிவ ஞானக் கடாக்களிறும்—வாய்ந்தசிவ
பூரணத்துட் பூரணமாம் போதம் புதுமலரா
நாரகத்துட் கட்டு நறுந்தொடையுங்—காரணத்துள்
ஐந்தொழிலு மோவா தளித்துயர்ந்த வான்கொடியும்
வந்தநவ நாத மணிமுரசுஞ்—சந்ததமு

---

மேலேகூறிய, இரத்தம் தோல்நீக்கிய ஐந்து தாதுக்கள். கலை - கலாத்துவா. அங்கம்-அவயவம். சத்திமூன்று-இச்சாஞானக்கிரியாசத்திகள். உட்கரணம்-அந்தக்கரணங்கள். ஆவி - உயிர்களின். புலனுக்கு - அறிவுக்கு.

(௬௫) அட்டமூர்த்தம - பஞ்சபூதங்கள், சூரியன், சந்திரன், ஆன்மா ஆகிய எட்டு வடிவம். அட்டயோகம்-அட்டாங்கயோகம். இன்பப்பொருப்பு - ஆனந்தமாகியமலை. லளிதம்-அழகு. மீதானம்-பிரமரந்திரம். அணிநகர்-அழகிய நகரம். குரகதம் - குதிரை. கடந்த நகரெனக்கூட்டுக. ஏறுமதம் - உயர்ந்த சிவமதம்.

(௬௭) துதிக்கையினல்-தோத்திரஞ்செய்தலால். பஞ்சமலம்-ஆணவம், மாயை, கன்மம், திரோதானம், மாயேயம் என்பன. இவற்றுள், திரோதனத்தை மூலமலமெனவுங் கூறுவர். கடாக்களிறு-மதயானை. பூரணம் - நிறைவு. புதுமலரா-புதியபூவாக. நார்-அன்பு. தொடை-மாலை. வான்-பெரிய. நாதம்-

நீக்கமின்றி யாடி நிழலசைப்பான் போற்புவன
மாக்கி யசைத்தருளு மாணையுந்—தேக்கமழ்ந்து
வீசும் பனுவல் விபுதர் தனித்தனியே
பேசுந் தசாங்கமெனப் பெற்றோனே—தேசுதிகழ்.

(எரு)பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப்
பாங்குறையு முக்கட் பரஞ்சோதி—யாங்கொருநாள்
வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி
யைந்து முகத்தோ டதோமுகமுந்—தந்து
திருமுகங்க ளாறாகிச் செந்தழற்க ணாறு
மொருமுகமாய்த் தீப்பொறியா றுய்ப்ப—விரிபுவன
மெங்கும் பரக்க விமையோர்கண் டஞ்சுதலும்
பொங்கு தழற்பிழம்பைப் பொற்கரத்தா—லங்க
ணெடுத்தமைத்து வாயுவைக்கொண் டேகுதியென் றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக் கொடுபோ—யடுத்ததொரு

(அய)பூதத் தலைவகொடு போதியெனத் தீக்கடவுள்
சீதப் பகீரதிக்கே சென்றுய்ப்பப்—போதொருசற்
றன்னவளுங் கொண்டமைதற் காற்றாள் சரவணத்திற்
சென்னியிற்கொண் டுய்ப்பத் திருவுருவாய்—முன்னர்
அறுமீன் முலையுண் டழுது விளையாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன்—குறுமுறுவற்
கன்னியொடுஞ் சென்றவட்குக் காதலுருக் காட்டுதலு
மன்னவள்கண் டவ்வுருவ மாறினையுந்—தன்னிரண்டு
கையா லெடுத்தணைத்துக் கந்தனெனப் பேர்புனைந்து
மெய்யாறு மொன்றாக மேவுவித்துச்—செய்ய

---

நாதத்துவமாகிய. ஆடிநிழல்-கண்ணாடி நிழல். தேக்கமழ்ந்து - வாசனைசெய்து. விபுதர்-தேவர். தசாங்கம்-(அரசருக்குரிய) பத்தங்கம்.

(எரு) தகுவர்க்கு-அசுரருக்கு. ஆற்றாத-இளைத்த. முறை - முறைபாடு. அதோமுகம்-கீழேநோக்கியமுகம். தந்து-(தாற்பரியம்)சேர்த்து. ஒருமுகமாய்-ஒருவழிப்பட. பிழம்பு-கூட்டம. அடுத்து-(தன்னை) அடுத்ததாகிய.

(அய) பூதத்தலைவ - அக்கினிக்குத் தலைவனே. கொடுபோதி-கொண்டு போவாய். பகீரதிக்கு - கங்கைநதியினிடத்து. போது - (அப்)போது. ஒருசற்று-மிகச்சிறிது தூரம். சரவணம்-சரவணப்பொய்கை. அறுமீன்-கார்த்திகை முதலிய ஆறு நட்சத்திரங்களாகிய தாய்மார். கன்னி-உமாதேவி. காதல் - புத்திரன். மெய்யாறும்-ஆறுதிருமேனியும். மேவுவித்து-பொருந்தச்செய்து.

(அ௫) முகத்தி லணைத்துச்சி மோந்து முலைப்பா
லகத்துண் மகிழ்பூத் தளித்துச்—சகத்தளந்த
வெள்ளை விடைமேல் விமலன் கரத்திலளித்
துள்ள முவப்ப வுயர்ந்தோனே—கிள்ளைமொழி
மங்கை சிலம்பின் மணியொன் பதிற்றோன்றுந்
துங்க மடவார் துயர்தீர்ந்து—தங்கள்
விருப்பா லளித்தநவ வீரருக்குண் முன்னோன்
மருப்பாயுந் தார்வீர வாகு—நெருப்பிலுதித்
தங்கட்புவன மனைத்து மழித்துலவுஞ்
செங்கட் கடாவதனைச் சென்றுகொணர்ந்—தெங்கோன்

(கூ0) விடுக்குதியென் றய்ப்பவதன் மீதிவர்ந்தெண் டிக்கு
நடத்தி விளையாடு நாதா—படைப்போன்
அகந்தை யுரைப்பமறை யாதி யெழுத்தொன்
றுகந்த பிரணவத்தி னுண்மை—புகன்றிலையாற்
சிட்டித் தொழிலதனைச் செய்வதெங்ங னென்றுமுனங்
குட்டிச் சிறையிருத்துங் கோமானே—மட்டவிழும்
பொன்னங் கடுக்கைப் புரிசடையோன் போற்றிசைப்ப
முன்னம் பிரம மொழிந்தோனே—கொன்னெடுவேற்
றாரகனு மாயத் தடங்கிரியுந் தூளாக
வீர வடிவேல் விடுத்தோனே—சீரலைவாய்த்

---

(அ௫) சகத்து-பூமியை. மங்கை-உமாதேவி. சிலம்பின் - பாதசரத்தின் மடவார்-நவசத்திகள். மரு-வாசனை. நெருப்பில்- (நாரதமுனிவர் யா)காக்கினியில். கடா-ஆட்டுக்கடாவை. எங்கோன்-தலைவனே.

(கூ0) விடுக்குதி- ஏறி நடாத்துவாய். இவர்ந்து - ஏறி. படைப்போன் பிரமா. மறைஆதி-வேதத்துக்கு மூதலாயுள்ள. எழுத்தொன்று-ஓரெழுத்தாகிய. பிரணவத்தின்-பிரணவமந்திரத்தின். புகன்றிலை-சொன்னாயில்லை. சிட்டி-சிருட்டி. மட்டுஅவிழும்-தேன்ஒழுகும். பிரமம்-பிரணவப்பொருளினுண்மை. மாயம்-வஞ்சனையுடைய. கிரி-கிரௌஞ்சமலை.

(கூடு)தெள்ளு திரைகொழிக்குஞ் செந்தூரிற் போய்க்கருணை
வெள்ள மெனத்தவிசின் வீற்றிருந்து—வெள்ளைக்
கயேந்திரனுக் கஞ்ச லளித்துக் கடல்சூழ்
மயேந்திரத்திற் புக்கிமையோர் வாழச்—சயேந்திரனுஞ்
சூரனைச்சோ தித்துவரு கென்றுதடந் தோள்விசய
வீரனைத்தூ தாக விடுத்தோனே—காரவுணன்
வானவரை விட்டு வணங்காமை யாற்கொடிய
தானவர்க ணாற்படையுஞ் சங்கரித்துப்—பானு
பகைவன் முதலாய பாலருடன் சிங்க
முகனைவென்று வாகை முடித்தோய்—சகமுடுத்த

(ஈ) வாரி தனிற்புதிய மாவாய்க் கிடந்தநெடுஞ்
சூருடலங் கீண்ட சுடர்வேலோய்—போரவுணன்
அங்கமிரு கூறு யடன்மயிலுஞ் சேவலுமாய்த்
துங்கமுட ணார்த்தெழுந்து தோன்றுதலு—மங்கவற்றுட்
சீறுமர வைப்பொருத சித்ரமயில் வாகனமா
வேறி நடாத்து மிளையோனே—மாறிவரு
சேவற் பகையைத் திறல்சேர் பதாகையென
மேவத் தனித்துயர்த்த மேலோனே—மூவர்
குறைமுடித்து விண்ணங் குடியேற்றித் தேவர்
சிறைவிடுத்தாட் கொண்டளித்த தேவே—மறைமுடிவாஞ்

(ஈரு)சைவக் கொழுந்தே தவக்கடலே வானுதவுந்
தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே—பொய்விரவு
காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு

---

(கூடு) வெள்ளைக்கயம்-வெள்ளையானை. அஞ்சல் - அபயாஸ்தம். மயேந்திரம் - சூரன்பட்டணம். சயேந்திரனும் - வெற்றியிலுயர்ந்தவனுகிய. விட்டு-(சிறை) விடுத்து. தானவர்-அசுரர்கள். நாற்படை - ரதகசதுரகபதாதிகளாகிய சேனை. பானுபகைவன்-பானுகோபன்; சூரன் மகன்.

(ஈ) மாவாய்-மாமரமாகி. கிடந்த-தலைகீழாய்க்கிடந்த. சூர்-சூரன். கீண்ட-கிழித்த. அடல்-வலிமை. அரவை-பாம்பை. மாறி-உருமாறி. சேவல்-கோழியை. திறல்-வலிமை. பதாகையென-கொடியாக.

(ஈரு) தெய்வக்களிறு-தெய்வயானை. முனிவன் - சிவமுனிவர். வாமம் - அழகு. எனல்-தினை. பரிந்து-அன்புற்று. ஆறுதிருப்பதி - திருப்பரங்குன்றம்,

கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போ
லேனற் புனங்காத் தினிதிருந்து—மேன்மைபெறத்
தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே—யுள்ளமுவந்
தாறு திருப்பதிகண் டாறெழுத்து மன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே—நாறுமலர்க்

(௱ய)கந்திப் பொதும்பரெழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திற் பதிபுரக்குஞ் செவ்வேளே—சந்ததமும்
பல்கோடி சன்மப் பகையு மவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும்—பல்கோடி
பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பிசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையுந்—தீதகலா
வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையு
மெவ்விடம்வந் தெம்மை யெதிர்ந்தாலு—மவ்விடத்திற்
பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளு
மச்ச மகற்று மயில்வேலுங்—கச்சைத்

(௱யரு)திருவரையுஞ் சீறடியுஞ் செங்கையு மீரா
றருள் விழியு மாமுகங்க ளாறும்—விரிகிரணஞ்
சிந்தப் புனைந்த திருமுடிக ளோராறு
மெந்தத் திசையு மெதிர்தோன்ற—வந்திடுக்கண்
எல்லாம் பொடிபடுத்தி யெவ்வரமுந் தந்துபுகுந்
துல்லாச மாக வுளத்திருந்து—பல்விதமாம்
ஆசுமுத னாற்கவியு மட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையு—மோசை
யெழுத்துமுத லாமைந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்—தொழுக்கமுடன்

---

திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர்சோலை. ஆறெழுத்து-சடாக்ஷரமந்திரம் (நமகுமாரய;) இதைப்பிற்காலத்தார் சரவணபவ என்பர்.

(௱ய) கந்திப்பொதும்பர்-கமுகஞ் சோலையில். அயில்-கூர்மை.

(௱யரு) இடுக்கண்-துன்பம். உல்லாசம்-மகிழ்ச்சி. இயல்-தன்மை. ஓசை-கீர்த்தி. பாலித்து-அருளிச்செய்து.

(௱உம)இம்மைப் பிறப்பி லிருவா தனையகற்றி
　　மும்மைப் பெருமலங்கண் மோசித்துத்—தம்மைவிடுத்
தாயும் பழைய வடியா ருடன்கூட்டித்
　　தோயும் பரபோகந் துய்ப்பித்துச்—சேய
கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி யாட்கொண்
　　டடியேற்கு முன்னின் றருள்.

---

(௱உம) இம்மைப்பிறப்பில்-இந்தச்சனனத்தில். இருவாதனை-அகப்பற்றுத்துன்பம், புறப்பற்றுத்துன்பங்கள். மும்மை-மூன்று. மலங்கள் தம்மை-ஆணவம், மாயை, கன்மங்களை. மோசித்து விடுத்து-துறந்து-நீங்கி. பரபோகம்-சிவபோகம். துய்ப்பித்து-அநுபவிக்கச்செய்து. சேய-சிவந்த. கடி-வாசனை. ஏற்கும்-கொண்டிருக்கும்.

திருச்செந்தூர்க் கந்தர்கலிவெண்பா

முற்றிற்று.



இவ்வரும்பதவுரை யெழுதியவர்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

 மு. ரா. அருணாசலக் கவிராயர்.



உ

குமரன்றுணை.

திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா
அருளிச்செய்த

# குமரகுருபரசுவாமிகள் சரித்திரம்.

செந்தமிழ்ப் பாண்டித் திருநாட்டிற் சிறந்த தெய்வ நதியாகிய தாம்பிரபருணிநதி வடகரையிலிருக்கிற ஸ்ரீ வைகுண்டமென்று வழங்கிவருனங் கைலாச புரத்திலே யிற்றைக்குச் சற்றேறக்குறைய முந்நூற்றிருபது வருடங்களுக்கு முன்னே வேளாளர் குலத்திற் சிவநேசச்செல்வம் வாய்ந்த சண்முகசிகாமணிக்கவிராயரது தவப்பேறுக அவரருமை மனைவியாராகிய அருந்ததியனையகற்பமைந்த சிவகாமசுந்தரியார் திருவயிற்றி லொருபுத்திரரவதரித்தனர்; அவரை யருமைச் செல்வமாக அன்புபாராட்டி வளர்த்துவந்த மாதாபிதாக்களிருவரும் ஐந்து வயசு வரையும் அவர் வாய்பேசாதிருத்தலை நோக்கி மனவருத்தமுற்று, இனி யென்செய்வோமென்றேங்கி, திருச்செந்தூரையடைந்து எம்பெருமானாகிய குமாரக்கடவுளை வணங்கிச் சுவாமீ? உமதுதிருவருளாற் கிடைக்கப்பெற்ற இப்புத்திரன் வாய் பேசும்படி திருவருள் புரிந்தருளுக எனப் பிரார்த்தித்து நாற்பதுநாள் விரதாதிகளை யநுட்டித்துச் சடாக்ஷர மந்திரத்தைச் செபஞ் செய்துகொண் டிருந்தனர்.

இப்படியிருந்துங் குழந்தை வாய்பேசா திருத்தலால் இனி, சந்நிதிமுன் னிருக்கின்ற வதனாரம்ப தீர்த்தத்திலே நமது மனைவியுடன் விழுந்து மரணமடைந்து விடுவோம் நாமிருந்ததி லென்னபயனென்று, ஒருநாள் ஆலோசித்து முடிவுசெய்து அன்றிரவிலே சண்முக சிகாமணிக்கவிராயர் நித்திரை செய்தனர்; அவருடைய பத்தியையு மனவுறுதியையுந் தெரிந்து தாயனைய தயாநிதியாகிய நம் சண்முகப் பெருமான் சண்முகக் கவிராயர் விழித்தெழுதற்கு முன்னர் சண்முகவிலாசத்திலே யோரருச்சகர்வடிவங் கொண்டெழுந்தருளிப் புத்திரர் முன்பு போய்க் குமரகுருபரா வென்று தட்டி யெழுப்பி அவருடைய நாவிலே சடாக்ஷர மந்திரத்தை யெழுதிக் குழந்தையே நம்முடைய விசுவரூப தரிசனத்துக்கு வாவென்று கட்டளை யிட்டு மறைந்தருளினர்.

உடனே குமரகுருபர நாமஞ் சூட்டப்பெற்ற குழந்தையார் தமது மாதா பிதாக்களை அம்மே அப்பாவென்று தட்டியெழுப்பி நடந்த விஷயங்களைச்சொல்லுதலும் அவ்விருவரு மளவில்லாத மகிழ்ச்சியுற்று நம்பெருமான் றிருவருளை வியந்து நாம் பிழைத்தோம் பிழைத்தோமென் றெழுந்து புத்திரருடன் வதனாரம்ப ஸ்நானஞ்செய்து நித்திய கன்மமுடித்துக் கோயிலுக்குச் சென்று குமாரக் கடவுள் விசுவரூப கோலத்தைக் கண் குளிரத் தரிசித்துக் கும்பிட்டு நின்றனர். அப்போது குழந்தையாகிய குமரகுருபரசுவாமிகள் அதிசீக்கிரமாக *கந்தர் கலிவெண்பா என்னும்பிரபந்தத்தைப்பாடி யுடனேயரங்கேற்றி அவ்வெம்பிரான் றிருவருள் பெற்று இனி ஞானாசாரியரை யடைய வேண்டுமென் றெண்ணங்கொண்டு சடாக்ஷர மந்திரத்தைத் தம் நாவிலே தரித்த சண்முகப் பெருமானைப் பிரார்த்தித்தனர். அச்சமயத்தில் அப்பெருமான் கட்டளைப்படி அன்பனே நீயுத்தரயாத்திரை செய்தால் உன்வாக்கு யாவரிடத்திலே தடைபடுமோ? அவரே யுனக்கு ஞானாசாரிய ராவரென்று, ஓரசரீரி வாக்குண்டாக அதுகேட்டுக் குமரகுருபரசுவாமிகள் தம்மை யாட்கொண்ட பெருமானைத் துதித்து விடைபெற்றுத் தமது தந்தையாருடன் மீண்டு ஸ்ரீவைகுண்டத்தையடைந்து சிலகாலம் வசித்திருந்து ஒருதினம் மதுரைக்குப் போகவேண்டுமென்று தாய்தந்தையரிடம் விடைபெற்றுப் புறப்பட்டு, வரும்போதே மதுரை மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழைப்பாடி முடித்துத் திருப்பரங்குன்றத்திலே வந்து சுப்பிரமணிய சுவாமியைத்தரிசித்து அவ்விடத்தி லிருந்தனர்.

இவ்வாறிவ ரிருப்பதை மீனாக்ஷி யம்மை திருவருளால் தெரிந்த மதுரைமா நகரத்தை யரசாட்சிசெய்யுந் திருமலைநாயக்கர் சகல விருதுகளுடன் வந்தழைக்கக் குமரகுருபர சுவாமிகள் மதுரைக்குச் சென்று பிள்ளைத்தமிழை மீனாக்ஷியம்மைசந்நிதியி லரங்கேற்றித் தெய்விகங்காட்டித் திருமலைநாயக்கரால் கனகாபிஷேகஞ்செய்யப் பெற்றுப் பின்னர் அங்கு, சிலநாளிருந்து மீனாக்ஷியம்மை குறம், மீனாக்ஷியம்மை யிரட்டைமணிமாலை, மதுரைக் கலம்பகம், நீதிநெறிவிளக்க மென்னு நான்கு நூல்களையும் பாடிமுடித்து மீண்டு திருவாரூரையடைந்து தியாகராசப் பெருமானைத் தரிசித்து நான்மணிமாலைபாடி யரங்கேற்றி

* கந்தர் கலிவெண்பாவாகிய இத் திருவருட்பிரபந்தத்தை வித்தையில் விருப்பமுடையவர்கள் தினந்தோறும் பாராயணஞ் செய்துவர வேண்டும். தற்கால அநுபவத்திற்கண்ட விஷயமிது.

யவ்விடம்விட்டுப் புறப்பட்டுத் தருமபுர ஆதீனத்தை யடைந்து அங்கெழுந்தருளியிருந்த ஞானாசிரியராகிய மாசிலாமணிதேசிகரைக் கண்டு கலந்துபேசும்போது "ஐந்து பேரறிவுங் கண்களேகொள்ள" என்னும் பெரியபுராணச் செய்யுளுக்குப் பொருள் விரித்துரைப்பது தடைபட்டவுடனே தம்மைப் பேசுவித்த சரவணோற்பவராகிய குமாரக்கடவுளருளாலெழுந்த அசரீரியை நினைத்து மாசிலாமணி தேசிகருக்கு அடிமையாகி அவரது ஆஞ்ஞையால் சிதம்பர தரிசனத்துக்குப் போம்போது புள்ளிருக்கு வேளூரைஅடைந்து சுவாமிதரிசனஞ் செய்து மீண்டனர்.

அப்போது அருச்சகர்வடிவமாக வந்து விபூதிகொடுத்து நம்மைக் குறித்தும் ஒரு பிள்ளைத்தமிழ் பாடுவாய் என்று முத்துக்குமாரசுவாமியாகிய குமாரக்கடவுள் கட்டளையிட்டு மறைதலும் உடனே கட்டளைப்படி முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ்பாடி யரங்கேற்றிச் சிதம்பரத்திற் சென்று நடராசப்பெருமானை வணங்கிச் சிதம்பரமும்மணிக்கோவை, சிதம்பரச்செய்யுட் கோவை, சிவகாமியம்மை யிரட்டைமணிமாலை யிவற்றைப்பாடித் திருச் செவிசாற்றித் திருவருள்பெற்றுத் திரும்பித் தருமபுரத்துக்கு வந்து பண்டார மும்மணிக்கோவையென்னும் பிரபந்தமொன்றுபாடி மாசிலாமணி தேசிகர் திருச்செவிசாற்றினர்.

தேசிகர் திருவுள்ளமகிழ்ந்து குமரகுருபர சுவாமிகளுக்குக் காவிவஸ்திரந்தரிப்பித்து ஞானோபதேசமுஞ் செய்தருளினர். பின்னர் குமர குருபர சுவாமிகள் மதுரையிலே தாம்பெற்ற கனகாபிஷேகப் பொருள்களை ஞானாசாரியர் சந்நிதியிற் கொண்டுவந்து வைக்க இப்பொருள் உமக்குச்சாத்திய நின்மாலியப் பொருள்கள் ஆதலால் நாமங்கீகரிக்கமாட்டோம். இவற்றை யெடுத்துக்கொண்டு போய்க் காசி க்ஷேத்திரத்திலே தருமஞ் செய்துகொண்டிருக்கக் கடவீரென்று ஞானாசாரியர் கட்டளையிட்டருளினர்.

அவரது ஆணையை மறுத்தற்கஞ்சிக் குமரகுருபர சுவாமிகள் காசிக்ஷேத்திரத்தையடைந்து கங்கையிலே ஸ்நானஞ்செய்து காசிக்கலம்பகம்பாடி விசுவநாதர் சந்நிதியிற்போய்த் தரிசித்து தோத்திரஞ்செய்து சிலகாலமிருந்து சகலகலாவல்லிமாலை பாடி அங்கே யரசனாயிருந்த டில்லிபாக்ஷாவைக்கண்டு தருக்கம்பேசிச் சிவபெருமானே தெய்வமென்று மழுவைக்கையிலே தாங்கிச் சைவமத தாபனஞ் செய்தனர்.

அரசன் அதுகண்டு அடங்காத ஆனந்தபரவசனய்க் கேதாரகட்டத்தில் குமரசாமி மடமெனப் பெயர்வைத்தொரு திருமடத்தைக் கட்டுவித்துப் பெருமிதமாக வேண்டிய திரவியங்களைச்சாதனத்துடன் சுவாமிகளுக்குத்தத்தஞ்செய்தனன். சுவாமிகளன்று முதல்அம்மடத்தி லெழுந்தருளியிருந்து திருமலைநாயக்கர் பேராலொரு அன்னசத்திரங் கட்டுவித்து அன்ன தானஞ் செய்து மகிழ்ச்சியுற்று மூன்றுமுறை தருமபுரத்துக்குவந்து மாசிலாமணிதேசிகரைத் தரிசித்து நான்காவது முறையில் தேசிகர் கட்டளையிட்டருளியபடியே காசிக்ஷேத்திரத்தைச் சேர்ந்து அங்கே பலநாள் வசித்திருந்து விசுவேசர் திருவடிநீழலிற் கலந்தனர். இவர் சரித்திரத்தைக் குமரகுருபரசுவாமிகள் பிரபந்தத் திரட்டென்ற நூலில் விரிவாக எழுதியிருப்பதா லிங்கே சுருக்கி எழுதினேன். சுபம், சுபம், சுபம்.

இங்ஙனம்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

☞ மு. ரா. அருணாசலக் கவிராயர்.



உ

குமரன்றுணை.

## அருணகிரிநாதர் அருளிச்செய்த

# திருச்செந்தூர்த் திருப்புகழ்.

(க) கமல மாதுட னிந்திரை யுஞ்சரி
சொலவொ ணாதமட டந்தையர் சந்தன
களப சீதள கொங்கையி லங்கையி லிருபோதேய்-

களவு நூல்தெரி வஞ்சனை யஞ்சன
விழியில் மோகித கந்தசு கந்தரு
கரிய வோதியி லிந்துமு கந்தனில் மருளாதே;

அமல மாகிய சிந்தைய டைந்தகல்
தொலைவி லாதவ றம்பொரு ளின்பமு
மடைய வோதியு ணர்ந்துத ணந்தபின் அருள்தானே-

அறியு மாறுபெ றும்படி யன்பினி
னினிய நாதசி லம்புபு லம்பிடு
மருண ஆடக கிண்கிணி தங்கிய அடிதாராய்;

குமரி காளிப யங்கரி சங்கரி
கவுரி நீலிப ரம்பரை யம்பிகை
குடிலை யோகினி சண்டினி குண்டலி யெமதாமயி-

குறைவி லாளுமை மந்தரி யந்தரி
வெகுவி தாகம சுந்தரி தந்தருள்
குமர மூஷிக முந்திய ஐங்கர கணராயன்;

---

(க) கமலமாது-சரசுவதி. இந்திரை-இலக்குமி. இருபோது-தாமரை மலர், காந்தள் மலர். எய்-ஒத்த. கையில்;—நூல்-நூலால். மோகித-மோகமுள்ள. கந்த-வாசனையுடைய. அகல் அறம்-விரிந்த தருமம். ஓதி-கற்று. தணந்த பின்-முற்றியபின்னர். நாத-ஒலியையுடைய. புலம்பிடும்-முழங்கும். அருண ஆடக-சிவந்த பொன்னாலாகிய. ஆயி-தாய். மந்தரி-(அடியார்கள்பா) மாலையையுடையவள். மூஷிகம்-பெருச்சாளி வாகனத்தை. உந்திய-செலுத்திய. கணராயன்-கணங்களுட்சிறந்த தலைவன். மம-என்னுடைய. கஞ்சுகி-பாம்பு. விம்பன்-திருமேனி யுடையவன். மவுலி-முடி. பெருமானே - பெருமையையுடையானே; மேலுமிதுவே. இதற்கு விதி, நன்னூல் 257 ஆம் சூத்திரவுரையிற்

படமவி நாயக னஞ்சுமிழ் கஞ்சுகி
அணிக ஜானன் விம்பனெ ரம்புலி
மவுலி யானுறு சிந்தையு கந்தரு ளிளையோனே-
வளரும் வாழையு மஞ்சளு மிஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

(உ) அளக பாரம லைந்துகு லைந்திட
வதன வேர்வுது லங்கிந லங்கிட
அசவ மோகம்வி ளைந்துத ளைந்திட அணைமீதே-
அருண வாய்நகை சிந்திய சம்ப்ரம
அடர்ந காநுதி பங்கவி தஞ்செய்து
அதரபானமருந்திமருங்கிற முலைமேல்வீழ்ந்;
துளமும் வேறுப டும்படி யொன்றிடு
மகளிர் தோதக இன்பின்மு யங்குத
லொழியு மாறு தெளிந்துள மன்பொடு சிவயோகத்-
துருகு ஞானப ரம்பர தந்திர
அறிவி னோர்கரு தங்கொள்சி லம்பணி
யுபய சீதள பங்கய மென்கழல் தருவாயே;
இளகி டாவளர் சந்தன குங்கும
களப பூரண கொங்கைந லம்புனை
யிரதி வேள்பணி தந்தையும் அந்தண மறையோனும்;
இனிது மூதெதி ரிந்திர னண்டரும்
அரஹ ராசிவ சங்கர சங்கர
எனமி காவரு நஞ்சினை யுண்டவ ரருள்பாலா-

காண்க -இஃதன்றி, சந்தநோக்கி வேண்டாத இடத்து ஒற்றெழுத்துக்கள் மிகுதலும் வேண்டுமிடத்துக்குறைதலும் நெடில் குறிலாதலும் பிறவிகாரங்களும் வடசொற்களும் திசைச்சொற்களும் மரூஉமொழிகளும் வருமிடந்தோறும் பொருள் நோக்கிக்கண்டுகொள்.

(உ) அளகம்-கூந்தல். வேர்வு-வேர்வை. நலங்கிட-அழகுசெய்ய. தளைந்திட-கட்ட. அணை-மெத்தை. அருணவாய்-சிவந்தவாய். நகைசிந்திய-புன்சிரிப்பைச்செய்த. சம்ப்ரமம்-மகிழ்ச்சி. நகாநுதி-நகத்தினுனியால். பங்கவிதம்-தழும்புபடும் வகை. மருங்குஇற-இடையொடிய. தோதகம்-வஞ்சனை. அம்கொள்-அழகுகொண்ட. இளகிடா-இளகி. பணி-வணங்குகின்ற. தந்தை-பிதாவாகிய

வளர்நி சாசரர் தங்கள்சி ரம்பொடி
படவி ரோதமி டுங்குல சம்ப்ரமன்
மகர வாரிக டைந்த நெடும்புயல் மருகோனே-

வளரும் வாழைபு மஞ்சளு மிஞ்சியும்
இடைவி டாதுநெ ருங்கிய மங்கல
மகிமை மாநகர் செந்திலில் வந்துறை பெருமாளே.

(௩) பஞ்ச பாதக முறுபிறை யெயிறெரி
குஞ்சி கூர்விட மதர்விழி பிலவக
பங்க வாண்முக முடுகிய நெடுகிய திரிசூலம்-

பந்த பாசமு மருவிய கரதல
மிஞ்சி நீடிய கருமுகி லுருவொடு
பண்பி லாதொரு பகடது முதுகினில் யமராஜன்;

அஞ்ச வேவரு மவதர மதிலொரு
தஞ்ச மாகிய வழிவழி யருள்பெறும்
அன்பி னாலுன அடிபுக ழடிமையெ னெதிரேநீ-

அண்ட கோளகை வெடிபட இடிபட
எண்டி சாமுக மடமட நடமிடும்
அந்தமோகர மயிலி னியலுடன் வரவேணும்;

மஞ்சு போல்வள ரளகமு மிளகிய
ரஞ்சி தாம்ருத வசனமு நிலவென
வந்த தூயவெண் முறுவலு மிருகுழை யவளோடும்-

---

விஷ்ணு. அந்தணமறையோன்-பிரமன். இனிது-இன்பம். மிகாவரும்-மிகுந்து கொதித்துவரும். குலம்-நன்மை. சம்ப்ரமன் - மகிழ்ச்சியுடையவன். நகநுதி யென்பது, நகாநுதியெனச் சந்தநோக்கி விகாரப்பட்டது. செய்து என்னும் எச்சம் ஒன்றிடுமென்பதனோடு முடியும்.

(௩) பிறையெயிறு - வக்கிரதந்தம். எரிகுஞ்சி-அக்கினிபோன்ற குடுமி. பிலவகம்-குரங்குபோன்ற. பங்க-குற்றத்தையுடைய; அழகற்ற. முடுகிய-எதிர்க்கப்பட்ட. பந்தபாசம்-கட்டப்பட்ட கயிறு. பகடு-எருமைக்கடா. அவதரம்-சமயம். தஞ்சம்-பற்றுக்கோடு; ஆதாரம். வழிவழி-தொன்றுதொட்டு. மடமட-மடமடவென்றொலிக்க. மோகரம் - உக்கிரம்; மிக்கவீரம். மன்றல் - வாசனை. வாரிசம்-தாமரைபோன்ற. மந்தாரசலம்-மந்தரமலை, செஞ்சொல்-தமிழ்ச்சொல்

மன்றல் வாரிச நயனமு மழகிய
குன்ற வாணர்த மடமகள் தடமுலை
மந்த ராசல மிசைதுயி லழகிய மணவாளா;

செஞ்சொல் மாதிசை வடதிசை குடதிசை
விஞ்சு கீழ்திசை சகலமு மிகல்செய்து
திங்கள் வேணியர் பலதளி தொழுதுயர் மகமேரு-

சென்டு மோதின ரரசரு ளதிபதி
தொண்ட ராதியும் வழிவழி நெறிபெறு
செந்தில் மாநக ரினிதுறை யமரர்கள் பெருமாளே.

(சு) அமுதுததி விடமுமிழு செங்கட் டிங்கட்
பகவினொளிர் வெளிறெயிறு துஞ்சற் குஞ்சித்
தலைபுமுடை யவனரவ தண்டச் சண்டச் சமனோலை-

அதுவருகு மளவிலுயி ரங்கிட் டிங்குப்
பறைதிமிலை திமிர்தமிகு தம்பட் டம்பற்
கரையவுற வினரலற வுந்திச் சந்தித் தெருவூடே;

எமதுபொரு ளெனுமருளை யின்றிக் குன்றிப்
பிளவளவு தினையளவு பங்கிட் டுண்கைக்
கினையுமுது வசைதவிர இன்றைக் கன்றைக் கெனநாடா-

திடுககடி தெனுமுணர்வு பொன்றிக் கொண்டிட்
டுடுடுடுடு டுடுடுடுடு டுண்டுட் டுண்டுட்
டெனவகலு நெறிகருதி நெஞ்சத் தஞ்சிப் பகிராதோ;

---

லையுடைய. மாதிசை-பெரிய (தென்) றிசை. இகல்-யுத்தம். சென்டு-செண்டால். மோதினர்-அடித்தவராகிய. அரசருள் அதிபதி-இராசாக்களுக்குள் தலைவரும். தொண்டர் ஆதியும்-அடியார்களுக்குள் தலைவரும். நெறி-சன்மார்க்கம்.

(சு) அமுதுததி - பாற்கடலிலெழும். உமிழு - கக்குகின்ற. பகவின்-பிளப்புப்போல. வெளிறெயிறு-வெள்ளிய வக்கிரதந்தம். துஞ்சல்குஞ்சி-வாடுகின்ற(வெறித்த) குடுமி. அரவம்-பாம்புபோலும். தண்டம்-தண்டாயுதம். சண்டச்சமன்-சண்டனாகிய யமன். அங்குஇட்டு-அவ்விடததிலேவிட்டு. திமிலைபறை-பம்பைமேளம். திமிர்தம்-பேரொலி. பல்கரைய-பலமுழங்க. உந்தி - (அவ்வுயிரை) செலுத்தி. இன்றி-இல்லாமல். குன்றிப்பிளவு- குன்றிமணியின்பிளப்பு. (ஆவது) பங்கிட்டு-(உள்ளதை வந்து யாசித்தவருக்குப்) பங்குவைத்துக்கொடுத்து. இனையும்-வருந்தும். தவிர-நீங்க. இடுக-கொடுக்கக் கடவது. கடிது-சீக்கிரம். உணர்வு-அறிவு. பொன்ற-கெட. கொண்டிட்டு-(யமதூதர்) கைக்

குமுதபதி வகிரமுது சிந்தச் சிந்தச்
சரணபரி புரசுருதி கொஞ்சக் கொஞ்சக்
குடிலசடை பவுரிகொடு தொங்கப் பங்கிற் கொடியாட-
குலதடினி அசையஇசை பொங்கப் பொங்கக்
கழலதிர டெகுடெகுட டெங்கட் டெங்கத் [தீதோ;
தொகுகுகுகு தொகுகுகுகு தொங்கத் தொங்கத் தொகு
திமிதமென முழவொலிமு ழங்கச் செங்கைத்
தமருகம ததிர்சதியொ டன்பர்க் கின்பத்
திறமுதவு பரதகுரு வந்திக் குஞ்சற் குருநாதா-
திரளுமணி தரளமுயர் தெங்கிற் றங்கிப்
புரளஎறி திரைமகர சங்கத் துலங்கத்
திமிரசல நிதிதழுவு செந்திற் கந்தப் பெருமாளே.

(ரு) கொடியனைய இடைதுவள அங்கமும் பொங்கஅங்
குமுதஅமு திதழ்பருகி யின்புறுஞ் சங்கையன்
குலவியணை முகிலளக முஞ்சரிந் தன்பினின் பண்புலா
கொடியவிரல் நகநுதியில் புண்படுஞ் சஞ்சலன் வக்-
குனகியவ ருடனினிது சம்ப்ரமங் கொண்டுளங்
குரலழிய அவசமுறு குங்குனன் கொங்கவிழ்ந் தொன்

---

கொண்டு. என - என்னுமுழக்கத்துடன் அகலும்-அகன்றுசெல்லும். நெறி-முறைமையை. கருதி-(முன்னமே) ஆராய்ந்து. அஞ்சி-பயந்து. பகிராதோ-(உள்ளதைப்) பங்கிட்டுக்கொடுக்கு நிலைமைவாராதோ. குமுதபதி - சந்திரனது. வகிர்-பிளப்பு; அஃதாவது: அர்த்த சந்திரன். பரிபுரசுருதி-பாதசரமாகிய வேதங்கள். கொஞ்சக்கொஞ்ச-சங்கோஷித்து மிகமுழங்க. குடிலசடை-குடிலமாகிய சடை. பவுரி-நடனம். கொடி-உமாதேவி. குலம்-நன்மையாகிய. தடினி-கங்காநதி. முழவு-மிருதங்கம். தமருகம்-உடுக்கு. சதி-தாளவொத்து. பரதகுரு-நடனஞ்செய்யும் சிவபிரான். திமிர-முறைப்புடைய. சலநிதி-கடல்.

(ரு) துவள - அசைய. அங்கம் - (மற்றை) அவயவம். பொங்க- பூரிக்க சங்கையன்-சந்தேகமுடையேன். அணை-மெத்தைமேல். அன்பின்-அன்போடு. இன்பணபு-இனியகுணமாக. நுதியில்-நுனியால். குனகி-சரசஞ்செய்து. சம்ப்ரமம்-மகிழ்ச்சி. உளம்-மனமானது. குரல்-(அப்பெண்கள்கழுத்திலெழும்) ஒலியால். முறுகும்-அதிசப்படும். கொங்கு-மணம். அவிழ்ந்து-விரிந்து. ஒன்று-பொருந்துகின்ற. இன்பு - இன்பத்தில். வினையன் - தீவினையுடையேன். இயல்-தன்மை. மிதம் - (தன்) அளவு. நெறிபண்பில்-வழியாகிய குணத்தில்

விடமனைய விழிமகளிர் கொங்கையின் பன்புறும் [றுபாய்மேல்;
வினையனியல் பரவுமுயிர் வெந்தழிந் தங்கமும்
மிதமொழிய அறிவில்நெறி பண்பிலண் டுஞ்சகன் [செஞ்
வெருகனக வொளிகுலவும் அந்தமன் செந்திலென் [செநீடும்-
றவிழவுள முருகிவரு மன்பிலன் தந்திலன்
விரவுமிரு சிறுகமல பங்கயந் தந்துகந் தன்புறுதோ;

படமிலகு மரவினுட லங்கமும் பங்கிடந்
துதறுமொரு கலபிமிசை வந்தெழுந் தண்டர்தம்
பகையசுர ரனைவருடல்சந்துசந் துங்கதஞ் சிந்தும்வேலா

படியவரு மிமையவரு நின்றிறைஞ் செண்குணன்
பழையஇறை யுருவமிலி யன்பர்பங் கன்பெரும்
பருவரல்செய் புரமெரிய விண்டிடுஞ்செங்கணன் கங்கை

சடிலமிசை யழகுபுனை கொன்றையும் பண்புறுங் [மான்வாழ்;
தருணமதி யினகுறைசெய் துண்டமுஞ்செங்கையொண்
சகலபுவ னமுமொழிக தங்குறங் கங்கியும் பொங்கிநீடுஞ்

சடமருவு விடையரவர் துங்கஅம் பங்கினின்
றுலகுதரு கவுரியுமை கொங்கைதந் தன்புறுந்
தமிழ்விரக வுயர்பரம சங்கரன் கும்பிடுந் தம்பிரானே.

(௬) அறிவழிய மயல்பெருக வுரையுமற விழிசுழல
அனலவிய மலமொழுக அகலாதே-
அனையுமனை யருகிலுற வெருவியழ வுறவுமழ
அழலினிகர் மறலியெனை யழையாதே;

---

அண்டும்-நெருங்கும். சகன்-பிரபஞ்ச மயக்கமுடையேன். செம்செம்-திருந்த ஒழுங்கு. மன்-நிலைபெற்ற. அவிழ-விரிய. தந்திலன்-சாஸ்திர ஆராய்ச்சியில் லாதேன். (ஆகலால்) கமலபங்கயம்-திருவடித்தாமரை. தந்து-(திருவருள்) கொடுத்து. பங்கு இடந்து-இரண்டாகப்பிளந்து. கலபி-மயில். சந்துசந்து-சிற் சில்லாகவும். கதஞ்சிந்தும்-கோபத்தைச் செலுத்தும். பழையஇறை-அநாதிக் கடவுள். பங்கன்-பங்கிலிருப்பவன். பருவரல்-துன்பம். விண்டிடும்-திறக்கும். தருணம்-இளமை. மதியின்-சந்திரனிடத்துள்ள. குறைசெய்துண்டம்-மூன் றாம்பிறை. செங்கை-சிவந்த கையினிடத்து. கதம்-வேகம். குறங்கு-அசைகின் ற. அங்கி-அக்கினி. சடம்-திருமேனி. விரக-ஆசையையுடையவனே.

(௬) உரையும் அற-பேச்சுமடங்க. அனல் அவிய-உதராக்கினிகெட. உற-மிக. வெருவி-பயந்து. உறவும்-சுற்றத்தாரும். அழல்-அக்கினி. இன்-

செறியுமிரு வினைகரண மருவுபுல னொழியவுயர்
திருவடியி லணுகவர மருள்வாயே-
சிவனைநிகர் பொதியவரை முனிவனக மகிழஇரு
செவிகுளிர இனியதமிழ் பகர்வோனே;
நெறிதவறி யலரிமதி நடுவன்மக பதிமுளரி
நிருதிநிதி பதிகரிய வனமாலி-
நிலவுமறை யவனிவர்க ளலையஅர சுரிமைபுரி
நிருதனுர மற அயிலை விடுவோனே;
மறிபரசு கரமிலகு பரமனுமை யிருவிழியு
மகிழமடி மிசைவளரு மிளையோனே-
மதலைதவழ் உததியிடை வருதரள மணிபுளின
மறையவுயர் கரையிலுறை பெருமாளே.

(எ) கரிக்கொம்பந் தனித்தங்கங்
குடத்தின்பந் தனத்தின்கண்
கறுப்புந்தன் சிவப்புஞ்செம் பொறித்தோள்சேர்-
கணைக்குட்பண் டுழைக்கும்பங்
களிக்கும்பண் பொழிக்குங்கண்
கழுத்துஞ்சங் கொளிக்கும்பொன் குழையாடச்;

---

சாரியை. மறலி-யமன். செறியும்-நெருங்கும். கரணம்-அந்தக்கரணங்கள். புலன்-சத்தாதி விடயங்கள். அலரி-சூரியன். நடுவன்-யமன். முளரி-அக்கினி. நிருதி-திக்குப்பாலகரிலொருவன். நிதிபதி-குபேரன். வனமாலி-விஷ்ணு. நிலவும்-விளங்கும். நிருதன்-சூரன். மறி-மான். மதலை-மரக்கலம்; கப்பல். உததி-கடல். புளினம்-மணல்மேடு.

(எ) கரிக்கொம்பு-யானைக்கொம்பினது. அம்-அழகும். இன்புஅம்-இன்பத்தினழகும் (பெற்ற). தனத்தின்கண்-முலைக்காம்புகளின். பொறி-அடையாளங்களையுடைய- தோள்-(வீரர்)கைகளில். பண்டு-பழைய. உழைக்கும்-மானுக்கும். பண்பொழிக்கும் பங்கு அளிக்கும்-குணத்தைக்கெடுக்கும பங்கத்தைக்கொடுக்கும். கண்-கண்களும். சங்கொளிக்கும்-சங்கங்கள் மறைந்துகொள்ளும். கழுத்தும்,—பொன்குழை- பொற்குண்டலமும். புடைக்கும் பொன்

சரக்குஞ்சம் புடைக்கும்பொன்
றுகிற்றந்தந் தரிக்குந்தன்
சடத்தும் பண் பிலுக்குஞ்சம் பளமாதர்-

சலித்தும்பின் சிரித்துங்கொண்
டழைத்துஞ்சண் பசப்பும்பெண்
தனத்துன்பந் தவிப்புண்டிங் குழல்வேனோ;

சுரர்ச்சங்கந் துதித்தந்தஞ்
செழுத்தின்பங் களித்துண்பண்
சுகத்துய்ந்தின் பலர்ச்சிந்தங் கசுராரைத்-

துவைத்தும்பந் தடித்துஞ்சங்
கொலித்துங்குன் றிடித்தும்பண்
சுகித்துங்கண் களிப்புங்கொண் டிடும்வேலா!

சிரப்பண்புங் கரப்பண்புங்
கடப்பந்தொங் கலிற்பண்புஞ்
சிவப்பண்புந் தவப்பண்புந் தருவோனே-

தினைத்தொந்தங் குறப்பெண்பண்
சசிப்பெண்கொங் கையிற்றுஞ்சுஞ்
செழிக்குஞ்செந் திலிற்றங்கும் பெருமாளே.

(அ) கருப்பந்தங் கிரத்தம்பொங்
கரைப்புண்கொண் டுருக்கும்பெண்
களைக்கண்டங் கவர்ப்பின்சென் றவரோடே-

---

குஞ்சம்-பருக்கும் தங்கக்குஞ்சத்தையுடைய காசுமாலையும். (பொன்) துகில்-பீதாம்பரமும். தந்து-கொண்டுவந்து. தரிக்கும்-புனையும். தம்சடத்து-தஞ்சரீரத்து. பண்பிலுக்கும்-ஆடம்பரமாக மற்றவற்றாலலங்கரிக்கும். சம்பளமாதர்-கூலிப்பெண்கள்; வேசையர்கள். கொண்டு - ஒப்புக்கொண்டு. சண்பசப்பும்-கண்களால் மயக்கஞ்செய்யும். பெண்-அம்மாதராகிய பெண்கள் துன்பம்-துன்பத்தால். சுரர்ச்சங்கம்-தேவர்கூட்டம். துதிதந்து-தோத்திரஞ்செய்து. களித்து-மகிழ்ந்து. உண்-உட்கொண்ட. பண்-பாட்டின். சுகத்துய்ந்து-சுகத்தாற்பிழைத்து. இன்புஅலர்-இன்பம் பெருக. சிந்து அங்கு-கடலாகிய அவ்விடத்தில். அசுராரை-அசுரர்களை. துவைத்தும்-மிதித்தும். பந்தடித்தும்-தலைகளையுருட்டியும். பண்-(ஆகுபெயர்) இன்பம். சிரம்-(ஆறு) தலையின். பண்பும்-குணமும். கரம்-(பன்னிரண்டு) கைகளின். தருவோனே-அருளிச்செய்யப்பட்டவனே. தொந்தம்-சம்பந்தமாகி. பண்-ஒழுங்குடைய. சசிப்பெண்-இந்திராணியினது பெண்ணாகிய தெய்வயானை.

கலப்புண்டுஞ் சிலுப்புண்டுந்
துவக்குண்டும் பிணக்குண்டுங்
கலிப்புண்டுஞ் சலிப்புண்டுந் தடுமாறிச்;

செருத்தண்டந் தரித்தண்டம்
புகதண்டந் தகற்கென்றுந்
திகைத்தந்திண் செகத்தஞ்சுங் கொடுமாயும்-

தியக்கங்கண் டுயக்கொண்டென்
பிறப்பங்கஞ் சிறைப்பங்கஞ்
சிதைத்துன்றன் பதத்தின்பந் தருவாயே;

அருக்கன்சஞ் சரிக்குந்தெண்
டிரைக்கண்சென் றரக்கன்பண்
பணைத்தும்பொன் றிடக்கன்றுங் கதிர்வேலா-

அணிச்சங்கங் கொழிக்குந்தண்
டலைப்பண்பெண் டிசைக்குங்கொந்
தளிக்குஞ்செந் திலிற்றங்குங் குமரேசா;

புரக்குஞ்சங் கரிக்குஞ்சங்
கரர்க்குஞ்சங் கரர்க்கின்பம்
புதுக்குங்கங் கையட்குந்தஞ் சுதனாய்-

புனக்குன்றந் திளைக்குஞ்செந்
தினைப்பைம்பொன் குறக்கொம்பின்
புறத்தண்கொங் கையிற்றுஞ்சும் பெருமாளே.

---

• (அ) அரைப்புண்கொண்டு - அல்குலினாலே. கலப்புஉண்டும் - கலப்படைந்தும். சிலுப்பு-அசைப்பு. துவக்கு-கட்டு. பிணக்கு-ஊடல். கலிப்பு-முழக்கம். செரு-யுத்தம். தண்டம்-தண்டனை. அ-அந்த. தண்டு-தண்டாயுதத்தையுடைய. திண்செகத்து-வலிய பூமியில். அஞ்சுங்கொடு- பஞ்சேந்திரியங்களாலும். உயக்கொண்டு-பிழைத்தலைச்செய்து. அங்கம்-சரீரத்தின். சிறைப்பங்கம்-(ஆணவமலமாகிய) சிறைச்சாலையைப் பின்ன(மாக). அருக்கன் - சூரியன். கன்றும்-கோபிக்கும். அணி-அழகிய. தண்டு-வரம்பு (கரை) உடைய. அலைப்பண்பு-கடலின்குணம். கொந்தளிக்கும்-வெளிப்படும். புரக்கும்-காக்கும். சங்கரி-உமாதேவி. சங்கரர்-சிவபிரான். சங்கரற்கு-(அச்)சிவபிரானுக்கு. புதுக்கும்-புதிதுபுதிதாகக் கொடுக்கும். சுதன்-புத்திரன். திளைக்கும்-அநுபவிக்கும். பொன்-பொன்னாபரணமணிந்த.

(௬) குழைக்குஞ்சந் தனச்செங்குங்
குமத்தின்சந் தநற்குன்றங்
குலுக்கும்பைங் கொடிக்கென்றிங் கியலாலே-

குழைக்குங்குண் குமிழ்க்குஞ்சென்
றுரைக்குஞ்செங் கயற்கண்கொண்
டழைக்கும்பண் டழைக்குஞ்சிங் கியராலே;

உழைக்குஞ்சங் கடத்துன்பன்
சுகப்பண்டஞ் சுகித்துண்டுண்
டுடற்பிண்டம் பருத்தின்றிங் குழலாதே-

உதிக்குஞ்செங் கதிர்ச்சிந்தும்
ப்ரபைக்கொன்றுஞ் சிவக்குந்தண்
டுயர்க்குங்கிண் கிணிச்செம்பஞ் சடிசேராய்;

தழைக்குங்கொன் றையைச்செம்பொன்
சடைக்கண்டங் கியைத்தங்குந்
தரத்தஞ்செம் புயத்தொன்றும் பெருமானூர்-

தனிப்பங்கின் புறத்தின்செம்
பரத்தின்பங் கயத்தின்சஞ்
சரிக்குஞ்சங் கரிக்கென்றும் பெருவாழ்வே;

கழைக்குங்குஞ் சரக்கொம்புங்
கலைக்கொம்புங் கதித்தென்றுங்
கயற்கண்பண் பளிக்குந்தின் புயவேளே-

(௬) சந்தம்-அழகிய. குன்றம்-மலைபோலுமுலையானது. கொடிக்கு-கொடிபோன்ற இடையை. குலுக்கும்-அசைத்துவருத்தும். என்று,—இயலாலே-தன்மையாலே. குழைக்கும்-காதுக்கும். குண் - குணமுடைய. குமிழ்க்கும்-குமிழமலர்போலு மூக்குக்கும். கண்கொண்டு-கண்களால். பண்-இசைப்பாட்டு. சிங்கியர் - விடம்போன்ற வேசையர். பிண்டம்- உருவம். கதிர்-சூரியன். சிந்தும்-வீசும். ப்ரபைக்கு-கிரணத்துக்கு. ஒன்றும்-ஒத்துத்தோன்றும். சிவக்கும்-சிவப்புநிறமடைந்திருக்கும். தண்டு-(ஆகுபெயர்) மலர்போலும். உயர்க்கும்-உயர்த்தியணியும். கண்டு-(தாற்பரியம்) தரித்து. அங்கியை-அக்கினியை. தரத்து-மேன்மையுடைய. புயத்து-கையில். பங்கின்புறத்தில்-பாகத்தையுடைய பக்கத்தில். பரத்தின்-மெய்யினையுடைய. பங்கயத்தின்-(அன்பரிருதய) தாமரைமலரில். கழைக்கும்-மூங்கில்மரங்களும். என்றும்கதித்த-எப்போதும் சிறந்துவிளங்கிய (தினைப்புனத்தில்) கயற்கண்-கயல்போலுங் கண்ணையுடையவள்ளிநாயகி. பண்பு-குண(மாக), மலர்போலும் அடிபெனக்கூட்டுக. குணம் என்

கழக்குங்கொண் டலிற்பொங்குங்
கடற்சங்கங் கொழிக்குஞ்செந்
திலிற்கொண்டன் பினிற்றங்கும் பெருமாளே.

(௰) மனத்தின்பங் கெனத்தங்கைம்
புலத்தன்றன் குணத்தஞ்சிந்
த்ரியத்தம்பந் தனைச்சிந்தும் படிகாலன்-
மலர்ச்செங்கண் கனற்பொங்குந்
திறத்தின்தண் டெடுத்தண்டங்
கிழித்தின்றிங் குறத்தங்கும் பலவோரும்;
எனக்கென்றிங் குனக்கென்றங்
கினத்தின்கண் கணக்கென்றென்
றிளைத்தன்புங் கெடுத்தங்கங் கழிவாமுன்-
இசைக்குஞ்செந் தமிழ்க்கொண்டங்
கிரக்கும்புன் மொழிப்பங்கங்
கெடத்துன்பங் கழித்தின்பந் தருவாயே;
கனைக்குந்தண் கடற்சங்கங்
கரத்தின்கண் தரித்தெங்குங்
கலக்கஞ்சிந் திடக்கண்டுஞ் சிடுமாலும்-
கதித்தொண்பங் கயத்தன்பண்
பனைத்துங்குன் றிடச்சந்தங்
களிக்குஞ்சம் புவுக்குஞ்செம் பொருளீவாய்;

---

பது குன் எனக்குறைந்து நின்றது. செந்திலிற்கொண்டு - திருச்செந்தூரை இடமாகக்கொண்டு. கழைக்கும் என்பதில்-கு-சாரியை. கதித்த என்பதின் ஈற்றின் அகரங்கெட்டது.

(௰) பங்கென - பகுப்பாக (வாயில்களாக). தங்கு,— ஐம்புலம்-மெய், வாய், கண், மூக்கு, செவியென்கிற ஐந்திடம். தன் தன்-அதனதனுடைய. குணத்து - குணங்களாகிய. அஞ்சு இந்த்ரியத்தம்பம் - சத்த, பரிச, ரூப, ரச கந்தங்களாகிய தூண்களை. சிந்தும்படி-சிதறும்படி. பலவோரும்-பலதத்துவக் கூட்டங்களும். இங்கெனக்கென்று,— அங்குனக்கென்று,— இனத்தின்கண்- (ஓர்) இனத்தாருக்குள். கண்கணக்கு-கருதப்படும் விதம்(போல). என்றென்று-எப்பொழுதும். இளைத்து-போராடிவருந்தி. அழிவாமுன்-(அத்தத்துவக்கூட்டங்கள்) கெடுதற்குமுன். கழித்து-போக்கி. கனைக்கும்-முழங்கும். கலக்கம் சிந்திட-வருத்தம்நீங்க; கண் துஞ்சிடும் - (பாற்கடலில் ஆனந்த) நித்திரைசெய்

தினைக்குன்றந் தனிற்றங்குஞ்
சிறப்பெண்குங் குமக்கும்பந்
திருச்செம்பொன் புயத்தென்றும் புனைவோனே-

செழிக்குங்குண் டகழ்ச்சங்கங்
கொழிக்குஞ்சந் தனத்தின்பைம்
பொழிற்றண்செந் திலிற்றங்கும் பெருமாளே.

(௰க) பருத்தந்தத் தினைத்தந்திட்
டிருக்குங்கச் சடர்த்துந்திப்
பருக்கும்பொற் ப்ரபைக்குன்றத் தனமானார்

பரிக்குந்துற் சரக்கொன்றத்
திளைத்தங்குற் பலப்பண்பைப்
பரக்குஞ்சக் கரத்தின்சத் தியைநேரும்;

துரைச்செங்கட் கடைக்கொன்றிப்
பெருத்தன்புற் றிளைத்தங்குத்
துணிக்கும்புத் தியைச்சங்கித் தறியேனை-

துணைச்செம்பொற் பதத்தின்புற்
றெனக்கென்றப் பொருட்டங்கத்
தொடுக்குஞ்சொற் றமிழ்த்தந்திப் படியாள்வாய்;

தருத்தங்கப் பொலத்தண்டத்
தினைக்கொண்டச் சுரர்க்கஞ்சத்
தடத்துன்பத் தினைத்தந்திட் டெதிர்சூரன்-

---

யும். கதித்த-சிறந்த. ஒண்-ஒளிபொருந்திய. சந்தம்-எப்பொழுதும். சிறுப்பெண்-சிறியபெண்ணாகிய வள்ளிநாயகி. கும்பம்-குடம்போலுந் தனங்களை. பொன்- அழகிய. குண்டு-ஆழமாகிய. அகழ்-(ஆகுபெயர்) கடல். அங்கு இங்கு என்றது-அந்தந்தத் தத்துவமிருக்குமிடங்களை. சந்ததம் என்பது-சந்த மென விகாரப்பட்டது. கதித்த என்பதி லீற்றகரங்கெட்டது.

(௰க) பரு-பெரிய. தந்தத்தினை-(யானைத்) தந்தத்தை. தந்திட்டு-ஒத்து இறுக்கும-இறுக்கிக் கட்டும். அடர்த்து-கிழித்து. உந்தி-தள்ளி. ப்ரபை-பிரகாசமுள்ள. பரிக்கும்-தாங்கும். துற்சரக்கு-கெட்ட சரக்காகிய பலவகை வியாதிகள். ஒன்ற - பொருந்த. திளைத்து - (அம்மானரை) அநுபவித்து. உற்பலம்-நீலோற்பல மலரின். பரக்கும்-விரிந்த. சத்தி-வலிமை. துரை-உயர்ந்த. கட்கடைக்கு-கடைக்கண்ணிடத்து. ஒன்றி-ஐக்கமாகி. பெருத்து-மிகுத்து. துணிக்கும்-கெடுக்கும். சங்கித்து-சந்தேகப்பட்டு. அறியேனை - தெளியாதவென்னை

சமர்க்கெஞ்சிப் படித்துஞ்சக்
கதிர்த்துங்கத் தயிற்கொண்டித்
தலத்தும்பர்ப் பதிக்கன்புற் றருள்வோனே;

திருக்கஞ்சத் தனைக்கண்டித்
தறக்கங்குட் டிவிட்டுஞ்சற்
சிவற்கன்றப் பொருட்கொஞ்சிப் பகர்வோனே-

செயத்துங்கக் கொடைத்துங்கத்
திருத்தங்கித் தரிக்கும்பொற்
றிருச்செந்திற் பதிக்கந்தப் பெருமாளே.

(௰உ) அவனிபெ றுந்தோட் டம்பொற்
குழையட ரம்பாற் புண்பட்
டரிவையர் தம்பாற் கொங்கைக் கிடையேசென்-

றணைதரு பண்டாட் டங்கற்
றருகிய கொண்டாட் டம்பெற்
றழிதரு திண்டாட் டஞ்சற் றொழியாதே;

பவமற நெஞ்சாற் சிந்தித்
திலகுக டம்பார்த் தண்டைப்
பதயுக ளம்போற் றுங்கொற் றமுநாளும்-

பதறிய அங்காப் பும்பத்
தியுமறி வும்போய்ச் சங்கைப்
படுதுயர் கண்பார்த் தன்புற் றருளாயோ;

---

இன்புற்ற,—எனக்கென்று-எனக்கருள வேண்டுமென்று நினைத்து. அ-அந்த. தொடுக்கும்-தொடுத்துவைத்திருக்கும். இப்படி-இப்பூமியில். தரு-கற்பகவிருக்ஷம். அ-அந்த. பொலத்து அண்டத்தின்-பொன்னுலகத்தை. கொண்டு-கைப்பற்றிக்கொண்டு. தடம்-மலைபோலும். சமர்க்கு-யுத்தகளத்தினிடத்து. எஞ்சி-(பிறவினை)குறைத்து. படி-பூமியில். துஞ்ச-இறக்க. அத்தலத்து-அந்த இடத்தில. உம்பர்ப்பதி-இந்திரன். உற-மிக. கம்-தலையில். சன்-நல்ல. பொருள்-பொருளை. துங்கம்-உயர்வு. தங்கித்தரிக்கும்-எப்பொழுதும் நீங்காதிருக்கும்.

(௰உ) அவனி-பூமியை. பெறும்-விலையாக வாங்கும். தோடு,-(அணிந்த) குழை-காதுகளை. அடர்-நெருங்குகின்ற. அம்பால்-பாணமாகிய கண்களால். பண்டு ஆட்டம்-பழைய விளையாட்டு. கொண்டாட்டம்-மகிழ்ச்சி. திண்டாட்டம்-வருத்தம். ஆர்-மாலையணிந்த. யுகளம்-இரண்டு. கொற்றமும்-வலிமையும். பதறிய-பதறியழுத. அங்காப்பு-வாய்திறத்தலையும். சங்கைப்படு-சந்தேகப்படுகி

தவநெறி குன்றுப் பண்பிற்
அறவின ருங்கோற் றஞ்சத்
தனிமல ரஞ்சாற் புங்கத் தமராடி-

தமிழினி தென்காற் கன்றிற்
றிரிதரு துஞ்சாக் கன்றைத்
தழலெழ வென்றூர்க் கன்றற் புதமாக;

சிவவடி வங்காட் டுஞ்சற்
குருபர தென்பாற் சங்கத்
திரள்மணி சிந்தாச் சிந்துக் கரைமோதும்-

தினகர திண்டேர்ச் சண்டப்
பரியிட றுங்கோட் டிஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே.

(ருக.) தொடரிய மன்போற் றுங்கப்
படையைவ ளோங்தோட் டுந்துட்
டரையிள குங்தோட் கொங்கைக் கிடுமாயத்-

துகில்விழ வுஞ்சேர்த் தங்கத்
துளைவிர குஞ்சூழ்த் தண்டித்
துயர்விளை யுஞ்சூட் டின்பத் தொடுபோயற்;

கிடைகொடு சென்றீட் டும்பொற்
பணியரை மென்றேற் றங்கற்
றனையென இன்றூட் டென்றற் கிடுமாதர்க்-

---

ன்ற. துயர்-துக்கத்தையும். புங்கத்து-உயர்ச்சியாகிய. அமராடி-யுத்தஞ்செய்த மன்மதனாகிய. தமிழ்இனி-தமிழ்போலுமினிமையைச்செய்யும். தென்கால்கன்றில்-இளந்தென்றற்காற்றில். துஞ்சா-இறவாத. கன்றை-இளம்பிள்ளையை. தழல்-(தாற்பரியம்) சாம்பர். எழ-ஆக. வென்றூர்க்கு-வென்றசிவபிரானுக்கு. சிவவடிவம்-பிரணவசொரூபம். சங்கம்-சங்குகள். சிந்தா-சிந்தி. சிந்துக்கரை-கடற்கரையை. சண்டப்பரி-வேகமாகிய குதிரைகள். கோடு-உச்சியுடைய. இஞ்சி-மதில்கள் சூழ்ந்த.

(ருக.) துங்கம்-உயர்ச்சி. படையை- (பகைவர்) சேனையை. ஒட்டும்-புறங்காட்டியோடச்செய்யும். துட்டரை-சூரருக்கு. இளகும்-மெலிதாகும். தோட்கொங்கைக்கு - தோளுக்கு முலைக்கும். மாயத்துகில் - மயக்கத்தைச் செய்யும் சேலை. விழவும்-சரியவும். சேர்த்து (அதையெடுத்துப்) பொருத்தி. அங்கத்து-சரீரத்தில். உளை -வருந்துகின்ற. விரகம்-காமத்தை. சூழ்த்து-சூழச்செய்து.

இனிமையி லொன்றாய்ச் சென்றுட்
படுமன முன்றாட் கண்புற்
றியலிசை கொண்டேத் தென்றுட் டருவாயே;
நெடிதுத வங்கூர்க் குஞ்சற்
புருடரு னைந்தேக் கம்பெற்
றயர்வுற நின்றார்த் தங்கட் கணையேவும்-
நிகரில்ம தன்றோக் குன்றற்
றெரியில்வி ழுந்தேர்ப் பொன்றச்
சிறிதுநி னைந்தாட் டங்கற் றிடுவார்முன்
திடமுறு மன்பாற் சிந்தைக்
கறிவிட முஞ்சேர்த் தும்பர்க்
கிடர்களை யும்போர்ச் செங்கைத் திறல்வேலா-
தினவரி வண்டார்த் தின்புற்
றிசைகொடு வந்தேத் திஞ்சித்
திருவளர் செந்தூர்க் கந்தப் பெருமாளே.

(யச) சங்குபோல் மென்கழுத் தந்தவாய் தந்தபற்
சந்தமோ கின்பமுத் தெனவானிற்-
றங்குகார் பைங்குழற் கொங்கைநீள் தண்பொருப்
பென்றுதாழ் வொன்றறுத் துலகோரைத்;

---

அண்டி-நெருங்கி. (அக்காமத்தால்) துயர்-துன்பம். சூட்டு-பருவத்தில். கொடு சென்று-(அவ்வீரரைக்)கொண்டுபோய். அரை-(ஆகுபெயர்) அல்குலால். வென்று-சயித்து. ஈட்டும் பொற்பணி-(அவர்)சம்பாதிக்கும்பொன்னுபரணத்தை. எற்று-வாங்கி (பின் கொடுப்பதற் சொன்றுமில்லாதபோது.) அற்றனை-கைப் பொருளில்லாமற் போயினாய். என - (இவ்விடத்தி) லென்னகாரியம். இன்று ஓட்டிஎன-இன்றைக்கே யோடிப்போவாயென. அல்கிடும்-(அன்பு) சுருங்கும். இனிமையால் - இன்பத்தில். உட்படும்-அகப்படும். ஏத்து-துதித்தல். உள்-(என்)னிடத்தில். நெடிது-நீண்டதாகிய. கூர்க்கும்-மிகுக்கும். ஆர்த்து-முழங்கி. அம்கள்-அழகிய தேனொழுகும். தேர்க்குன்று-தேராகிய மலை. ஏர்-அழகு. ஆட்டம்-(திரு)விளையாடல். சற்றிடுவார்-செய்திடுவாராகிய சிவபிரான். அறிவு இடம்-தெளிவுப் பொருள். தினம்-நாடோறும். வரிவண்டு-பாடல்வண்டுகள். இசைகொடு-இராகத்தால். உவந்து-மகிழ்ந்து. இஞ்சி-கோட்டைசூழ்ந்த. சந்த நோக்கி ஓடென்பது - ஒட்டென்றும். அல்கிடு மென்பது, அற்கிடுமென்றும் ஆயின.

(யச) சந்தம் - அழகிய. மோகு-மோகத்தைச் செய்யும். தாழ்வுஒன்று-தாழ்தலாகிய ஒரு செய்கையை. வேள்-மன்மதன். சொற்கொண்டு-சொற்க

தங்கவேள் செங்கைபொற் கொண்டல்நீ யென்றசொற்
கொண்டு தாய் நின்றுரைத் — துழலாதே-
துன்பநோய் சிந்தநற் கந்தவே ளென்றுனைத்
தொண்டினு லொன்றுரைக் — கருள்வாயே;
வெங்கண்வ்யா ளங்கொதித் தெங்கும்வே மென்றெடுத்
துண்டுமே லண்டருக் — கமுதாக-
விண்டநா தன்றிருக் கொண்டல்பா கன்செருக்
குண்டுபே ரம்பலத் — தினிலாடி;
செங்கண்மால் பங்கயக் கண்பெறு தந்தரத்
தின்கணு டுந்திறற் — கதிராழித்-
திங்கள்வா ழுஞ்சடைத் தம்பிரா னன்புறச்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் — பெருமாளே.

(௰) நிபங்கமே வும்பிறப் பந்தகா ரந்தனிற்
பந்தபா சந்தனிற் — றடுமாறிப்-
பஞ்சபா ணம்படப் புண்படா வஞ்சகப்
பண்பிலா டம்பரப் — பொதுமாதர்;
தங்களா லிங்கனக் கொங்கையா கம்படச்
சங்கைபால் கொண்டிளைத் — தயராதே-
தண்டைசூழ் கிண்கிணிப் புண்டரீ கந்தனைத்
தந்துநீ யன்புவைத் — தருள்வாயே;

---

ளால். தாய்-தாவி. ஒன்று-ஒருதோத்திரம். உரைக்க-சொல்ல. வ்யாளம்-(ஆகுபெயர்) நஞ்சு. (இசையுண்ணவிட்டால்) எங்கும்வேம்,— மேல்-அதன்மேல் அமுதஆக-(விக்கினமில்லாமல்) அமுதுண்ணுதற்காம்படி. விண்ட-திருவாய் மலர்ந்தருளிய. கொண்டல். மேகம்போன்றவிஷ்ணுவை. பாகன்-இடப்பாகத்திலுடையவன். செருக்குஉண்டு-கருவமடைந்து. கண்பெறுது-நித்திரைசெய்யாமல் (அறிதுயிலமர்ந்தென்றபடி). அந்தரத்தின்கண் - அண்டங்களினிடங்களை. நாடும்-(காத்தற்கு) ஆராய்ந்துகொண்டிருக்கும். ஆழி-கடலிற்றோன்றும். உரைக்கவருள், உரைக்கருளென்றாயிற்று,

(௰௫) பிறப்பு அந்தகாரம் - சனனமாகிய இருள். படா-பட்டு. பண்பில் வஞ்சகம்,—ஆடம்பரம் - வேடிக்கை. ஆலிங்கனம் -தழுவுதல். ஆகம்-மார்பு. சங்கை-சந்தேகம். புண்டரீகம் - தாமரைமலர்போலுந்திருவடி. அண்டவேதண்டம்-ஆகாயத்தையளாவிய கயிலாசமலை. உட்பட-உள்ளடங்க (மற்றெவ்விடங்

அங்கைவேல் கொண்டரக் கன்ப்ரதா பங்கெடுத்
தண்டவே தண்டமுட் படவேதான்-
அஞ்சவே திண்டிறற் கொண்டலா கண்டலற்
கண்டலோ கங்கொடுத் தருள்வோனே;
திங்களார் கொன்றைமத் தந்துழாய் துன்றுபொற்
செஞ்சடா பஞ்சரத் துறுதோகை-
சிந்தையேய் தென்றிசைத் தென்றல்வீ சும்பொழிற்
செந்தில்வாழ் செந்தமிழ்ப் பெருமாளே.

(௰௬) தண்டே னுண்டே வண்டார் வஞ்சேர்
தண்டார் மஞ்சுக் குழல்மானார்-
தம்பா லன்பார் நெஞ்சே கொண்டே
சம்பா வஞ்சொற் றடிநாயேன்;
மண்டோ யந்தீ மென்கால் விண்டோய்
வண்கா யம்பொய்க் குடில்வேறாய்-
வன்கா னம்போ யண்டா முன்பே
வந்தே நின்பொற் கழல்தாராய்;
கொண்டா டும்பேர் கொண்டா டுஞ்சூர்
கொன்றாய் வென்றிக் குமரேசா-
கொங்கார் வண்டார் பண்பா டுஞ்சீர்
குன்று மன்றற் கிரியோனே;

---

களும்). அஞ்ச-பயப்பட. அரக்கன் - இராக்ஷசசம்பந்தமுடைய சூரனது. ப்ரதாபம் - கீர்த்திபை. கொண்டல் ஆகண்டலற்கு - மேகவாகனத்தையுடைய இந்திரனுக்கு. ஆர்-ஆத்தி. மத்தம்-ஊமத்தம்பூ. துன்று-நெருங்குகின்ற. சடாபஞ்சரத்து-சடையாகிய கூட்டினுள்ளிருக்கும். தோகை - மயில்போன்ற கங்கையின். சிந்தை எய்-மனத்தையொத்த.

(௰௬) ஆர்வம்-அன்பு. தார் - மாலை. மஞ்சு - மேகம்போன்ற. சம் - சுகம் பா-பரவிய. அஞ்சு-பஞ்சேந்திரியங்களில். ஒன்று - பொருந்துகின்ற. அடிநாயேன்-தாழ்ந்தநாய்போன்ற அடியேன். மண்-பிருதுவி. தோயம்-அப்பு. கால்-காற்று. விண்-ஆகாயம். (ஆகியபஞ்சபூதபரிணாமத்தாலுண்டான) வண்காயம்--வளந்தங்கிய சரீரமாகிய. பொய்க்குடில்-பொய்க்குடிலை(யைவிட்டு). வேறாய்-தனியாக. வன்கானம்-வலியகாடு (மயானம்). அண்டாமுன்பு-நெருங்காதசற்கு

கண்டா கும்பா லுண்டா யண்டார்
கண்டா கந்தப் புயவேளே-
கந்தா மைந்தா ரந்தோள் மைந்தா
கந்தா செந்திற் பெருமாளே.

(௰எ) வெங்கா ளம்பா ணஞ்சேல் கண்பால்
மென்பா கஞ்சொற் குயில்மாலை-
மென்கே சந்தா னென்றே கொண்டார்
மென்ருே ளொன்றப் பொருள்தேடி;
வங்கா ளஞ்சோ னஞ்சி னம்போய்
வன்பேய் துன்பப் படலாமோ-
மைந்தா ருந்தோள் மைந்தா அந்தா
வந்தே யிந்தப் பொழுதாள்வாய்;
கொங்கார் பைந்தே னுண்டே வண்டார்
குன்ருள் கொங்கைக் கினியோனே-
குன்றூ டுஞ்சூ ழும்பே ழுஞ்சூ
ரும்போய் மங்கப் பொருகோபா;
கங்கா ளஞ்சேர் மொய்ம்பா ரன்பார்
கன்றே யும்பர்க் கொருநாதா-
கம்பூர் சிந்தார் தென்பால் வந்தாய்
கந்தா செந்திற் பெருமாளே.

---

முன்னரே. கொண்டாடும்பேர்-புகழ்ந்து பேசுவார். கொங்கு-மணம். ஆர்-நிறைந்த. குன்ரு-குறையாத. மன்றல் - (வள்ளிநாயகியை) விவாகஞ்செய்த. கிரியோனே-திருத்தணிகைமலையை யுடையவனே. கண்டுஆகும் - கற்கண்டுபோலும். பால்-(கார்த்திகைமுதலிய ஆறுதாய்மார்களின்) பாலை. அண்டார்-பகைவர். கண்டா-கண்டிக்கப்பட்டவனே. கந்தம்-வாசனை. கந்து - கட்டுத்தறிக்கு. ஆம்-(ஒப்)பாகும். மைந்து-வலிமை. மைந்தா-குமாரக்கடவுளே. ஒன்று, ஒற்றென விகாரமாயிற்று.

(௰எ) காளம்-விடம். சேல்-கெண்டைமீன். மாலை-இருள். கேசம்-கூந்தல். கொண்டார்-கொண்டபெண்கள். ஒன்ற-பொருந்த. சோனம்-ஐம்பத்தாறுதேசத்திலொன்று. வன்பு-வலிமை. எய்-பொருந்திய. மைந்து-வலிமை. அந்தா-அழகுடையவனே. கொங்கு-மணம். குன்ருள்-மலைப்பெண்ணாகிய வள்ளியம்மை. குன்று-கிரௌஞ்சகிரி. அம்பு - (ஆகுபெயர்) கடல். சூர்-சூரன். கங்காளம்-முழுவெலும்பு. மொய்ம்பார் - தோள்களையுடைய சிவபிரான். கன்றே-பிள்ளையே. கம்பு-சங்கு. சிந்து-கடல்.

(ய௮) விதிபோலு முந்த விழியாலு மிந்து
நுதலாலு மொன்றி யிளையோர்தம்-
விரிவான சிந்தை யுருவாகி நொந்து
விறல்வேறு சிந்த வினையாலே;
இதமாகி யின்ப மதுபோத வுண்டு
இனிதாளு மென்று மொழிமாதர்-
இருளாய துன்ப மருள்மாயை வந்து
எனையீர்வ தென்றும் ஒழியாதோ;
மதிசூடி யண்டர் பதிவாழ மண்டி
வருமால முண்டு விடையேறி-
மறவாத சிந்தை யடியார்கள் பங்கில்
வருதேவ சம்பு தருபாலா;
அதிமாய மொன்றி வருசூரர் பொன்ற
அயில்வேல்கொ டன்று பொரும்வீரா-
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த பெருமாளே.

(ய௯) விறல்மார னைந்து மலர்வாளி சிந்த
மிகவானி லிந்து வெயில்காய-
மிதவாடை வந்து தழல்போல வொன்ற
வினைமாதர் தந்தம் வசைகூற;
குறவாணர் குன்றி லுறைபேதை கொண்ட
கொடிதான துன்ப மயல்தீர-

---

(ய௮) விதி-ஊழ். உந்து-செலுத்துகின்ற. ஒன்றி-ஒற்றுமைப்பட்டு. இளைஞோர்-ஆடவர். சிந்தை-மனமானது. உருவாகி-(ஒரு)வடிவெடுத்து விறல்-வலிமை. வேறுசிந்த-வேருகக்கெடுதலால் போத-மிக. மொழி-சொல்லப்படும். இருள்-கருநிறம். துன்பம்-துன்பத்தைச்செய்யும். ஈர்வது-பிளப்பது. மதிசூடி-சந்திரனைத்தரித்தவர். மண்டி-நெருங்கி. ஆலம்-ஆலகாலவிடம். மாயம்-வஞ்சகம். அயில்-கூர்மை.

(ய௯) விறல்-வெற்றி. இந்து-சந்திரன். வெயில்காய-சுட. மிதம்-(ஆசையின்) அளவு. வினை - வஞ்சகம். குறுகாயோ - அணுகமாட்டாதவனோ. மறிமன்,—(இருப்பெயரொட்டு). மதியாளா-அறிவுடையவனே. மலை-கிரௌஞ்

குளிர்மாலை யின்க ணணிமாலை தந்து
குறைதீர வந்து குறுகாயோ;
மறிமா னுகந்த இறையோன் மகிழ்ந்து
வழிபாடு தந்த மதியாளா-
மலைமாவு சிந்த அலைவேலை யஞ்ச
வடிவே லெறிந்த அதிதீரா;
அறிவா லறிந்து னிருதா ளிறைஞ்சு
மடியா ரிடைஞ்சல் களைவோனே-
அழகான செம்பொன் மயில்மே லமர்ந்து
அலைவா யுகந்த பெருமாளே;

(௨௰) சந்தனச வாதுநிறை கற்பூர
குங்குமப டீரவிரை கத்தூரி
தண்புழுக ளாவுகள பச்சித வெகுவாச-
சண்பக கலாரவகு ளத்தாம
வம்புதுகி லாரவபி ரக்கோவை
தங்கியக டோரதர வித்தார பரிதான;
மந்தரம தானதன மிக்காசை
கொண்டுபொருள் தேடுமதி நிட்டூர
வஞ்சகவி சாரஇத யப்பூவை யனையார்கள்-
வந்தியிடு மாயவிர கப்பார்வை
அம்பிலுளம் வாடுமறி வற்றேனை
வந்தடிமை யாளஇனி யெப்போது நினைவாயே;
இந்த்ரபுரி காவல்முதன் மைக்கார
சம்ப்ரமம யூரதுர கக்கார
என்றுமக லாதஇள மைக்கார குறமாதின்-

---

சகிரி. மாவு-மாமரமாகிய சூரன். இடைஞ்சல்-துன்பம். அலைவாய்-திருச்செந்தூர். அணுகமாட்டாதவனே என்றது -அணுகினவனுதலாலிவளையும் வந்து சேர்வாயாக என்னும் பொருளைத்தந்தது. மாவு, என்பதில்-உகரம் சாரியை.

(௨௰) படீரம்-(ஒருவகைச்) சந்தனம். அளாவு-கலந்த. கலாரம்-செங்குவளை. வகுளத்தாமவம்பு-மகிழம்பூமாலையின்வாசம். கடோரம்-கொடுமை. தரதரித்தவனே. வித்தார-அடிபரந்த, பரிதான-பெரிதாகிய. மந்தரம்-மந்தரமலை. தனம்-கொங்கையில். நிட்டூர - கொடுமையுடைய. வந்தியிடும் - வருத்தத்தைச்

இன்பஅறு போகசுர சக்கார
வந்தஅசு ரேசர்கல கக்கார
எங்களுமை சேயெனரு மைக்கார மிகுபாவின்;

செந்தமிழ்சொல் நாலுகவி தைக்கார
குன்றெறியும் வேலின்வலி மைக்கார
செஞ்சொலடி யார்களெளி மைக்கார எழில்மேவும்-

திங்கள்முடி நாதர்சம யக்கார
மந்த்ரவுப தேசமகி மைக்கார
செந்திநகர் வாழுமரு மைத்தேவர் பெருமாளே

(உக) முந்துதமிழ் மாலை கோடிக் கோடி
சந்தமொடு நீடு பாடிப் பாடி
முஞ்சர்மனை வாசல் தேடித் தேடி யுழலாதே-

முந்தைவினை யேவ ராமற் போக
மங்கையர்கள் காதல் தூரத் தேக
முந்தடிமை யேனை யாளத் தானு முனைமீதே.

திந்திதிமி தோதி தீதித் தீதி
தந்ததன தான தானத் தான
செஞ்செணகு சேகு தாளத் தோடு நடமாடுஞ்-

செஞ்சிறிய கால்வி சாலத் தோகை
துங்கஅநு கூல பார்வைத் தீர
செம்பொன் மயில் மீதி லேயெப் போது வருவாயே;

அந்தண்மறை வேள்வி காவற் கார
செந்தமிழ்சொல் பாவின் மாலைக் கார
அண்டருப கார சேவற் கார முடிமேலே-

---

செய்யும். இந்த்ரபுரி-தேவலோகம் முதன்மைக்கார-முதற்றன்மையையுடைய வனே. சம்ப்ரம-மகிழ்ச்சியுடைய. துரகம்-குதிரை. சமயம்-சைவசமயம். தேடு மென்பது - அறிவற்றேனையென்பதனோடு முடியும். கலாரம் என்பது கல்லார மென்பதன் விகாரம்.

(உக) நீடு - நெடுங்காலம். முஞ்சர் - மாணமடைகுவார். முந்தைவினை-பழவினை. முந்து-முற்படுகின்ற. முனை-யுத்தகளத்தில். விசாலத்தோகை-விரிவானஇறகினிடத்து. பார்வை - கண்களையுடைய. பொன் - அழகிய. காவற்கார-காவலையுடையவனே. அந்தம்-அழகு. வெகு-மிகுதி. சித்ரமின்-

அஞ்சலிசெய் வோர்கள் நேயக் கார
குன்றுருவ ஏவும் வேலைக் கார
அந்தம்வெகு வான ரூபக் கார எழிலான;
சிந்துரமின் மேவு போகக் கார
விந்தைகுற மாது வேலைக் கார
செஞ்சொலடி யார்கள் வாரக் கார எதிரான
செஞ் சமரை மாயு மாயக் கார
துங்கரண சூர சூறைக் கார
செந்தில்நகர் வாழு மாண்மைக் கார பெருமாளே.

(௨௨) அம்பொத் தவிழித் தந்தக் கலகத்
தஞ்சிக் கமலக் கணையாலே-
அன்றிற் குமனற் றென்றற் குமினைத்
தந்திப் பொழுதிற் பிறையாலே;
எம்பொற் கொடிமற் றுன்பக் கலனற்
றின்பக் கலவித் துயரானாள்-
என்பெற் றுலகிற் பெண்பெற் றவருக்
கின்பப் புலியுற் றிடலாமோ;
கொம்புக் கரிபட் டஞ்சப் பதுமக்
கொங்கைக் குறவிக் கினியோனே-
கொன்றைச் சடையற் கொன்றைத் தெரியக்
கொஞ்சித் தமிழைப் பகர்வோனே;
செம்பொற் சிகரப் பைம்பொற் கிரியைச்
சிந்தக் கறுவிப் பொரும்வேலா-
செஞ்சொற் புலவர்க் கன்புற் றதிருச்
செந்திற் குமரப் பெருமாளே.

---

தெய்வயானை. வேலை-ஏவற்றொழில். வாரம்-அன்பு சூறை-சூறைவிளையாட்டு; சூறாவளிபோலுஞ் சுற்றிவிளையாடும் விளையாட்டு. ஆண்மை-வீரம். வேலை யென்பதில், ஐசாரியை.

(௨௨) விழி-கண்களையுடைய பெண்கள். தந்த-(தாற்பரியம்)பழிகூறிய. கலகத்து-சண்டைக்கு. அனல் - அக்கினிபோன்ற. மன்-நிலைபெற்ற. துன்பக் கலன்-துன்பத்தைச் செய்யுமாபரணத்தை. அற்று கழற்றியெறிந்து. பெற்று என் - பெற்றதனாலென்னபயன். இன்பப்புலி - காமப்புலி. அ-அந்த. பதுமக் கொங்கை - தாமரையரும்புபோலுந் தனங்களையுடைய. குறவிக்கு-குறச்சாதி பெண்ணாகிய வள்ளிநாயகிக்கு. ஒன்றை - (பிரணவமாகிய) ஒருபொருளை. சிந்த-சிதற. கறுவி - கோபித்து. பெண்பெற்றவருக்குப் பெற்றென்னெனக் கூட்டுக. காமத்தைப் புலியென்றது வருத்துந் தன்மையாலென்க.

(௨௫) கொங்கைப் பணையிற் செம்பொற் செறிவிற்
கொண்டற் குழலிற் — கொடிதான
கொன்றைக் கணையொப் பந்தக் கயலிற்
கொஞ்சுக் கிளியுற் — றுறவான;
சங்கத் தொனியிற் சென்றிற் கடையிற்
சந்திப் பவரைச் — சருவாதே
சந்தப் படியுற் றென்றற் றலையிற்
சந்தப் பதம்வைத் — தருள்வாயே;
அங்கப் படைவிட் டன்றைப் படுகைக்
கந்திக் கடலிற் — கடிதோடா
அந்தப் பொழிலிற் சந்துத் தலைபுற்
றஞ்சப் பொருதுந் — றொழியாதே;
செங்கைக் கதிருற் றொன்றக் கடலிற்
சென்றுற் றவர்தற் — பொருளானாய்
சிந்தைக் கனிவைத் தந்தப் பொழிலிற்
செந்திற் குமரப் — பெருமாளே.

---

(௨௫.) பணைகொங்கையில்-பருத்ததனங்களில். பொன்செறிவில்-பொன்னாபரணநெருக்கத்தில். கொன்-அச்சமும். தை-தைத்தலுமுடைய. ஒப்பு-சமானமாகிய. கயலில் கண்ணாகிய சேல்மீனிடத்தில். கொஞ்சு-கொஞ்சப்படு. கிளியில்-கிளிபோன்ற மொழியில். துறவு-நெருக்கம்-சங்கத்தொனியில். சங்குபோன்ற கண்டத்தில் எழுமோசையில். சென்று (மனம்) போய். இற்கடையில்-வீட்டின் தலைவாயிலில். சருவாது-அணுகாமல். சந்தம்-அழகிய. படி-பூமியில். என்தன்-என்னுடைய. சந்தம்-சிறம். அங்கு-அவ்விடத்து. அப்படைவிட்டு-அந்தச்சேனையைநீங்கி. அன்றைப்படுகைக்கு-அக்காலத்தில். (வெற்றி) யுண்டாகற்பொருட்டு. அந்திக்கடலில்- (திருச்செந்தூருக்கும் மகேந்திரபுரிக்கும் நடுவே) அடுத்திருக்கும் சமுத்திரத்தில். கடிது-விரைந்து. அந்தப்பொழில்-அந்த-(மகேந்திரபுரியென்னும்) பூமியினிடத்து. சந்துத்தலை-தூதாகிய முதன்மையை. உற்று-(தாற்பரியம்) சொல்லி. ஒழியாது-கெடாமல். கை-கிரணங்களையுடைய. கதிர்-சூரியனைப்போல. உற்று-பொருந்தி. ஒன்ற - (தாற்பரியம்) தோன்ற. (மற்றைச்சமுத்திரத்திலும்) சென்று உற்றவர் - போய்வந்தவராகிய வீரவாகுதேவருக்கு. தற்பொருளானாய் - தானே பரம்பொருளாயிருந்தவனே. அப்பொழிலின் - அச்சோலைசூழ்ந்த இனிய.

(உ௪) காலனார் வெங்கொடுந் தூதர்பா சங்கொடென்
காலினார் தந்துடன் கொடுபோகக்-

சாதலார் மைந்தருந் தாயரா ருஞ்சுடுங்
கானமே பின்தொடர்ந் தலறுமுன்;

சூலம்வாள் தண்டுசெஞ் சேவல்கோ தண்டமுஞ்
சூடுதோ ளுந்தடந் திருமார்புந்-

தூயதாள் தண்டையுங் காணஆர் வஞ்செயுந்
தோகைமேல் கொண்டுமுன் வரவேணும்;

ஆலகா லம்பரன் பாலதா கஞ்சிடுந்
தேவர்வா ழும்ப்ரகந் தமுதியும்-

ஆரவா ரஞ்செயும் வேலைமேல் கண்வளர்ந்
தாதிமா யன்றனன் மருகோனே;

சாலிசேர் சங்கினம் வாவிசூழ் பங்கயஞ்
சாரலார் செந்திலம் பதிவாழ்வே-

தாவுசூ ரஞ்சிமுன் சாயவே கம்பெறுந்
தாரைவே லுந்திடும் பெருமாளே.

(உ௫) சங்கைதா னென்றுதா னின்றியே நெஞ்சிலே
சஞ்சலா ரம்பமாயன்-

சந்தொடே குங்குமா லங்க்ருதா டம்பரா
சம்ப்ரமா நந்தமாயன்;

மங்கைபார் கொங்கைசேர் அங்கமோ கங்களால்
வம்பிலே துன்புறுமே-

வங்குகா நின்சொரூ பம்ப்ரகா சங்கொடே
வந்துநீ யன்பிலான்வாய்;

---

(உ௪) ஆர்தந்து-கட்டி. காதல்-ஆசை. ஆர்-நிறைந்த. கோதண்டம்-வில். தோள்-கை. ஆர்வம்-அன்பு. பாலது-பக்கத்தில். ஆக-சேர. வாழ்-வாழ்தலை. ஆரவாரம்-பெருமுழக்கம். கண்வளர்ந்த-நித்திரைசெய்த. சாலி-நெற்கதிர். சாரல்-பக்கத்தில். சூர்-சூரன்-தாரை-நேரேசெல்லுகின்ற. ஆ, வளர்ந்த என்பவற்றி லீற்றகரங்கள் கெட்டன.

(உ௫) சங்கை-சந்தேகம். சஞ்சலம் - துன்பம். ஆரம்பம் - முதலிற்றோன்றுதலுடைய. மாயன்-வஞ்சனையுடையேனாகிய. சந்து-சந்தனம். ஆடம்பா-வே

கங்கைசூ டும்பிரான் மைந்தனே அந்தனே
கந்தனே விஞ்சையூரா-
கம்பியா திந்த்ரலோ கங்கள்கா வென்றவா
கண்டலே சன்சொல்வீரா;
செங்கைவேல் வென்றிவேல் கொண்டுசூர் பொன்றவே
சென்றுமோ தும்ப்ரதாபா-
செங்கண்மால் பங்கசா னன்றொழா னந்தவேள்
செந்தில்வாழ் தம்பிரானே.

(உசு) அங்கை மென்குழ லாய்வார் போலே
சந்தி நின்றய லோடே போவா
ரன்பு கொண்டிட நீரோ போறீ ரறியீரோ-
அன்று வந்தொரு நாள்நீர் போனீர்
பின்பு கண்டறி யோநா மீதே
அன்று மின்றுமொர் போதோ போகா துயில்வாரா;
எங்க ளந்தரம் வேறு ரோர்வார்
பண்டு தந்தது போதா தோமே
லின்று தந்துற வோதா னீதே னிதுபோதா-

---

டிக்கையில். சம்ப்ரமானந்த - மகிழ்ச்சியாகிய இன்பத்தைப் பொருந்திய. மாயன்-மயக்கத்தையுடையேன். அங்கம்-(அப்பெண்கள்) சரீரத்தின். சொரூபப்பிரகாசங்கொடு - திருமேனிவிளக்கத்தால். அந்தனே-அழகுள்ளவனே. விஞ்சையூரா-அறிவாகிய நகரத்திலிருப்பவனே. கம்பியாது-நடுங்சாது. காவென்று-இரக்ஷிப்பாயென்று. அ-அந்த. ஆகண்டலேசன்-இந்திரன். ப்ரதாபா-கீர்த்தியுடையவனே. பங்கசானன்-தாமரையாசனத்தை யுடைய பிரமன். பங்கசாசனன் என்பதில் சகரம்கெட்டது.

(உசு) அங்கை - அழகியகையால். ஆய்வார் - சிக்கறுப்பார். சந்தி-நடுத்தெரு. அயல்-அன்னியர். அன்புகொண்டிட-(நாம்)அன்புற. ஈதே-இம்மட்டே. அன்றும்-அந்நாள்முதல். இன்றும் - இந்நாள்வரையும். ஓர்போது - இராப்பொழுது. போகா-கழியமாட்டாது வருத்துகின்றது. அந்தரம்-முடிவை. பண்டு-முன்னம். போதாதோ-காணாதோ. மேல்-அதற்குமேல். இன்று - இன்றைக்கும். தந்துறவோ-கொடுத்துச்சேர (வேண்டு) மோ. ஈதேன் - இந்தயோசனையெதற்கு. இதுபோதாது- இவளவுநேரம்வரை நின்ற இதுகாணாமல் (இன்னமும்). வீடு-வீட்டுக்கு. வாரீர்-வாருங்கள். இணங்கிகள் - இணக்கஞ்செய்யும் வேசையர்கள். இன்ப சிங்கியில்-சுகமாகிய நஞ்சில். மங்குல்-மேகம். வாணுய-

திங்கு நின்றதென் வீடே வாரீ
　　ரென்றி ணங்கிகள் மாயா லீலா
　　இன்ப சிங்கியில் வீணே வீழா　　　　தருள்வாயே;
மங்கு லின்புறு வானாய் வானூ
　　டன்ற ரும்பிய காலாய் நீள்கால்
　　மண்டு றும்புகை நீறு வீறு　　　　எரிதீயாய்-
வந்தி ரைந்தெழு நீராய் நீர்சூழ்
　　அம்ப ரம்புனை பாராய் பாரேழ்
　　மண்ட லம்புகழ் நீயாய் நானாய்　　　　மலரோனாய்;
உங்கள் சங்கரர் தாமாய் நாமார்
　　அண்ட பந்திகள் தாமாய் வானாய்
　　ஒன்றி னுங்கடை தோயா மாயோன்　　　　மருகோனே-
ஒண்ட டம்பொழில் நீடூர் கோடூர்
　　செந்தி லம்பதி வாழ்வே வாழ்வோர்
　　உண்ட நெஞ்சறி தேனே வானோர்　　　　பெருமாளே.

(உஎ) அந்தகன்வ ருந்தினம் பிறகிடச்
　　சந்ததமும் வந்துகண் டரிவையர்க்
　　கன்புருகு சங்கதந் தவிரமுக்　　　　குணமான-
அந்திபக லென்றிரண் டையுமொழித்
　　திந்திரிய சஞ்சலங் களையறுத்
　　தம்புய பதங்களின் பெருமையைக்　　　　கவிபாடிச்;

---

ஆகாயமாகி. அரும்பிய. தோன்றிய-காலாய்-காற்றாகி. மண்டுறும்-நெருங்கும். நீறு-(தன்னிடத்தகப்பட்ட பொருள்) சாம்பராக. வீறாய்-தருக்காய். எரி-எரிகின்ற. தீயாய்-அக்கினியாகி. இரைந்து-முழங்கி. நீர்அம்பரம்-கடலாகிய ஆடை. சூழ்புனை-சூழத்தரிக்கின்ற. பாராய்-பூமியாகி. பார்-(அப்) பூமி (யோடு). உங்கள்-உனக்குமுன்னைச் சேர்ந்தவர்க்கும். சங்கரர்-சுகஞ்செய்பவராகிய சிவபிரான். நாம்-அச்சம். அண்டபந்திகள்-வரிசையாகிய அண்டங்கள். ஆய்வானாய்-ஆராயப்படுவானாகி. ஒன்றினும்- (இங்கே சொல்லப்பட்ட) ஒருபொருளினும். கடை-முடிவில். தோயா-பற்றாத. நீடு-வெகுதூரம். ஊர்-வளர்கின்ற. கோடு-சங்குகள். ஊர்-ஊர்ந்துதிரியும். உண்ட-அநுபவித்த. போகா வாரா-என்பவற்றினிறுதியிலுள்ள து, கெட்டது-தான். தாம்-அசைகள்.

(உஎ) அந்தகன்-யமன். பிறகிட-பிற்பட்டுப்போக. சந்ததம்-எப்பொழுதும். சங்கதம்-நட்பு. முக்குணம்-இராசதமுதலிய மூன்றுகுணங்கள். அந்தி

செந்திலை யுணர்ந்துணர்ந் துணர்வுறக்
கந்தனை யறிந்தறிந் தறிவினிற்
சென்றுசெரு குந்தடந் தெளிதரத் தணியாத-
சிந்தையு மவிழ்ந்தவிழ்ந் துரையொழித்
தென்செய லழிந்தழிந் தழியமெய்ச்
சிந்தைவர நின்றுநின் தெரிசனைப் படுவேனோ;
கொந்தவிழ் சரண்சரண் சரணெனக்
கும்பிடு புரந்தரன் பதிபெறக்
குஞ்சரி குயம்புயம் பெறஅரக் கருமாள-
குன்றிடிய அம்பொனின் திருவரைக்
கிண்கிணி கிணின்கிணின் கிணினெனக்
குண்டல மசைந்திளங் குழைகளிற் ப்ரபைவீச;
தந்தன தனந்தனந் தனவெனச்
செஞ்சிறு சதங்கைகொஞ் சிடமணித்
தண்டைகள் கலின்கலின் கலினெனத் திருவான-
சங்கரி மனங்குழைந் துருகமுத்
தந்தர வருஞ்செழுந் தளர்நடைச்
சந்ததி சகந்தொழுஞ் சரவணப் பெருமாளே.

(உஅ) அருணமணி மேவு பூஷித ம்ருகமத படீர லேபன
அபிநவ விசால பூரண
அம்பொற் கும்பத் தனமோதி-
அளிகுலவு மாதர் லீலையின் முழுகியபி ஷேகமீதென
அறவுமுற வாடி நீடிய
அங்கைக் கொங்கைக் கிதமாகி;

பகல்-கேவலசகல நிலைகள். இந்திரிய சஞ்சலங்கள்-பஞ்சேந்திரியங்களாலுண்டாகிய துன்பங்கள். உணர்வு-அறிவு. கந்தனை-குமாரக்கடவுளாகிய வுன்னை. செருகும்-நெருங்கும். தடம்-வழி. அவிழ்ந்து-விரிந்து. உரையொழித்து-பேச்சற்று. மெய்ச்சிந்தை-உண்மைக்கருத்து. படுவேன்-அடைவேன். ஓ-அசை. கொந்து அவிழ்-பூவிசழ்மலர்கின்ற. சரண்-திருவடி. சரண்-அடைக்கலம். குஞ்சரி-தெய்வயானை. குயம்-தனம். புயம் (உனது) தோள். குழை-காது. திரு-சிறப்பு. சந்ததி-புத்திரனே.

(உஅ) அருணமணி-சிவந்தமாணிக்கமாலை. பூஷித-புகழ்ப்படு. ம்ருகமத-கஸ்தூரிகலந்த. படீரலேபன - சந்தனப்பூச்சுடைய. அபிநவம்-புதுமையாகிய.

இருணிறைய மோதிமாலிகை சருவியுற வானவேளையி
விழைகலைய மாத ரார்வழி
யின்புற் றன்புற் றழியாநீள்-

இரவுபகல் மோகனாகியெ படியில் மடியாமல் யானுமுன்
இணையடிகள் பாடி வாழவெ
னெஞ்சிற் செஞ்சொற் றருவாயே;

தருணமணி யாட ராவணி குடிலசடி லாதி யோதிய
சதுர்மறையி னாதி யாகிய
சங்கத் துங்கக் குழையாளர்-

தருமுருக மேக சாயலர் தமரமக ராழி சூழ்புவி
தனைமுழுதும் வாரி யேயமு
துண்டிட் டண்டர்க் கருள்கூரும்;

செருமுதலி மேவு மாவலி யதிமதக போல மாமலை
தெளிவினுடன் மூல மேயென
முந்தச் சிந்தித் தருள்மாயன்-

திருமருக சூரன் மார்பொடு சிலைபுருவ வேலை யேவிய
ஜெயசரவ ணாம னோகர
செந்திற் கந்தப் பெருமானே.

(உகூ) அனிச்சங் கார்முகம் வீசிட மாசறு
துவட்பஞ் சானத டாகம்வி டாமட
அனத்தின் தூவிகு லாவிய சீறடி மடமானார்-

---

ஓதி-கூந்தலில். நீடியஅங்கு-காலநீட்டித்திருக்கும் அவ்விடத்து. கொங்கைக்கு-தனங்களுக்கு. இருள்நிறை,—அம்ஓதி-அழகிய கூந்தலின். மாலிகை-மாலையை. சருவி-அணுகி. இழை-(ஆகுபெயர்)சேலை. கலைய-அவிழ. வழி-இடத்தில். அழியா-கெட்டு. தருணம்-புதுமையாகிய. குடிலசடிலஆதி-வட்டச்சடையுடையசிவபிரானாகிய. ஓதிய-(தாம்) சொல்லப்பட்ட. ஆதி - முதற்பொருளாயுள்ள. மேகசாய்-மேகநிறம். அலர்-விரிந்த. தமரம்-பேரொலி. அமுதுண்டிட்டு-போசனஞ்செய்து விட்டு. செருமுதலை - சண்டைசெய்யுமுதலையிடத்து. மாவலி-பெரியவலியும். கபோலம்-கன்னத்தையுமுடைய. மாமலை-பெரியமலைபோலும் யானை. சிலை-மலை. மனோகர-ஆசையுடைய- அருள்கூருமாயனெனக் கூட்டுக.

(உகூ) கார்முகம்-(பஞ்சுவெட்டும்) வில். வீசிட-வெட்டிச்சிதற. துவள் பஞ்சு-இலேசாகும் பஞ்சு. ஆன-ஆகிய. தூவி-இறகு. உலாவிய-(ஒத்து) விளங்

அருக்கன் போலொளி விசிய மாமர
　　கதப்பைம் பூணணி வார்முலை மேல்முகம்
　　அழுத்தும் பாவியை ஆவியி டேறிட　　நெறிபாரா;
வினைச்சண் டாளனை வீணனை நீணிதி
　　தனைக்கண் டாணவ மானநிர் மூடனை
　　விடக்கன் பாய்நுகர் பாழனை யோர்மொழி　　பகராதே-
விகற்பங் கூறிடு மோகவி காரனை
　　அறத்தின் பாலொழு காதமு தேவியை
　　விளித்துன் பாதுகை நீதர நானருள்　　பெறுவேனோ;
முனைச்சங் கோலிடு நீலம கோததி
　　அடைத்தஞ் சாதஇ ராவண னீள்பல
　　முடிக்கன் றோர்கணை யேவுமி ராகவன்　　மருகோனே-
முளைக்குஞ் சீதநி லாவொட ராவிரி
　　திரைக்கங் காநதி தாதகி கூவிள
　　முடிக்குஞ் சேகரர் பேரரு ளால்வரு　　முருகோனே;
தினைச்செங் கானக வேடுவ ரானவர்
　　திகைத்தந் தோவென வேகணி யாகிய
　　திறற்கந் தாவளி நாயகி காமுறும்　　எழில்வேலா-
சிறக்குந் தாமரை யோடையில் மேடையில்
　　நிறக்குஞ் சூல்வளை பால்மணி வீசிய
　　திருச்செந் தூர்வரு சேவக னேசுரர்　　பெருமாளே.

(௩௰) அனைவருமருண் டருண்டு கடிதெனவெ குண்டியம்ப
　　அமரஅடி பின்தொடர்ந்து　　பிணநாறு-

---

கிய. பாவியை-பாவியாகிய எனது. ஈடேறிட-பிழைக்க. நெறி-வழி. விடக்கு-மாமிசம். பாழனை-பாழாகியஎன்னை. விகற்பம்-வேறுபாடு. பால்-பக்கத்தும். ஒழுகாத-செல்லாத. விளித்து-அழைத்து. பாதுகை-திருவடி. ஒலிடும்-முழங்கும். மகோததி-பெரியகடல். தாதகி-ஆத்தி. கூவிளம்-வில்வம். சேகரர்-தலையையுடையவர். கணி-வேங்கைமரம். நிறக்கும்-நிறம்பொருந்தியிருக்கும். பால்மணி-முத்து.

(௩௰) அனைவரும்-(வேசையர்)எல்லாரும். அரண்டு-பயந்து. கடிதென-கொடியதாக. வெகுண்டு-கோபித்து. இயம்ப-பேசவும். அமர-(அவருடைய) னம்

மழுகுபிணி கொண்டு விண்டுபுழுவுட னெலும்பலம்பு
மவலவுட லஞ்சுமந்து தடுமாறி;

மனைதொறுமி தம்பகர்ந்து வரவரஇ ருந்தருந்தி
மனவழிதி ரிந்து மங்கும் வசைதீர-

மறைசதுர்வி தந்தெரிந்து வகைசிறுச தங்கைகொஞ்சு
மலரடிவ ணங்க என்று பெறுவேனோ;

இசைமிசைசு கங்கடிந்த புனமயிலி ளங்குரும்பை
திகழிருத னம்பு ணர்ந்த திருமார்பா-

ஜெகமுழுது முன்புதும்பி முகவனொடு தந்தைமுன்பு
திகிரிவலம் வந்த செம்பொன் மயில்வீரா;

இனியகனி மந்திசிந்து மலைகிழவ செந்தில்வந்த
இறைவகுக கந்த என்று மிளையோனே-

எழுகடலு மெண்சிலம்பும் நிசிசரரும் அஞ்சஅஞ்சு
மிமையவரை யஞ்ச லென்ற பெருமாளே.

(௩௧) இருகுழையெ றிந்த கெண்டைகள் ஒருகுமி ழடர்ந்து வந்திட
இணைசிலைநெ றிந்தெ ழுந்திட அணைமீதே-

இருளளக பந்தி வஞ்சியி லிருகலையு டன்கு லைந்திட
இதழமுத ருந்து சிங்கியின் மனமாய;

முருகொடுக லந்த சந்தன அளறுபடு குங்கு மங்கமழ்
முலைமுகடு கொண்டெ ழுந்தொறு முருகார-

---

ர்ந்திருக்க. அடிபின்-(அவர்) காலைப் பின்பற்றி. விண்டு-விரிந்து. அலம்பும்-அசையும். அவல - துன்பத்தையுடைய மனைதொறும் (கொடுப்பார்) வீடு சோறும். வரவர-(யாசகப்பொருள்) கிடைக்கக் கிடைக்க. இருந்து,—மனவழி-மனம்போனவழியில். சதுர்மறை-நான்குவேதங்களின். விதம் - கூறுபாடுகள். வகை-விதவிதமாகிய. கொஞ்சும்-சிற்றொலிசெய்யும். சுகம்-கிளிகளை. கடிந்த-விரட்டிய. மயில்-மயில்போலும் வள்ளியம்மையின். முன்பு - பண்டைக்காலம். தந்தைமுன்பு-பிதாவாகிய சிவபிரானுக்கு எதிரில். திகிரி-மகாமேரு மலையை. மந்தி-குரங்குகள். மலைகிழவ-மலைகளுக்குரியவனே. சிலம்பு-மலை. நிசிசரர்-அரக்கர். அஞ்சல்-அயப்படாதேயுங்கள்.

(௩௧) குழை-காதுகளில். எறிந்த - (தாற்பரியம்) தாவிய. கெண்டை-கண். குமிழ்-மூக்கு. இணைசிலை-இரண்டுபுருவம். அளகபந்தி - கூந்தல்வரிசை.

முழுமதிபு ரிந்த சிந்துர அரிவையரு டன்க லந்திடு
முகடியுக லம்பி றந்திட அருள்வாயே;

எரிவிடநி மிர்ந்த குஞ்சியி னிலவொடு மெழுந்த கங்கையு
மிதழியொட ணிந்த சங்கரர் களிகூரும்-

இமவரைத ருங்க ருங்குயில் மரகதநி றந்த ருங்கிளி
யெனதுயிரெ னுந்த்ரி யம்பகி பெருவாழ்வே;

அரைவடம லம்பு கிண்கிணி பரிபுரநெ ருங்கு தண்டைக
ளணிமணிச தங்கை கொஞ்சிட மயில்மேலே-

அகமகிழ்வு கொண்டு சந்ததம் வருகுமர முன்றி லின்புறம்
அலைபொருத செந்தில் தங்கிய பெருமாளே.

(௩௨) இருள்விரி குழலை விரித்துத் தூற்றவு
மிறுகிய துகிலை நெகிழ்த்துக் காட்டவு
மிருகடை விழியு முறுக்கிப் பார்க்கவு மைந்தரோடே-

இலைபிள வதனை நடித்துக் கேட்கவு
மறுமொழி பலவு மிசைத்துச் சாற்றவு
மிடையிடை சிறிது நகைத்துக்காட்டவுமெங்கள்வீடே;

வருகென வொருசொ லுரைத்துப் பூட்டவும்
விரிமல ரமளி யணைத்துச் சேர்க்கவும்
வருபொரு ளளவி லுருக்கித் தேற்றவு நிந்தையாலே-

வனமனை புகுதி லடித்துப் போக்கவு
மொருதலை மருவு புணர்ச்சித் தூர்த்தர்கள்
வசைவிட நினது பதத்தைப் போற்றுவ தெந்தநாளோ;

---

வஞ்சி-இடை. இரு-பெரிய. அருந்து-உண்கின்ற. அமுதசிங்கியின்-அமுதமாகியவிடத்தால். முருகு-வாசனைப்பண்டம். அளறு - சேறு. உருகுஆர - உருகுதல் பொருந்த. மதி-முகம். புரிந்த-விரும்பிய. சிந்துரம்-பொட்டு. முகடியும்-மூதேவியாகிய அடியேனும். எரிவிட-அக்கினிபோற்பிரகாசிக்க. குஞ்சியின்-சடையில். இதழி-கொன்றைமலர். அரைவடம் - இடையிலேதரிக்குஞ் சதங்கைமாலை. கொஞ்சிட-சிற்றொலிசெய்ய. முன்றில்-முற்றம். இதில், உவமானப்பொருள்களை யுவமேயமாகக்கூறியது காண்க. மேல்வருமிடந்தோறு மிங்ஙனமே.

(௩.௨) தூற்றவும்-உதறவும். மைந்தர்-ஆடவர். இலை-வெற்றிலை. பிளவு பாக்கு. வீடு-வீட்டில். பூட்டவும்-வசப்படுத்தவும். அமளி-மெத்தை. பொருள

குருமணி வயிர மிழித்துக் கோட்டிய
கழைமட வுருவு வெளுத்துத் தோற்றிய
குளிறிசை யருவி கொழித்துத் தூற்றிய மண்டுநீ ரூர்-

குழிபடு கலுழி வயிற்றைத் தூர்த்தெழு
திடமண லிறுகு துருத்திக் காப்பொதி
குளிர்நிழ லருவி கலக்கிப் பூப்புனை வண்டலாடா;

முருகவிழ் துணர்க ளுகுத்துக் காய்த்தினை
விளைநடு விதணி லிருப்பைக் காட்டிய
முகிழ்முலை யிளைய குறத்திக் காட்படு செந்தில்வாழ்வே-

முளையிள மதியை யெடுத்துச் சாத்திய
சடைமுடி யிறைவர் தமக்குச் சாத்திர
முறையருள் முருக தவத்தைக் காப்பவர் தம்பிரானே.

(௩௯) உததியறல் மொண்டு சூல்கொள்கரு
முகிலெனஇ ருண்ட நீலமிக
வொளிதிகழு மன்ற லோதிநரை பஞ்சுபோலாய்-

உதிரமெழு துங்க வேலவிழி
மிடைகடையொ துங்கு பீளைகளு
முடைதயிர்பி திர்ந்த தோஇதென வெம்புலாலாய்;

---

ளவில்-(கொடுத்த) பொருளுக்குத் தக்கபடி. உருக்கி - (அவ்வாடவரை) மன முருகச்செய்து. நிந்தையாலே - (அவ்வாடவர் தரித்திரரானகாலத்தில்) வசை கூறுதலாலே. வனை-அலங்கரிக்கப்பட்ட. ஒருதலைமருவுபுணர்ச்சி-ஒருபக்கம் பொருந்திய காமத்தையுடைய. தூர்த்தர்கள்-விடபுருடர்களுடைய. வசைவிட-நிந்தை(படியேன்)நீங்க. இழித்து-(கற்களென்று)இழிவுபடுத்தித்தள்ளி. கோட்டிய-வளைக்கப்பட்ட. கழைமடவுருவு-மூங்கிலின் இளையவடிவம். தோற்றிய-தோற்ற. குளிறுஇசை-மிகுந்தஓசையுடைய. கொழித்து-ஒதுக்கி. தூற்ற-வீச. மண்டுநீர்-நெருங்குகின்றநீர். ஊர்-ஊர்ந்து. கலுழி-காட்டாற்றின். வயிற்றை-உள்ளிடத்தை. தூர்த்து-நிரப்பி. திடர்-மேடாகிய. இறுகு - நெருங்குகின்ற. துருத்திகா-திட்டினிடத்துள்ள சோலையை. நிழல்-நிழலிடத்து. அருவி-(அவ்விடத்துவருகின்ற) அருவிச்சலத்தில். கலக்கி-(மூழ்கிக்)கலக்கச்செய்து. வண்டல் - மகளிர்விளையாட்டு. ஆடா-விளையாடி. முருகு-வசனை.| அவிழ்-விரிந்த. துணர்கள்-பூங்கொத்துக்களை. உகுத்து-உதிர்த்துவிளையாடி. இதண்-பரண். ஆட்படு- அடிமைப்பட்ட. சாத்திய-சூடிய. இழித்துக்கல்க்கி ஆடிக்காட்டிய எனமுடிக்க.

மதகரட தந்தி வாயினிடை
சொருகுபிறை தந்த சூதுகளின்
வடிவுதரு கும்ப மோதிவளர் கொங்கைதோலாய்-

வனமழியு மங்கை மாதர்களி
னிலைதனையு ணர்ந்து தாளிலுறு
வழியடிமை யன்பு கூருமது சிந்தியேனோ;

இதழ்பொதிய விழ்ந்த தாமரையின்
மணவறை புகுந்த நான்முகனு
மெறிதிரைய லம்பு பாலுததி நஞ்சராமேல்-

இருவிழிது யின்ற நாரணனு
முமைமருவு சந்த்ர சேகரனு
மிமையவர்வ ணங்கு வாசவனு நின்றுதாழும்;

முதல்வசுக மைந்த பீடிகையி
லகிலசக அண்ட நாயகிதன்
முகிழ்முலைசு ரந்த பாலமுத முண்டவேளே-

முனைமுறுகு சங்கு வீசியலை
முடுகிமைத வழ்ந்த வாய்பெருகி
முதலிவரு செந்தில் வாழ்வுதரு தம்பிரானே.

(௩௪) கட்டழகு விட்டுத் தளர்ந்தங் கிருந்துமுன
மிட்டபொறி தப்பிப் பிணங்கொண் டதின்சிலர்கள்
கட்டணமெடுத்துச் சுமந்தும் பெரும்பறைகள்முறையோடே-

---

(௩௩) உததிஅறல் - கடற்சலம். மன்றல் ஓதி- வாசனையுடைய கூந்தல். ஆய்-ஆக. உதிரம்-இரத்தம். மிடை-நெருங்கிய. இதென-இதுவென்றுசொல்ல. புலாலாய்-மாமிசநாற்றமாகி. மதகரடம்-மதமாகிய கரடம். தந்தி-யானையின். பிறைதந்த - பிறைச்சந்திரனையொத்த கொம்பு. சூதுகளின் - சூதாடுகருவிகள் போல. வடிவுதரு- அழகைச்செய்கின்ற. கும்பம் - குடத்தை. வனம்- அழகு. தாளின் - (உனது) திருவடிகளில். பொதியவிழ்ந்த-கட்டுவிரிந்த. மணவறை- வாசனையுள்ள வீட்டில். அலம்பு-முழங்குகின்ற. உததி-கடலில். மைந்த-வலிமையுள்ள. பீடிகை-தாமரைப்பூந்தட்டில் (இருந்து). அகிலசகம்-எல்லாவுலகங்களாகிய. அண்டநாயகி - அண்டங்களுக்கெல்லாம் தலைவியாம் உமாதேவி. முனை-கூரிய. முறுகுசங்கு - வலம்புரிச்சங்கு. முடுகி-விரைந்து. மை-மேகம். தவழ்ந்த-தவழப்பட்ட. வாய்-இடந்தோறும். முதலி-முதன்மையாகி.

(௩௪) பொறி - அடையாளம். பிணங்கொண்டதின்- பிணமானதனாலே.

வெட்டவிட வெட்டக் கிடஞ்சங் கிடஞ்சமென
மக்களொரு மிக்கத் தொடர்ந்தும் புரண்டும்வழி
விட்டுவரு மித்தைத் தவிர்ந்துன் பதங்களுற வுணர்வேனே;
பட்டுருவி நெட்டைக் கிரௌஞ்சம் பிளந்துகடல்
முற்றுமலை வற்றிக் குழம்புங் குழம்பமுனை [முடிசாய-
பட்டஅயில் தொட்டுத் திடங்கொண் டெதிர்ந்தவுணர்
தட்டழிய வெட்டிக் கவந்தம் பெருங்கழுகு
நிர்த்தமிட ரத்தக் குளங்கண் டுமிழ்ந்துமணி
சற்சமைய வித்தைப் பலன்கண்டு செந்திலுறை பெருமாளே

(௩௫) கண்டுமொழி கொம்பு கொங்கை வஞ்சியிடை அம்பு நஞ்சு
கண்கள்குழல் கொண்ட லென்று பலகாலும்-
கண்டுளம்வ ருந்தி நொந்து மங்கையர்வ சம்புரிந்து
கங்குல்பக லென்று நின்று விதியாலே;
பண்டைவினை கொண்டு ழன்று வெந்துவிழு கின்றல் கண்டு
பங்கயப தங்கள் தந்து புகழோதும்-
பண்புடைய சிந்தை யன்பர் தங்களினு டன்க லந்து
பண்புபெற அஞ்ச லஞ்சல் எனவாராய்;
வண்டுபடு கின்ற தொங்கல் கொண்டறநெ ருங்கி யிண்டு
வம்பினைய டைந்து சந்தின் மிகமூழ்கி-
வஞ்சியைமு னிந்த கொங்கை மென்குற மடந்தை செங்கை
வந்தழகு டன்க லந்த மணிமார்பா;

---

கட்டணம்-பாடையில். சுமந்தும்-சுமக்கப்பட்டும். பறைகள்-(சாவு) கொட்டுகெள். என-என்றுமுழங்க. விட்டு-விடப்பட்டு. இத்தை-இச்செயலை. நெட்டை-நீண்ட. குழம்பும் குழம்ப - குழைசேறுக. தொட்டு - (தாற்பரியம்) ஏவி. தட்டு-நிலை. கவந்தம்-குறைத்தலைப்பிணம். மணிஉமிழ்ந்து - (அசுராணிந்திருந்த) இரத்நங்களைச்சிதறி. வித்தைப்பலன்-சாத்திரப்பிரயோசனம்.

(௩௫) கொம்பு-யானைக்கொம்பு. வஞ்சி-வஞ்சிக்கொடி. கண்டு-பார்த்து. புரிந்து-விரும்பி. என்றும்-எக்காலமும். விதி-ஊழ். வெந்துவிழுகின்றல்-(வினையர்கள்) சாம்பலாய்ப்போதல். அஞ்சல்-பயப்படாதே. வாராய்-வருவாயாக. அற-மிக. இண்டு-இவ்விடத்து. வம்பு-கச்சு. சந்தின்-சந்தனத்திலே. வஞ்சி-இடையை. தங்கள்-தங்களுடைய. சமர்-போர்க்கோலம். குன்றிடை-திருப்பர

திண்டிறல்பு னைந்த அண்டர் தங்களப யங்கள் கண்டு
செஞ்சமர்பு னைந்து துங்க மயில்மீதே-

சென்றசுர ரஞ்ச வென்று குன்றிடைம ணம்பு ணர்ந்து
செந்தில்நகர் வந்த மர்ந்த பெருமாளே.

(௩௬) களப மொழுகிய புளகித முலையினர்
கடுவு மமிர்தமும் விரவிய விழியினர்
கழுவு சரிபுழு கொழுகிய குழலின ரெவரோடும்-

கலக மிடுகய லெறிகுழை விரகியர்
பொருளி லிளைஞரை வழிகொடு மொழிகொடு
தளரவி டுபவர் தெருவினி லெவரையு நகையாடி;

பிளவு பெறிலதி லளவள வொழுகியர்
நடையி லுடையினி லழகொடு திரிபவர்
பெருகு பொருள்பெறி லமளியி விதமொடு குழைவோடே-

பிணமு மணைபவர் வெறிதரு புனலுணும்
அவச வனிதையர் முடுகொடு மணைபவர்
பெருமை யுடையவ ருறவினை விடஅருள் புரிவாயே;

அளையி லுறைபுலி பெறுமக வயிறரு
பசுவி னிரைமுலை யமுதுண நிரைமகள்
வசவ னொடுபுலி முலையுணமலையுட னுருகாநீள்-

---

ங்குன்றில். மணம்-தெய்வயானையம்மைவிவாகம். தந்து அஞ்ச லெனக்கூட்டுக ஈண்டு, இண்டென விகாரப்பட்டது.

(௩௬) களபம் - கூட்டுவர்க்கச் சந்தனம். புளகிதம்-மயிர்ச்சிலிர்ப்பு. கடு-விடம். கழுவு-மாசுபோக்கிய. சரிபுழுகு -மற்றை வாசனைப்பண்டங்களுடன் சமானமாகக் கலந்த புழுகு; அஃதாவது-மயிர்ச்சாந்து. கயல்-கண். எறி-தைக்கின்ற. குழை - காதுகளையுடைய. பொருளில்- திரவியமில்லாத. வழிகொடு-வழியிலே கூட்டிக்கொண்டு வந்து. மொழிகொடு - சொல்லால். நகையாடி-சிரித்து. பிளவுபெறில்-பாதிப்பாக்குப் பெற்றாலும். அதின் அளவு அளவு-அப்பாக்கின் அளவுக்குத்தக்கபடி. ஒழுகியர்-(அவரோடுநட்புற்று) நடப்பவர். பிணமும்-சவத்தையும். வெறிதருபுனல்-கள். முடுகு - வேகம். அளை-மலைக்குகை. அயில்தரும்-உண்ணப்படும். பெறுமகவு-(தான்) பெற்ற கன்று. நிரை-வரிசையாகிய. அமுது-பாலை. மகள்-பசுவின் பெண்கன்று. வசவன்-ஆண்கன்று. உடன்-உடனே. உருகா-உருக. அடவி-காடு. உலவை-பட்டமரம். களிறுகள் பிடி

அடவி தனிலுள வலவைகள் தளிர்விட
மருள மதமொடு களிறுகள் பிடியுடன்
அகல வெளியுயர் பறவைகள் நிலம்வர விறல்சேரேழ்;

துளைகள் விடுகழை விரன்முறை தடவிய
இசைகள் பலபல தொனிதரு கருமுகில்
சுருதி யுடையவ னெடியவன் மனமகிழ் மருகோனே-

துணைவ குணதர சரவண பவநம
முருக குருபர வளரறு முககுக
துறையி லலையெறி திருநக ருறைதரு பெருமாளே.

(௩௭) கனங்கள்கொண்ட குந்தளங் களுங்குலைந்த லைந்துவிஞ்
சுகண்களுஞ்சி வந்தயர்ந்து களிகூரக்-

கரங்களுங்கு விந்துநெஞ் சகங்களுங்க சிந்திடுங்
கறங்குபெண்க ளும்பிறந்து விலைகூறிப்;

பொனின்குடங்க ளஞ்சுமென் தனங்களும்பு யங்களும்
பொருந்தியன்பு நண்புபண்பு முடனாகப்-

புணர்ந்துடன்பு லந்துபின் கலந்தகங்கு ழைந்தவம்
புரிந்துசந்த தந்திரிந்து படுவேனோ;

அனங்கனைந்து நைந்துவெந் துகுந்துசிந்த அன்றுகண்
திறந்திருண்ட கண்டர்தந்த அயில்வேலா-

அடர்ந்தடர்ந்தெ திர்ந்துவந் தவஞ்சரஞ்ச வெஞ்சமம்
புரிந்தஅன்ப ரின்பநண்ப உரவோனே;

---

யுடன் மதமொடுமருள,—அகல-விரிவுடைய. உயர்-உயர்ந்த. வெளி-ஆகாயத்திலுள்ள. விடு-செய்த. விறல்-வலிமை. கழை-மூங்கிலாலாகியகுழல். விரல்-விரலால். முறை-கிரமமாக. தடவிய-தடவப்பட்ட. இசைகள்-இசைப்பாட்டுகளின். தொனி-ஓசையை. கருமுகில்-கரியமேகம்போன்றவனாகிய. நெடியவன்-விஷ்ணு. துணை-எல்லாருக்குந் துணையாயுள்ளவனே. குணதர-குணத்தைத் தரித்திருப்பவனே. உருகஎன்பது உருகா என நீட்டல் விகாரம்பெற்றது.

(௩௭) கனங்கள்-மேகங்களை. குந்தளம்-கூந்தல். விஞ்சு-அதிகமாக. கறங்கு-சுழல்கின்ற. பெண்கள்,—பிறந்து - உண்டாகி. விலைகூறி-(தங்களை) விலைசொல்லி. மென்-மிருதுவாகிய. புயங்களும்- (என்னுடைய) தோள்களும். உடனாக-உடனே சேரச்செய்ய. புலந்து-ஊடி. அவம்-வீண் காரியங்கள். புரிந்து;

சினங்கள்கொண்டி லங்கைமன் சிரங்கள்சிந்தி வெஞ்சரந்
தெரிந்தவன்ப ரிந்தஇன்ப மருகோனே-

சிவந்தசெஞ்ச தங்கையுஞ் சிலம்புதண்டை யும்புனைந்
துசெந்தில்வந்த கந்தஎங்கள் பெருமானே.

(௩அ) கொங்கைகள்கு லுங்கவளை செங்கையில்வி ளங்கஇருள்
கொண்டலைய டைந்தகுழல் வண்டுபாடக்-

கொஞ்சியவ னங்குயில்கள் பஞ்சநல்வ னங்கிளிகள்
கொஞ்சியதெ னுங்குரல்கள் கெந்துபாயும்;

வெங்கயல்மி ரண்டவிழி அம்புலிய டைந்தநுதல்
விஞ்சையர்கள் தங்கள்மயல் கொண்டுமேலாய்-

வெம்பிணியு முன்றபவ சிந்தனைநி னைந்துனது
மின்சரண பைங்கழலொ டண்டஆளாய்;

சங்கமுர சந்திமிலை துந்துபித தும்பவளை
தந்தனத னந்தவென வந்தசூரர்-

சங்கைகெட மண்டிதிகை யெங்கினுமடிந்துவிழ
தண்டசடல்கொ ளுந்தநகை கொண்டவேலா;

சங்கரனு கந்தபரி வின்குருவெ னுஞ்சுருதி
தங்களின்ம கிழ்ந்துருகு மெங்கள்கோவே-

---

செய்து. படுவேனோ-கெடுவேனோ. உகுந்து-பொடியாகி. சிந்த-சிதற. திறந்த விழித்த. அடர்ந்து-நெருங்கி. சமம்-யுத்தம். உரவோனே-வலிமையுடையவனே. தெரிந்தவன்-ஆராய்ந்து எவிய விஷ்ணுவின். பரிந்த-அன்புற்ற. பெண்களும் என்றதில்-உம்-அசை.

(௩அ) வனம் - சோலையிலுள்ள. வனம்-வன்னம்; நிறம். எனும் - என்று சொல்லப்படும். குரல்கள்-(வார்த்தையின்) ஓசைகள். கெந்துபாயும் -பிறழும் மிரண்ட-பயந்த. அம்புலி-சந்திரன். விஞ்சையர்கள்-(மாய) வித்தையுடைய வேசையர்கள். மேலாய் - அதிகமாக. பவசிந்தனை-பிறவிக் கடலிற் கிடக்கின்ற வெண்ணை. மின்-பிரகாசிக்கின்ற. அண்ட-நெருங்க. ஆளாய்-ஆளுவாய். ததும்ப-ஒலிக்க. வளை-வளைந்து. என-என்றுமுழங்க. மண்டி-நெருங்கி. கொளுந்த-எரிய. நகை-மகிழ்ச்சியுடன். செயல்-ஒழுக்கம். சம்பு-சிவபிரான். வனக்குயில், வனக்கிளியென்பன-மெலித்தல் விகாரம் பெற்றன. கொளுத்த என்பது கொளுந்த என்றும், குறப்பெண்ணென்றது குறம் பெண்ணென்றும் விகாரப்பட்டு வந்ததுங் காண்க.

சந்திரமு கஞ்செயல்கொள் சுந்தரகு றம்பெணொடு
சம்புபுகழ் செந்தில்மகிழ் தம்பிரானே.

(௩௯) கொம்பனை யார்காது மோதிரு
கண்களி லாமோத சீதள
குங்கும பாடீர பூஷண நகமேவு-
கொங்கையி னீராவி மேல்வளர்
செங்கழு நீர்மாலை சூடிய
கொண்டையி லாதார சோபையில் மருளாதே;
உம்பர்கள் ஸ்வாமிந மோநம
எம்பெரு மானேந மோநம
ஒண்டொடி மோகாந மோநம எனநாளும்-
உன்புக ழேபாடி நானினி
அன்புட னாசார பூசைசெய்
துய்ந்திட வீணாள்ப டாதருள் புரிவாயே;
பம்பர மேபோல ஆடிய
சங்கரி வேதாள நாயகி
பங்கய சீபாத நூபுரி கரசூலி-
பங்கமி லாநீலி மோடிப
யங்கரி மாகாளி யோகினி
பண்டுசு ராபான சூரனொ டெதிர்போர்கண்.
டெம்புதல் வாவாழி வாழியெ
னும்படி வீறான வேல்தர
என்றுமு ளானேம னோகர வயலூரா-
இன்சொல்வி சாகாக்ரு பாகர
செந்திலில் வாழ்வாகி யேயடி
யென்றனை யீடேற வாழ்வருள் பெருமாளே.

---

(௩௯) ஆமோதம்-மிக்கவாசனை. பாடீரம்-சந்தனம். நகமேவு-மலைபோற் பொருந்திய. நீர்ஆவி-நீர்த்தடாகம். ஆசாரசோபை-உடற்பிரகாசம். நமோநம-வணக்கம் வணக்கம். படாது-உண்டாகாமல். வேதாளம்-பூதம். நூபுரி-காற்சிலம்புடையவள். கரசூலி-கையிலே சூலாயுதமுடையவள். நீலி-நீலநிறமுடையவள். பயங்கரி-பயத்தைத்கெடுப்பவள். சுராபானம்-கட்குடித்தலுடைய. எனும்படி-என்றுசொல்லும் விதம். வீறு-கருவம். உளானே-இருப்பவனே. மனோகரம்-மகிழ்ச்சி. அடியென்றனை-அடியேனை. படீரமென்பது பாடீரமென்றாயிற்று

(௬௰) சத்தமிகு மேழுகட லைத்தேனை
யுற்றமது தோடுகணை யைப்போர்கொள்
சத்திதனை மாவின்வடு வைக்காவி தனைமீறு.

தக்ககமணம் வீசுகம லப்பூவை
மிக்கவிளை வானகடு வைச்சீறு
தத்துகளும் வாளையடு மைப்பாவு விழிமாதர்;

மத்தகிரி போலுமொளிர் வித்தார
முத்துவட மேவுமெழில் மிக்கான
வச்சிரகி ரீடநிகர் செப்பான தனமீதே.

வைத்தகொடி தானமயல் விட்டான
பத்திசெய ஏழையடி மைக்காக
வச்ரமயில் மீதிலினி யெப்போது வருவாயே

சித்ரவடி வேல்பனிரு கைக்கார
பத்திபுரி வோர்கள்பனு வற்கார
திக்கினுந டாவுபுர விக்கார சுரமாது.

சித்தஅநு ராககல விக்கார
துட்டஅசு ரேசர்கல கக்கார
சிட்டர்பரி பாலலளி தக்கார அடியார்கள்;

முத்திபெற வேசொல்வச னக்கார
தத்தைநிகர் தூயவனி தைக்கார
முச்சகர்ப ராவுசர ணக்கார இனிதான.

முத்தமிழை யாயும்வரி சைக்கார
பச்சைமுகில் தாவுபுரி சைக்கார
முத்துலவு வேலைநகர் முத்தேவர் பெருமாளே.

---

(௬௰) மது-வண்டு. தோடு-கூட்டமாகிய. சத்தி-வேல். மீறு-உயர்ந்த. கடு-விடம். சீறு-கோபிக்கின்ற. உதம்-யுத்தத்தில். உகள்-துள்ளுகின்ற. வாளை-வாளாயுதத்தை. அடும்-கெடுக்கும். மைப்பாவு-மைபரந்த. மத்தம்-மதமுடைய. கிரி-மலைபோலும்யானை. வச்சிரம்-பசுமை. சித்ரம்-அழகு. பனுவல்-பாட்டு. புரவி-குதிரை. அநுராகம்-ஐக்கப்பிரியம். லளிதம்-அழகு. தத்தை-கிளி. வனிதை-தெய்வயானை. புரிசை-கோட்டை. வேலைநகர்-திருச்செந்தூர். முத்தேவர்-திரிமூர்த்திகளினும். உத்தத்து-என்பது உதத்தென்றாயிற்று. உத்தம்; யுத்தம்.

(௪௧) தகரநறை பூண்ட விந்தைக்
குழலியர்கள் தேய்ந்த இன்பத்
தளருமிடை யேந்து தங்கத் தனமானூர்-

தமைமனதில் வாஞ்சை பொங்கக்
கலவியொடு சேர்ந்து மந்த்ரச்
சமயஜெப நீங்கி யிந்தப் படிநாளும்;

புகலரிய தாந்த்ரி சங்கத்
தமிழ்பனுவ லாய்ந்து கொஞ்சிப்
புவியதனில் வாய்ந்து வஞ்சித் தழல்மூடர்-

புனிதமிலி மாந்தர் தங்கட்
புகழ்பகர்தல் நீங்கி நின்பொற்
புளகமலர் பூண்டு வந்தித் திடுவேனோ;

தகுடதகு தாந்த தந்தத்
திகுடதிகு தீந்த மித்தித்
தருகணைக தாங்க ணங்கத் தனதான-

தனனதன தாந்த னந்தத்
தெனநடன மார்ந்த துங்கத்
தனிமயிலை யூர்ந்த சந்தத் திருமார்பா;

திகையசுரர் மாண்ட முந்தத்
திறலயிலை வாங்கு செங்கைச்
சிமையவரை யீன்ற மங்கைக் கொருபாலா-

திகழ்வயிர மேந்து கொங்கைக்
குறவனிதை காந்த சந்த்ரச்
சிகரமுகி லோங்குசெந்திற் பெருமாளே.

---

(௪௧) தகரநறை-மயிர்ச்சாந்தின்வாசனை. வாஞ்சை-ஆசை. த்ரிசங்கம்-முதலிடைகடையென்னுமூன்று சங்கம். தமிழ்-தமிழாகிய. பனுவல்-(ஆகுபெயர்) காமநூல். வஞ்சித்து-(பிறரை) வஞ்சகஞ்செய்து. மூடர்-அறிவில்லாதவர். (போல்) புனிதமிலி. பரிசுத்தமில்லாத அடியேன். புளகம்-மகிழ்ச்சியுடைய. திகை-திகைக்கின்ற. வாங்கு-கொண்ட. வயிரம்-வயிரத்தாலாகியமாலை. காந்த-நாயகனே. சந்த்ரச்சிகரம்-பொன்னுலாகிய உச்சி. தேய்ந்தஎன்பதை, இடையிலும். இன்பமென்பதைத் தனத்திலுமொட்டுக.

(௬௨) தண்டையணி வெண்டையங் கிண்கிணிச தங்கையுந்
தண்கழல்சி லம்புடன் கொஞ்சவேநின்-
றந்தையினை முன்பரிந் தின்பவுரி கொண்டுநன்
சந்தொடம ணைந்துநின் றன்புபோலக்;
கண்டுறகட ம்புடன் சந்தமகு டங்களுங்
கஞ்சமலர் செங்கையுஞ் சிந்துவேலும்-
கண்களுமு கங்களுஞ் சந்திரநி றங்களுங்
கண்குளிர என்றன்முன் சந்தியாவோ;
புண்டரிக ரண்டமுங் கொண்டபகி ரண்டமும்
பொங்கியெழ வெங்களங் கொண்டபோது-
பொன்கிரியெ னஞ்சிறந் தெங்கினும்வ ளர்ந்துமுன்
புண்டரிகர் தந்தையுஞ் சிந்தைகூர;
கொண்டநட னம்பதஞ் செந்திலிலு மென்றன்முன்
கொஞ்சிநட னங்கொளுங் கந்தவேளே-
கொங்கைகுற மங்கையின் சந்தமண முண்டிடுங்
கும்பமுனி கும்பிடுந் தம்பிரானே.

(௬௩) தெருப்புறத்துத் துவக்கியாய்
முலைக்குவட்டைக் குலுக்கியாய்
சிரித்துருக்கித் தருக்கியே பண்டைகூள மெனவாழ்-

---

(௬௨) வெண்டையம் -சிறுமணிச்சதங்கை. கழல்-பாதத்தில். சிலம்ப-சித்ரோசைசெய்ய. பரிந்து-அன்புற்று. பவுரி-நடனம். சந்தொடம்-மகிழ்ச்சி. நின்ற,—கண்டு-(என்னைப்)பார்த்து. உற-பொருந்த. சிந்து-வீசுகின்ற. சந்திரநிறம்-பொன்னாபரணத்தினொளிகளும். சந்தியாவோ-தரிசனங்கொடுக்கமாட்டாவோ. புண்டரிகர் அண்டம் - பிரமாண்டம். கொண்ட - (தன்னுட) கொண்ட. பகிரண்டமும்- (வனைப்)பிளவுபட்ட அண்டங்களும். களங்கொண்டபோது-யுத்தகளத்தைநக்கலந்த காலத்தில். பொன்கிரி-மேருமலை. என்-என்றுசொசொல்ல. அம்-அழகு. முன்-பண்டைநாள். சிந்தைகூர-மனமகிழ. நடனங்கொண்டபதம்-நடனஞ்செய்த திருவடி. முன்-எதிரிலும். உண்டிடும்-அனுபவிக்கும். என எண்பதில் அகரங்கெட்டு என் என நின்றது. குறமங்கைகொங்கையின் சந்தனமெனக் கூட்டுக. சந்தொடம், விகாரமொழி. நின்ற என்பதிலீற்றகரங்கெட்டது.

(௬௩) துவக்கியாய்-(காமச்செயலை) ஆரம்பிப்பவளாகி. உருக்கி-இளகச்செய்து. பண்டைகூளமென-(முன்வந்த ஆடவரைப்) பழையகுப்பையென்று

சிறுக்கிரட்சைக் கிதக்கியாய்
மனத்தைவைத்துக் கனத்தபேர்
இயக்கமுற்றுத் தவிக்கவே கண்டுபேசி யுடனே;
யிருப்பகத்துத் தளத்துமேல்
விளக்கெடுத்துப் படுத்துமே
விருத்திவைத்துப் பசப்பியே கொண்டுகாசு தணியா-
திதுக்கதுக்குக் கடப்படா
மெனக்கை கக்கக் கழற்றியே
யிளைக்கவிட்டுத் துரத்துவார் தங்கள்சேர்வை தவிராய்;
பொருப்பையொக்கப் பணைத்ததோ
ரிரட்டிபத்துப் புயத்தினால்
பொறுத்தபத்துச் சிரத்தினால் மண்டுகோப முடனே-
பொரப்பொருப்பிற் கதித்தபோ
ரர்க்கர்பட்டுப் பதைக்கவே
புடைத்துமுட்டத் துணித்தமா லன்புகூரு மருகா;
வரப்பையெட்டிக் குதித்துமே
விடத்தில்வட்டத் தளத்திலே
மதர்த்தமுத்தைக் குவட்டியே நின்றுசேலி னினம்வாழ்-
வயற்புறத்துப் புவிக்குள்நீள்
திருத்தணிக்குட் சிறப்பில்வாழ்
வயத்தநித்தத் துவத்தனே செந்தில்மேவு குகனே.

---

(சுழித்து). ரட்சைக்கு-காப்பதற்கு. இதக்கியாய்-இதஞ்செய்பவள் போன்று. கனத்தபேர்-பொருட்கனமுடையவர். அகத்து-வீட்டின். தளத்துமேல் - மேடையினிடத்தில். விளக்கெடுத்து விளக்கேற்றிவைத்து. பசப்பி-வசப்படும்படி மயக்கிப்பேசி. காசுகொண்டு-(உள்ள) திரவியத்தைவாங்கி. தணியாது-(ஆசை) குறையாமல். இதுக்கு அதுக்கு-இதன்பொருட்டு, அதன்பொருட்டு. கடப்படாம்-(நாங்கள்) கடன்படமாட்டோம். என-என்று. கைகக்க - (கையிலுள்ள மோதிரத்தைக்) கைவிரல்கள் தர. கழற்றி,—சேர்வை-கலப்பு. பணைத்தது-பருத்ததாகிய. பொர-(இராவணன்) யுத்தஞ்செய்ய. பொருப்பின்-மலையைப் போலும். கதித்த-ஓங்கிய. முட்ட-முழுவதும். வரப்பை-வரப்பில். தளம்-தாமரைமலரிதழ். மதர்த்த-சரசரப்புடைய. குவட்டி-(தாற்பரியம்) தள்ளி. புவிக்குள்-நிலத்துக்குநடுவில். சிறப்பில்-சிறப்புடன். வயத்த-வெற்றியை யுடையவனே. நித்தத்துவத்தனே-தத்துவக்கூட்டங்கள் நீங்கினவனே. தனித்தனி கூறும்போது-துவக்கி குலுக்கியென ஒருமையாகவும் சேர்த்துச் சொல்லும்போது துரத்துவாரெனப் பன்மையாகவுங் கூறினர்.

(௪௪) தொந்திசரிய மயிரே வெளிறநிரை
தந்தமசைய முதுகே வளையஇதழ்
தொங்கவொருகை தடிமேல் வரமகளிர் நகையாடி-
தொண்டுகிழவ னிவனா ரெனஇருமல்
கிண்கிணெனமு னுரையே குழறவிழி
துஞ்சுகுருடு படவே செவிபடு செவியாகி;
வந்தபிணியு மதிலே மிடையுமொரு
பண்டிதனுமெ யுறுவே தனையுமிள
மைந்தருடைமை கடனே தெனமுடுக துயர்மேவி-
மங்கையழுது விழவே யமபடர்கள்
நின்றுசருவ மலமே யொழுகவுயிர்
மங்குபொழுது கடிதே மயிலின்மிசை வரவேணும்;
எந்தைவருக ரகுநா யகவருக
மைந்தவருக மகனே யினிவருக
என்கண்வருக எனதா ருயிர்வருக அபிராம-
இங்குவருக அரசே வருகமுலை
யுண்கவருக மலர்சூ டிடவருக
என்றுபரிவி னொடுகோ சலைபுகல வருமாயன்;
சிந்தைமகிழு மருகா குறவரிள
வஞ்சிமருவு மழகா அமரர்சிறை
சிந்தஅசுரர் கிளைவே ரொடுமடிய அடுதீரா-
திங்களரவு நதிசூ டியபரமர்
தந்தகுமர அலையே கரைபொருத
செந்திநகரி லினிதே மருவிவளர் பெருமாளே.

(௪௫) தோலொடு மூடிய கூரையை நம்பிப்
பாவையர் தோதக லீலைநி ரம்பிச்
சூழ்பொருள் தேடிட வோடிவ ருந்திப் புதிதான-

---

(௪௪) தொந்தி-வயிறு. வெளிற-வெளுக்க. இதழ்-உதடு. தொண்டுகிழவன்-பழங்கிழவன். துஞ்சு-உறங்குகின்ற. செவியாகி-சமயம் ஆக. மிடையும்-நெருங்கும். பண்டிதனும்-வயித்தியனும். வேதனையும்-துன்பமும் (வா). இளமைந்தர்-சிறுபிள்ளைகள். உடமை-இருப்புச்சொத்து. முடுக-விரைந்துகேட்க. சருவ-கிட்டவர. அபிராம-அழகுடையவனே. பரிவு-அன்பு.

(௪௫) கூரை-சிறுவீடாகிய தேகம். தோதகம்-வஞ்சகம். அழுந்தி-வரு

தூதொடு நான்மணி மாலைப்ர பந்தக்
கோவையு லாமடல் கூறிய முந்தித்
தோமுறு காளையர் வாசல்தொ றும்புக் கலமாருங்;

காலனை வீணனை நீதிகெ டும்பொய்க்
கோளனை மானமி லாவழி நெஞ்சக்
காதக லோபவ்ரு தாவனை நிந்தைப் புலையேனைக்-

காரண காரிய லோகப்ர பஞ்சச்
சோகமெ லாமற வாழ்வுற நம்பிற்
காசறு வாரிமெய்ஞ் ஞான தவஞ்சற் றருளாதோ;

பாலன மீதும ுண்முக செம்பொற்
பாலனை மோதப ராதன பண்டப்
பாரிய மாருதி தோள்மிசை கொண்டுற் றமராடி-

பாவியி ராவண னார்வலை சிந்திச்
சீரிய வீடணர் வாழ்வுற மன்றற்
பாவையர் தோள்புணர் மாதுலர் சிந்தைக் கினியோனே;

சீலமு லாவிய நாரதர் வந்துற்
றீதவள் வாழ்புன மாமென முந்தித்
தேமொழி பாளித கோமள இன்பக் கிரிதோய்வாய்-

சேலொடு வாளைவ ரால்கள் கிளம்பித்
தாறுகொள் பூகம ளாவிய இன்பச்
சீரலை வாய்நகர் மேவிய கந்தப் பெருமாளே.

---

ந்தி. தோம்-குற்றம். அலமாரும்-சுழலும். காலனை - யமன்போன்ற என்னை. காதகம்-கொலை. வாழ்வு-மோக்ஷஇன்பம், நம்பில்-விரும்பினால். காசு-குற்றம். வாரி - கடல்போன்ற. சற்று-கிஞ்சித்து. பால் - வெள்ளிய. மன் - பொருந்திய. செம்பொற்பாலனை - சிவந்தபொன்னிறமுள்ள குழந்தையாகிய பிரமனை. அபரா-பிணக்குடையவனே. தன-(சிவஞானச்)செல்வமுடையவனே. அ-அந்த. பாரிய-பருத்த. மிசைகொண்டு-மேலேறிக்கொண்டு. மன்றல்-விவாகஞ்செய்த. பாவையர்-சீதையார். மாதுலர்-மாமனாராகிய விஷ்ணு. ஈது-இவ்விடம். தேமொழி-(அன்மொழித்தொகை) வள்ளிநாயகி. பாளிதம்-கருப்பூரங்கலந்த சந்தனம். கோமளம்-இளமை. கிரி-மலைபோலுந்தனத்தை. கிளம்பி-மேலெழுந்து. தாறு-காய்க்குலை. பூகம்-கமுகமரம். அலமருமென்பது, அலமாருமென நீண்டது.

(சசு) நாலு மைந்து வாசல் கீறு தூறு டம்பு கால்கை யாகி
நாரி யென்பி லாகு மாக மதனூடே-
நாத மொன்ற ஆதி வாயில் நாட கங்க ளான ஆடி
நாட றிந்தி டாம லேக வளராமுன்;
நூல நந்த கோடி தேடி மால்மி குந்து பாரு ளோரை
நூறு செஞ்சொல் கூறி மாறி வினைதீமை-
நோய்க லந்த வாழ்வு றாமல் நீக லந்து ளாகு ஞான
நூல டங்க வோத வாழ்வு தருவாயே;
காலன் வந்து பால னாவி காய மென்று பாசம் வீசு
காலம் வந்து வோல மோல மெனுமாதி-
காம னைந்து பாண மோடு வேமி னென்று காணு மோனர்
கால கண்ட ரோடு வேத மொழிவோனே;
ஆல மொன்று வேலை யாகி யானை யஞ்சல் தீரு மூல
ஆழி யங்கை ஆயன் மாயன் மருகோனே-
ஆர ணங்கள் தாளை நாட வார ணங்கை மேவு மாதி
யான செந்தில் வாழ்வ தான பெருமாளே.

(சசா) நிதிக்குப் பிங்கலன் பதத்துக் கிந்திரன்
நிறத்திற் கந்தனென் றினைவோரை-
நிலத்திற் றன்பெரும் பசிக்குத் தஞ்சமென்
றாற்றித் துன்பநெஞ் சினில்நாளும்;

---

(சசு) நாலுமைந்து-ஒன்பது. வாசல்-துவாரம். கீறு-பிளக்கின்ற. தூறு-பழிச்சொற்கிடமாகிய. நாரி-(கெட்ட) நாற்றத்தையுடைய. நாதம்-ஒலி. ஆதிவாயில்-மூலாதாரவாயில். வளராமுன்-வளர்தற்குமுன். மால்-ஆசை. சொல் (ஆகுபெயர்) பாட்டு. கூறி-பாடி. மாறி-(நல்வினை) நீங்கப்பட்டு. அடங்க-முழுதும். எனும்-என்றுசொல்லப்படும். ஆதி-முதல்வராகிய. மோனர் - சனகாதியருக்கு (அருள்செய்யு) மௌனத்தை யுடையவராகிய. காளகண்டரோடு- நீலகண்டத்தையுடைய சிவபெருமானுக்கு. ஆலம்ஒன்று-விடம்பொருந்திய. வேலைஆகி-கடல்போன்ற உடலையுடையவிஷ்ணு. அஞ்சல்-பயம். ஆயன்-இடையனாகிய. வாரணம்-கோழிக்கொடி. நாலுமென்பதில். உம்-அசை. பாலன் ஓலமெனுமெனக் கூட்டுக.

(சஎ) பிங்கலன்-குபேரன். பதத்துக்கு-பதவிக்கு. இனைவோரை-வருந்துகின்ற மனிதரை, அரற்றி-சொல்லி. துன்பம்-துன்பத்தையுடைய. சங்கம்-

புதுச்சொற் சங்கமொன் றிசைத்துச் சங்கடம்
புகட்டிக் கொண்டிடம் பழிமாயும்.
புலத்திற் சஞ்சலங் குலைத்திட் டுன்பதம்
புணர்க்கைக் கன்புதந் தருள்வாயே;
மதித்துத் திண்புரஞ் சிரித்துக் கொன்றிடு
மறத்திற் றந்தைமன் றினிலாடி-
மழுக்கைக் கொண்டசங் கரர்க்குச் சென்றவண்
டமிழ்சொற் சந்தமொன் றருள்வோனே;
குதித்துக் குன்றிடந் தலைத்துச் செம்பொனுங்
கொழித்துக் கொண்டசெந் திலின்வாழ்வே-
குறப்பொற் கொம்பைமுன் புனத்திற் செங்கரங்
குவித்துக் கும்பிடும் பெருமானே.

(௩௮) படர்புவியின் மீது மீறி வஞ்சர்கள்
வியனினுரை பானு வாய்வி யந்துரை
பழுதில்பெரு சீல நூல்க ளுந்தெரி சங்கபாடல்-
பனுவல்கதை காவ்ய மாமெ ணெண்கலை
திருவ ளுவ தேவர் வாய்மை யென்கிற
பழமொழியை யோதி யேயு ணர்ந்துபல் சந்தமாலை;
மடல்பரணி கோவை யார்க லம்பக
முதலுளது கோடி கோள்ப்ர பந்தமும்
வகைவகையி லாசு சேர்பெ ருங்கவி சண்டவாயு-
மதுரகவி ராஜ னானென் வெண்குடை
விருதுகொடி தாள மேள தண்டிகை
வரிசையொடு லாவு மால கந்தைத விர்ந்திடாதோ;

---

கூட்டத்தை. இசைத்து-சேர்த்து. சங்கடம்-வருத்தமாக. -புகட்டி (பிறர்காது களில்) அழுத்தமாகக்கூறி. அழி-கெட்டு. புலத்தில்-இடத்தில். புணர்க்கைக்கு-சேர்த்தலுக்கு. மறத்தின்-வீரத்தையுடைய. குன்று-மகாமேருமலையை. இடந்து-கிழித்து. கொழித்து-திரட்டி-கொண்டவாழ்வேயென முடிக்க.

(௩௮) படர்-விரிந்த. மீறி-வளர்ந்து. வஞ்சர்கள்-பொய்யர்களது. வியனினுரை-பெருமையுடைய புகழை. பானுவாய்-அழகாக. வியந்து-புகழ்ந்துபேசி. உரைபழுதில்-சொற்குற்றமில்லாத. தெரி-தெளியப்பட்ட. உளது-உள்ளதாகிய. வகைவகையின்-விதவிதமாக. ஆசு-விரைவாகப்பாடுதல். நானென்-நானென்

அடல்பொருது பூசலேவி ளைந்திட
எதிர்பொரவொ ணுமலேக சங்கர
அரகர சிவாம காதெ வென்றுனி அன்றுசேவித்-

தவனிவெகு கால மாய்வ ணங்கியு
ஞருகிவெகு பாச கோச சம்ப்ரம
அதிபெல கடோர மாச லந்தர ஞெந்துவிழ்;

உடல்தடியு மாழி தாவெ னம்புய
மலர்கள்தச நூறு தாளி டும்பக
லொருமலரி லாது கோவ ணிந்திடு செங்கண்மாலுக்-

குதவியமகேசர் பால இந்திரன்
மகளைமண மேவி வீறு செந்திலி
லுரியஅடி யேனை யாள வந்தருள் தம்பிரானே.

(௩௬௬) பாத நூபுரம் பாடகஞ் சீர்கொள்நடை
யோதி மோகுலம் போலசம் போகமொடு
பாடி பாளிதங் காருகம் பாவையிடை வஞ்சிபோல-

பாகு பால்குடம் போலிரண் டானகுவ
டாட நீள்வடஞ் சேரலங் காரகுழல்
பாவ மேகபொன் சாபமிந் தேபொருவ ரந்தமீதே;

---

று. மால்-மயக்கமுடைய. அகந்தை-கெருவம் அடல்-பலத்தால். ஏக-ஒப்பற்றவனே. உனி-நினைத்து. அவனி-பூமியில். பாசகோசம் - அன்புடைய செல்வம். சம்ப்ரமம்-மகிழ்ச்சி. கடோரம்-கொடுமை. மா-பெரிய. சலந்தரன் - சலந்தராசுரன். ஆழி-சக்கரம். தாவென்-அருளென்று. தசநூறு-ஆயிரம். பகல் - நாளில். கோ-கண்ணை. அணிந்திடு-(குறைந்தவொருமலருக்குப் பிரதிநிதியாகச்)சாத்துகின்ற. வீறு-பெருமையுடைய. வியந்துநானெனவுலாவுமகந்தையெனக் கூட்டுக. நான்என-என்பது நானென்என அகரங்கெட்டது. தேவென்றென்பது தெவென்றென முதலிற் குறுகின்றது. தாவென என்பதும் தாவென்என அகரங்கெட்டது.

(௩௬௬) பாதம்-காலின். நடை-நடையானது ஓதி மோகுலம்போல-அன்னப்பறவையின் கூட்டத்தையொப்பாக. சம்-நல்ல. போகமொடு-செல்வத்தையுடைய. பாடி-பட்டினத்திலுள்ள. பாளிதம்-பட்டுச்சேலையின். காருகம்-(தாற்பரியம்) நூலில். பா ஐ-பாந்த அழகையுடைய. வஞ்சிபோல-வஞ்சிக்கொடியையொப்பாக. குவடு-கொங்கைகள். பாகுபால்குடம்-தேன்பாகும்பாலுநிறைந்தகுடங்களை. போல்-ஒப்பாக. ஆட-அசைய. நீள்வடம்-நீண்ட முத்துச்சரம். பாஅம்-பரந்தநீருண்ட. மேகம்-மேகத்தைப்(போல). பொன்சாபம்-இந்திரதநுசு. இந்

மாதர் கோகிலம் போல்கரும் பானமொழி
தோகை வாகர்கண் டாரைகொண் டாடிதகை [போல்-
வாரும் வீடெயென் றேதிதம் பாயல்மிசை யன்புளார்

வாசு பாசகஞ் சூதுபந் தாடஇழி
சேர்வை பாயசிந் தாகுகொஞ் சாரவிழி
வாகு தோள்கரஞ் சேர்வைதந் தாடுமவர் சந்தமாமோ;

தீத தோதகந் தீததிந் தோதிதிமி
டூடு டூடுடுண் டூடுடுண் டூடுடுடு
டீகுடீகுகம் போலவொண் பேரிமுர சங்கள்வீற-

சேடன் மேருவுஞ் சூரனுந் தாருகனும்
வீழ எழ்தடந் தூளிகொண் டாடமரர்
சேசெ சேசெயென் றாடநின் றாடிவிடு மங்கிவேலா;

தாதை காதிலங் கோதுசிங் காரமுக
மாறும் வாகுவுங் கூரசந் தானசுக
தாரி மார்பலங் காரியென் பாவைவளி யெங்கள்மாதை-

தாரு பாளிதஞ் சோரசிந் தாமணிக
ளாட வேபுணர்ந் தாடிவங் காரமொடு
தாழை வானுயர்ந் தாடுசெந் தூரிலுறை தம்பிரானே.

---

தே-(நெற்றியாகிய) பிறைச்சந்திரனையே. பொருவர்-ஒப்பாகப்படுவாராகிய. மீதேயந்தமாதர்-மேலேயழகுள்ளபெண்கள். தோகைவாகர்-மயில்போன்ற அழகியபெண்கள். தாரை கண்கொண்டு-கூரியகண்களால். ஆடி-வென்று. தகுதி-தகுதியையுடையவரே. வீடே-வீட்டினிடத்தே (கொண்டுபோய்). பாசகம்-(கச்சுக்கட்டும்) கயிற்றினையுடைய. சூதுபந்து - சூதாடு கருவியும் பந்தும்போன்ற கொங்கையால். ஆட-விளையாட. பாயசிந்தாகு-பரவிய கடலாகப்படு. கொஞ்சு ஆர-கொஞ்சுதல்பொருந்த. வாகு-அழகிய. சேர்வைதந்து-அணைத்தலைச்செய்து. ஆடும்-புணரும். அவர்- அவ்விருவகையாகிய வேசையர். சந்தம்-அழகு. வீற-பெருமுழக்கஞ்செய்ய. எழ்-எழுகின்ற. தடம்-விசாலமாகிய. அங்கி-அக்கினி போன்ற. கூர-பூரிக்க. சந்தான-தொடர்ச்சியாகிய. சுகதாரி-சுகத்தைத்தரித்திருப்பவளாகிய. என்-என்று சொல்லப்பட்ட. வளி-வள்ளிநாயகி. தாரு-மாலை. பாளிதம்-பட்டுச்சேலை. வங்காரம். செப்பம்; ஒழுங்கு. ஓதிமகுலம்-சந்தநோக்கி ஓதிமோகுல மென்றாயது. போல என்பது போலென நின்றது. போல்-உரையசை. வீடே யென்பது வீடெயென நின்றது. பாசகம் என்பதில், க. பிரத்தியேகம். தாரு என்பதில், உ. சாரிபை.

(௫௰) பெருக்கச்சஞ் சலித்துக்கந்
தலுற்றுப்புந் தியற்றுப்பின்
பிழைப்பற்றுங் குறைப்புற்றும் பொதுமாதர்-

ப்ரியப்பட்டங் கழைத்துத்தங்
கலைக்குட்டங் கிடப்பட்சம்
பிணித்துத்தந் தனத்தைத்தந் தணையாதே;

புரக்கைக்குன் பதத்தைத்தந்
தெனக்குத்தொண் டுறப்பற்றும்
புலத்துக்கண் செழிக்கச்செந் தமிழ்பாடும்-

புலப்பட்டங் கொடுத்தற்குங்
கருத்திற்கண் படக்கிட்டும்
புகழ்ச்சிக்குங் க்ருபைச்சித்தம் புரிவாயே;

தருக்கிக்கண் களிக்கத்தெண்
டனிட்டுத்தண் புனத்திற்செங்
குறத்திக்கன் புறச்சித்தந் தளர்வோனே-

சலிப்புற்றங் குரத்திற்சம்
ப்ரமித்துக்கொண் டலைத்துத்தன்
சமர்த்திற்சங் கரிக்கத்தண் டியசூரன்;

சிரத்தைச்சென் றறுத்துப்பந்
தடித்துத்திண் குவட்டைக்கண்
டிடித்துச்செந் திலிற்றங்குங் குமரேசா-

சிறக்கற்கஞ் செழுத்தத்தந்
திருச்சிற்றம் பலத்தத்தன்
செவிக்குப்பண் புறச்செப்பும் பெருமாளே.

---

(௫௰) கந்தல்-நைதல். குறைப்புற்றும்-அவமதிக்கப்பட்டும். கலை-சேலையுடைய அரை. பட்சம்-அன்பால். பிணித்து-கட்டி. புரக்கைக்கு-இரக்ஷித்தற்கு. தொண்டு-அடிமை. புலத்துக்கண்-ஞானக்கண். புலப்பட்டம்-புலவனென்கிற பட்டபெயர். கருத்தில்-மனத்தில். கண்பட-தரிசிக்க. கிட்டும்-அணுகும். உரத்தில்-புயவலியால். சம்ப்ரமித்து-மகிழ்ந்து. சமர்த்தில்-சாமர்த்தியத்தால். தண்டிய-நெருங்கிய. சிறக்கற்கு-சிறப்படைதற்கு. அத்தம்-பொருளை.

(௫௧) மஞ்செ னுங்குழ லும்பிறை யும்புரு
வங்க ளென்சிலை யுங்கணை யங்கயல்
வண்டு புண்டரி கங்களை யும்பழி சிந்துபார்வை-

மண்ட லஞ்சுழ லுஞ்செவி யங்குழை
தங்க வெண்டர ளம்பதி யும்பலு
மண்ட லந்திக ழுங்கழு கஞ்சிறு கண்டமாதர்;

கஞ்சு கங்குர லுங்கழை யம்புய
கொங்கை செங்கிரி யும்பவ ளம்பொறி
கந்த சந்தன மும்பொலி யுந்துகில் வஞ்சிசேரும்-

கஞ்ச மண்டுளி னின்றிர சம்புகு
கண்ப டார்ந்திட ரம்பையெ னுந்துடை
கண்கை யஞ்சர ணஞ்செயல் வஞ்சரை நம்புவேனோ;

சஞ்ச கஞ்சக ணஞ்சக டுண்டுடு
டுண்டு டிண்டிமி டண்டம டுண்டுடு
தந்த னந்தன திந்திமி சங்குகள் பொங்குதாரை-

சம்பு வின்கும ரன்புல வன்பொரு
கந்த னென்றிடு துந்துபி யுந்துவ
சங்க ளங்கொளி ருங்குடை யுந்திசை விஞ்சவேகண்;

டஞ்ச வஞ்சசு ரன்றிர ளுங்குவ
டன்ற டங்கலும் வெந்துபொ ரிந்திட
அண்ட ரிந்திர னுஞ்சர ணம்புக வென்றவேளே-

---

(௫௧) மஞ்சு-மேகம். பிறையும்-மூன்றாம்பிறைச் சந்திரன்போன்ற நெற்றியும். புண்டரிகம்-தாமரை. பழிசிந்து-சிந்தித்துச் சிதறுகின்ற. பார்வை-கண்களும். மண்டலம் - பூவுலகத்திலுள்ளார். தங்க குழை - பொற் குண்டலமும். மண்தலம்-மண்ணிடத்து. கண்டம்-கழுத்தும். மாதர்- அழகிய. கம்-ஆகாயத்திற் பறக்கின்ற. சுகம்குரலும்-கிளிமொழி போன்ற சொல்லும். கழை-கரும்புபோன்ற. அம்புயம்-அழகிய கையும். பவளம்பொறி- (அக்கொங்கையில்) பவளக்கொடி யெழுதிய. பொலியும் துகில்-விளங்கும் சேலையுடைய. வஞ்சி-வஞ்சிக்கொடிபோலும் இடையும். கஞ்சம்அண்டு உளின்- நீர்நெருங்கிய இடத்தில். இரசம்புகு-(பழத்தின்) இனிமைபுகுந்த. கண்-பெருமை. படர்ந்திடு-விரிந்த. அரம்பை-வாழை. துடையும்-தொடைகளும். சேரும்-பொருந்தும். கண்-கருதப்படும். கை-கைகளால். அஞ்ச-பயப்பட. ரணம் செயல்-(அடித்துப்) புண்செய்தலையுடைய. வஞ்சரை - வஞ்சகத்தையுடைய வேசையரை. தாரை-சின்னம்.

அம்பு யந்தனை ரம்பைகு றிஞ்சியின்
மங்கை யங்குடில் மங்கையெ டன்புடன்
அண்ட ருந்தொழு செந்திலி லின்புறு தம்பிரானே.

(௫௨) மாய வாடைதி மிர்ந்திடு கொங்கையில்
மூடு சீலைதி றந்தம ழுங்கிகள்
வாசல் தோறுந டந்துசி ணுங்கிகள் பழையோர்மேல்-

வால நேசநி னைந்தழு வம்பிகள்
ஆசை நோய்கொள்ம ருந்திடு சண்டிகள்
வார பேர்பொருள் கண்டுவி ரும்பிக ளெவரேனும்;

நேய மேகவி கொண்டுசொல் மிண்டிகள்
காசி லாதவர் தங்களை யன்பற
நீதி போலநெ கிழ்ந்தப றம்பிக ளவர்தாய்மார்-

நீலி நாடக மும்பயில் மண்டைகள்
பாளை யூறுக ளுண்டிடு தொண்டிகள்
நீச ரோடும ணங்குக டம்பிக ளுறவாமோ;

பாயு மாமத தந்திமு கம்பெறு
மாதி பாரத மென்றபெ ருங்கதை
பார மேருவி லன்று வரைந்தவ னிளையோனே-

பாவை யாள்குற மங்கைசெ ழுந்தன
பார மீதில ணைந்துமு யங்கிய
பாக மாகிய சந்தன குங்கும மணிமார்பா;

---

துவசங்கள்-கொடிகள். விஞ்சவே - மிகவே. அஞ்ச - (தன்சேனை) பயப்பட. அஞ்சு - (தானும்) பயப்படு. அசுரன்-சூரன். அம்புயம்-தாமரை மலரிலுள்ள. தண் அரம்பை-குளிர்ந்த தெய்வப்பெண்போலும். அம்-அழகிய. குடில்மங்கை-ஆகாயத்திலுள்ள பெண்ணாகிய தெய்வயானை. குடிலமென்பது அம், கெட்டுக் குடில் என நின்றது. சேரும் வஞ்சரையெனக்கூட்டுக.

(௫௨) மாயவாடை-மயக்கஞ் செய்கின்ற கஸ்தூரிச்சந்தனம். திமிர்ந்திடு-பூசுகின்ற. மழுங்கிகள் - மான மற்றவர்கள். வாலநேசம் - இளமைப் பருவத்துச் சிநேகம். வார-(மருவ) வருகிற. கவிகொண்டு-பாடலால். மிண்டிகள்-தடிச்சிகள். பறம்பிகள்-புலைச்சிகள். நீலிநாடகம்-வஞ்சகநடிப்பு. தொண்டிகள்-கட்குடிச்சிகள். கடம்பிகள் - ஒருவகையிழிந்த சாதிப்பெண்கள். சீயம்-நரசிங்கம். அசுரேசன்-இரணியன். இடந்து-பிளந்து. கோடசேகரம். மகுடமணிந்த

சிய மாயுரு வங்கொடு வந்தசு
ரேசன் மார்பியி டந்துப சுங்குடர்
சேர வாரிய ணிந்தநெ டும்புயல் மருகோனே-

தேனு லாவுக டம்பம ணிந்தநி
ரீட சேகர சங்கரர் தந்தருள்
தேவநாயக செந்திலு கந்தருள் பெருமாளே.

(௩௩.) முகிலாமெனு மளகங் காட்டி
மதிபோலுயர் நுதலுங் காட்டி
முகிழாகிய நகையுங் காட்டி அமுதூறு-

மொழியாகிய மதுரங் காட்டி
விழியாகிய கணையுங் காட்டி
முகமாகிய கமலங் காட்டி மலைபோலே;

வகையாமிள முலையுங் காட்டி
யிடையாகிய கொடியுங் காட்டி
வளமானகை வளையுங் காட்டி யிதமான-

மணிசேர்கடி தடமுங் காட்டி
மிகவேதொழி லதிகங் காட்டு
மடமாதர்கள் மயலின் சேற்றி லுழல்வேனோ;

நகையால்மத னுருவந் தீத்த
சிவனாருள் சுதனென் றூர்க்கு
நலனேயரு ளமர்செந் தூர்க்கு ளுறைவோனே-

நவமாமணி வடமும் பூத்த
தனமாதெனு மிபமின் சேர்க்கை
நழுவாவகை பிரியங் காட்டு முருகோனே;

---

தலையையுடைய-பெறும்என்பது, வரைந்தவனென்பதோடு முடியும். வருகிற என்பது- வார என மரூஉ வழக்காயிற்று.

(௩௩) அளகம்-கூந்தல் முகிழ்-(முல்லை) யரும்பு. மணி-மேகலாபரணம். கடிதடம்-அல்குல். மிகவே-(அளவுக்கு)மிஞ்சும்படி. நகை-புன்சிரிப்பு. தீத்த-சுட்ட. இபமின்-தெய்வயானை. நழுவாவகை-வழுவாவிதம், அகம்- (யுத்தகளத்தி) னிடத்தில். கிருதன் - அரக்கனாகியசூரன். அறியாமலும் - திருவுளங்

அகமேவிய நிருதன் போர்க்கு
வரவேசமர் புரியுந் தோற்ற
மறியாமலு மபையங் காட்டி முறைகூறி-

அயிராவத முதுகின் தோற்றி
யடையாமென இனிதன் பேத்து
மமரேசனை முழுதுங் காத்த பெருமாளே.

(௫௪) மூளும்வினை சேர மேல்கொண்டி டாவைந்து
பூதவெகு வாய மாயங்கள் தானெஞ்சில்
மூடிநெறி நீதி யேதுஞ்செ யாவஞ்சி யதிபார-

மோகவினை வான போகஞ்செய் வேனண்டர்
தேடஅரி தாய ஞேயங்க ளாய்கின்ற
மூலபர யோக மேல்கொண்டி டாநின்ற துளதாகி;

நாளுமதி வேக கால்கொண்டு தீமண்ட
வாசியன லூடு போயொன்றி வானின்க
ணாமமதி மீதி லூறுங்க லாஇன்ப அமுதூறல்-

நாடியதன் மீது போய்நின்ற ஆநந்த
மேலைவெளி யேறி நீயின்றி நானின்றி
நாடியினும் வேறு தானின்றி வாழ்கின்ற தொருநாளே;

காளவிட மூணி மாதங்கி வேதஞ்சொல்
பேதைநெடு நீலி பாதங்க ளால்வந்த
காலன்விழ மோது சாமுண்டி பாரம்பொ டனல்வாயு-

---

கொள்ளாமலும். அயிராவதம்-வெள்ளையானை. அடை-இரசவருக்கம். இனிது-இனிமையுடன். அன்பு-அன்பால்.

(௫௪) வினை-தீவினைகள். சேர-ஒருமிக்க. மேல்கொண்டு-அதிகப்பட்டு. ஐந்துபூத-மெய், வாய், கண், மூக்கு, செவியென்கிற பஞ்சபூதங்களால். வெகுவாய-பலவாகிய. ஏதும்-ஒன்றும். வஞ்சி-பெண்கள். ஞேயம்-ஞானத்தினால் அறியப்படுபொருள். மூலபரயோகம்-ஆதியாகிய ஞானயோகத்தை. மேல்கொண்டிடாநின்று-மேலாகக்கொண்டுகின்று. அதுஉளதாகி-அத்தன்மையையுடையதாகி. கால்கொண்டு-பிராணவாயுவால். தீமண்ட-வெப்பம் நெருங்க. வாசி-(சுழுமுனைநாடியின்) சுவாசம். வானின்கண்-சிதாகாசத்தினிடத்து. நாமமதி-பெருமைதங்கிய சந்திரமண்டலம். மீது-மேலே. மேலைவெளி-பண்டைத்துவாத சாந்தத்தலம். நீயின்றி நானின்றி-இரண்டறக் கலந்து. இனும்வேறு

காதிமுதிர் வான மேதங்கி வாழ்வஞ்சி
ஆடல்விடை யேறி பாகங்கு லாமங்கை
காளிநட மாடி நாளன்பர் தாம்வந்து தொழுமாது;

வாளுமுழு தாளு மோர்தண்டு ழாய்தங்கு
சோதிமணி மார்ப மாவின்பி ஞளின்சொல்
வாழுமுமை மாத ராள்மைந்த னேயெந்தை யிளையோனே-

மாசிலடி யார்கள் வாழ்கின்ற வூர்சென்று
தேடிவிளை யாடி யேயங்ங னேநின்று
வாழுமயில் வீர னேசெந்தில் வாழ்கின்ற பெருமாளே.

(௫௫) வஞ்சங்கொண் டுந்திட ராவண
னும்பந்தென் திண்பரி தேர்கரி
மஞ்சின்பண் புஞ்சரி யாமென வெகுசேனை-

வந்தம்பும் பொங்கி யதாகஎ
திர்ந்தும்தன் சம்பிர தாயமும்
வம்புந்தும் பும்பல பேசியு மெதிரேகை;

மிஞ்சென்றுஞ் சண்டைசெய் போதுகு
ரங்குந்துஞ் சுங்கனல் போலவெ
குண்டுங்குன் றுங்கர டார்மர மதும்வீசி,

மிண்டுந்துங் கங்களி ஞலெத
கர்ந்தங்கங் கங்கர மார்பொடு
மின்சந்துஞ் சிந்திநி சாசரர் வகைசேர;

---

தானின்றி-இதற்குமேலுந்தானென்பதொருபொருளில்லாமல். ஊணி-உண்டவள். பார்-பூமி. அம்பு-நீர். காதி-மோதி. வானம்-ஆகாயம். தங்கி-பதிந்து. வாழ்-வாழ்கின்ற. நாள்-தினமும். வாளம்-வளைவாகிய உலகம். பிஞள்-தங்கை. எந்தை-எங்கள் பிதாவாகிய.

(௫௫) திட-வலிய. பந்துஎன்-தாவுதலில் பந்தென்று சொல்லப்படும். திண்-வலிய. பரி-குதிரை. கரி-யானை. மஞ்சின்-மேகத்தின். பண்பும்-தன்மையும். அம்பும்-(சமுத்திர) சலமும். ஆக-போல. கை-(தன்) படை. குரங்கும்-வானரவீரர்களும். துஞ்சும்-கொல்லும். வெகுண்டு-கோபித்து. கரடு-வயிரம். மிண்டும்-நெருங்கும். துங்கம்-வெற்றி. தகர்ந்து-உடைபட்டு. கம்-தலை. மின்-பிரகாசிக்கின்ற. சந்து-தொடை. சிந்தி-சிதறி. நிசாசரர்-அரக்கர். வகைசேரவு

வுஞ்சண்டன் றென்றிசை நாடிவி
    ழுந்தங்குஞ் சென்றெம தூதர்க
    ளுந்துந்துந் தென்றிட வேதசை நிணமூளை.

யுண்டுங்கண் டுஞ்சில கூளிகள்
    டிண்டிண்டென் றுங்குதி போடவு
    யர்ந்தம்புங் கொண்டுவெல் மாதவன் மருகோனே;

தஞ்சந்தஞ் சஞ்சிறி யேன்மதி
    கொஞ்சங்கொஞ் சந்துரை யேயருள்
    தந்தென்றின் பந்தரு வீடது தருவாயே.

சங்கங்கஞ் சங்கயல் சூழ்தட
    மெங்கெங்கும் பொங்கம காபுனி
    தந்தங்குஞ் செந்திலில் வாழ்வுயர் பெருமாளே.

(௫௬) வந்து வந்து முன்ற வழ்ந்து
    வெஞ்சு கந்த யங்க நின்று
    மொஞ்சி மொஞ்சி யென்ற ழுங்கு ழந்தையோடு.

மண்ட லங்கு லுங்க அண்டர்
    விண்ட லம்பி ளந்தெ ழுந்த
    செம்பொன் மண்ட பங்க ளும்ப யின்றவீடு;

கொந்த ளைந்த குந்த ளந்த
    ழைந்து குங்கு மந்த யங்கு
    கொங்கை வஞ்சி தஞ்ச மென்று மங்குகாலம்.

---

ம்-பிரிவுபட்டுப் போகவும். விழுந்து-குதித்து. உந்துஉந்து-தள்ளுதள்ளு. கூளிகள்-பேய்கள். தஞ்சம்-அடைக்கலம். என்று-எக்காலம். கஞ்சம்-தாமரை. பொங்க-அதிகப்பட. கூளிகள் குதித்தெனக் கூட்டுக. இப்பாட்டில் அசையாக வந்தஉம் பலவற்றையும் பொருள்நோக்கிக்கண்டு கொள்க.

(௫௬) வெம்-விருப்பம். சுகம்-இன்பம். மொஞ்சி - (ஆகுபெயர்) முலைப்பால். கொந்து-பூங்கொத்து. அளைந்த-கலந்த. குந்தளம்-கூந்தல். வஞ்சி-வஞ்சிக்கொடிபோலு மனைவி. கொங்கு-கோங்கு. அடம்பு-ஓர்விதக்கொடி மலர். கொங்கு-வாசனை. கொஞ்சு-மழங்குகின்ற. பங்கயம்-தாமரை மலர்போலுந் திருவடிகள். சந்து-சந்தனமரத்துடன். அரும்பு-உண்டாகின்ற. மந்தாம்-மந்தாரம். கந்தரம்பை-கிழங்கோடுகூடிய வாழை. செண்பதம்-சேண் இடம். கொள்-(தாற்பரியம்) அடைக்கின்ற-கடம்-காடு. தந்து-ஒத்து. இன்சொல்-இனியவார்த்

கொங்க டம்பு கொங்கு பொங்கு
பைங்க டம்பு தண்டை கொஞ்சு
செஞ்ச தங்கை தங்கு பங்க யங்கள்தாராய்;

சந்த டர்ந்தெ ழுந்த ரும்பு
மந்த ரஞ்செ ழுங்க ரும்பு
கந்த ரம்பை செண்ப தங்கொள் செந்தில்வாழ்வே.

தண்க டங்க டந்து சென்று
பண்க டந்த டர்ந்த இன்சொல்
திண்பு னம்பு குந்து கண்டி றைஞ்சுகோவே.

அந்த கன்க லங்க வந்து
கந்த ரங்க லந்த சிந்து
ரஞ்சி றந்து வந்த லம்பு ரிந்தமார்பா;

அம்பு னம்பு குந்த நண்பர்
சம்பு நன்பு ரந்த ரன்ற
ரம்ப லும்பர் கும்பர் நம்பு தம்பிரானே.

(௫௭) வெஞ்ச ரோருக மோகடு நஞ்ச மோகப லோநெடு
வின்ப சாகர மோவடு வகிரோமுன்.

வெந்து போனபு ராதன சம்ப ராரிபு ராரியை
வென்ற சாயக மோகரு விளையோகண்;

தஞ்ச மோயம தூதுவர் நெஞ்ச மோவெனு மாமத
சங்க மாதர்ப யோதர மதில்மூழ்கு.

---

தையுடைய வள்ளிநாயகி. அந்தகன்-யமன். வந்து-(அவனைவென்று) வந்து. கந்தரம்-(அன்பரிதயமாகிய)குகையில். சிந்துரம்-தெய்வயானை. அலம்-அமைவாக. புரிந்த-விரும்பிய. புனம்-ஆரணியத்தில். நண்பர்-சிநேகமுடைய மகருஷிகளுக்கு. சம்பு-சுகஞ்செய்பவராகிய. நன்-நல்ல. புரந்தரன் - இந்திரனது. தரம்-தகுதியையுடைய. கும்பர்-அகத்தியமுனிவர். கோங்கென்பது கொங்கெனநின்றது. மந்தாரம், மந்தரமென்றாயிற்று. சேண்என்பது-செண்என நின்றது. சேண்-ஆகாயம்.

(௫௭) சரோருகம்-தாமரை. கடு-கொடிய. சாகரம்-கடல். வடுவகிர்-மாவடுவின்பிளப்பு. புராதனசம்பராரி. பழையமன்மதன். புராரியை-சிவபிரானை. சாயகம்-பாணம். கருவிளை-நீலோற்பலமலர். தஞ்சம்-பெருமை. ஒய்-அற்ற. மாமத-பெரியவிரகத்தையுடைய. சங்கம்-கூட்டமாகிய. பயோதரம் - கொங்கையில்.

சங்கை யோவிரு கூதள கந்த மாலிகை தோய்தரு
தண்டை சேர்கழ லீவது மொருநாளே;

பஞ்ச பாதக தாருக தண்ட னீறெழ வானவர்
பண்டு போலம ராவதி குடியேறப்-

பங்க யாசனர் கேசவ ரஞ்ச லேயென மால்வரை
பங்க நீறெழ வேல்விடு மிளையோனே;

செஞ்ச டாடவி மீமிசை கங்கை மாமதி தாதகி
திங்கள் சூடிய நாயகர் பெருவாழ்வே-

செண்ப காடவி நீடிய துங்க மாமதிள் சூழ்தரு
செந்தில் மாநகர் மேவிய பெருமாளே.

(௫அ) இயலிசையி லுசித வஞ்சிக் கயர்வாகி-
இரவுபகல் மனது சிந்தித் துழலாதே;

உயர்கருணை புரியு மின்பக் கடல்மூழ்கி-
யுனையெனது ளறியு மன்பைத் தருவாயே;

மயில்தகர்க லிடைய ரந்தத் தினைகாவல்-
வனசகுற மகளை வந்தித் தணைவோனே;

கயிலைமலை யனைய செந்திற் பதிவாழ்வே-
கரிமுகவ னிளைய கந்தப் பெருமாளே.

(௫௯) இன்பமுந் துன்பமுஞ் சந்ததங் கொண்டுசென்
றிங்குமங் குஞ்சுழன் றிடுமாயத்-

துன்பவெண் கும்பியங் கந்தவிர்ந் துன்பெருந்
தொண்டனென் றுய்ந்துளங் களியேனோ;

---

சங்கை-பயம். ஓவ-நீங்க. இரு-பெரிய. கூதளம்-ஒருவகைச்செடியின்மலர். தாரக தண்டன்-தாரகா சுரனாகிய அரசன். கேசவர்-விஷ்ணுமூர்த்தி. அஞ்சல்-அஞ்சற்க; பயப்படவேண்டாம். ஏ-அசை. மால்வரை-பெரிய கிரௌஞ்சமலை. பங்க நீறு-குற்றமாகிய சாம்பர். சடாடவி-சடைக்காட்டின். மீமிசை-மேல். தாதகி-ஆத்தி. செண்பகாடவி-செண்பகவனம். ஓவஎன்பதிலிறுதி அகரங்கெட்டது.

(௫அ) உசிதவஞ்சி-மேன்மையுடைய பெண்கள். தகர்-ஆடு. கல்இடையர்-மலையிடத்தில் வசிக்கும் வேடர். வனசம்-அழகோடுகூடிய.

(௫௯) சந்ததம்-எப்பொழுதும். கும்பி-(தாய்மார்) வயிற்றிலுதிக்கும்.

புன்குருந் துந்தியஞ் சந்தனஞ் சிந்திமுன்
பொங்கிவெண் சங்கெறிந் தலைவீசும்-
தன் பொருந் தம்பசும் பொன்சொரிந் தெங்கணுந்
தந்திடுஞ் செந்திலம் பெருமாளே.

(௬௰) ஏவினை நேர்விழி மாதரை மேவிய
ஏதனை மூடனை நெறிபேணு-
ஈனனை வீணனை யேடெழு தாமுழு
ஏழையை மோழையை அகலாநீள்;
மாவினை மூடிய நோய்பிணி யாளனை
வாய்மையி லாதனை யிகழாதே-
மாமணி நூபுர சீதள தாள்தனி
வாழ்வுற ஈவது மொருநாளே;
நாவலர் பாடிய நூலிசை யால்வரு
நாரத னார்புகல் குறமாதை-
நாடியெ கானிடை கூடிய சேவக
நாயக மாமயி லுடையோனே;
தேவிம னோன்மணி ஆயிப ராபரை
தேன்மொழி யாள்தரு சிறியோனே-
சேணுயர் சோலையி னீழலி லேதிகழ்
சீரலை வாய்வரு பெருமாளே.

(௬௧) ஓரா தொன்றைப் பாரா தந்தத்
தோடே வந்திட் டுயிர் சோர-
ஊடா நன்றற் றார்போல் நின்றெட்
டாமால் தந்திட் டுழல்மாதர்;

---

புன்-சிறிய. உந்தி-தள்ளி. பொருந்தம்-பொருனையாறு. பொருந்தம்தன் எனக் கூட்டுக.

(௬௰) ஏவினை-பாணத்தை. ஏதனை-துன்பத்தையுடையேனை. ஏழையை, மோழையை- (இருபெயரொட்டு) ஏழையாகிய அறிவில்லாதவென்னை. மாவினை-பெரியதீவினை. சீதளம்-குளிர்ச்சியுடைய. தாள்-திருவடியை. இசையில்-இசைப்பாட்டுடன். சேண்உயர்-ஆகாயம்வரை உயர்ந்த.

(௬௧) அந்தத்தோடே-அழகுடனே. வந்திட்டு-வந்து. ஓராது-(பின்வருவதை)உணராமல். பாராது-(நன்) னோக்கஞ்செய்யாமல். ஊடா-ஊடல்செய்

கூரா வன்பிற் சோரா நின்றக்
கோயா நின்றுட் குலையாதே-
கோடார் செம்பொற் றோளா நின்சொற்
கோடா தென்கைக் கருள்தாராய்;
சோரா வென்றிப் போரா மன்றற்
றோளா குன்றைத் துளையாடு-
சூதா யெண்டிக் கேயா வஞ்சச்
சூர்மா அஞ்சப் பொரும்வேலா;
சீரார் கொன்றைத் தார்மார் பொன்றச்
சேவே றெந்தைக் கினியோனே-
தேனே யன்பர்க் கேயா மின்சொற்
சேயே செந்திற் பெருமாளே.

(௩௨) கன்றிலுறு மானை வென்றவிழி யாலெ
கஞ்சமுகை மேவு முலையாலே-
கங்குல்செறி கேச மங்குல்குலை யாமை
கந்தமலர் சூடு மதனாலே;
நன்றுபொருள் தீர வென்றுவிலை பேசி
நம்பவிடு மாத ருடனாடி-
நஞ்சுபுசி தேரை யங்கமது வாக
நைந்துவிடு வேனை யருள்பாராய்;
குன்றிமணி போல்வ செங்கண்வரி போகி
கொண்டபடம் வீசு மணிகூர்வாய்-

---

து. நன்றற்றூர்-நன்மையில்லாதவராய். எட்டா மால்-அடங்காதமயக்கம். உழல்-சஞ்சரிக்கின்ற. கூரா-மிகாத. சோரா-சோர்ந்து. அக்கு-(ஆகுபெயர்) எலும்பையுடைய சரீரம். ஓயாநின்று-இளைத்துநின்று. கோடு-(ஆகுபெயர்) மலை. ஆர்-போலும். சொல்-கீர்த்தி. கோடாது-கோணுதலில்லாதது என்கைக்கு-என்றுதுதித்தற்கு. சோரா-சோர்ச்சியில்லாத. ஏயா-பொருந்தித் (திரிகின்ற). ஒன்று-பொருந்துகின்ற. சே-இடபவாகனம். சோடாது, விகாரமொழி.

(௩௨) கன்று-(ஆகுபெயர்) இளம்பருவம். கஞ்சமுகை-தாமரையரும்பு. கங்குல்-இருள். கேசமங்குல்-கூந்தலாகியமேகம். குலையாமை-அவிழாமல். அதனாலே-அந்த அழகாலே. நன்று-நன்மையுடைய. தீர-போக. நம்பவிடும்-நம்பி

கொண்ட மயி லேறி அன்றசுரர் சேனை
கொன்றகும ரேச குருநாதா;
மன்றல்கமழ் பூகந் தெங்குதிரள் சோலை
வண்டுபடு வாவி புடைசூழ-
மந்திநட மாடு செந்திநகர் மேவு
மைந்தஅம ரேசர் பெருமாளே.

(௬௩) குகர மேவுமெய்த் துறவினின் மறவாக்
கும்பிட் டுந்தித் தடமூழ்கிக்-
குமுத வாயின்முற் றமுதினை நுகராக்
கொண்டற் கொண்டைக் குழலாரோ;
டகரு தூளிகர்ப் புரதன இருகோட்
டன்புற் றின்பக் கடலூடே-
அமிழு வேனைமெத் தெனவொரு கரைசேர்த்
தம்பொற் றண்டைக் கழல்தாராய்;
ககன கோளகைக் கணவிரு மளவாக்
கங்கைத் துங்கப் புனலாடும்-
கமல வாதனற் களவிட முடியாக்
கம்பர்க் கொன்றைப் புகல்வோனே;

---

யிருக்க (அப்படி யிருப்பவரைக்) கைவிடும். நஞ்சு-(ஆகுபெயர்) பாம்பு. தேரை யாகி-தேரைபோல. போல்வ-ஒப்பனவாகிய. வரி-கீற்றுக்களையுடைய. போகி-பாம்பு. படம்-படத்திலுள்ள. மணிவீசும் - இரத்நத்னதச்சிந்தும். கூர்-கூரிய. மன்றல்-மணம். பூகம்-கமுகு. மந்தி-குரங்கு. அமரேசர்-இந்திரனுருக்கு. பேசி விடுமெனக் கூட்டுக.

(௬௩) குகரம்-மலைக்குகையில். மெய்த்துறவின் - உண்மைத்துறவால். நின்மறவா-உன்னைமறவாமல். (இராமல்) உந்தி-கொப்பூழாகிய. நுகரா-உண்டு. கொண்டல்-மேகம்போன்ற. அகரு-அகிற்சந்தனம். தூளி-மகரந்தப்பொடி. கர்ப்புர-பச்சைக்கர்ப்பூரங்கலந்த சந்தனமணிந்த. தனஇருகோடு-கொங்கையாகிய இரண்டுகொம்புகளின். மெத்தென-மிருதுவாக; பைய. கோளகைக்ககனம் கண்-வட்டமாகிய ஆகாயத்தின்கண். அவிரும்-பிரகாசிக்கும். அளவா-அளக்கப்படாத. கமலஆதனற்கு - தாமரையாசனத்தையுடைய பிரமதேவனுக்கு. கம்பர்க்கு-(அக்கினித்) தம்பமாய்நின்றசிவபிரானுக்கு. ஒன்றை-பிரணவப்

சிகர கோபுரத் தினுமதி லினுமேற்
செம்பொற் கம்பத் தளமீதும்-
தெருவி லேயுநித் திலமெறி யலைவாய்ச்
செந்திற் கந்தப் பெருமாளே.

(௩௪) குடர்நிண மென்பு சலமல மண்டு
குருதிந ரம்பு சீயூன் பொதிதோல்-
குலவு குரம்பை முருடு சுமந்து
குனகிம கிழ்ந்து நாயேன் றளரா;
அடர்மத னம்பை யனையக ருங்க
ணரிவையர் தங்கள் தோடோய்ந் தயரா-
அறிவழி கின்ற குணமற வுன்றன்
அடியிணை தந்து நீயாண் டருள்வாய்;
தடவியல் செந்தி லிறையவ ணண்பு
தருகுற மங்கை வாழ்வாம் புயனே-
சரவண கந்த முருகக டம்ப
தனிமயில் கொண்டு பார்சூழ்ந் தவனே;
சுடர்படர் குன்று தொளைபட அண்டர்
தொழவொரு செங்கை வேல்வாங் கியவா-
துரிதப தங்க இரதப்ர சண்ட
சொரிகடல் நின்ற சூராந்தகனே.

(௩௫) கொலைமத கரியன ம்ருகமத தனகிரி
கும்பத் தனமானார்-

---

பொருளை, மதிள்-மதில். கம்பத்தளம்-(துசத்) தம்பத்தையுடைய மேடை. கர்ப்பூரமென்பது-கர்ப்புரமென நின்றது.

(௩௪) குடர்-குடல். நிணம்-கொழுப்பு. அண்டு-நெருங்குகின்ற. குருதி-இரத்தம். குரம்பை-உடலாகிய. முருடு-விறகுக்கட்டை. குனகி-(தாற்பரியம்) திரிந்து. தளரா-தளர்ந்து. அடர்-நெருங்குகின்ற. தோள்-புயத்தை. அயரா-சோர்ந்து. தடஇயல்-தடாகங்களினழகுள்ள. சுடர் ஒளி. படர்-விரிந்த. துரிதம்-விரைவாகச் செல்லும். பதங்க-மயிலாகிய. இரத-தேரையுடைய. ப்ரசண்ட-உக்கிரமானவனே. சொரி-(எல்லாவளங்களையும்) கொடுக்கின்ற. சூராந்தகனே-சூரனுக்குயமன்போன்றவனே.

குமுதஅ முதஇதழ் பருகியு ருகிமயல்
கொண்டுற் றிடுநாயேன்;
நிலையழி கவலைகள் கெடவுன தருள்விழி
நின்றுற் றிடவேதான்-
நின்திரு வடிமல ரிணைமன தினிலுற
நின்பற் றடைவேனோ;
சிலையென வடமலை யுடையவ ரருளிய
செஞ்சொற் சிறபாலா-
திரைகட லிடைவரு மசுரனை வதைசெய்த
செந்திற் பதிவேலா;
விலைநிகர் நுதலிப மயில்குற மகளும்வி
ரும்பிப் புணர்வோனே-
விருதணி மரகத மயில்வரு குமரவி
டங்கப் பெருமாளே.

(௬௬) சேமக் கோமள பாதத் தாமரை
சேர்தற் கோதும நந்தவேதா-
தீதத் தேயவி ரோதத் தேகுண
சீலத் தேமிக அன்புறாதே;
காமக் ரோதவு லோபப் பூதவி
காரத் தேயழி கின்றமாயா-
காயத் தேபசு பாசத் தேசிலர்
காமுற் றேயும தென்கொலோதான்;
நேமிச் சூரொடு மேருத் தூளெழ
நீளக் காளபு யங்ககால்-

---

(௬௫) அன-ஒத்த. ம்ருகமத-கஸ்தூரியணிந்து. குமுதம் - குமுதமலர் போலும். நின-உன்னுடைய. நின்பற்று-நின்னிடத்திலன்பு. சிலையென-வில்லாக. வடமலை-மகாமேரு. இபமயில்-தெய்வயானை. விடங்கம்-அழகு.

(௬௬) சேமம்-காவலாகிய. கோமளம்-அழகிய. வேதஅதீத்தே-வேதத்துக்கப்பாற்பட்ட நிலையிலே. அவிரோதத்தே - வேற்றுமையில்லாத விடத்திலே., நான் நீயென்னும் பகுப்பற்ற இடத்திலே. பூதவிகாரத்து - பஞ்சபூதபரிணாமத்தால். மாயா-பொய்யாகிய. காயத்து-சரீரத்தில். பசுபாசத்து-சீவபோதத்தில். காம்உற்று-ஆசைப்பட்டு. ஏயும்-பொருந்தும். நேமிச்சூர்-கடலிலேமா

நீலக் ரீபக லாபத் தேர்விடு
நீபச் சேவக செந்தில்வாழ்வே;
ஓமத் தீவழு வார்கட் கூர்சிவ
லோகத் தேதரு மங்கைபாலா;
யோகத் தாறுப தேசத் தேசிக
வூமைத் தேவர்கள் தம்பிரானே.

(௬௭) தந்த பசிதனைய றிந்து முலையமுது
தந்து முதுகுதட வியதாயார்;
தம்பி பணிவிடைசெய் தொண்டர் பிரியமுள
தங்கை மருகருயி ரெனவேசார்;
மைந்தர் மனைவியர்க டும்பு கடனுதவு
மந்த வரிசைமொழி பகர்கேடா;
வந்து தலைநவிர விழ்ந்து தரைபுகம
யங்க வொருமகிட மிசையேறி;
அந்த கனுமெனைய டர்ந்து வருகையினி
லஞ்ச லெனவலிய மயில்மேல்நீ;
அந்த மறலியொடு கந்த மனிதனம
தன்ப னெனமொழிய வருவாயே;
சிந்தை மகிழுமலை மங்கை நகிலிணைகள்
சிந்து பயமயினு மயில்வீரா;

---

மரமாய் நின்றசூரன். நீள-நீண்ட. காளபுயங்க - விடத்தையுடைய பாம்புக்கு. காலை-யமனாகிய. நீலக்கிரீப-பசியகழுத்தையுடைய. கலாபத்தேர்-மயிலாகிய இரதத்தை. விடு-செலுத்துகின்ற. நீபம்-கடப்பமாலை. ஓமம்-யாககுண்டம். வழுவார்கட்கு-தவறாமல் வளர்க்கின்றவர்களுக்கு. ஊர்-(ஆகுபெயர்) இருப்பிடம். ஆறு-மார்க்கம். ஊமை-மௌனம்; பேசாநிலை.

(௬௭) தந்த - (உதாரக்கினி) கொடுத்த. அமுது-பால். மருகர்-மருமக்கள். கடும்பு-சுற்றத்தார். கடன்உதவு-(தங்கள்) கடமையைச்செலுத்துகின்ற. வரிசை-ஒழுங்காகிய. மொழி-வார்த்தைகளை. பகர்-பேசி. கேடா-கெடுதலாக. தலைநவிர்-தலைமயிர். மகிடமிசை-எருமைக்கடாமேலே. அஞ்சல்-பயப்படாதே. அந்தகனும்-யமனும். அடர்ந்து-நெருங்கி. மறலியொடு-யமனுடன். உகந்த-மகிழ்ப்பட்ட. நகிலிணைகள்-இரண்டுகொங்கைகள். பயம்-பாலை. அயிலும் - உண்

திங்க ளரவுநதி துன்று சடிலருள்
செந்தி னகரிலுறை பெருமாளே.

(௬௮) தரிக்குங்கலை நெகிழ்க்கும்பரி
தவிக்குங்கொடி மதனேவிற்-
றகைக்குந்தனி நிகைக்குஞ்சிறு
தமிழ்த் தென்றலி னுடனேநின்;
றெரிக்கும்பிறை யெனப்புண்படு
மெனப்புன்கவி சிலபாடி-
யிருக்குஞ்சிலர் திருச்செந்திலை
யுரைத்துய்ந்திட அறியாரே;
அரிக்குஞ்சதுர் மறைக்கும்பிர
மனுக்குந்தெரி வரிதான-
அடிச்செஞ்சடை முடிக்கொண்டிடு
மரற்கும்புரி தவபாரக்;
கிரிக்கும்பநன் முனிக்குங்க்ருபை
வரிக்குங்குரு பரவாழ்வே-
கிளைக்குந்திற லரக்கன்கிளை
கெடக்கன்றிய பெருமாளே.

(௬௯) நிலையாப் பொருளை யுடலாக் கருதி
நெடுநாட் பொழுது மவமேபோய்-

---

னும். துன்று-நெருங்குகின்ற. சடிலர்-சடையையுடைய சிவபிரான். நவிரம்-நவிரெனவும், நகிலம்-நகிலெனவும், நின்றன.

(௬௮) கலை-சேலையை. நெகிழ்க்கும்-நெகிழ்த்து உடுத்துவள். பரிதவிக்கும்-பரிதாபப்படுவள். ஏவில்-பாணத்தால். தகைக்கும்-இளைப்பள். எரிக்கும்-சுடும். பிறை-பிறைச்சந்திரன். என-என்று. புண்படும்-புண்படுவள். என-என்று(துறையமைத்து மனிதர்மேலே). புன்கவி-அற்பப்பாடல்களை. உரைத்து-பேசி. உய்ந்திட பிழைக்க. அடி-திருவடிகளையும். முடி-முடியையும். புரி-செய்யப்பட்ட. தவபாரம்-தவப்பெருமையுடைய. கிரி-பொதிகைமலை. வரிக்கும்-வரச்செய்யும். கிளைக்கும்-விருத்தியாகும். திறல்-வலிய. அரக்கன்-சூரன். கன்றிய-கோபித்த.

(௬௯) நிலையாப்பொருளை-பிரபஞ்சமாகிய அநித்தியப் பொருள்களை,

நிறைபோய்ச் செவிடு குருடாய்ப் பிணிகள்
நிறைவாய்ப் பொறிகள் தடுமாறி;
மலநீர்ச் சயன மிசையாப் பெருகி
மடிவேற் குரிய நெறியாக-
மறைபோற் றரிய வொளியாய்ப் பரவு
மலர்தாட் கமல மருள்வாயே;
கொலைகாட் டவுணர் கெடமாச் சலதி
குளமாய்ச் சுவற முதுசூதங்-
குறிபோய்ப் பிளவு பட்மேற் கதுவு
கொதிவேற் படையை விடுவோனே;
அலைவாய்க் கரையின் மகிழ்சீர்க் குமர
அழியாப் புனித வடிவாகும்-
அரனார்க் கதித பொருள்காட் டதிப
அடியார்க் கெளிய பெருமாளே.

(எய) பரிமள களபசு கந்தச் சந்தத் தனமானார்-
படையம படையென அந்திக் குங்கட் கடையாலே;
வரியளி நிரைமுரல் கொங்குக் கங்குற் குழலாலே-
மறுகிடு மருளனை யின்புற் றன்புற் றருள்வாயே;
அரிதிரு மருகக டம்பத் தொங்கற் றிருமார்பா-
அலைகுமு குமுவென வெம்பக் கண்டித் தெறிவேலா;
திரிபுர தகனரும் வந்திக் குஞ்சற் குருநாதா-
செயசெய அரகர செந்திற் கந்தப் பெருமாளே.

---

உட்டா-பொன்போல அருமையாக. அவம்-வீணுக. நிறை-நிறைந்த குணம். பொறிகள்- (கைகால் முதலிய) இந்திரியங்கள். சயனமிசையா-படுக்கையின் மேலாக. ஒளியாய்-சோதி ரூபமாய் (வந்து). மாசலதி-பெரியகடல். குளமா-(சிறிய) குளமாகி. சுவற-வற்ற. முதுசூதம்-பெரிய சூரனுகிய மாமரம். குறிபோய்-(தன்) பெயர் கெட்டு. மேற்கதுவு-மேலே பற்றுகின்ற. அதித-அப்பாற் பட்ட. அதீதம்-அதிதமென நின்றது.

(எய) சுகந்தம்-நல்லவாசனை. படை-சேனை. அந்திக்கும்-அடுக்கும். வரி-கீற்று. அளிநிரை-வண்டின் வரிசை. முரல்-ஒலிக்கின்ற. கங்குல்-இருள்போன்ற. மறுகிடும்-சுழலும். மருளனை-மயக்கமுடைய வடியேனை. தொங்கல்-மாலை. வெம்ப-கொதிக்க. திரிபுர தகனர்-முப்புரத்தையெரித்த சிவபிரான்.

(௭௧) புகரப் புங்கப் பகரக் குன்றிற்
புயலிற் றங்கிப் பொலிவோனும்-
பொருவிற் றஞ்சச் சுருதிச் சங்கப்
பொருளைப் பண்பிற் புகல்வோனும்;
திகிரிச் செங்கட் செவியிற் றுஞ்சத்
திகிரிச் செங்கைத் திருமாலும்-
திரியப் பொங்கித் திரையற் றுண்டுட்
டெளிதற் கொன்றைத் தரவேணும்;
தகரத் தந்தச் சிகரத் தொன்றித்
தடநற் கஞ்சத் துறைவோனே-
தருணக் கொங்கைக் குறவிக் கின்பத்
தையளித் ,தன்புற் றருள்வோனே;
பகரப் பைம்பொற் சிகரக் குன்றைப்
படியிற் சிந்தத் தொடும்வேலா-
பவளத் துங்கப் புரிசைச் செந்திற்
பதியிற் கந்தப் பெருமாளே.

(௭௨) மங்கை சிறுவர் தங்கள் கிளைஞர்
வந்து கதற வுடல்தீயின்-

---

(௭௧) புகர்-புள்ளிகளையுடைய. அ-அந்த. பகரம்-அலங்காரம்பொருந்திய. குன்றில்-மலைபோன்ற வெள்ளையானையில். பொலிவோனும்-விளங்குகின்ற இந்திரனும். பொருவில்-ஒப்பில்லாத. தஞ்சம்-(எல்லாருக்கும் பற்றுக்கோடாகிய) சுருதிச்சங்கம்-வேதத்தின் கூட்டமாகிய. புகல்வோனும்-சொல்லுகின்ற உருத்திரனும். திகிரி-வட்டமாகிய. செம்-சிவந்த. கட்செவி- (ஆதிசேடனாகிய) பாம்பில். துஞ்சு-நித்திரை செய்கின்ற. திகிரி-சக்கரத்தையுடைய. திரிய- (கற்பாந்தத்திலே) கெட. பொங்கி-(நீர்) எழுந்துநின்று. திரை அற்று-(பிறவிக்) கடலைக்கெடுத்து. உண்டு-அநுபவித்து. உள் தெளிவதற்கு-மனந்தெளிவடைதற்கு. ஒன்றை-ஏகமாகிய மெய்ப்பொருளை. தகரத்தந்து-தகரவித்தையுடைய வேதநூலின். அ-அந்த. சிகரத்து-உச்சியாகிய பிரமஸ்தானத்தில். தடம்-விசாலமாகிய. கஞ்சத்து-(இதய) தாமரையில். தருணம்-இளமை. குறவி-குறத்தன்மையுடைய வள்ளிநாயகி. பகரம்-பிரகாசம். படியில்-பூமியில். சிந்த-சிதறும்படி. புரிசை-கோட்டை.

(௭௨.) மண்டி-நெருங்கி. விண்டு-(மேற்கூறிய மங்கைமுதலியோர்) வெ

மண்டி யெரிய விண்டு புனலில்
வஞ்ச மொழிய விழவாவி;
வெங்கண் மறலி தன்கை மருவ
வெம்பி யிடறு மொருபாச-
விஞ்சை விளையு மன்று னடிமை
வென்றி யடிகள் தொழுவாராய்;
சிங்க முழுவை தங்கு மடவி
சென்று மறமி னுடன்வாழ்வாய்-
சிந்தை மகிழ அன்பர் புகழு
செந்தி லுறையு முருகோனே;
பொங்கு மிலகு திங்கள் கமல
மென்று புகலு முகமாதர்-
இன்பம் விளைய அன்பி னணையு
மென்று மிளைய பெருமாளே.

(எ௩) மனைகனக மைந்தர் தமதழகு பெண்டிர்
வலிமைகுல நின்ற நிலையூர்பேர்-
வளரிளமை தஞ்ச முனைபுனைவ ளங்கள்
வரிசைதம ரென்று வருமாய;
கனவுநிலை யின்ப மதனையென தென்று
கருதிவிழி யின்ப மடவார்தங்-
கலவிமயல் கொண்டு பலவுடல்பு னைந்து
கருவில்விழு கின்ற தியல்போதான்;

---

ளிவந்து. வஞ்சம்-சிறுமையாகிய தீட்டு. ஒழிய-நீங்க. ஆவி-உயிர். வெங்கண்-கொடிய. மறலி-யமன். வெம்பி-வாடி. இடறும்-(நல்விஷயங்களிற் செல்லவிடாமல்) தடுக்கும். பாசவிஞ்சை-(யமன்) பாசமாகிய கயிற்றின் வித்தை; அஃதாவது: கட்டுதல். விளையும்அன்று-உண்டாகும் அந்தக்காலத்தில். அடிமை-தொண்டனாகிய அடியேன். உழுவை-புலி. அடவி-தினைக்காடு. மறமின்-வள்ளிநாயகி. ஆவிவெம்பிமருவஎனக்கூட்டுக. புகழு-என்பதில். உகரம்-சாரியை.

(எ௩) கனகம்-பொன். நின்றநிலை-இருந்த இருப்பு. தஞ்சம்-ஆதாரமாயுள்ளவைகள். முனை-யுத்தகளத்தில். புனை-அலங்கரிக்கப்பட்ட. வளங்கள்-(ரதகசதுரகபதாதிகளாகிய) செல்வங்களின். வரிசை-ஒழுங்கு. தமர்-சுற்றத்

நினையுநின தன்பர் பழவினைக ளைந்து
நெடுவரைபி ளந்த கதிர்வேலா-
நிலமுதல்வி ளங்கு நலமருவு செந்தில்
நிலைபெறஇ ருந்த முருகோனே;
புனைமலர்பு னைந்த புனமறம டந்தை
புகளஇரு கொங்கை புணர்மார்பா-
பொருதுடனெ திர்ந்த நிருதர்மகு டங்கள்
பொடிபடந டந்த பெருமாளே.

(௭௪) மூலைமுகந்தி மிர்ந்த மலர்களுஞ்ச ரிந்த
முறுவலுஞ்சி வந்த கனிவாயும்-
முருகவிழ்ந்து திர்ந்த மலர்களுஞ்ச ரிந்த
முகிலுமின்ப சிங்கி விழிவேலும்;
சிலைமுகங்க லந்த திலதமுங்கு ளிர்ந்த
திருமுகந்த தும்பு குறுவேர்வும்-
தெரியவந்து நின்ற மகளிர்பின்சு ழன்று
செயலழிந்து ழன்று திரிவேனோ;
மலைமுகஞ்சு மந்த புலவர் செஞ்சொல் கொண்டு
வழிதிறந்த செங்கை வடிவேலா-
வளர்புனம்ப யின்ற குறமடந்தை கொங்கை
மணிவடம்பு தைந்த புயவேளே;

---

தார். மாய-பொய்யாகிய. விழியின்பம்-விழித்தலாலே செய்யுஞ்சுகம். பலவுடல்-அநேக சரீரம். புணர்ந்து-சேர்ந்து. இயல்போ-அழகோ. நிலமுதல்-மண் முதலிய (மற்றையவளங்களும்). புனை-அணியப்பட்ட. புனமறமடந்தை-காட்டிலுள்ள வீரத்தையுடைய வேடப்பெண். புளகம்-மகிழ்ச்சி. நிருதர்-அரக்கர். மகுடம்-கிரீடம்.

(௭௪) திமிர்ந்த-பூசிய. முறுவலும்-புன்சிரிப்பும். முருகு-வாசனை. அவிழ்ந்து-விரிந்து. முகிலும்-மேகம்போன்ற கூந்தலும். இன்பம்-சுகத்தைத்தரும். சிங்கி-விடம்போன்ற. சிலை-வில்லாகிய புருவம் ததும்பு-துளிக்கின்ற. குறுவேர்வும்-சிறுவேர்வையும். உழன்று-வருந்தி. மலைமுகம்சுமந்த - கற்கிமுகியென்னும் பூதத்தால் சுமந்துகொண்டு போயடைக்கப்பட்ட. புலவர்-நக்கீரர். செஞ்சொல்-(ஆகுபெயர்) திருமுருகாற்றுப் படையை. கொண்டு-ஏற்றுக்கொ

அலைமுகந்த வழ்ந்து சினைமுதிர்ந்த சங்க
மலறிவந்து கஞ்ச மலர்மீதே-
அளிகலந்தி ரங்க இசையுடன்று யின்ற
அரியசெந்தில் வந்த பெருமாளே.

(எ௫) மூப்புற் றுச்செவி கேட்பற் றுப்பெரு
மூச்சுற் றுச்செயல் தடுமாறி-
மூர்க்கச் சொற்குரல் காட்டிக் கக்கிட
மூக்குக் குட்சளி யிளையோடும்;
கோப்புக் கட்டியி ளைப்பிச் செற்றிடு
கூட்டிற் புக்குபி ரலையாமுன்-
கூற்றத் தத்துவ நீக்கிப் பொற்கழல்
கூட்டிச் சற்றருள் புரிவாயே;
காப்புப் பொற்கிரி கோட்டிப் பற்றலர்
காப்பைக் கட்டவர் குருநாதா-
காட்டுக் குட்குற வாட்டிக் குப்பல
காப்புக் குத்திர மொழிவோனே;
வாய்ப்புற் றத்தமிழ் மார்க்கத் திட்பொருள்
வாய்க்குச் சித்திர முருகோனே-
வார்த்தைச் சிற்பர தீர்த்தச் சுற்றலை
வாய்க்குட் பொற்பமர் பெருமாளே.

---

ண்டு. வழி-(பூதத்தாலடைக்கப்பட்ட மலைக்குகையின்) வழியை. சினை-சூல். அலறி-முழங்கி. இரங்க-இசையொலிசெய்ய. இசை-அவ்விராகத்துடன்.

(எ௫) செவிகேட்பு-காதுகேட்டல். மூர்ச்சச்சொற்குரல். கடினவார்த்தையினொலி. இளை-ஈளை; கோழை. கோப்புக்கட்டி-கோவைசெய்து; ஒழுங்குபடுத்தி. இளை-துன்பமானது. பிச்சுஎற்றிடு-சிதைத்து அடித்திடு. கூட்டில்-சரீரத்தில். கூற்ற-(உடல்வேறு உயிர்வேறாகக்) கூறுபடுத்து தலையுடைய. தத்துவம்-யமனுடைய வேதனைத்தன்மை. கூட்டி-சேர்த்து. காப்பு-காவலையுடைய. கோட்டி-வளைத்து. பற்றலர்-பகைவர். காப்பை-காவலையுடைய திரிபுரத்தை. கட்டவர்-களைந்தவர். ஆட்டி-மனைவி. புக்கு-புகுந்து. உத்தரம்-(அம்மனைவி கேள்விக்கு) மறுமொழி. அத்தமிழ் மார்க்கத்திட் பொருள்வாய்க்கு-அந்தத் தமிழ்வழியிலுள்ள உறுதிப்பொருளிடத்துக்கு. வாய்ப்புற்ற-பொருத்தமுற்ற. சித்திரம்-அழகிய. வார்த்தை-நல்வசனங்களையுடைய. தீர்த்தம் - நீர். சுற்று-சூழ்கின்ற. வாய்ப்புற்ற என்பதில் இறுதி அகரங்கெட்டது.

(எசு) வஞ்சத் துடனொரு நெஞ்சிற் பலநினை
வஞ்சிக் கொடியிடை மடவாரும்-
வந்திப் புதல்வரும் அந்திக் கிளைஞரு
மண்டிக் கதறிடு வகைகூர;
அஞ்சக் கலைபடு பஞ்சிப் புழுவுடல்
அங்கிக் கிரையென வுடன்மேவ-
அண்டிப் பயமுற வென்றிச் சமன்வரும்
அன்றைக் கடியிணை தரவேணும்;
கஞ்சப் பிரமனை அஞ்சத் துயர்செய்து
கன்றச் சிறையிடு மயில்வீரா-
கண்டொத் தனமொழி அண்டத் திருமயில்
கண்டத் தழகிய திருமார்பா;
செஞ்சொற் புலவர்கள் சங்கத் தமிழ்தெரி
செந்திற் பதிநக ருறைவோனே-
செம்பொற் குலவட குன்றைக் கடலிடை
சிந்தப் பொரவல பெருமாளே.

(எஎ) வரியார் கருங்கண் மடமாதர்-
மகவாசை தொந்த மதுவாகி;
இருபோது நைந்து மெலியாதே-
இருதாளி னன்பு தருவாயே;
பரிபால னஞ்செய் தருள்வோனே-
பரமேசு ரன்ற னருள்பாலா;
அரிகேச வன்றன் மருகோனே-
அலைவா யமர்ந்த பெருமாளே.

---

(எசு) பல-பலவிஷயங்களை. வந்தி-வணங்குகின்ற. அந்தி-அடுக்கின்ற. வகை-விதம். கூர-மிக. அஞ்சம்-(தத்துவப்பகுதிகளின்) அம்சம். கலைபடு-பிரியப்பட்டுப்போகின்ற. பஞ்சி-வருத்தமுடைய. அங்கிக்கு- அக்கினிக்கு. இரையென-உணவாக. உடன்-உடனே. பயம்உற-பயப்படும்படி. சமன்-யமன். கண்டு-கற்கண்டு. ஒத்தன-ஒத்த. அண்டு-நெருங்குகின்ற. அத்திரு-அந்தச்சிறப்புடைய. மயில்-மயில்போல்வாளாகிய வள்ளியம்மையின். கண்-கண்கள். தத்து-தாவுகின்ற. வடகுன்றை-மகாமேருமலையை. சிந்த-சிதற. ஒத்தனஎன்பதில்-அன்சாரியை.

(எஎ) வரி-இரேகை. தொந்தம்-தொடர்ச்சி. பரிபாலனம்-காவல்.

(எஅ) விந்ததி னூறி வந்தது காயம்
வெந்தது கோடி யினிமேலோ-
விண்டுவி டாம லுன்பத மேவு
விஞ்சையர் போல அடியேனும்;
வந்துவி நாச முன்கலி தீர
வண்சிவ ஞான வடிவாகி-
வன்பத மேறி யென்களை யாற
வந்தருள் பாத மலர்தாராய்;
எந்தனு ளேக செஞ்சுட ராகி
யென்கணி லாடு தழல்வேணி-
எந்தையர் தேடு மன்பர்ச காய
ரெங்கள்சு வாமி யருள்பாலா;
சுந்தர ஞான மென்குற மாது
தன்றிரு மார்பி லணைவோனே-
சுந்தர மான செந்திலில் மேவு
கந்தசு ரேசர் பெருமாளே.

(எகூ) துன்பங்கொண் டங்க மெலிந்தற
நொந்தன்பும் பண்பு மறந்தொளி
துஞ்சும்பெண் சஞ்சல மென்பதி லணுகாதே-
இன்பந்தந் தும்பர் தொழும்பத
கஞ்சந்தந் தஞ்ச மெனும்படி
யென்றென்றுந் தொண்டு செயும்படி யருள்வாயே;

---

(எஅ) விந்து - இந்திரியம். காயம்-சரீரம். விண்டுவிடாமல் - விடுபட்டுப் போகாமல். விஞ்சையர்- அறிவுடையோர். விநாசம்- அழிவை. முன்-நினைக்கின்ற. கலிதீர-சிறுமை நீங்க. வன்-வலிய. பதம்-பதவி. களைஆற-சிரமம் நீங்க. உள்-மனத்தில். கணில்-கண்ணிடத்து. தழல்வேணி-அக்கினிபோன்ற சடையையுடைய. எந்தையர்-எங்கள் பிதாவாயுள்ள சிவபிரானுர். சுந்தரம்-அழகு. சுரேசர்-தேவர்களுக்குத் தலைமையான இந்திரனுர். என்றனுளென்பது எதுகைநோக்கி எந்தனுளெனநின்றது.

(எகூ) அங்கம்-சரீரம். அற-மிக. ஒளி-பிரகாசம். துஞ்சும்-கெடும். பெண் சஞ்சலம்-பெண்கள் காமத்துன்பம். தம்-தங்களுடைய. தஞ்சமெனும்படி-பற்றுக்கோடென்று சொல்லும்விதம். உம்பர் தொழும்பத கஞ்சம் - தேவர்கள்

நின்பங்கொன் றுங்குற மின்சர
ணங்கண்டுந் தஞ்சமெ னும்படி
நின்றன்பின் றன்படி கும்பிடு மிளையோனே-

பைம்பொன்சிந் தின்றுறை தங்கிய
குன்றெங்குஞ் சங்குவ லம்புரி
பம்புந் தென் செந்திலில் வந்தருள் பெருமாளே.

(அ௰) பதும விருசரண் கும்பிட் டின்பக்
கலவி நலமிகுந் துங்கக் கொங்கைப்
பகடு புளகிதந் துன்றக் கன்றிக் கயல்போலும்-

பரிய கரியகண் செம்பொற் கம்பிக்
குழைகள் பொரமருண் டின்சொற் கொஞ்சிப்
பதற விதமுறுங் கந்துக் கொந்துங் குழல்சாயப்;

புதுமை நுதிநகம் பங்கத் தங்கத்
தினிது வரையவெண் சந்தத் திந்துப்
புருவ வெயர்வுடன் பொங்கக் கங்கைச் சடைதாரி-

பொடிசெய் தருள்மதன் தந்த்ரப் பந்திக்
கறிவை யிழவிடும் பண்புத் துன்பப்
பொருளின் மகளிர்தம் மன்புப் பண்பைத் தவிரேனோ

திதிதி தததடந் திந்தித் தந்தட்
டிடிடி டடடடண் டிண்டிட் டண்டத்
தெனன தனதனந் தெந்தத் தந்தத் தெனனா-

---

வணங்குந் திருவடித் தாமரையின். இன்பம்-ஆனந்தத்தை. தந்து-கொடுத்து. தொண்டு-வழிபாடு பங்கு-பாகத்தில். கண்டும்-தரிசித்தும். அன்பின்-அன்பால். தன்-சாரியை. படி-பூமியில். இன்துறை-இனியநீர்த்துறைகள். குன்று-(மணற்) குன்று. வலம்புரி சங்கு-வலம்புரிச்சங்கு. பம்பும்-நெருங்கும்.

(அ௰) பதும-தாமரைபோன்ற. பகடு-யானை. புளகிதம்-மகிழ்ச்சி. துன்ற-நெருங்க. கண்-கண்களானவை. குழைகள்-காதணிகளை. பொர-மோத. மருண்டு-மயங்கி, இன்சொல்-இனிய சொற்களால். பதற-நடுங்க. இதம்-நன்மை. கந்து-பற்றுக்கோடாயிருக்கும். கொந்து-பூங்கொத்துகளையுடைய. சாய-அவிழ. நகநுதி-நகத்தின்நுனி. பங்கத்து-வேறுபாடுடன். அங்கத்து-சரீரத்தில். இனிதுவரைய-இனிமையாக அழுத்த. சந்தம்-நிறம். இந்து-சந்திரன் போன்ற முகத்தில். உடன்-உடனே. சடைதாரி-சடை தரித்திருக்கப்பட்ட சிவபிரான். தந்த்ரப்பந்திக்கு-படை வரிசையால். இழவிடும்-இழந்துவிடும். பண்பு-விதமாகிய.

திகுர்தி தகிர்ததிங் திந்தித் திந்தித்
திரிரி தாரவென் றென்றொப் பின்றித்
திமிலை பறையறைந் தெண்டிக் கண்டச் சுவர்சோரச்;

சதியில் வருபெருஞ் சங்கத் தொங்கற்
புயவ சுரர்வெருண் டஞ்சிக் குஞ்சித்
தலைகொ டடிபணிந் தெங்கட் குன்கட் க்ருபைதாவெண்-

சமரகு மரகஞ் சஞ்சுற் றுஞ்செய்ப்
பதியில் முருகமுன் பொங்கித் தங்கிச்
சலதி யலைபொருஞ் செந்திற் கந்தப் பெருமாளே.

(அக) பூரண வாரகும்ப சீதப டீரகொங்கை
மாதர்வி காரவஞ்ச லீலையி லேயுழன்று
போதவ மேயிழந்து போனது மானமென்ப தறியாத-

பூரிய னாகிநெஞ்சு காவல்ப டாதபஞ்ச
பாதக னாயறஞ்செ யாதடி யோடிறந்து
போனவர் வாழ்வுகண்டு மாசையி லேயழுந்து மயல்தீரக்;

காரண காரியங்க ளானதெ லாமொழிந்து
யானெனு மேதைவிண்டு பாவக மாயிருந்து
காலுட லூடியங்கி நாசியின் மீதிரண்டு விழிபாய-

காயமு நாவுநெஞ்சு மோர்வழி யாகவன்பு
காயம்வி டாமலுன்ற னீடிய தாணினைந்து
காணுதல் கூர்தவஞ்செய் யோகிகளாய்விளங்க வருள்வாயே;

---

பொருளின் மகளிர்-வேசையர். பண்பை-குணத்தை. ஒப்பின்றி-உவமானமில்லாமல். திமிலை பறை-திமிலையும்(எனை) வாத்தியங்களும். அறைந்து-ஒலித்து. சோர-இடிந்துவிழ. சதியில்-வஞ்சகத்துடன். சங்கம்-கூட்டமாகிய. தொங்கல்-வஞ்சிமாலை. வெருண்டு அஞ்சி-மிகப்பயந்து. குஞ்சி-குடுமி. கொடு-கொண்டு; ஆல். கட்க்ருபை-கண் அருள். எண்-நினைக்கப்பட்ட. சமர-யுத்தத்தையுடைய. செய்ப்பதி-வயலூர். சலதி-கடல். மருண்டுநடுங்க இழவிடும்பண்பைஎனமுடிக்க.

(அக) ஆரம்-முத்துமாலை. சீதபடீரம்-குளிர்ந்த சந்தனம். உழன்று-வருந்தி. போது-காலத்தை. பூரியனாகி-கீழோனாகி. காவல்படாத-கட்டுக்குளடங்காத. அடியோடிறந்து-முழுவதுங்கெட்டு. ஏதை-குற்றத்தை. விண்டு-(பிறவினை) வேறுபடுத்தி. உடல்-சரீரம். பாவகம்-புனிதம். கால் ஊடு இயங்கி- (சுழுமுனை நாடியிலே செல்லுகின்ற) பிராணவாயுவினிடையே சஞ்சரித்து. நாசியின்மீது-மூக்கின் (இரண்டு பக்கத்து) மேலும். இருவிழிபாய-இரண்டு கண்ணும்பாய்ந்

ஆரண சாரமந்த்ர வேதமெ லாம்விளங்க
ஆதிரை யானின்று தாழ்வனெ னுவணங்கு
மாதர வால்விளங்கு பூரண ஞானமிஞ்சு முரவோனே.

ஆர்கலி யூடெழுந்து மாவடி வாகிநின்ற
சூரனை மாளவென்று வானுல காளுமண்ட
ரானவர் கூரரந்தை தீரமு னுள்மகிழ்ந்த முருகேசா;

வாரண மூலமென்ற போதினி லாழி கொண்டு
வாவியின் மாடிடங்கர் பாழ்பட வேயெறிந்த
மாமுகில்போலிருண்டமேனிய னுமுகுந்தன் மருகோனே

வாலுக மீதுவண்ட லோடிய காலில்வந்து
சூல்நிறை வானசங்கு மாமணியீ னவுந்து
வாரிதி நீர்பரந்த சீரலை வாயுகந்த பெருமாளே

(௮௨) உரைத்த சம்ப்ரம வடிவு திரங்கிக்
கறுத்த குஞ்சியும் வெளிறிய பஞ்சொத்
தொலித்தி டுஞ்செவி செவிடுற வொண்கட் குருடாகி-

யுரத்த வெண்பலு நழுவிம தங்கெட்
டிரைத்து கிண்கிணெ னிருமலெழுந்திட்
டுளைப்பு டன்றலை கிறுகிறெ னும்பித் தமுமேல்கொண்;

டரத்த மின்றிய புழுவினும் விஞ்சிப்
பழுத்து ளஞ்செயல் வசனம் வரம்பற்
றடுத்த பெண்டிரு மெதிர்வர நிந்தித் தனைவோரும்.

---

து செல்ல. காயம்-சரீரம். நாவு-வாக்கு. நெஞ்சு-மனம். ஓர்வழியாக-ஒருவழிப் பட. காயம்-கோபத்தை. விடாமல்- (வெளி) விடாமல்; உள்ளடக்கியென்றபடி. கூர்-மிகு. ஆதிரையான்-திருவாதிரைநட்சத்திரத்தையுடைய சிவபிரான். ஐ-சாரியை. தாழ்வனெனு-வணங்குவேனென்று சொல்லி. ஆதரவு-அன்பு. உரவோனே-வலிமையுடையவனே. ஆர்கலி-கடல். கூர்அரந்தை-மிகுந்ததுன்பம். வாரணம்-யானை. மாடு-பக்கத்தில். இடங்கர்-முதலை. பாழ்பட-இறக்க. முகில்-மேகம். வாலுகம்-வெண்மணல். மீது-மேல். வண்டல்ஓடிய-நீர்ச்சுழிநிறைந்த. காலில்-வாய்க்காலில். மணியீன-முத்துக்களைப்பெற. வாரிதி-கடல்.

(௮௨) உரைத்த-சொல்லப்பட்ட. சம்ப்ரம-மகிழ்ச்சியுடைய. வடிவு-சரீரம். திரங்கி-தோல்சுரித்து. குஞ்சி-மயிர். வெளிறிய-வெளுத்த. ஒலித்திடும்-சத்தம் கேட்கப்படும். உரத்த-பலமுள்ள. நழுவி-கழன்று. மதம்-ஆணவம். உளைப்பு-வருத்தம். அரத்தம் இன்றிய-இரத்தம் வற்றிய. விஞ்சி-மிகுந்து.

அசுத்த னென்றிட வுணர்வது குன்றித்
துடிப்ப துஞ்சிறி துளதில தென்கைக்
கவத்தை வந்துயி ரலமரு மன்றைக் கருள்வாயே;
திரித்தி ரிந்திரி ரிரிரிரி ரின்றிட்
டுடுட்டு டுண்டுடு டுடுடுடு டுண்டுட்
டிகுட்டி குண்டிகு டிகுடிகு டிண்டிட் டிகுதீதோ-
திமித்தி மிந்திமி திமிதிமி யென்றிட்
டிடக்கை துந்துபி முரசு முழங்கச்
செருக்க ளந்தனில் நிருதர் தயங்கச் சிலபேய்கள்;
தரித்து மண்டையி லுதிரமு ரிஞ்சத்
திரட்ப ருந்துகள் குடர்கள் பிடுங்கத்
தருக்கு சம்புகள் நிணமத ருந்தப் பொரும்வேலா-
தழைத்த கண்டியில் வயலியி லன்பைப்
படைத்த நெஞ்சினி லியல்செறி கொங்கிற்
றனித்த செந்திலி லினிதுறை கந்தப் பெருமாளே.

(அ௩) மொழியுநி றங்கருத்து மகரவி னங்கலக்கு
முடியவ லைந்தரற்று கடலாலும்-
முதிரவி டம்பரப்பி வடவைமு கந்தழற்குள்
முழுகியெ ழுந்திருக்கு நிலவாலும்;
மழையள கந்தரித்த கொடியிடை வஞ்சியுற்ற
மயல்தணி யும்படிக்கு நினைவாயே-
மரகத துங்கவெற்றி விகடந டங்கொள்சித்ர
மயிலினில் வந்துமுத்தி தரவேணும்;

---

உளம்பழுத்து-உள்ளம் வெளுத்து. செயல்-செய்கையும். வசனம்-பேச்சும். வாம்பு-அதனதனளவு. உணர்வு-அறிவு. உளது-(உயிர்) இருக்கிறது. இலது-இல்லை. என்கைக்கு-என்று சொல்லுதற்கு. அவத்தை-மரணத்துன்பம். அலமரும் சுழலும். இடக்கை, துந்துபி, முரசம்-இம்மூன்றும் ஒவ்வொருவாச்சியங்கள். தயங்க-திகைக்க. தரித்து-தங்கி. சம்புகள்-நரிகள். கண்டி, வயலி, கொங்கு-இம்மூன்றும் ஒவ்வொருதலங்கள். தனித்த-ஒப்பற்ற.

(அ௩) மொழியும்-சொல்லப்படும். மகரஇனம்-மகரமீன்கூட்டத்தை. முடிய-முழுவதும். அரற்று-பேரொலிசெய்கின்ற. முதிர்-முதிர்ந்த அ-அந்த. வடவைமுகம் தழற்குள்-வடவாமுகாக்கினி இடத்தில். மழை-மேகம்போன்ற அ

அழகிய மென்குறத்தி புளகித சந்தனத்தி
    னழுதத னம்படைத்த திருமார்பா-
அமரர்பு ரந்தனக்கு மழகிய செந்திலுக்கு
    மருணைவ ளம்பதிக்கு மிறையோனே;
யெழுபுவ னம்பிழைக்க அசுரர்சி ரந்தெறிக்க
    எழுசயி லந்துளைத்த சுடர்வேலா-
இரவிக ளந்தரத்தர் அரியர பங்கயத்த
    ரிவர்கள்ப யந்தவிர்த்த பெருமாளே.

(அச) தோடு மென்குழை யூடே போரிடு
    வாணெ டுங்கயல் போலே யாருயிர்
    சூறை கொண்டிடு வேல்போ லேதொடர் விழிமானார்-
சூத கந்தனி லேமா லாயவர்
    ஏத மென்றறி யாதே யூழ்வினை
    சூழும் வெந்துய ராலே தானுயிர் சுழலாதே;
யாடும் வெம்பண மார்நீள் காரர
    வூறு கண்டிட மேல்வீழ் தோகையி
    லாரும் வண்குழ ரேசா வாதிரு புயவேளே-
யாரு நின்னரு ளாலே தாடொழ
    வாண்மை தந்தருள் வாழ்வே தாழ்வற
    வாதி தந்தவ நாயேன் வாழ்வுற வருள்வாயே;
யோடும் வெங்கதி ரோடே சோமனும்
    ஊழி யண்டமு லோகா லோகமை
    யூரு மிந்திர ஞானு தேவரு மடிபேண-

---

ளகம்-கூந்தல். மரகத-பச்சைநிறமுள்ள. விகட-ஆச்சரியமாகிய. புளகிதம்-இங்கிதம். படைத்த-(தாற்பரியம்)தழுவிய. எழுபுவனம்-எழுலோகம். தெறிக்க-தெறித்துவிழ. எழு-மேலெழுகின்ற. சயிலம்-கிரௌஞ்சமலை. அந்தரத்தர்-ஆகாயவாசிகள். அரிஅரபங்கயத்தர்-திரிமூர்த்திகள்.

(அச) குழை-காது. சூறை-கொள்ளை. சூதுஅகம்-வஞ்சகமனம். மால்-மயக்கம். ஏதம்-குற்றம். பணம்-படம். கார்அரவு-கரியபாம்பு ஊறுகண்டிட-புண்பட. தோகை-மயில். ஆரும்-நிறையும். ஆண்மை-வீரம். ஓடும்-ஓடுகின்ற. சோமன்-சந்திரன். லோகாலோகம்-எல்லாஉலகமும். மையூரும்-மோகத்திலூர்ந்துசெல்லும். நானு-பலவித. ஊறிடு--(தே) னூறுகின்ற. அம்புயன் - தாமரைப்

ஆறி டம்புயன் வேலா வால்ய
மூடு தங்கிய மாலா யாரண
னோத வெண்டிரை சூர்மார் பூடுற விடும்வேலா;

வேடு கொண்டுள வேடா வேடைய
வேழம் வெம்புலி போலே வேடர்கள்
மேவு தண்புன மீதே மாலொடு மிதண்மேவி-

மேக மென்குழ லாய்நீ வாவென
மேவு கந்தசு வாமீ மாதமிழ்
வீறு செந்திலின் மீதே மேவிய பெருமாளே.

(அரு) படிதனி லுறவெனு மனைவர்கள் பரிவொடு
பக்கத் திற்பல கத்திட் டுத்துயர் கொண்டுசாரப்-

பனைமர விறகிடை யழலிடை யுடலது
பற்றக் கொட்டுக டட்டிச் சுட்டிடு துன்பமேவி;

கடிசம னுயிர்தனை யிருவிழி யனலது
கக்கச் சிக்கென முட்டிக் கட்டியு டைந்துபோமுன்-

கதிதரு முருகனு மெனநினை பவரொடு
கற்பிற் புக்கறி வொக்கக் கற்பது தந்திடாயோ;

வடகிரி தொளைபட வலைகடல் சுவறிட
மற்றெத் திக்கினு மெட்டுத் திக்கினும் வென்றிவாழ்-

வலியுட னெதிர்பொரு மசுரர்கள் பொடிபட
வட்டத் திட்டியர் வெற்பைக் குத்திம லைந்தவேலா;

அடர்சடை மிசைமதி யலைசல மதுபுனை
யத்தற் குப்பொருள் கற்பித் துத்தரு செந்தில்வாழ்வே-

---

பூவிலுள்ள பிரமன். வேலாவாலயம்-கடல். மால்-விஷ்ணு. ஆய்ஆரணன்-ஆராயப்பட்டவேதத்திலுள்ள ருத்திரன். ஓத-துதிக்க. வெண்டிரை - வெள்ளியலைகளையுடைய கடல். வேடு-வேடத்தன்மை. வேடா-வேஷத்தையுடையவனே. வேடைய-வெப்பமுள்ள. வேழம்-யானை. மிதண்-பரணில். வீறு-பெருமை(பொருந்திய). வேலாவலயமென்பது வேலாவாலயமென விகாரமாயிற்று.

(அரு) படி-பூமி. உறவு-சுற்றம். பரிவு-அன்பு. கத்து-கதறுதல். விறகிடை-விறகினிடத்துள்ள. கடி-கோபிக்கின்ற. முட்டி-எதிர்த்து. கட்டி-கட்டப்பட்டு. கற்பில்-படித்தலில். புக்கு-புகுந்து. வடகிரி-மேருமலை. சுவறிட-வற்ற. வட்டத்திட்டு-வட்டமாகிய மேட்டில். அடர்-நெருங்கிய. வடிவொடு - உருவத்

யடிமுதன் முடியினும் வடிவொடு தொழுமவு
னத்திற் பத்திகொள் நித்தச் சுத்தர்கள் தம்பிரானே.

(அசு) புரக்க வந்தநங் குறக்க ரும்பைமென்
புனத்தி லன்றுசென் றுறவாடிப்-
புடைத்த லங்கிர்தம் படைத் தெழுந்ததண்
புதுக்கு ரும்பைதின் புயமீதே;
செருக்கு நெஞ்சகங் களிக்கு மன்புடன்
திளைக்கு நின்றிறம் புகழாதிந்-
த்ரியக்க டஞ்சுமந் தலக்கண் மண்டுமென்
றியக்க மென்றொழிந் திடுவேனோ;
குரக்கி னங்கொணர்ந் தரக்கர் தண்டமுங்
குவட்டி லங்கையுந் தூளாகக்-
கொதித்து வெம்பியங் கதிர்த்து வந்துடன்
குதித்த கொண்டலின் மருகோனே;
துரக்க வும்பரும் பரப்பு சண்டசிந்
துரத்த னும்பிறந் திறவாத-
சுகத்த ரென்பருந் துதித்த செந்தில்வந்
துதிக்கு மும்பர்தம் பெருமாளே.

(அஎ) புகரில் சேவல செங்கர சங்கம
நிருதர் கோபக்ர வஞ்சநெ டுங்கிரி
பொருத சேவக குன்றுறை பெண்கொடி மணவாளா-

---

துடன். மவுனம் - யோகம். நித்தம்-நித்தியம். முருகனும் என்பதன் உம்மை, அனைவர்க ளென்பதனோடுகூட்டுக.

(அசு) புரக்க-காக்க. குரும்பை - தென்னம்பிஞ்சுபோன்ற முலை. 'திளைக்கும்-அநுபவிக்கும். இந்திரியக்கடம் - பஞ்சேந்திரியங்களிடமாகிய சரீரம். அலக்கண்மண்டும் - துன்பம்நெருங்கும். இயக்கம் - மயக்கம். கொணர்ந்து-கொண்டுவந்து. தண்டமும்-கொடுங்கோன்மையும். குவடு-மலையினுச்சியாகிய. குதித்த-(தாற்பரியம்) தோன்றிய. துரக்க-சொர்க்கலோகத்தையுடைய. பரப்பு-விரிக்கின்ற. சண்ட-வேகத்தையுடைய. சிந்துரத்தன் - (வெள்ளை) யானையுடைய இந்திரன். உன்-கருதுகின்ற. துறக்க என்பது எதுகைநோக்கித் துரக்க வென்றாயிற்று.

(அஎ) புகர்-குற்றம். சேவல-கோழிக்கொடியுடைய. சங்கம-கூட்டமாகிய. பூசுரர்-பூதேவர்; பிராமணர். புயகபூதர-சர்ப்பங்கள்வசிக்கும் மலையுடையவ

புனித பூசுர ருஞ்சுர ரும்பணி
　　புயக பூதர வென்றிரு கண்புனல்
　　பொழிய மீமிசை யன்புது ளும்பிய　　மனஞகி;

அகில பூதவு டம்பு முடம்பினி
　　லமரு மாருயி ருங்கர ணங்களு
　　மவுன வார்வமி குந்துதொ ழுந்தனி　　யுணர்வாலே-

யகில வாதிக ளுஞ்சம யங்களு
　　மடைய வாமென வொன்றென நின்றதை
　　யறிவி லேனறி யும்படி யென்றருள்　　புரிவாயே;

மகர கேதன முந்திகழ் செந்தமிழ்
　　மலையின் மாருத மும்பல வும்பரி
　　மளசி லீமுக மும்பல மஞ்சரி　　வெறியாடு-

மதுக ராரவ சிஞ்சினி யுங்கன
　　மதுர கார்முக மும்பொர வந்தெழு
　　மதன ராசனும் வெந்துவி ழும்படி　　முனிவாரும்;

முகுள்வி லோசன முஞ்சிறு திங்களு
　　முதுப கீரதி யும்பணி யுஞ்சடை
　　முடியர் பாதியு டம்பில்வி ளங்கிய　　வபிராமி-

முகுர நூபுர பங்கய சங்கரி
　　கிரிகு மாரித்ரி யம்பிகை தந்தருள்
　　முருக வேள்வளர் செந்திலில் வந்தருள்　　பெருமாளே.

---

னே. துளும்பிய-ததும்பிய. மனஞகி-மனத்தையுடையவஞகி. அகில-எல்லா. பூதவுடம்பு-பஞ்சபூதபரிணமங்களாகிய சரீரமும். கரணங்களும்-அந்தக்கரணங்களும்; மனம் புத்தி சித்தம் அசங்காரங்களும். மவுனம்-ஒடுங்கும். ஆர்வம்-ஆசை. அகிலவாதிகளும்-எல்லாவாதிகளும். அடைய-முழுவதும். ஆமெனா-ஆமென்றுசொல்ல. ஒன்றென-ஏகமாக. நின்றதை-இருந்தபிரமத்தை. மகரகேதனம்-மீனக்கொடி. மாருதம்-தென்றற்காற்று. பரிமளசிலீமுகம்-வாசனையுள்ள புட்பபாணமும். மஞ்சரி-பூங்கொத்துக்களில்வசிக்கும். மதுகரம்-வண்டாகிய. ஆரவம்-முழக்கத்தையுடைய. சிஞ்சினியும்-வில்விற்கட்டுங் கயிறும். மதுரகார்முகமும்-இனிமையுடைய கரும்புவில்லும். பொர-சண்டைசெய்ய. முகிழ்விலோசனமும்-(யோகத்திலிருக்கும் போது) மூடியகண்ணும். முது-பெரிய. பகீரதி-கங்காநதி. பணியும்-பாம்பும்(உடைய). முகுர-தளிர்போன்ற. பங்கயம்-(உருவகம்) பாதம். கிரிகுமாரி-மலையரையன்மகள்.

(௮௮) அதல சேட னாராட வகில மேரு மீதாட
வபின காளி தானாட வவளோடன்-
றதிர வீசி வாதாடும் விடையி னேறு வாராட
வகில பூத வேதாள மவையாட;

மதுர வாணி தானாட மலரில் வேத னாராட
மருவி வானு ளோராட மதியாட-
வனச மாமி தானாட நெடிய மாம னாராட
மயிலு மாட நீயாடி வரவேணும்;

கதைவி டாத தோள்வீம னெதிரி யான போர்மீளி
கருதொ ணாத மாசேனை பொடியாகக்-
கதறு காலி போய்மீள விசய னேறு தேர்மீது
கதிர்கொள் வீறு கோடூதி யலைமோதும்;

உததி மீதி லேசாயு முலக மூடு சீர்பாத
வுவண வூர்தி மாமாயன் மருகோனே-
யுதய தாம மார்பான ப்ரபுட தேவ மாராஜ
னுளமு மாட வாழ்தேவர் பெருமாளே.

(௮௯) உறவின்முறை கதறியழ வூரார்கு மாசையுற
பறைதிமிலை முழவினிசை யாகாச மீதுமுற
வுலகிலுள பலரரிசி வாய்மீதி லேசொரியு மந்தநாளி-

லுனதுமுக கருணைமல ரோராறு மாறிருகை
திரள்புயமு மெழில்பணிகொள் வார்காது நீள்விழியு
முபயபத மிசைகுலவு சீரேறு நூபுரமு மந்தமார்பும்;

(௮௮) அதலம்-பாதலம். அகிலமேரு-உலகத்தைத்தாங்கும் மகாமேரு மலை - அபின - வேறுபாடில்லாத. அதிர - முழங்க. வீசி-நீட்டி. அகிலபூத வேதாளம் - எல்லாப் பூதங்களாகிய வேதாளங்கள். கதை-தண்டாயுதம்-எதிரி-பகைவன். போர் மீளி - யுத்தவீரனை துரியோதனன். காலி - பசுக்கூட்டங்கள். வீறு - பெருமையுடைய. கோடு - வெற்றிச்சங்கு. உததி - கடல். சாயும் - கண்படுக்கும். உலகம் மூடும் - பூமியை யளக்கும்போது மறைக்கும். உவணவூர்தி - கருடவாகனத்தையுடையவன் - உதயதாமம் - புதியமாலை-ப்ரபுடதேவமாராஜன் - அருணகிரிநாதரை யாதரித்துவந்த ஓரரசன்.

(௮௯) திமிலைபறை-திமிலையென்னும் வாச்சியம். இசை-ஒலி. மீதுஉற-மேலே பொருந்த. பணி - குண்டலங்களாகிய ஆபரணம். உபயம் - இரண்டு

மறையறையு மமரர்தரு பூமாரி யேசொரியு
மதுவொழுகு தரளமணி மீதேமு நாலுமொரு [டு-
மயிலின்மிசை யழகுபொலி தாளாவு ஞலடியர் வந்துகூ

மறலிபடை யமபுரமு மீதோட வேபொருது
விருதுபல முறைமுறையி லேயூதி வாதுசெய்து [யோ;
மதலையொரு குதலையடி நாயேனை யாளவிஙன் வந்திடா

பிறையெயிறு முரணசுரர் பேராது பாரில்விழ
வதிரவெழு புவிபுலக மீதேழு மோலமிடு [கம்-
பிடிகளிறு வரிநிரைகள் பாழாக வேதிசையி னின்றநா

பெரியநெடு மலைபிடிய மாவாரி தூளியெழ
பெரியதொரு வயிறுடைய மாகாளி கூளியொடு [றதீரா;
பிணநிணமு முணவுசெய்து பேயோடு மாடல்செய வென்

குறமறவர் கொடியடிகள் கூசாது போய்வருடை
கரடிபுலி கிளிகடிய வாராத காதன்மிகு
குளிர்கணியி னிளமரம தேயாகி நீடியுயர் குன்றுலாவு-

கொடியதொரு முயலகனின் மீதாடு வாருடைய
வொருபுறம துறவளரு மாதாபெ றுவருள்செய்
குமரகுரு பரவமரர் வானாடர் பேணவருள்தம்பிரானே.

(௬௰) குறிப்பரிய குழற்குமதி
நுதற்புருவ விலுக்குமிரு
குழைக்குவடு விழிக்குமெழு குழலாலும்-

---

மறை அறையும்-வேதமோதும். மது வொழுகு - தேனொழுகப்பட்ட. தாளா-(அடியாரைக்காக்கு) முயற்சியுடையவனே. உன்னால்-உனது. மறலி - யமன். விருது - விருதாகியவெற்றிச் சங்கம். இஙன் - இவ்விடத்து. எயிறு - பல். எழுபுவி அதிர - கீழேழுபூமிநடுங்க. பிடி - பெண்யானை. அரிநிரை-குதிரை வரிசை. நாகம்-பாம்புகள். மலை - அட்டகுலபருவதம். கூளி - பூதம் நிண. ம் - கொழுப்பு. கொடி - கொடி போன்ற வள்ளிநாயகி. அடிகள் - கால்கள் வருடை-மலையாடு. கடிய. (தினைப்புனத்தினின்று) விரட்ட. ஆராத- அடங் காத. கணி-வேங்கை-முயலகன்- ஒருபூதத்தலைவன் - மாதா - தாயாகிய உமா தேவி. பெறு-பெற்ற. மீதம் என்பதின் உம்மும். யமபுரமும் என்பதின் - உம்மும் சாரியைகள்.

(௬௰) குறிபபரிய - கருதுதற்கரிய. விலுக்கும் - வில்லுக்கும். குழை- காது. வடு - மாவடுப்போன்ற, எழு - எழுகின்ற - குழலாலும் - குழலோசை

கொடிப்பவள விதழ்க்குமிரு
சுடர்த்தரள நகைக்குமமு
தினுக்குமிக வுறத்தழுவு குறியாலும்;

அறப்பெரிய தனத்துமன
நடைக்குமினி னிடைக்குமல
ரடிக்குமிள நகைக்குமுள மயராதே-

யகத்தியனொ டுரைத்தபொரு
ளளித்தருளி யரிப்பிரம
ரளப்பரிய பதக்கமல மருள்வாயே;

கறுத்தடரு மரக்கரணி
கருக்குலைய நெருக்கியொரு
கணத்திலவர் நிணக்குடர்கள் கதிர்வேலால்-

கறுத்தருளி யலக்கணுறு
சுரர்க்கவர்கள் பதிக்குரிமை
யளித்திடரை யறுத்தருளு மயில்வீரா;

செறுத்துவரு கரித்திரள்கள்
திடுக்கிடமன் மருப்பையரி
சினத்தினொடு பறித்தமர்செய் பெருகானிற்-

செலக்கருதி யறக்கொடிய
சிலைக்குறவர் கொடித்தனது
சிறுத்தனமு முறத்தழுவு பெருமாளே.

---

போன்ற சொல்லுக்கும். கொடி - நீண்ட. அமுதினுக்கும் (ஆகுபெயர்) மற்றைய அமுதசிற்கின்ற அவயவங்களுக்கும். குறியாலும் - அல்குலுக்கும். அற-மிக. தனத்தும் - முலைக்கும். மினின் - மின்னல் போன்ற. இளநகை-புன்சிரிப்பு. அயாது - வாடாமல். கறுத்து - கோபித்து. அடரும் - நெருங்கும். அணி-சேனை. நிணம்-கொழுப்பு. கறுத்து-(தாற்பரியம்) அறுத்து. அலக்கண்-துன்பம். உரிமை-சுதந்தரம். இடர்- அத்துன்பத்தை. செறுத்து-கோபித்து. மன்-நிலைபெற்ற. அரி- சிங்கம். பெருகானில் - பெரியகாட்டில். சிறுத்தனம் - சிறியகொங்கை. குழலாலும், குறியாலுமென்றவற்றில் ஆல் இரண்டும் குவ்வுருபுப் பொருள்கள் கொண்டன. தனத்துக்குமென்றதில், குவ்வுருபுமறைந்தது.

(௯௧) பழுதற வோதிக் கடந்து
பகர்வன தீரத் துறந்து
பலபல யோகத் திருந்து மதராசன்-
பரிமள பாணத் தயர்ந்து
பனைமட லூர்தற் கிசைந்து
பரிதவி யாமெத் தநொந்து மயல்கூர;
அழுதழு தாசைப் படுங்க
ணபிநவ மாதர்க் கிரங்கி
யவர்பிர மாணத் துநெஞ்ச மறைபோய்நின்-
றழிவுறு நான்முற் பயந்த
விதிவச மோமற் றையுன்ற
னருள்வச மோவிப் ரமந்தெ ரிகிலேனென்;
எழுதரு வேதத் துமன்றி
முழுதினு மாய்நிற் குமெந்தை
யெனவொரு ஞானக் குருந்த ரருள்மேவு-
மிருவுரு வாகித் துலங்கி
யொருகன தூணிற் பிறந்து
விரணியன் மார்பைப் பிளந்த தனியாண்மை;
பொழுதிசை யாவிக் ரமன்றன்
மருகபு ராரிக் குமைந்த
புளகப டீரக் குரும்பை யுடன்மேவும்-

---

(௯௧) கடந்து-(கலைஞானத்தை) நீங்கி. பகர்வன - சொல்லப்படுவனவாகியபிரபஞ்சம். தீர - முழுவதும். பனைமடலூர்தற்கு - (குறித்தபெண் கிடையாமையால்) பனங்கருக்காற் செய்யப்பட்ட குதிரைமேலேறுதற்கு. பரிதவியா - பரிதவித்து. அபிநவ - ஆச்சரியமுடைய- பிரமாணத்து - (பொய்ச்) சத்தியத்தால். அறைபோய் - ஒட்டைபட்டு. இப்ரமம் - இந்தப்பிரமை. முழுதினும் - எல்லாப்பொருளிலும். ஆய் - வியாபகமாகி. குருந்தர் - குருந்தமரத்தடியிலெழுந்தருளிய சிவபிரான். இருவுரு - நரசிங்கவடிவம். தனியாண்மை - ஒப்பற்றவீரம். பொழுது. காலத்தொடு. இசையா - இசைதலாகிய விக்ரமன் - மிகுபலத்தையுடைய விஷ்ணு. புராரி - திரிபுரமெரித்த சிவபிரான். புளகம் - இங்கிதம் - படீரம் - சந்தனம். குரும்பை - குரும்பைபோன்ற கொங்கை. புயகிரி - (உம்முடைய) புயம்போன்ற கிரியாகிய, வாம அழகிய.

புயகிரி வாமச் சிலம்பின்
வனசர மானுக் குகந்து
புனமிசை யோடிப் புகுந்த பெருமாளே.

(௬௨) புருவத்தை நெறித்து விழிக்கயல்
பயில்விட்டு வெருட்டி மதித்திரு
புதுவட்டை மினுக்கி யளிக்குல மிசைபாடு-
புயல்சற்று விரித்து நிரைத்தொளி
வளையிட்ட கரத்தை யசைத்தகில்
புனைமெத்தை படுத்த பளிக்கறை தனிலேறிச்
சரசத்தை விளைத்து முலைக்கிரி
புளகிக்க வணைத்து நகக்குறி
தனைவைத்து முகத்தை முகத்துட னுறமேவித்-
தணிவித்தி ரதத்த தரத்துமி
ழமுதத்தை யளித்து யிருக்கியல்
தருபித்தை யகற்றி யுனைத்தொழ முயல்வேனோ;
பரதத்தை யடக்கி நடிப்பவர்
த்ரிபுரத்தை யெரிக்க நகைப்பவர்
பரவைக்குள் விடத்தை மிடற்றிடு பலிநீடு-
கரகப்ப ரையுற்று மிகப்பகி
ரதியுற்ற சிரத்தை நிறத்துய
ரரவத்தை யொருப்ப விருப்பவ ருமையாளர்;

---

சிலம்பின் - மலையிடத்து வனசரமான் - வேடப்பெண். மேவும் என்பதுமா னென்பதனோடுமுடியும்.

(௬௨) நெறித்து - முரிப்புக்கொள்ள வளைத்து. பயில்வு. (தாற்பரியம்)- கள்ளம் - வெருட்டி - மருளச்செய்து. மதி - சந்திரன்போன்ற. திரு - சிறந்த. புதுவட்டை - புதியவட்டவடிவமாகிய முகத்தை. புயல் - மேகம்போன்ற கூந் தல். நிரைத்து வரிசைப்படுத்தி. அகில் - அகிற் கட்டைப்புகை. படுத்த - விரி த்த - பளிக்கறை - பளிங்கு மண்டபம். புளகிக்க - இங்கிதங்கொள்ள. தணி வித்து - கீழேதாழ்த்தி; உபரிசாதஞ் செய்தென்றபடி. இரதத்து - இனிமை யுடைய. அதரத்து - வாயிதழினின்றும். இயல்தரு-பொருந்துகின்ற. பித்தை- மயக்கத்தை. பரதத்தை. பரதநூல்விதியை. அடக்கி - அமைத்து. மிடற்றி டு-கண்டத்திலணிந்த. பலிநீடு - பிச்சைமிகுந்த. கர - கையிலுள்ள. கப்பரை- பாத்திரம். சிரத்தையுற்றபகிரதி - தலையையடைந்த கங்கையை, நிறத்து.

சுரர்சுத்தர் மனத்து றைவித்தகர்
பணிபத்தர் பவத்தை யறுப்பவர்
சுடலைப்பொ டியைப்ப ரிசிப்பவர் விடையேறுந்-

துணையொத்த பதத்த வரெற்றிடு
மதனைக்க டிமுத்தர் கருத்தமர்
துலைவற்ற கிர்பைக்கு ரூதித்தருள் பெருமாளே;

(கூஉ) அளகநிரை குலையவிழி
குவியவளை கலகலென
வமுதமொழி பதறியெழ வணியார-

மழகொழுகு புளகமுலை
குழையவிடை துவளமிக
வமுதநிலை யருள்பரவ வதிமோகம்;

உளமுருக வருகலவி
தருமகளிர் கலவிதனி
லுழலுமதி கவடுமதி யொழியாதோ-

உலகடைய மயிலின்மிசை
நொடியளவு வருமளவி
லுனதுமது மலரடியை யருள்வாயே;

வளையுமலை கடல்சுவற
விடுபகழி வரதனெதிர்
மருதினொடு பொருதருளு மபிராம-

வரியரவின் மிசைதுயிலும்
வரதசய மகள்கொடுமை
மறுகியமர் முடுகிவிடு நிருதேசன்;

---

உயர் அரவம் - மார்பைப்பொருந்திய உயர்ந்தசர்ப்பம். (இவ்விரண்டிலும்) ஒருப்ப -ஒற்றுமைப்பட. விருப்பவர் - ஆசையையுடையவர். பரிசிப்பவர்-பூசியவர். பதத்தவர்-திருவடியையுடையவர். எற்றிடு-மோதுகின்ற. கடி-கோபிக்கின்ற.

(கூஉ) அளகநிரை - கூந்தல்வரிசை. பதறி - விரைந்து. ஆரம் - முத்துமாலை. புளகம் - இங்கிதம். நிலை- அந்தந்த இடங்களில். அருள் - அருள்போல. பரவ - வியாபிக்க. கலவி - புணர்ச்சி. கலவி - சேர்க்கை. உழலுமது-வருந்துகின்ற அச்செய்கை (யுடன்). உலகு அடைய - உலகமுழுவதும். நொடியளவு நொடிப் பொழுதளவில். வரும் - சுற்றிவரும். அளவில் - எண்ணுக்கட

தளமுறிய வரைதகர
வசுரருடல் தலைசிதற
தகனமெழ முடுகிவிடு வடிவேலா-
தரளமணி வடமிலகு
குறவர்திரு மகள்கணவ
சகலகலை யெழுதவல பெருமாளே-

(௬௪) சுட்டது போலாசை விட்டுல காசார
துக்கமி லாஞான சுகமேவு-
சொற்கர ணாதீத நற்குண மூடாடு
சுத்தநி ராதார வெளிகாண;
மொட்டலர் வாரீச சக்ரசு டாதார
முட்டவு மீதேறு மதிமீதாய்-
முப்பது மாறாறு முப்பதும் வேறான
முத்திரை யாமோன மடைவேனோ;
எட்டவொ ணாவேத னத்தணி கோகோவெ
னப்பெரு மான்மேவு வரைசாய-
வெற்றிய வேழாழி வற்றிட மாறாத
வெத்தனை யோகோடி யசுரேசர்;
பட்டொரு சூர்மாள விக்ரம வேலேவு
பத்திரு தோள்வீர தினைகாவல்-
பத்தினி தோடோயு முத்தம மாறாத
பத்திசெய் வானாடர் பெருமாளே.

---

ங்சாத. சுவற-வற்ற. எதிர்-எதிர்க்கின்ற. மருது-மருதமரமாகிய அசுரன். அபிராம-அழகுடைய. வரத-விஷ்ணுபோன்றவனே. சயமகள்-துர்க்கை. (செய்யும்) கொடுமை-கொடுமைக்கு. மறுகி-மனஞ்சுழன்று. அமர்-போரை, முடுகிவிடு-விரைந்து நடாத்து. நிருதேசன்-சூரன். தளம்-சேனை. தகனம்-சுசிதல்.

(௬௪) சொல்-சொல்லப்படுகின்ற. கரணாதீத- அந்தக்கரணங்களுக்கப்பாற்பட்ட நிராதாரவெளி- ஆதாரமற்றசிதாகாயம். வாரீச-தாமரைப்பூவையுடையாய். சக்ர-சக்கரத்தையும் சடாதார-ஆறாதாரங்களையு முடையவனே. முப்பதும்ஆறாறுமுப்பதும்-தொண்ணூற்றாறு தத்துவங்களும். முத்திரையாம்-அடையாளமாம். மோனம்-மௌனநிலை. எட்டவொணா - காணக்கூடாத. நத்தணிகோ-சங்கைத்தரித்தவிஷ்ணு. கோகோவென-ஐயோவென்றலற. பெருமான்-பெருமையுடையவனாகிய தாரகாசுரன். வரை-கிரௌஞ்சமலை. எற்றிய-மோதிய. சூர்-சூரபன்மன். விக்ரம-பராக்கிரமத்தையுடைய.

(௯௫) முருகம யூரச் சேவக
குறமக ளாவற் பூதர
முகுளப டீரக் கோமள முலைமீதே-
முழுகிய காதற் காமுக
பசுபதி பாசத் தூய்வினை
முதியபு ராரிக் கோதிய குருவேயென்;
றுருகியு மாடிப் பாடியு
மிருகழ னாடிச் சூடியு
முணர்வினொ ராடிக் கூடியும் வழிபாடுற்;
றுலகிலொ ராசைப் பாடற
நிலைபெறு ஞானத் தாலினி
யுனதடி யாரைச் சேர்வது மொருநாளே;
மருகனெ னாமற் சூழ்கொலை
கருதிய மாமப் பாதகன்
வரவிடு மாயப் பேய்முலை பருகாமுன்-
வருகரி யானைக் கோடவை
திருகிவி ளாவிற் காய்கனி
மதுகையில் வீழச் சாடிய விதமார்புட்;
பொருதிகல் சோரப் பாரிய
மருதிடை போயப் போதொரு
சகடுதை யாமற் போர்செய்து விளையாடி-
பொதுவியர் சேரிக் கேவளர்
புயன்மரு காவச் ராயுத
புரவதி பாபுத் தேவிர்கள் பெருமாளே.

---

(௯௫) சேவக-வீரனே. பூதர-மலைபோன்ற. முகுளம்-மலரிதழ். படீரம்-சந்தனம். கோமளம் - இளமை. காமுக-விடாயுள்ளவனே. பசுபதிபாச திரிபதார்த்தங்களின். தூய்வினை-பரிசுத்தத்தொழிற்றன்மையை. முதிய-பழைய. உணர்வினொர்-அறிவுடையா(ருடன்) ஆடி-விளையாடி. மருசன்-மருமகன். மாமப்பாதகன்-மாமனாகிய கஞ்சன். பேய்-பூதனையாகியதாய். பருசா-உண்டு. கரியானை-கரியாகிய குவலையாபீடமென்னும்யானை. கோடுஅவை-கொம்புகளை. விளாவில்-விளாமரத்தில். மதுகையில்-வீரத்தால். ஆர்-பொருந்திய. புள்-பறவையை. பாரிய-பருத்த. மருது-மருதமரம். சகடு-பண்டி. உதையா-உதைத்து. சேரிக்கு-இடைச்சேரியில். வச்ராயுதபுர அதிபா - இந்திரலோகத்துக்கரசானவனே. விளாமரமுதலியவைகளெல்லாம், கஞ்சனால் விடப்பட்ட ஒவ்வோரசுரர்கள்.

(௬௬) திடமுடை யசுரர் மணிமுடி சிதற
வயிறனை முடுகி விடுவோனே-
திரிபுர மதனை யொருநொடி யதனி
லெரியெழ நகைசெய் சிவன்வாழ்வே;
படவரை யதனை யுருவிட வெறியும்
அயின்முக முடைய வடிவேலா-
பசலைகொ டணையு மிளமுலை மகளிர்
படர்விழி யதனி லிடலாமோ
கடகரி முகமொ டிடவயி றுடைய
கணபதி பிறகு வருவோனே;
கனதன முடைய குறவர்கள் சிறுமி
கருணையொ டணையு மணிமார்பா-
அரவணை யுடைய வரிதிரு மருக
வவனியை முழுது முடையோனே-
யடியவர் வினையு மமரர்க டுயரு
மறமன முடைய பெருமாளே.

(௬௭) துள்ளுமத வேள்கைக் கணையாலே
தொல்லைநெடு நீலக் கடலாலே
மெள்ளவரு சோலைக் குயிலாலே
மெய்யுருகு மானைத் தழுவாயே
தெள்ளுதமிழ் சேரத் தெரிவோனே
செய்யகும ரேசத் திறலோனே
வள்ளல்தொழு ஞானக் கழலோனே
வள்ளிமண வாளப் பெருமாளே.

---

(௬௬) அயில்-வேல். எரி-அக்கினி. பட-இறக்க. வரை - கிரௌஞ்ச மலை, பசலை-பச்சைநிறம். படர்-துன்பம். இடல்-தள்ளுதல். கடம்-மதம். இட வயிறு-பெருவயிறு-சிறுமி. இளம்பெண். அவனி-பூமி. அற-கெட.

(௬௭) துள்ளும்-துடிக்கும். தொல்லை-பழைய. சேர-முழுவதும். திறலோன்-வலிமையுடையவன். வள்ளல்-கொடைத்தன்மையுடையசிவபிரான்.

(௬அ) கருப்பத் தூறிப் பிறவாதே
கனக்கப் பாடுற் றுழலாதே
திருப்பொற் பாதத் தநுபூதி
சிறக்கப் பாலித் தருள்வாயே
பரப்பற் றாருக் குரியோனே
பரத்தப் பாலுக் கணியோனே
திருக்கைச் சேவற் கொடியோனே
செகத்திற் சோதிப் பெருமாளே.

(௬௬) பட்டுப்ப டாத மதனாலும்
பக்கத்துண் மாதர் வசையாலுஞ்
சுட்டுச்சு டாத நிலவாலுந்
துக்கத்துள் வாடி யலைவேனோ
தட்டுப்ப டாத மயில்வீரா
தக்கத்ரி சூலி தருபாலா
மட்டுப்ப டாத பெரியோனே
மற்றொப்பி லாத பெருமாளே.

(௱) விடமென வயிலென வடுவென நடுவென
மிளிர்வன சுழல்விழி
வித்தைக் குப்பக ரொப்புச் சற்றிலை யென்றுபேசும்
விரகுடை வனிதைய ரணைமிசை யுருகிய
வெகுமுக கலவியி
லிச்சைப பட்டுயிர் தட்டுப் பட்டுமு ழன்றுவாடும்

* (௬அ) கரு-கருப்பத்தில். பத்து-பத்துமாதம். கனக்க-மிகுக்க. பாடு-துன்பம். அநுபூதி-கைவந்தபயன். பரப்பு-(விஷயங்களின்) விரிவு. பரத்து-பிரமத்தின். அப்பாலுக்கு-அப்புறமாயுள்ள இடத்துக்கு-அணியோன்-சமீபித்தவன்.

(௬௬) பட்டு-இறந்து. படாத- (இரதிதேவிவேண்டுதலால்அருவமாகி) இறவாமையடைந்த. சுட்டு-வெதுப்பி. சுடாத-சாம்பராக்காத. தட்டு - (யுத்தகளத்தில்) தடை. தக்கத்ரிசூலி-தக்கன் யாகத்திற்பிறந்த முக்கவர்ச்சூலத்தையுடைய உமாதேவி. மட்டு-அளவு. மற்றுஒப்பு - (தனக்குத்தானேசமானமாதலன்றிவேறு உவமானம்.

(௱) நடு-யமன். மிளிர்வன-விளங்குவனவாகி. வித்தை - மாயவித்தை. பகர்-சொல்லுகின்ற. பேசும்-பேசப்படும். விரகு-உபாயம். வெகுமுக-பலவித.

நடலையி லதின்மிக வழிபடு தமியனை
நமன்விடு திரளது [கி-
கட்டிச் சிக்கென வொக்கக் கைக்கொடு கொண்டுபோ

நடுகர கதில்விடு மளவினி லழகிய
நறைகமழ் திருவடி
முத்திக் குட்படு நித்யத் தத்துவம் வந்திடாதோ;

இடியென வதிர்குர னிசிசரர் குலபதி
யிருபது திரள்புய
மற்றப் பொற்றலை தத்தத் தொக்கொடு நஞ்சுவாளி-

யெரியெழ முடுகிய சிலையின ரழகிய
சிறுவினை புரிமகள்
பச்சைப் பட்சியின் கைப்பற் றிட்டிடு மிந்த்ரபோக;

வடவரை யிடிபட வளைகட றள்பட
மகவரை பொடிபட
மைக்கட் பெற்றிடு முக்ரக் கட்செவி வஞ்சசூரன்-

மணிமுடி சிதறிட வலகைகள் பலவுடன்
வலதுட னடமிட
முட்டிப் பொட்டெழ வெட்டிக் குத்திய தம்பிரானே.

---

தட்டுப்பட்டும்-வருத்தப்பட்டும். நடலையில்-பொய்யிருப்பிடத்தில். தமியனை. தனியனாகியவென்னை. திரள்-கூட்டம். சிக்கென-விரைவாக, ஒக்க-ஒருமிக்க-கைக்கொடு-கைப்பற்றி. நறை-மணம். நித்தியத்தத்துவம்-அழிவில்லாதநிலை. நிசிசரர்-இரவிற் சஞ்சரிப்பவராகிய இராக்ஷதர். பொற்றலை - பொன்மகுடந் தரித்ததலை. தொக்குஒடு-தோலினிடத்து. எரி-அக்கினி. சிலையினர்-வில்லையுடைய திருமாலின். சிறுவினை - சிறியதொழில்; அஃதாவது தினைப்புனங் காத்தல். மகள்-புத்திரியாகிய. பச்சைப்பட்சி-பசுங்கிளி. வள்ளிநாயகி. கைப்பற்றிட்டிடும்- கையைப்பிடிக்கும். இந்த்ரபோக - உயர்ந்தபோகத்தையுடையவனே. தளர்-தளர்ச்சி. மகவரை- இளையமலையாகிய கிரௌஞ்சகிரி. உக்ரம்-கொடுமை. கட்செவி-கண்ணே காதாகவுடைய ஆதிசேடன். வலதுஉடல்-வலிமையுடையதாகிய சரீரம். நடமிட-(உடற்குறையாய நின்று) கூத்தாட. பொட்டு-இரத்தத்துளி.

முற்றிற்று.



இவ்வரும்பதவுரை யெழுதியவர்,
மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,
☞ மு. ரா. அருணாசலக் கவிராயர்.

குமரன்றுணை.

## திருப்புகழருளிச்செய்த
# அருணகிரிநாதர் சரித்திரச்சுருக்கம்.

பிரமவிஷ்ணுக்க ளிருவரும் அகங்காரத்தால் முடியும் அடியுங்கண்டுவருவோமென்று சபதஞ்செய்து அன்னமும் பன்றியுமாகித்தேடி யறியப்படாத சிவபெருமான் அக்கினிப் பிழம்பாகி நின்ற திருவண்ணாமலை யென்னுந் திவ்ய க்ஷேத்திரத்திலே நீண்ட காலத்துக்குமுன் பட்டணத்துச் சுவாமிகள் துறவியாக வெழுந்தருளியிருக்கும் போது பூருவவினை வசத்தா லவ்வூரிலொரு கணிகைமாதைக் காதலித்து வெளிப்படுத்திய வீரியத்தை அமமாதுசிகாமணி கையினாலே வாங்கித் தேவாமுதத்தினு மினிமையாக வுண்டு மகிழ்ந்து, அன்றுமுதற் கருப்பமுற் றிருந்தனள்; அக் கருப்பத்திலே கந்தவுலகத்தி லிருந்த பொய்யாமொழிப் புலவர் முருகக்கடவுளைப் பாடமாட்டேனென்ற பாவநீங்குதற்காகப் புகுந்து பத்துமாதஞ்சென்றபின் புத்திரராகத் திருவவதாரஞ் செய்தனர்.

அப்புத்திரரை மாதாவும் மாதாவைப்பெற்ற பாட்டியும் தங்கள் தொழில் விருத்திக்கேற்ற பெண்மகவைப் பார்க்கினும் பெரும்பிரியம் வைத்து அருணகிரிநாதரெனப் பெயரிட்டு, அருமை பெருமையாக வளர்த்து வருவாராய் எவ்வெக்காலத்து எவ்வெச்சடங்கு செய்யவேண்டுமோ அவைகளை வழுவாமற் செய்து மனமகிழ்ச்சியுற்று ஐந்தாவதாண்டிலே வித்தியாரம்பமுஞ் செய்வித்தனர். பின்னர்ச் சிறிதுநாள் கழிந்தபின் அருணகிரிநாதருது மாதாவானவள் தன்னுடைய மூத்தபிள்ளையாகிய புத்திரியை நோக்கி யுன்னுடைய தம்பி தெய்வத்தன்மை யுடையவனாதலால் அவனுடைய மனம் திருப்தியாகும்படி நடந்து பாதுகாத்து வருவாயென்று சொல்லிவிட்டுத் தேகவியோக மாயினள்.

அவ்வாறே அருணகிரிநாதரை அவர் தமக்கையானவள் பாதுகாத்து வரும்போது அவர் கிரமப்படி யுபாத்தியாயர் சொல்வழி நடந்து கல்வியைக் கல்லாமற் பராமுகமாத்திரிந்து யௌவனப் பருவமடைந்து மிக்க விடபுருடராய் வேண்டியவாறு விலைமாதரைக் கலந்து காமமநுபவிப்பா ராயினர்.

இங்ஙன மநுபவித்தற்குக் கேட்கும்போ தெல்லாம் வேண்டுந் திரவியங்களைத் தமக்கையானவள் கொடுத்துத் தொன்றுதொட்டுத் தொகுத்து வைத்திருந்த திரவியங்களையு மிழந்து தன்னாலே யீட்டப்பட்ட திரவியத்தையு மப்போதப்போது கொடுத்துங் காணாமல் வீடுமுதலிய நிலங்களையும் விற்றுக் கொடுத்து மிகத் தரித்திரத்தை யடைந்தனள்; அவற்றை யொரு சிறிதுங் கவனியாமலும் தம்மிடத்திற் கொள்ளாதநோயெல்லாரங் குடிகொண்டிருப்பதை நோக்காமலும் தம்மைக்கண்டவ ரருவருப்பதைக்கருதாமலும் அருணகிரிநாதர் தமது தமக்கையிடம் மீண்டு மீண்டு திரவியங் கேட்டனர். அவள் அருமைத் தம்பியே யினி நீ யநுபவிக்கும் பொருளென்னைத் தவிர வேறொன்றில்லையே யென்ன செய்வதென மனம் வருந்தினின்றனள்.

அந்தவார்த்தை வேறு பொருள்பட அருணகிரிநாதர் செவிவழிச்சென்று மனத்தைப் புண்படுத்ததலும், அந்தோ இக் கொடுஞ்சொற் கேட்குமாறு அறிவை யிழந்துவிட்டோமே யிதென்ன பாதகமென நெஞ்சுநொந்து விலைமாதருடைய மயக்கத்தையும் வஞ்சகத்தையு மெண்ணி யெண்ணி யிதனைத் தீர்ப்பதற் கென்செய்வோ மென்று பெருங்கவலையுற்று மரணமடைய நிச்ச

'யித்து அருணைமாநகர்க் கோபுரத்தின்மேலேறிக் கீழே குதித்தனர். அப்போது நம்பெருமானாகிய குமாரக்கடவுள் ஒருசந்நியாசிபோலெதிரேயெழுந்தருளி வந்து நின்று யாதொருகேடும் வாராமற் காத்து அன்பனே பூருவ புண்ணியத்தாற் பிழைத்தாய் இனி யிக்கோபுரத்தில் வடபக்கத்திலே யிருக்குமிந்தக் குமாரக்கடவுளே யுன்னைக்காக்கும். நீ சடாக்ஷர மந்திரத்தை மறவாமற் செபஞ்செய்தா லெல்லாப் பாக்களும் பாட வல்லனாவாயென்று சொல்லி விபூதி தரித்துத் தம்மாற் சுட்டிக்காட்டிய திருவுருவத்திலே மறைந்தருளினர்.

உடனே யருணகிரிநாதரானந்த பரவசராய் எம்பெருமானுடைய கருணையிருந்தவாறென்னே யிங்ஙனமடிமை கொள்ளுதற்கேற்ற பத்தி யெள்ளளவுமென்னிடத்திலில்லையே யென்னை யறிமாமல் யான்செய்த தவம் யாதிருந்ததோவென்று நெஞ்ச நெக்குருகிச் சடாக்ஷரத்தைச் செபஞ்செய்தலும், கடன்மடை திறந்ததுபோலக் கனிந்த மதுரமுடைய செந்தமிழ் பாடும் வாக்குவரநம் குமாரக்கடவுளைப் பற்பல அற்புதச் சந்தப்பாக்களாற் பாடிக் கண்டவர் கேட்டவர் கண்களிப்பு மனக்களிப்புங் கொள்ளக் காலங்கழித்து வருவாராய் நம்மைக் காத்தருளிய கருதசுவாமியே கடவுளென்று கைகுவித்து வணங்கித் தமதுசரீரத்திலுள்ள நோயெல்லாநீங்கி யிளஞ்சூரியனைப்போலப் பிரகாசித்து முப்பத்தாறாயிரந் திரும்புகழும் முப்பத்திரண்டு புயவகுப்பும் பாடினர். அப்பாடல்களைக் கேட்டருளிய அவ் எம்பிரான் மயில்வாகனத்தி லெழுந்தருளிவந்து அருணகிரிநாதருக்குத் தரிசனங் கட்டளையிட்டுப் பிரணவப் பொருளை யுபதேசித்தனர்.

அப்போது அருணகிரிநாத ரஞ்சலிசெய்து ஆடிப்பாடிப் புளகாங்கிதராகி அப்பிரணவப் பொருள் முற்றுமுணர்ந்து மயில்விருத்தம், வேல்விருத்த முதலியவை பாடித் தோத்திரஞ்செய்து தலங்கடோறுஞ் சென்று குமாரக்கடவுளைத் தரிசித்துத் திருப்புகழ்பாடித் திருச்செந்தூரை யடைந்து தாம் பாடிய எல்லாப் பாடல்களையுஞ் சந்நிதானத்தின் முன்னர்ப் படித்தனர்; அப்பாடல்களைக் கேட்ட குமாரக்கடவுள் திருமுடியை யசைத்தனர். அப்போது அருணகிரிநாதர் சுவாமீயடியேன் பாடிய திருப்புகழைப் பாடமாகப் படித்தவர் அடியேன் பெற்ற பேற்றை யடையவேண்டுமென்று வரங்கேட்டனர்; அதற்குக் குமாரக்கடவுளொன்றுங் கூறாமையால் தமது கைவசமிருந்த திருப்புகழ் முழுவதையுஞ் சமுத்திரத்திலே வீசியெறிந்து வெளியே புறப்பட்டனர்.

அச்சமுத்திரம் உலகோபகாரமாக அலைகளாலே அவ்வேடுகளை யாங்காங்கு கரையிலொதுக்க அன்பர்கள் அவற்றைத்திரட்டி யெடுத்துச்சேர்த்துக்கிடைத்தமட்டுந் தொகுத்துவைத்துப் படித்து வருவாராயினர். திருப்புகழைச் சேமித்துத் தொகுத்துவைத்த இடந் திருச்செந்தூராதலால் அத்தலத்துக்குச் சிறப்பாகவும் பொதுவாகவுமுள்ள நூறுபாடல்கட்கு அரும்பதவுரையெழுதி யச்சிற்பதித்து வெளிப்படுத்தலாயிற்று. மேலே நிகழ்ந்த அருணகிரிநாதர் சரித்திரமுழுவதும் அவர் புராணத்தில் விரிவாகக்கண்டு கொள்க.



இங்ஙனம்,

ஶ்ரீ மு. ரா. அருணாசலக்கவிராயர்,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்.

குமரன்றுணை.

இராமநாதபுரம் சமஸ்தான வித்துவான் துவாத்ரிம் சதாவதானி

சரவணப்பெருமாள் கவிராயரவர்களியற்றிய

# கந்தவருக்கச் சந்தவெண்பா.

## பாயிரம்.

திருக்கச்சந் தத்தையன்பர் சேரவொட்டா வேண்மேல்
வருக்கச்சந் தத்தைவெண்பா வாழ்த்த—இருக்குநெஞ்சி
லந்தா வளவதனத் தன்பா னவர்பரவத்
தந்தா வளவதனத் தன்.

## நூல்.

அங்கசனம் பாலுமருந் தாய்க்குமட்டு மாமங்கைக்
கங்கசனம் பாலுமருந் தாய்க்குமட்டுஞ்—சங்கையுண்டா
கொஞ்சவளை யாவுருந்த கொஞ்சுகுயி லால்வருந்தி
யஞ்சவளை யாள்கடம்பை யா. (க)

ஆரம்பார் நீறுன தையா கருப்புமுனி
யாரம்பார் நீக்குவர்நீ யல்லாம—லேரம்பன்
வந்தபின்பு வந்தகந்த வஞ்சியின்ப மிஞ்சநெஞ்சு
வந்தணைந்தி தம்புரிந்து வா. (உ)

---

### பாயிரம்.

திருக்கு-வஞ்சகம். அச்சம்-பயம். தத்து-துன்பம். வருக்கம்-(அகரமுதலாகிய முதன் மொழிக்காமெழுத்தின்) வரிசைப்படி. சந்தத்து-பல சந்தங்களையுடைய. ஐ-அழகிய. அம்-அழகான. தாவளம்-வெண்ணிறமுடைய. வது-வனிதையாகிய சரசுவதியினிடத்து. அனத்து - அன்னப்பறவையினிடத்து. அன்பானவர்-அன்புவைத்த பிரமதேவர் பரவு-துதிக்கின்ற. அ-அந்த. தந்தாவளவதனத்தன்-யானைமுக விநாயகர். தவளமென்பது எதுகைநோக்கித் தாவளமென முதனீண்டது.

### நூல்.

(க) அங்கு-அவ்விடத்து. அசனம்-சோறு. குமட்டுமா-அருவருக்குமா. அங்கசன்-மன்மதன். அரு-அருமையுடைய. சங்கை-சந்தேகம். வளை-வளையல். உருந்த-கழன்றன. அஞ்சு-பயப்படுகின்ற. கடம்பு-கடப்பமாலையுடைய.

(உ) ஆரம்-முத்துமாலை. கருப்புமுனி-கரும்புவில்லில். ஆர்-பொருந்திய. உவந்து-மகிழ்ந்து.

இக்குவலை யம்புகழு மேரகா காமன்வளைத்
திக்குவலை யம்புதொட்டா லென்செய்யு—நெக்குளந்து
வண்டுநொந்த வஞ்சிகஞ்ச மங்கைசெங்கை பங்கயங்கண்
வண்டுகெண்டை யம்புகொண்ட மான். (௩)

ஈரம் பனந்தமத னெய்தான்மெய் தான்மடந்தை
யீரம் பனந்தமணி யேயுமிழை—சோருமிடை
போ லுமங்கை மார்பிலென்று போர்புரிந்த சூரைவென்ற
வேலிலங்கு பாணிமுன்சொல் வீர். (௪)

உள்ளமுத லைப்பறிப்போர்க் குள்ளமுத லேயானை
யுள்ளமுத லைப்பகைதீர்த் தோன்மருகா—தெள்ளமுத
முக்கனிச ருக்கரைமொ ழிக்கிணைவி ழிக்கணைகொ
ளிக்கனிர திக்கதிக மே. (௫)

ஊடலைத்தான் கண்டாரு முள்ளமத னம்பான்மார்
பூடலைத்தான் கண்டா ருரையணங்கு—வாடுமந்தோ
நித்தமுரு கையதனி நித்யகும ரையகுக
சித்தமுரு கையவருள் செய். (௬)

என்னவரு மந்தணியா ரின்னமுரு கேசரென்மே
லென்னவரு மந்தநங்கை யென்னுடனே—சொன்னவுரை

---

(௩) குவலையம்-பூமி. ஏரகா-திருவேரக மென்னுந் தலத்திலெழுந்தருளி யிருப்பவனே. இக்கு-கரும்புவில்லில். வல்ஐயம்பு-வலிய ஐந்து புட்பபாணம். செய்யும்-செய்வள். நெக்கு - நெகிழ்ந்து. உளம்-மனம். பங்கயம் - தாமரைமல (ராகவும்). கண்-கண்களானவை. அம்பு-பாண(மாகவும்).

(௪) ஈர் - பிளக்கின்ற. மடந்தையீர்-பெண்களே. அம்பல்-பழிமொழி. நந்த-மிக. மணியேயும்-அழகு பொருந்தும். இழை-நூல். சூர்-சூரன். பாணி-கையையுடைய முருகக்கடவுள்.

(௫) உள்ள-இருக்கின்ற. முதலை-மூலமாகிய ஆணவமலத்தை. பறிப்போர்க்கு - கெடுக்கின்ற ஞானிகட்கு. உள்ளமுதலே - மனத்தின்கண் முதற்பொருளாயுள்ளவனே. உள்ள-நினைக்க. இக்கனி-இந்தப்பெண். கனி, இடைகுறைந்து நின்ற சொல்.

(௬) ஊடலை-ஊடல்செய் திருத்தலை. தான்-தானே. கண்டு-பார்த்து. உள்ளம் மதன்-மனத்தின்கட்டோன்று மன்மதன். அலைத்தான்-வருத்தப்படுத்தினன். கண்டு-கண்கண்டு. ஆர்-நிறைந்த. உரை-சொல்லையுடைய. வாடும்-வாடுவள். முருகைய-முருகையனே. உருகு-உருகுவாயாக. ஐய-ஐயனே.

கண்டிருக்க நெஞ்சிலைக்க ணந்தரிக்கி லன்றிலொத்த
வொண்டொடிக்கு ளந்தரிக்கு மோ. (௭)

ஏலஞ் சுமந்தகுழற் கின்பங் கொடுக்கவரா
யேலஞ் சுமந்தமதிக் கென்செய்யும்—பாலஞ்சு
மந்தவிழி யெந்தைதிரு மைந்தவொரு செந்திவரு
கந்தவுமை தந்தமுரு கா. (௮)

ஐயமிலை மாலைவந்தா லாவியிலை யென்பதற்கே
யையமிலை மாலைவந்தா லாவிறவா—துய்யுமென்று
சந்தனஞ்சொ லுங்குகன்ற ருங்கடம்பை யென்றுளம்ப
சந்தனங்க சந்தெங்கை தான். (௯)

ஒப்பனையு மாவிரதிக் கொப்பாங் கலைபிரிமா
னொப்பனையு மாவிரதிக் குன்பரங்காண்—சிற்பரஞ்
சோதிசத்தி பாலவற்பர் சூரவெற்பின் வீறுடைத்த
வாதிசத்தி பாணிவைத்த வா. (௰)

ஓமறையைக் கேட்கமல ரோனுமெம்பி ரானுமறி
யோமறைவா யென்ன வுணர்த்தியவா—சோமன்முக

(௭) என்ன-யாது. வருமம்-வாது. என்ன-என்று. அருமந்த-அருமருந்தன்ன. கணம்-க்ஷணநேரம். தரிக்கில்-(இங்கே வராமலங்கே) தரித்திருந்தால். அன்றில் ஒத்த - (க்ஷணநேரமும் பிரிதலைச் சகியாமலிறக்கின்ற) அன்றிற் பறவையைப்போன்ற. என்ன-என்னெனன்பதன் மரூஉ.

(௮) ஏலம்-ஏலத்தின் வாசனை. குழற்கு-கூந்தலையுடையவளுக்கு. அஞ்சும்-பயப்படுவேன். அந்தமதிக்கு-அந்தச் சந்திரனுக்கு. பாலம்-நெற்றி.

(௯) மாலை-மாலைக்காலம். வந்து-(தென்றற்) காற்று. ஆவி-உயிர். ஐய-ஐயனே. மிலை-(நீ) அணிந்த. மாலை-கடப்பமாலை. ஆ-ஆச்சரியமாக. சந்து-தூது. தரும்-கொடுப்பான். உளம்-(ஆகுபெயர்) நெஞ்சு. பசந்தது-பசலைநிறமடைந்தது. கசந்தது-கசப்படைந்தது. (ஆறென்றால்) எங்கை-என்றங்கை.

(௰) ஒப்பனையும் - அழகும். மா இரதிக்கு-பெருமையுடைய மன்மதன் மனைவிக்கு. ஒப்ப-சமானமாக. ஆவி-உயிர். ரதிக்கு-இனிமையுடைய இவளை. (காப்பது) உன்பரம்-உன்னுடைய பாரம். சத்தி-உமையம்மை. பால-மைந்தனே. அற்பர்சூர்- அற்பராகிய சூரர். அவெற்பு-அந்தக்கிரௌஞ்சமலை. வீறு-பெருமையை. சத்தி-வேல். பாணி-கை.

(௧௧) ஓம்-பிரணவமாகிய. மறையை-இரகசியார்த்தத்தை. அறியோம்-தெரியமாட்டோம். அறைவாய்-சொல்லியருளுவாய். சோமன்-சந்திரன். வஞ்சி-வஞ்சிக்கொடி. வஞ்சி-பெண். அபாஞ்சி-பொன்போல்வாள். சுகம்-கிளி.

மஞ்சுகுழல் வஞ்சியிடை வஞ்சியப ரஞ்சிமொழி
யஞ்சுகம ணைந்திவளெ யாள். (௰௧)

ஔவையலுக் கொன்பானை யாண்டான் மருகனித்த
மௌவையலுக் குந்தேற்றி யாரணங்கைத்—தெவ்வசுரர்
தானைவென்ற வாலகந்த சாமிசெஞ்சொ லாலுயர்ந்த
தேனைவென்ற மானைவந்து சேர். (௰௨)

கம்புகல லாமாது கண்டமுலை கொந்தளந்தே
கம்புகல லாமா கனகமென்றே—யம்புயத்தின்
சித்திரத்த னத்தனைச்சி றைப்படுத்தி யக்கரத்தை
யத்தனுக்கு ரைத்த முத்தையா. (௰௩)

காதமணைக் கும்பைக் கடம்பாசை வாகமத்தைக்
காதமணைக் கும்பைக் கழுவேற்று—நாதமுல்லை
தந்தமிளம் பெண்கொடிநின் றஞ்சமகிழ்ந் தின்பரசந்
தந்ததனம் பந்ததரந் தா. (௰௪)

கிண்ணத்த னத்தைநின்கைக் கிற்றுமதி போலுகிராற்
கிண்ணத்த னத்தைநிகர்க் கின்றகண்டம்—வண்ணநடை
யாரநம்பி னுரையன்பி னுளவந்த சாமிகந்த
மாரனம்பி னல்வருந்து மான். (௰௫)

---

(௰௨) ஔ-ஔகார வெழுத்துக்கு. அயலுக்கு-பக்கத்திலுள்ள வெழுத்தாகிய ஓகாரவெழுத்துக்கு. ஒன்பானை-ஒன்பதாவதெழுத்தாகிய ஆகாரவெழுத்தை-சிலேடையால். (ஆ)-பசுவை. ஆண்டான்-விஷ்ணு. ஔவை-தாய். அலுக்கும்-சலிப்பள். தானை - சேனை. ஓகாரத்துக்கு ஒன்பதாவதெழுத்து, இகரமாயிருத்தலால் இந்நூலாசிரியர் ஒகாரத்தைச் சேராமல் ஓகாரமுத லெண்ணினார்போலும்.

(௰௩) கம்பு கல் அல் ஆம்-சங்கு, மலை, இருள் ஆகும். கண்டம்-கழுத்து. கொந்தளம்-கூந்தல். தேகம்-சரீரம். புகலல்-சொல்லுதல். கனகம்-பொன். சித்திரத்து-அழகுடைய. அனத்தன்- அன்னவாகனத்தையுடைய பிரமன். அக்கரம்-பிரணவவெழுத்து.

(௰௪) பை-அழகிய. காது-மோதுகின்ற. அமணக்கும்பை - சமணர்கூட்டத்தை. முல்லை-முல்லை யரும்பு. தந்தம்-பல். தஞ்சம். பற்றுக்கோடு. அதரம்-இதழ்.

(௰௫) கை-கையிலுள்ள கிற்றுமதி-பிறைச்சந்திரன். உகிரால் நகத்தால். கிள்-கிள்ளுவாய். நத்து அனத்தை - சங்கினையும் அன்னப் பறவையினையும். கண்டம்-கழுத்து. ஆர-பொருந்த. கந்த-கந்தனே.

கீரனலங் காட்டுமொழிக் கின்ணமுலைப் பெண்ணரசு
கீரனலங் காரகவி கேட்டருள்வோய்—மாரனம்பான்
முத்தனந்த நீறுதென்று முத்தையன்க ளோதுமென்று
சித்தனந்த லாலுவந்து சேர். (௰௬)

கும்பனுக்குஞ் சங்கரனுக் குங்குருவே பிள்ளைமதிக்
கும்பனுக்குஞ் சங்குவரிக் குங்குயிலுக்—கும்பயந்தேன்
றென்றலுக்கு மைங்கணைச்சி லம்பனுக்கு மென்செயச்சொல்
லென்றலுக்கு மங்கைநித்த மே. (௰௭)

கூனன்மதி யங்கனலாய்க் கொப்புளித்தா லெப்படித்தா
னூனன்மதி யங்கனலாய் நாட்டுவேன்—றேனலரா
விண்டுரூரை யுண்டகாய மென்றமோது சென்றுதூது
பண்டுரூரை வென்றவேலர் பால். (௰௮)

கெண்டையஞ்சு மால்விழிகி ரீடையஞ்சு மாவீர
வெண்டையஞ்சு மாபுனைவான் வில்லியென்பான்-சண்டைசெய்ய
வந்துமாலை வந்திடாமுன் மங்கைகாமி கந்தசாமி
வந்துமாலை தந்துமேவு வாய். (௰௯)

கேசமஞ்சம் பாமிருதோள் கெண்டைவிழி நங்கைநின்பா
னேசமஞ்சம் பானமரை நீக்குவாய்—வாசமலர்க்

---

(௰௬) கீரநலம்-பாலினன்மை. கீரன்-நக்கிரனர். நீறுது-பொரிகின்றது. சித்தம்-மனம். நந்தலால்-கெட்டிருத்தலால். நகரம் னகரத்தொடு திரிபுநோக்கி வேற்றுமையின்றி வருதல் காண்க. மேலுமுண்டு. நீறுகின்ற தென்பது, நீறு தெனவந்தது.

(௰௭) கும்பன்-அகத்தியமுனிவர். பனுக்கும்-தெளிக்கும். உவரி-கடல். சிலம்பன்-மன்மதன். என்செய-யாதுசெய்வேன். அலுக்கும்-சலிப்பன்.

(௰௮) கூனல்மதி - வளைந்தசந்திரன். அங்கு-அவ்விடத்து. அனலாய்-(தன்கிரணத்தை) அக்கினியாக. நன்மதி-நல்ல அறிவை. அங்கநலாய்-சரீரத்தின் நன்மையுடையவளே; அழகுடையவளே யென்றபடி. நாட்டுவேன் - (தளரவிடாது) நிலைநிறுத்துவேன். இண்டுரூரை - (ஆகுபெயர்கள்) இண்டின் முள், சூரைமுள். உண்ட-பட்ட. காயம்-சரீரம். (ஆனது)|சூரை-சூரரை.

(௰௯) மால்விழி-மயக்கத்தைத்தருகின்ற கண்ணையுடையவள். கிரீடை-கலவிக்கு. அஞ்சுமா-பயப்படுவாளா. வெண்டையம் - காலிலணியுமோர் விருதாகிய ஆபரணம். சுமா-அடிக்கடி. வில்லி-(கருப்பு) வில்லையுடைய மன்மதன். வந்து-தெற்றற்காற்று. மாலை-மாலைக்காலம்.

(உ௰) கேசம்-கூந்தல். அம்பு-மூங்கில். தோள்-புயம். நேசம்-அன்புடையவள். அஞ்சு அம்பான்-பஞ்சபாணத்தையுடைய மன்மதன். அமரை-சண்டை

காமன்மாய ஞாதிதேவர் காணொணாத சாமிநாத
காமன்மாம ஞாதிதேசி கா. (உ௰)

கைக்குமா பாவிரசங் கண்டுவிட மாமடநங்
கைக்குமா பாவிநெஞ்சங் கல்லாமா—லைக்குமா
னஞ்சியேகு ழந்தைவேல னன்பைநாடு மென்றுகூடும்
வஞ்சியேகு சந்துமோதி வா. (உக)

கொண்டலுக்குந்தண்டலைக்குங்கொந்தளமொக்கும்பெணுன்மால்
கொண்டலுக்குந் தண்டலைக்கும் பிட்டனுப்பும்—கொண்டுவந்த
விந்தமுத்தங் கொங்கைவைத்தங் கெங்குசித்தங் தங்கிநிற்குங்
கந்தமுத்தந் தந்துநித்தங் கா. (உஉ)

கோகனகந் தந்தங் குவளையாந் துண்டமிடை
கோகனகந் தந்தங் குவளையா—தேகமிவள்
கைக்குவமை யைப்புலவர் கற்றதிலை முத்தையசு
வைக்குமுத முத்துமுறு வல். (உ௩)

கௌவைக் கலைவாரிக் கங்குலியா னைக்கரவங்
கௌவைக் கலைமதிக்குக் கண்டுபிலாள்—வெவ்விடத்தை

---

யை. கா-கற்பகத்தினிடத்து. மன்-நிலைபெற்ற. மா-பெரிய. மன் - அரசனாகிய இந்திரன். மாமன்-மாமனாகிய. ஆதி - சிவபிரானுக்கு. தேசிகா - குருவாயுள்ளவனே.

(உக) கைக்குமா-கசக்குமா. கண்டு-கற்கண்டு. மாபாவி-பெரியபாவியாகியதலைவன். மாலைக்கு-மாலைக்காலத்துக்கு. மான்-மான்போன்ற(அந்நங்கை). கூடும்-(நம்மிடம்வந்து) சேர்வள். வஞ்சி-வஞ்சிக்கொடிபோல்பவளே. சந்தும்-தூதும். ஓதி-சொல்லி.

(உஉ) தண்டலை-சோலை. கொந்தளம்-கூந்தல். அனுக்கும்-வருந்துவள். தண்டலை-ஏவல்செய்பவளை. அங்குதண்டலைக்கும்பிட்டனுப்புமெனக்கூட்டுக.

(உ௩) கோகனகம்-தாமரை. தந்து-நூல். துண்டம்-முகம். கோ-கண். கனகந்தம்-மிக்கவாசனை. தேகம்-சரீரத்தில். தங்குவள்-தங்கப்படுவேள். சுவைமதுரமுள்ள. குமுதம்-செவ்வாம்பல்போலும்வாயில். முறுவல்-பற்கள். முத்து-முத்துக்களாம்.

(உச) கௌவைக்கு-பழிச்சொல்லுக்கு. அலைவாரி-அலைகளையுடைய சமுத்திரத்துக்கு. கங்குல்-இருளாகிய. அரவம்-பாம்பால். கௌவு-பற்றப்படுகின்ற. ஐ-அழகிய. அயில்வான்-உண்பானாகிய சிவபிரான். வாரிய-அள்ளிக் கொள்ளப்

வாரியமு தாகவயில் வான்மதலே வேன்முதல்வ
வாரியமு தாகவலு மான். (௨௪)

## வெறிவிலக்கல்.

சலசமனந் தந்துநடுத் தையனடை கைகாச்
சலசமனந் தந்துணித்த தாற்போங்—கலகமதன்
மாலேவந்தா லேகுமைந்தாண் மாறுகந்தா நீதருந்தார்
மாலேவந்தா லேகுமென்றுண் மான். (௨௫)

சாமிநா தாமிதமா தாநினேக்கு மானினேக்கொஞ்
சாமிநா தாமிதமா தாசெய்யுங்—காமன்விடுங்
கஞ்சமல ராவளவு கண்டவரி யாவர்மன
வஞ்சமல ராருரைசெய் வார். (௨௬)

சித்தசனும் பான்மதியாற் றென்றலன்றி லான்மனமஞ்
சித்தசனம் பான்மணியாச் சேர்ந்தநங்கை—கைத்தசனஞ்
சோனேக்கந் தாரைக்கண் டுதுய்க்கும் பூதத்தின்
றனேக்கந் தாமுத்தந் தா. (௨௭)

சீதமதி யங்கவிகை தென்றலிர தஞ்சகிவஞ்
சீதமதி யங்கடலாஞ் சித்தசற்கிப்—போதவள

---

பட்ட. முதா-மகிழ்ச்சியுடையவனே,. பெருமகிழ்ச்சியுடையவனே யென்றபடி. கவலும்-கவலேயடையும். கவலுமான் கண் துயிலாளெனக் கூட்டுக.

(௨௫) சலசம்-தாமரை. அனம்-அன்னப்பறவை. தந்து-நூல். தையல்-பெண்ணின். நடு-இடை. காச்சல்-சுரநோய். அசம்-ஆடுகள். துணித்ததால்-வெட்டினதனல். போம்-போகுமா. மாலே-மாலேக்காலம். வந்தாலே-தென்றற் காற்றலே. குமைந்தாள்-(உள்ளம்) குழைந்தாள். தார்-தாமாகிய. முதலடியில் எதிர்மிர னிறைப்பொருள் கொள்க.

(௨௬) மா-பெரிய. தா-வருத்தத்தின். மிதம்-அளவை. நினேக்குமான்-எண்ணி மான்போன்றவள். நினே-உன்னே. கொஞ்சாமினு-கொஞ்சாதபெண்ணு. தாமிதம்-கோபம். மாதா-தாய். செய்யும்-செய்வள். கஞ்சமலரா-தாமரை மலராகிய பாணமோ. அலர்-பழிமொழி. ஆர்-எவர். தாமதமென்பது இறுதியடியில் தாமிதமென எதுகைநோக்கி வந்தது. யாவர் என்பதில் ரகரவொற் றைக் கெடுத்துத் தளேபிரித்துக்கொள்க. இங்ஙனமேலுங்கொள்க.

(௨௭) அஞ்சி-பயந்து. தசனம்-பற்கள். பால்-வெள்ளிய. மணியா-முத்தாக. அசனம்-சோற்றை. கைத்து-வெறுத்து. சோனேக்கம்-விடாமழைபெய்கின்ற மேகம்போலும். தாரை-நீரொழுக்கினேயுடைய. கண்-கண்களே. தாது-அதாக. உய்க்கும்-(உன்னிடம்) செலுத்துவள். தானே-படை.

வும்பொருதா லென்செயலா மொன்றியள்வே ளன்பர்குழா
நம்பொருதா ளெம்பெருமா னல். (உ௮)

சுந்தரிக்கு மாமன்பேர் சொல்லவொண்ணு மாமதிக்கஞ்
சுந்தரிக்கு மாமனடி தேயாம—லுய்ந்திருக்கக்
காமனைத்தன் பார்துதிக்குங் காரணக்கந் தாகடப்பந்
தாமனத்தன் பாலமுத்தந் தா. (உ௯)

சூதவம்பா நெஞ்சந் துளைத்தும் வராததென்ன
சூதவம்பார் வாலியசொ ரூபமங்தோ—மாதரசே
வேதனைய னடரும் வேலனுமை பாலனுடல்
வேதனைய னெரியும் வேள். (௩௰)

செந்தினக ராள்சோமன் றேவர்முத லோர்பரவச்
செந்தினக ராள்பரம தேசிகா—வந்தெதிரே
முத்தனைவ ளைத்தரிமு ழக்குமத னுக்குமதி
சித்தனைவ ளைத்தழுவல் செய். (௩௧)

சேரலன்பா லேவுந் திருமுகத்தான் மைந்தனெனைச்
சேரலன்பா லேன்கசக்கச் செய்வானீ—பாரென்றாள்

---

(உ௮) சீதம்-குளிர்ச்சி. கவிகை-குடை. சகிவஞ்சீ-சகியாகியபெண்ணே. தமது-தம்முடைய. இயம்-வாத்தியம். சித்தசர்க்கு-மன்மதனுக்கு. போது-புட்பபாணம். ஒன்றியள்-தனிமையாயுள்ளவள். வேள்-முருகக்கடவுளே. ஒரு-ஒப்பற்ற. எம்பெருமான்-எங்கள்தலைவனே. ஆல்-அசை.

(உ௯) சுந்தரிக்கு-சுந்தரமுடைய இரதிக்கு. மாமன்பேர் - மாமனாகிய விஷ்ணுவின் பேர்., அஃதாவது, மால். மதிக்கு-சந்திரனுக்கு. அஞ்சும்-பயப்படுவள். உய்ந்து-பிழைத்து. கா-காப்பாய். தாமன் - மாலையுடையவனே. அத்தன்-சிவபிரான். பால-மைந்தனே.

(௩௰) உடல்-சரீரம். வேதனையனால்-மூங்கிலுக்கு மகனைத் தோன்றிய சிவபிரானால். வேள்-மன்மதனுடைய. சூதஅம்பா-மாம்பூப்பாணமோ. வாலியசொரூபம்-இளமையுடையநல்லவடிவம். அவம்-வீணும். பார்-கண்பார்ப்பாயாக வேதனை-பிரமதேவனை. அனள்-அந்தக்காலம்.

(௩௧) தினகரான்-சூரியர்கள். சோமன்-சந்திரன். செந்தில் நகர் - திருச்செந்தூர். முத்து அனை-முத்துக்குத்தாயாகிய சங்கு. அரி-கடலாகிய முரசத்தை. அதி-மிக. சித்தம்-மனம். வைவளை -வருந்துகின்றவளை. தினகரர்களென்பது, தினகரனென மரூஉ மொழியாக வந்தது.

(௩௨) சேரலன்-மலையாளதேசத் தரசன்; சேரமான் பெருமாணயனார். திருமுகத்தான் - பாசுரமுடைய சோமசுந்தரக்கடவுள். சேரலன் - சேரமான்

நின்றாள்க டம்பா னெருங்காமை பெண்பாவி
யென்றாள்க டம்பா னினம். (கூஉ)

சைவலங்கொண் டற்குழலாய் சாமிமலை யானமர
சைவலங்கொண் டற்குவரச் சாற்றுவா—யுய்வகையாக்
கந்தர்ப்ப னம்புதொடு கண்டிப்பை யுஞ்சொலியு
கந்தற்ப மன்றுகல கம். (கூகூ)

சொல்வளஞ்சேர் செந்திற் சுவாமிநா தாகுறையேன்
சொல்வளஞ்சே லென்றுநீ தோய்ந்திருந்தால்—நல்லறத்தைக்
காதுவரை நந்தவொரு காலமிலெ றிந்தமுரு
காதுவரை நந்தன்மரு கா. (கூச)

சோதிக்கு மாலிமயத் தோகைக்குந் தோன்றன்மனஞ்
சோதிக்கு மாகிலென்ன சொல்வதென்றாள்—போதிக்க
வந்தனம்பி ளுகிதந்த மைந்தகந்த சாமிசிந்தை
வந்தனம்பி ளுல்வருந்து மான். (கூரு)

சௌரியங்கம் வீழவொரு தாளா லுதைத்துச்
சௌரியங்கைக் கொண்டான் றனையா—வுவரியொலி
தென்றலந்தா வந்ததந்தோ சிந்தைநொந்தாள் வஞ்சிகந்தா
மன்றலந்தார் தந்தணைந்தாள் வாய். (கூசு)

---

டான். என்-யாதுகாரணத்துக்கு. ச்ன்தாள்கள்-உன்னுடைய திருவடிகள். தம்பால்-தன்னிடத்து. நெருங்காமை-நெருங்கிவாராமையால். ஆள்-ஆண்டருள்.

(கூகூ) சைவலம்-பாசிக்கொத்து. கொண்டல்-மேகம். சாமிமலை - திருவேரகம். அரசை-இராசாவாகிய குமாரக்கடவுளை. வலங்கொண்டு-வலப்பிரதக்கணமாகச் சுற்றிவந்து. அற்கு-இராத்திரிக்கண். கந்தர்ப்பன்-மன்மதன். உகந்து-மகிழ்ந்து. மகிழ்ந்து உய்வகையாக வரச்சாற்றுவாயெனக் கூட்டுக.

(கூச) சொல்-நெல்; அல்லது கீர்த்தி. அஞ்சேல்-பயப்படாதே. காதுவரை. மோதுகின்ற அசுரரை. நந்த-கெட. துவரை-துவாரகை நகரையுடைய. நந்தன்-விஷ்ணு. நந்தன் என்பதில் னகரத்தைக்கெடுத்துத் தளைபிரித்துக்கொள்க. இங்ஙனமே தளை கெடவந்த இடத்து எல்லாவொற்றுக்களையுங் கெடுத்துக்கொள்க.

(கூரு) சோதி-சிவபிரான். மால்-பெருமை. தோகை - மயில்பேடின்றவுமாதேவி. தோன்றல்-புத்திரன். சோதிக்கும்-பரிசோதனைசெய்வான். போதிக்க-(பிரணவப்பொருளைநீ) உபதேசிக்க. வந்தனம்-வணக்கம். பிஞகி-சிவபெருமான். வந்தன்-மன்மதன்.

(கூசு) சௌரி-யமன். சௌரியம்-வீரம். தனையா-புத்திரனே. உவரி-கடல். அந்தா-(ஒரு குறிப்புமொழி) பக்கத்தில். மன்றல்-வாசனை.

ஞமலியஞ்சா யற்குறமா னண்பகரி வாக
னமலியஞ்சா யற்கடலா ஞற்செங்—கமலியஞ்சார்
மாதுகரு காதுபுனை மாலையருள் வாதுசெய
லேதுகரு வேல்கொளர சே. (கூஎ)

ஞாலமிசை யார்முடிகொ ணாவனந்த ஞற்சொலருங்
கோலமிசை யாழ்பூங் குயின்மொழியாள்—பாலருள்செய்
யன்பத்தி யொன்றின்முன மன்புற்ற கொண்டல்புகழ்
மின்பத்தி கொண்டவயில் வேள். (கூஅ)

ஞிமிறுகுமு றுஞ்சிலையா னீள்கச் சிடையங்
கமிறுகுமுன் காத்தல்கடன் கண்டா—யுமையருளு
முத்தையாக டப்பமாலை மொய்த்தமார்ப நிற்கலாம
லித்தையாவர் பக்கலோது வேள். (கூகூ)

ஞெண்டுமுழந் தாளனையா ணின்மயலி ஞன்முருகா
பண்டுமுழந் தாளனையாற் பாலித்தல்—கொண்டன்றோ
இன்றுமிருந் தாளவளை யென்றுமிருந் தாளிலரு
டுன்றுமிருந் தாரருள்செய் து. (சய)

தங்கநகங் கொங்கைவன சங்கணிளந் தந்தமுருந்
தங்கநக மங்கமிவள் சங்கமமின்—பங்கொடுக்கும்

---

(கூஎ) ஞமலி-மயில். கரிவாகன-யானைவாகனத்தையுடையவனே மலி-வலிய. இயம்-வாச்சியம். கடலாஞல் - கடலாகவுடைய மன்மதனல். செங்கமலி-செந்தாமரையிலுள்ள இலக்குமியின். அம்-அழகு. சார்-சேர்ந்த. மாது-பெண்ணுக்கு. கருகாது-வாடாது. கரு-கரிய.

(கூஅ) ஞாலம்-பூமியை. மிசை-மேல். முடி-தலையில். நாஅனந்தன்-இரண்டாயிர நாக்குடைய ஆதிசேடன். கோலம்-அழகு. இசை-பொருந்திய. அத்தி-யானை. கொண்டல்-மேகம்போன்றவிஷ்ணு. மின்பத்தி - பிரகாசிக்கின்ற அன்பு. அயில்-கூர்மை.

(கூகூ) ஞிமிறு-வண்டு. குமிறும்-ஒலிக்கும். சிலை-கரும்புவில். இடை அங்கம்-இடையாகிய சரீரத்தில். இத்தை-(விகாரமொழி) இதை.

(சய) ஞெண்டு-நண்டு. முழந்தாள்-முழங்கால். பண்டும்-முற்காலத்தும். உழந்தாள்-வருந்தினள். பாலித்தல்-இரக்ஷித்தல். இல் - (அவள்) கிருகத்தில். அருள்-கருணை. துன்றும்-நெருங்கும். இருந்தார்-பெருமை தங்கியமாலை. அருள்செய்து-கொடுத்து.

(சக) தங்கநகம்-மகாமேருமலை. இளந்தந்தம் - சிறுபற்கள். முருந்தம்-மயிலிறகினடிமுள். கநகம்-பொன். அங்கம் சரீரம். சங்கமம்-புணர்ச்சி. வேள்-

வேடனக்கார் தூதுரைப்பார் வேளெதிர்ப்பா னேலெனச்சோர்
வாடனைக்கா வாமைநட்பா மா. (சக)

தானத்தந் தாவளத்தைச் சக்கரவா கத்தைப்பொற்
றானத்தந் தாவளத்தைச் சாற்றலாம்—வானத்தார் [வா
மின்பொருவாள் கொங்கையைமால் விண்டுரையா ளென்செய்கு
ளன்பொருவாள் வந்தணைவே லா. (சஉ)

தித்தித் தகைத்தவெனச் செப்புவனீ யின்னமும
தித்தித் தகைத்தவெனத் தேர்ந்தணைவாய்—பத்தர்க்கா
யாமத்தோர் தூதிற்சே ரீசற்கோர் காதற்சேய்
வாமத்தோ ணீபத்தா மா. (சங)

தீங்கரும்பா முன்னஞ் சிலைபனவ னுவிவட்கோர்
தீங்கரும்பா முன்னஞ் சிறிதருள்வாய்—வெங்கொடிய
ஏதங் கொடுக்குநம னேரன்பர் பக்கலணு
காதங் கொடுக்குமுரு கா. (சச)

துவரதர மானேநீ சொல்லலர்மா ருரோ
துவரதரந் தோயிரும்பிற் சோர்வாக்—குவதுளத்தை
யென்றுள்வான் மின்போல்வா ளெங்கோமா னன்பாலே
சென்றுள்வா னின்றேநீ சேர். (சரு)

தாமுதலின் மூன்றைநிகர் சொன்னகையாய் தாமரைமேற்
றாமுதகம் போலுட் டுளங்குவதென்—சாமிவரா

---

முருகக்கடவுள். வேள்-மன்மதன். காவாமை-காவாதிருத்தல்.

(சஉ) தானம்-மதம். தந்தாவளம்-யானை. பொன்தானத்து-பொன்னிடத்து. அம்-அழகு. தா-வலிமையுடைய. வளத்தை-கிண்ணத்தை. (நிகர்) மின்-மின்னல். பொருவாள்-ஒப்பாகப்படாதவள். கொங்கையை-தனங்களுக்கு. மால்-ஆசை. விண்டு-(வாய்) திறந்து. ஒருவாள்-நீங்கமாட்டாள்.

(சங) தித்தித்த - மதுரப்பொருள்கள். கைத்தவென - கைப்புடைய வென்று. இத்தகைத்த-இக்தன்மையுடையன. பத்தர்-சுந்தரமூர்த்தி நாயனார். யாமம்-சாமம். சேய்-மைந்தனே. வாமம்-அழகு. நீபத்தாமா-கடப்பமாலையுடையவனே.

(சச) கரும்பா-கரும்பாக. முன்-நினைக்கப்பட்ட. சிலையன்-வில்லையுடையவனாகிய. தீங்கு-பொல்லாங்கு. அரும்பாமுன்னம்-தோன்றுதற்கு முன்னர். ஏதம்-துன்பம். ஒடுக்கும்-அடக்கும்.

(சரு) துவர் அதரம்-பவளம்போன்ற இதழையுடைய. அலர்-பழிமொழியை. மாதர்-(பிற) பெண்கள். ஓதுவர்-சொல்வர். அது - அப்படிச்சொல்வது. இரும்பின்-இரும்பைப்போல. சோர்வு-சோர்தலை. கோமான்-தலைவனே. அள்வான்-ஆளும்பொருட்டு. மானேநீசொல்லென்று ஒனக் கூட்டுக.

ரோவென்று ணீயவருக் கோதென்று ளோதியினிற்
காவென்று ணீயவளைக் கா. (௬௬)

தென்னவனு கத்தரையாள் சேவகன்மா லெற்களித்து
மென்னவனு கத்தணையா தென்றனத்தை—மின்னரசே
யெந்தக்கா லம்புணர்வா னென்றப்பா லுஞ்சொலிமின்
னெந்தக்கா லென்செயலென் னே. (௬௭)

தேங்குவளை யார்விழியா டம்பால் வெறுத்துமனந்
தேங்குவளை யார்வினவித் தேற்றுவா—ரோங்குமதத்
தந்தவரைக் குந்தவடற் சந்தவயிற் கொண்டகரக்
கந்தவரைத் திங்கணுதற் கா. (௬௮)

தைக்குஞ் சரத்தைவிழி சங்கங்கண் டங்கலசத்
தைக்குஞ் சரத்தைநிகர் தங்கக்கொங்—கைக்குப்
புகலார் முருகா புகலாய் துஙிவா
யகலார் மனதா லயா. (௬௯)

தொய்யில்வரை மென்முலையோ சொன்னவரை மின்னுவளைக்
கையில் வரைபதுமங் காமசரத்—தைய
வுடம்பா மெலிந்தா ளுடன்பா டுடன்சேர்
கடம்பா சிலம்பாகு கா. (௭௦)

---

(௬௬) து-துஎன்னு மெழுத்துக்கு. முதலின்-முதலெழுத்தாகிய., து-என்பதில். மூன்று-து, து, து; முத்து. நிகர்சொல்-சமானஞ்சொல்லுகின்ற. நகையாய்-பற்களையுடையவளே. தூம்-தாவுகின்ற. உதகம்-நீர். உள்-மனம். துளங்குவாள்-சலனப்படுவாள் ஓதியினில்-கூந்தலால். கா-சோலையை.

(௬௭) தென்னவன்-உக்கிரகுமாரபாண்டியன். சேவகன்-வீரன். என்-யாது. அகத்து-மார்பில். அணையாது-சேராதது. அப்பாலும்-மேன்மேலும். இமின்-இந்தப்பெண். என்செயல்-என்செய்கை.

(௬௮) தேங்குவளை-(தாற்பரியம்) கலங்குகின்றவளை. தந்தம்-(ஆகுபெயர்) யானைகளையுடைய. வரை-கிரௌஞ்சகிரியை. குந்த-(விகாரம்) குத்த. அடல்-வலிய. அரைத்திங்கள்-அர்த்தசந்திரன்போன்ற. நுதல்-நெற்றியையுடையவளை.

(௬௯) சரத்துஜ-பாணங்களின் அழகுடைய. கண்டம்-கழுத்து. குஞ்சரத்தை-யானையை. கொங்கைக்கு-தனத்தையுடையவளுக்கு.

(௭௦) வரை-எழுதப்பட்ட. சொன்னவரை-தங்கமலை. வரை-இரேகை. பதுமம்-தாமரை. பத்மரேகை யென்றபடி. காமர்-அழகிய. அசத்துஜய-ஆட்டுவாகனத்தையுடையனே. உடம்பா-சரீரமோ. உடன்பாடு-ஒற்றுமை.

தோகைக்கும் பாவிலங்குந் தோகைவரை யாய்மகட்கந்
தோகைக்கும் பாவிரசந் தோய்கருப்பம்—பாகைக்கும்
பாவில்விட்டு நாவிலிட்டும் பாவைசற்றும் வாய்திறப்பின்
றாவிவிட்டடங் கோய்முனாற்றின் றாள். (௫௧)

தௌவக் கரத்தயன்முன் னேழெட்டுத் தாமரைப்போ
தொவ்வக் கரத்தயல்சென் றேதென்று—ளெவ்வந்
தணித்தாள் கடப்பந் தனித்தார் கொடுத்தின்
பணித்தா மயிற்செங்கை யா. (௫௨)

நந்தலறுந் தொண்டருள நண்ணுவாய் பண்ணைதொறு
நந்தலறுஞ் சோலைவரை நாயகமே—யிந்தமின்னுன்
றஞ்சமுரு காதெரிய றந்திடென வோதியுமுன்
னெஞ்சமுரு காததென்ன நீ. (௫௩)

நாளவன சத்திருவே நங்கள்குகன் றைப்பூச
நாளவன சத்தில்வர நான்கண்டேன்—வேளெய்த
அம்பிணையா ரெண்புகல்வா ரஞ்சுகமே யென்றனள்சோர்
கொம்பிணையா வுய்ந்திடவே கும். (௫௪)

நிலவலையந் தாங்குமுடி நீளரவின் வாயூ
ணிலவலையந் தாங்குயிலே நெஞ்சை—யுலைமெழுகாச்

(௫௧) தோகை-மயில். கும்பு - கூட்டம். தோகை வரையாய் - மயூரகிரியாய்., குன்றக்குடியுடையவனே. கும்பாவில்-ஒருபாத்திரத்தில். நாவிலிட்டும்-நாவிலூற்றியும். திறப்பின்று - திறத்தலில்லாமல். ஓய்முன் - மூச்சடங்குமுன்னே.

(௫௨) தௌஅக்கரத்து- தௌவென்னுமெழுத்துக்கு. அயல்முன்-பக்கத்தில் கருதப்பட்ட. எட்டு-எட்டாவதெழுத்து; தீ. ஏழு-ஏழாவதெழுத்து; து. (தீது) தாமரைப்போது-தாமரைபூ. ஒவ்வு- பொருந்துகின்ற. அக்கர - அந்தக்கையையுடைய. தயல்-பெண். எவ்வம்-துன்பம். அணித்தாம்-சமீபமாக்கிடைக்கும். அயில்-வேல். தையல்-தயலெனப்போலியாயிற்று.

(௫௩) நந்தல்-கேடு. பண்ணை-வயல். நந்து-சங்குகள். சோலைவரை-சோலைமலை., பழமுதிர்சோலை யென்னுந்தலம். தெரியல்-மாலை.

(௫௪) நாளவனசம்-தண்டினையுடைய தாமரை. அவன் அசத்தில்-அவனுடைய ஆட்டுவாகனத்தில். எண்-தொகை. கொம்பு-பூங்கொம்புபோல்வாள். இனையா-வருந்தாமல். உய்ந்திட-பிழைக்கும் பொருட்டு. ஏகும்-(அங்கே தூதாகச்) செல்லுங்கள்.

(௫௫) நிலவலையம்-வட்டமாகியபூமியை. ஊண்-உணவாகிய தென்றல். நிலவல்-விளங்குதல். ஐயம்-சந்தேகம். தாம்-அசை. ஐய-ஐயனே. அந்தோ-

செய்வதென்று ளையவுந்தோ தெய்வமென்றுண் மெய்புநொந்தா
ளுய்வதென்றுள் வைகடம்பா ரோய். (௫௫)

நீராஞ் சனமெடுத்து நின்றுட்கு லாப்போந்த
நீராஞ் சனநெருக்கி னேயமளித்—தீராமே
லின்னமரு வாதிருப்ப தென்னையலை வாரிவற்ற
மின்னமரும் வேலெடுத்த வேள். (௫௬)

நுண்டா திறைக்குமலர் வேலா நுவன்மதன்போ
ரண்டா திறைக்குரைப்பா ராரென்றுள்—விண்டோய்
மதிக்கா குயிற்கா மலைக்கா லினுக்கா
மதிக்கா யெதற்கிட வள். (௫௭)

நூதனமா பாலாநின் னேக்கருள்பெற் றார்க்குளிந்த
மாதனமா பாலாதன் வாய்வையா—ளாதனமா
வெங்கனற்கொ ழுந்துநீப மென்புயத்த ழுந்துமாகி
லங்கனற்கொ ளம்பைவேற லாம். (௫௮)

நெய்குழலாய் வேள்வரவு நேர்ந்திலுக்கும் வாயிலுக்கு
நெய்குழலாய் நான்றிரித னீதியோ—வுய்குவதென்
றென்றவளை யுந்துயர்கண் டிங்குமொடு விண்டனனன்
பொன்றவணை யும்புகழுண் டும். (௫௯)

நேர்வாளை வென்றவிழி நேரிழையை வாரிசமின்
னேர்வாளைப் போர்வேளை நீவிலக்கிச்—சேர்வாவென்

---

ஐயோ. ஆள்வை-ஆள்வாயாக. கடம்பரோய்-கடப்பமாலையுடையவனே.

(௫௬) நீராஞ்சனம்-ஆலத்தி. உலாப்போந்த-பவனிவந்த. ஆம்-ஆகின்ற. மின்-பிரகாசம். வேள்-குமாரக்கடவுளே.

(௫௭) தாது-மகரந்தத்தை. இறைக்கும்-சொட்டும். இறைக்கு-தலைவனாகிய வுனக்கு. மலைக்கால்-தென்றல். மதிக்காய்-(நீ) மதிக்கமாட்டாய்.

(௫௮) நூதனமா-புதிதா. பாலா-குமாரக்கடவுளே. மாது-பெண். ஆதனம் - இருப்பிடம். வெங்கனற்கொழுந்தா - கொடிய அக்கினிக் கொழுந்தா. நீபம்-கடப்பமாலை. மென்புயத்து-(இவள்) மெல்லிய தோள்களில். அம்-அழகிய. கனல்-கரும்பாகிய வில்லில். கன்னல்-கனலென நின்றது.

(௫௯) நெய்குழலாய் - நெய்பூசிய கூந்தலுடையவளே. நேர்ந்து-உடன்பட்டு. இல்-வீடு. நெய்குழலாய்-நெய்கின்றகுழல் போன்று. அவள்-அப்பெண். உம்மொடு-உம்முடன். ஒன்ற-பொருந்த. அணையும்-சேர்வீர்.

றத்தையய னுரைத்துமிதை யத்தனுவி ரக்கமிலே
முத்தையவி திற்றரும மோ. (௬௰)

நைவளங்காந் தாரமன நன்மொழிபா ணின்மயலா
னைவளங்காந் தாரமுத நாவிலிடா—ளுய்வ
தொருகா லுளதோ வுமையா ளருள்சேய்
முருகா வவடான் மொழி. (௬௧)

நொய்யம் பருப்பதமா நூறியவே லற்கலதங்
கையம்ப ருப்பதமா வார்க்குரைப்பான்—மெய்யன்பர்
கைத்தலங்கு வித்திறைஞ்சு கைக்கிரங்கு முத்தையன்செய்
வித்தலங்கு ரித்தெழும்பு மேல். (௬௨)

நோக்கஞ் சனங்கரைய நுண்டுளிசிந் தப்பகழி
தாக்கஞ் சனங்கரையார் தாந்தடுப்பா—ரேக்கஞ்
சகிக்கமுடி யாளோர் க்ஷணத்தி லணையாயே
லகிக்கமுடி யார்பால கா. (௬௩)

நௌவி யனையவிழி நங்கைகொண்ட நின்காமச்
செவ்வி யனையறிந்தாற் சீறுளோ—தெவ்வியலிற்
றானவரை போன்மேவு தானவரை நீறுடி
வானவரை யாள்வேல வா. (௬௪)

பந்தரும்பா வாய்ந்தமுலைப் பாலணிய வேலவனீ
பந்தரும்பா வாய்வழுத்திப் பாரென்று—நொந்தரும்பா

---

(௬௰) நேர்-கூர்மை. வாளை-வாளாயுதத்தை. வாரிசம்-தாமரை. போர்-சண்டையுடைய.

(௬௧) நைவளம், காந்தாரம்-ஒவ்வொரு பண்கள். அன-ஒத்த. அங்காந்து-வாய்திறந்து.

(௬௨) நொய்-நுண்பொடி. பருப்பதம்-மலை. ஆ-ஆக. நூறிய-கெடுத்த. ஐயம்பு-பஞ்சபாணம். அருப்பது-பிளப்பது. வித்து-(காமமாகிய) விதை. அல்-இராக்காலத்தில். அங்குரித்து-முளைத்து.

(௬௩) நோக்கு அஞ்சனம்-கண்களின்மை. துளி-கண்ணீர்த்துளி. தாக்கு-மோதுகின்ற அஞ்சுபகழி-ஐந்துபாணத்தையுடைய. அனங்கரை-மன்மதனை. அகி-பாம்பு. கம்-கங்கைநீர். முடியார்-தலையிலுள்ளார்.

(௬௪) நௌவி-மான். செவ்வி-ஒழுங்கு. தெவ்-பகை. தானவரை-மதத்தையுடைய மலை(யானை). தானவரை-அசுரரை. நீறுஆடி-சாம்பராக்கி.

(௬௫) அரும்பு-தாமரை யரும்பு. ஆ-ஆக. நீபம்-கடப்பமாலை. பாவாய்-

நின்றான்க ணீராறு நெஞ்சார வேமேவி
யின்றான்க ணீரா றனே. (௬௫)

பாலனங் கசப்பாவிப் பாவைகைக்கு தென்றுண்மால்
பாலனங் கசப்பாவி பாணத்தாற்—கோலகங்கை
பாலாகா வாதாநீ பாராபா ராதாரா
வேலாகா வாநோகா மே. (௬௬)

பிரமரமார் பூங்கடம்பா பேராழி யூடாம்
பிரமரமாஞ் சூர்வெல் பிரானே—சரமரமாங்
கண்ணினை யின்றுமேவு கன்னலோடு நின்றவேளை
யெண்ணிகாளை யென்றிடாம லே. (௬௭)

பீரம்ப டர்ந்தழகை பெய்முகில்போ லெய்புமதன்
ஈரம்ப டர்ந்தவினி யென்செய்வாள்—சீரங்க
சந்தா னுடம்பும்ப சந்தாள் சிவன்றந்த
மைந்தா வினங்கொஞ்ச மா. (௬௮)

புலவரையாள் கந்தாபூம் போதார் சினைவிண்
புலவரையார் தோகைப் பொருப்பா—நிலவரையா
ரஞ்சடையா னந்தனமே லன்பிலையே லுன்புயமார்
மஞ்சடையா ளஞ்செயலா மா. (௬௯)

---

பாவைபோல்பவளே. வழுத்தி-சொல்லி. அரும்பாநின்றான் - உண்டாகாநின்றான். கண்ணீராறனே கண்கள் பன்னிரண்டுடையவனே.

(௬௬) கசப்பா-கசப்பாக. மால்பாலன்-விஷ்ணுவின் மைந்தனாகிய. கங்கைபாலகா-பெண்ணிற் சிறந்த பார்வதிதேவி மைந்தனே. நீபாரா-கடப்பமாலையுடையவனே. பார்ஆதாரா-பூமிக்கு ஆதாரமாயுள்ளவனே. நோகாமே-நோகாமல். பாலகாவென்பது, எதுகைநோக்கிப் பாலாகாவென்றாயிற்று.

(௬௭) பிரமரம்-வண்டு. ஆழியூடு-கடலினடுவில். ஆம்பிரமரம்-மாமரம். கன்னல்-கரும்புவில்.

(௬௮) பீர்அம்-பசலையினழகு. ஈர்அம்பு-பிளக்கின்ற பாணங்கள். அடர்ந்த-நெருங்கின. சீரம்-பால். இனம்-இன்னமும்.

(௬௯) புலவர்-தேவர். சினை-மரக்கிளைகள். விண்புலவரை. ஆகாயத்தினிடம் வரையும். தோகைப்பொருப்பா-மயூரகிரியுடையவனே. நிலஅரை-அர்த்தசந்திரன். நந்தன-புத்திரனே. புயம்ஆர்-புயத்தைச்சேர்கின்ற. மஞ்சு-அழகிய. அடையாளம் - குறி. இது, குறிபிழைத்தகலைவனை நோக்கிப்பாங்கி கூறியது.

பூவாசு கந்தாவு போர்வேள் சிலைபூட்டும்
பூவாசு கந்தான் பொறுக்கலா—மாவர்சு
கந்தரநஞ் சம்புனையுங் கந்தரனங் கங்கைதருஞ்
சுந்தரமின் றன்புடனஞ் சும். (எ௰)

பெய்வளையா கம்பசப்பப் பெய்கணைவே ளேவிடிலென்
செய்வளையா கம்பமுறுந் தேகமுற்றுங்—கைவளையால்
வாசவனை மோலிசிதை வாகவிடு மாறமலர்
வாசவனை நீபமரு மா. (எக)

பேராத வனியற்கை பேரினுமுன் மாலிவட்குப்
பேராத வனியிலிப் பெண்மொழில்போல்—வாராது
மாவாக நின்றவனை வாதாடி வென்றருளு
மாவாக வின்றணைய வா. (எ௨)

பையவளைத் தான்சிலைவேள் பாணந் துளைத்ததுமார்
பையவளைத் தாங்கியொரு பஞ்சணைக்க—ணையவைத்து
நாஞேடி வாகாவெ ஞதாவெ ஞவோதின்
மாஞேடி வாதாகு மா. (எ௩)

பொய்யா தவளவளை போனதுவென் புத்தியினை
நையா தவளவளை நானுரைத்தென்—கையாத

---

(எ௰) சுசம்பூவா-இன்பம் உண்டாகாது. பூஆசுகம்-புட்பபாணம். பொறுக்கலாமா-தாங்கலாகுமா. வா-வருவாய். சு-நல்ல. கந்தரம்-கழுத்தில். கநதரன்-கங்கையைத்தரித்த சிவபிரான். சுந்தர - அழகுடையவனே. மின் - இப்பெண். அஞ்சும்-பயப்படுவள். பூவாசெனபதில் முற்றிறுதிதொக்கது.

(எக) பெய்வளை-அணியப்பட்ட வளையலையுடையவள். ஏ-பாணம். கம்பம்-நடுக்கம். வளை-சக்கரம். மோலி-கிரீடம். சிதைவு-அழிவு. மாற-உக்கிரகுமாரபாண்டியனே. நீபம்-கடப்பமாலை. வனை-அணிகின்ற. மருமா-மார்பையுடையவனே.

(எ௨) பேர்-பெரிய. மா-மாமரம். மாவாக-பெரிய தோள்களையுடையவனே.

(எ௩) ஓடி-ஓடிவந்து. வா-வருவாய். கா-காப்பாய். என்நாதா எனவோதின் என்னுடைய நாதனே என்று சொன்னால். இவாது-இந்தச்சண்டை.

(எச) தவளவளை-வெள்ளியவளையல். நையாது - சோர்ந்துகொள்ளாது. கையாத-கசவாத. நிம்பம்-வேப்பு. எது-எங்கிருக்கிறது. எனவே, அவர்தாற்

நிம்பமே துரைக்கிலென்று நெஞ்சுவா டுவட்குன்ன்பு
தம்பமே துணர்க்கடம்பு தா. (எ௪)

போதகங்கை கொண்டுரிந்துப் பூண்டார்க் குரைத்தமறைப்
போதகங்கை யீன்ற புதல்வருக—நாதகங்கை
பேறுதிரு மான்மருக வேழைமய லாலுதக
வாறுதிரு மால்விழியி ளுள். (எ௫)

பௌவமுர சோதைக்கும் பான்மதிக்கும் பாவைபடு
மெவ்வமுர சோதைக்கு மேவளவா—சைவசமை
யாசரிய சம்பந்த வாரமரு ளன்புந்த
நேசரித யந்தங்கு நீ. (எ௬)

மஞ்சம் பயிலாள் வனமுலைக்க ணீருகுத்தாண்
மஞ்சம் பயிலா வரைபெயலி—னெஞ்சந்
தரியா ளையிலாய் சரணு மவர்பான்
மரியா தையிதா மதி. (எ௭)

மாளுரைக் கும்பிட்டு வந்திக்குந் தூதுசெல்வான்
மாளுரைக் கும்பிட்டு வந்திக்குந்—தாளுள்ப

---

தபெண்க ளில்லை யென்பது கருத்து. தம்பம்-பற்றுக்கொடு. துணர்-பூங்கொத்து.

எ௫ போதகம்-யானையை. கைக்கொண்டு-கைப்பற்றி. மறைப்போத-வேதப்பொருளைப் போதித்தவனே. கங்கை-பருந்தினை. உதகஆறு. கண்ணீராகிய நதி-உதிரும். ஒழுகும்-மால் மயக்கத்தையுடைய. விழியிளுள்-கண்ணையுடையவள் ஆனாள்.

(எ௬) பௌவம்-கடலாகிய. முரசு ஒதைக்கும்-மன்மதன்முரசவாத்திய முழக்கத்துக்கும். எவ்வம்-துன்பம். உரசோ-தேய்த்தலோ. ஏவு அளவா-பாணத்தினளவா. அன்று-அதற்கு மேலுமாம். சமையாசரிய-சமயத்தின்குருவாகிய. ஆரம்-(உமது) மாலையை. உந்த-செலுத்த. நேசர்-அன்பாது. ஆசாரியவென்பது-ஆசரியவென்றாயிற்று.

(எ௭) மஞ்சம்-படுக்கையில் மஞ்சு. மேகம்-அம்பு-நீரை. அயிலா-வேலாக. வரைபெயலின்-மலையிற்பெய்தலைப்போல. முலைக்கண்-கொங்கையினிடத்து. தரியாது-தங்காது. சரண்ஆம்-அடைக்கலமாகிய. மதி-முன்னிலையசைச்சொல்.

(எ௮) தூதுசெல்வான்-தூதுக்குப்போம்பொருட்டு. வந்திக்கும்-வணங்குவள். மால்-பெருமை. ஆள்-அடிமையாக்கும். பதம்-பதவியை. புரிந்தார்-செ

தம்புரிந்தார் தந்தகந்தா சஞ்சலம்பார் நெஞ்சினங்கோ
வம்புரிந்தா லென்செயும்பா வை. (௭௮)

மின்னாளை யாகட்டு மென்முலையீர் வேட்கு ணர்த்து
மின்னாளை யாகட்டு மென்னாது—சொன்னாளைந்
நூறுதலை யாசுரனை நூறுதலை வேலவரு
ளாறுதலை யாறுதலை யாய். (௭௯)

மீனப் படுங்கண்மின்மால் விள்ளுதற்கென் பாலும்வெகு
மானப் படுங்கண் மலர்க்கடம்பா—வானப்
படுத்தகுடி லத்தா னளித்தசுத நிற்கா
ரெடுத்தகு துரைப்பா ரினி. (௮0)

முதுகுதரப் பாலணைசூர் முற்றும்வென்றாய் வாய
முதுகுதரப் பாலனையான் மோகித்—ததுகுறையென்
றெண்கலக்க ணீருகுத்திங் கென்சொலுக்கும் வாயடைக்கும்
பெண்கலக்க மார்விலக்கும் பேர். (௮௧)

மூடமனத் தானகல மோலிபுடைத் தானகலங்
கூடமனத் தானகலக் கொங்கைசெங்கை—கூடமயில்

---

ய்தவர். சஞ்சலம்-(இவள்படும)துன்பத்தை. இனம்-இன்னம். புரிந்தால்-விரு. ம்பினால். செயும்-செய்வள்.

(௭௯) ஐயா-ஐயனே. மின்னாள்-பெண்ணானவள். கட்டும்-கச்சிறுக்கும். ஆகட்டும்என்னாது. ஆகுகவென்று சொல்லாது இப்பொழுதே. உணர்த்து மின்-சொல்லுங்கள் (என்று). ஐந்நூறுதலை-ஆசுரனை. ஐந்நூறு தலையுடைய சிங்கமுகாசுரனை. நூறு - அழிக்கின்ற. தலை - முதன்மையாகிய. ஆறுதலை - சமாதானத்தை. ஆறுதலையாய் -ஆறுசிரசுடையவனே. அசுரனென்பது: ஆசுரனென நீண்டது.

[௮0) மீன்-மீனையும். அப்பு-பாணத்தையும். அடும்-கொல்லும். வெகு-மிகுந்த. மானப்படும்-வெட்கப்படுமிவள். கள்-தேன். வான் அப்பு - ஆகாயகங்கை. குடிலத்தான்-சடையையுடையசிவபிரான். சுத - மைந்தனே. அகுது - அஃது. இங்ஙனம் அஃது என்பது அகுது எனச் சிற்சில இடங்களிற் காரணம் பற்றி வரும்.

(௮௧) தர-(வாகனமாகத்தாங்குதற்குக்)கொடுக்க. பால்-பக்கத்தில். அணை-வந்த. சூர்-சூரன் குலத்தை. அமுது-பால். உகு-ஒழுகுகின்ற. தாம்-இளம் பருவம். எண்கலம்-எட்டுக்கலம். உகுத்து-சொரிந்து. வாய்அடைக்கும்-வாய் பேசவொட்டாமற் செய்கின்ற.

(௮௨) மூடமனத்தான்-அறிவின்மையுடைய மனத்தானாகிய இந்திரன். அகல-தோற்றோட - மோலி-கிரீடத்தில். அடித்தான் - (செண்டா) லடித்தவ

வாகனத்த னைக்கடப்ப வாகனைக்க ணத்தழைத்து
வாகனத்த னிக்குழற்பொன் மான். (அஉ)

மெல்லவருந் தென்றன்முலை மேற்பாய வேள்பகழி
மெல்லவருந் தென்றன் விரகத்தைச்—சொல்லவொரு
தூதுவந்து நீயிருந்த சூதறிந்தி லேனிருந்த
வேதறிந்து பேசுகந்த னே. (அ௩)

மேகலையும் பங்கயக்கை வெள்வளையுஞ் சோர்ந்துவிழ
மேகலையும் பங்கியுஞ்சோர் வேலையன்றி—யாகம்
பசக்குமே கண்டார் பழிக்குமே யுண்பால்
கசக்குமே கந்தாகு கா. (அ௪)

மையலையா ழிக்கும் வரைக்குமயில் கொண்டாற்கென்
மையலையா ழிக்குமொழி மானுரையென்—றையலையாள்
தூயகாத லன்பர்நாடு சோதிநாத வம்பராதி
நாயகா சிகண்டிவாக னா. (அ௫)

மொய்கஞ் சனங்க முனிந்தான் மருக கஞ்சங்
கய்கஞ்ச னங்கனங்கண் காவிமலர்—செய்கஞ்சங் [ங்குங்
கொங்கைபங்கந் தங்கமின்பைங் கொந்தளந்தண் கொண்டல்பொ
கங்குலங்கங் கந்தரஞ்சங் கம். (அ௬)

---

னுடைய. அகலம்-மார்பு. கூட-சேர. மன - நிலைபெற்றழுந்த. தான் - அவன். அகலக்கொங்கை. அடிபரந்த (என்) தனத்தில். வாகனை-தோளையுடையானை. வா-வருவாய். கனம்-மேகம்போன்ற. மான்-மான்போன்றவளே-

(அ௩) மெல்ல-மெள்ள. மெல்ல-தின்ன. வருந்து-வருத்தப்படுகின்ற. அ ஒரு அந்தஒப்பற்ற. தூது-தூதை. உவந்து-மகிழ்ந்து. இருந்தசூது-வாாமலிருந்தசூது. ஏது-காரணம்.

(அ௪) மேகலை-மேகலாபரணம். கலை-சேலை. பங்கி-புறமயிராகியகூந்தல். கண்டார்பழிக்குமே-பார்த்தவர் (கூறும்) வசைச்சொல்லுக்குமே.

(அ௫) மை-கரிய. ஆழி-கடல். அயில்-வேல். யாழ்-வீணையினிசை. மான்-மான்போன்றவளே. உரையென் - சொல்வாயென்கின்ற. காதலன்பர்-ஆசையையுடைய தொண்டர். சிகண்டி-மயில்.

(அ௬) மொய்-யுத்தத்தில். கஞ்சன்-மாமனுகிய கஞ்சன். முனிந்தான்-கோபித்தவிஷ்ணு. மருக-மருமகனே. கஞ்சம்-தாமரை. கஞ்சனம்-கண்ணடி. கனம்-கன்னம். கஞ்சம்-தாளம். கொந்தளம்-கூந்தல். கங்குல்-இருள். அங்கு அவ்விடத்து. கந்தரம்-கழுத்து.

மோகமங்கை யம்புயத்தின் மோதுமத வேள்கணைய
மோகமங்கை யம்புயத்தின் மொய்யயிலா—யாகமங்க
வாரணம்பி னுவமுந்து மாதிதந்த பாலமுக்கண்
வாரணம்பி னுதரிக்கு மா. (அஎ)

மௌவற் குழலாதார் மார்பை மதன்பகழி
கௌவற் குழலாதா கன்னெஞ்சா—ஔவ்வற்கு
ளில்லையா விரக்கநெஞ்சி லெள்ளிலோர் பிளப்புமின்று
சொல்லையா விருப்பகன்ற தோ. (அஅ)

யமனங் கசப்பாவி யான்முனி சேயுன்னே
யமனங் கசப்பா விருந்தாற்—சமனங்க
மின்றுதைத்தா ராவரெவ ரம்பிகைக்கோர் பாலமலர்
மின்றுதைத்தார் நீபபணி வேள். (அகூ)

யாவுந்தா னுமுருகை யாசண்மு காகாங்கே
யாவுந்தா னுமதவே ளெண்ணிலவா—யேவந்தோ
இப்படிக்கி ருப்பினெஞ்ச மெப்படிப்பி ழைக்கும்வஞ்சி
முப்படிக்கு ளொப்பிதுண்டு மோ. (கூ0)

யுதகந் தனித்துடையா யோவிலையோ வேலா
யுதகந் தனித்தவுண்மை யோதாய்—மதகந்தி

---

(அஎ) அமோகம்-அநேகம். அம்-அழகிய. கை அம்புயம் கைத்தாமரை. ஆரணம்-வேதம். பினு-பின்பக்கமாக. முக்கண்வாரணம்-மூன்றுகண்களையுடையயானைமுக விநாயகருக்கு. பினு-பின்வந்தவரே. தரிக்குமா-தாங்குவாளா.

(அஅ) மௌவல்-முல்லைமலரணிந்த. குழல்-கூந்தலையுடையாள். ஆ-வியப்பாகிய. கௌவற்கு-கடித்துப்பிடித்தலால். உழலாதா-வருந்தமாட்டாளா. ஒவ்வற்கு-சம்மதித்தற்கு. உள்-நினைப்பாய். ஓர்பிளப்பும்-ஒருபாதியும். இன்று-இன்றைத்தினம். ஐயா-ஐயனே.

(அகூ) அங்கச்சப்பாவி-மன்மதனுகியபாவியானவன். யமன்-நமன். யான்-நான். முனிசேய்-மிருகண்டுமுனிவர்பிள்ளையாகிய மார்க்கண்டன். நேயம்-அன்புடைய. கசப்பு-வெறுப்பு. சமன்-யமனுடைய. மின்-பிரகாசம். நீபமலர்துதைதார்-கடப்பமலர்நெருங்கியமாலை. வேள்-குமாரக்கடவுளே.

(கூ0) யாவும்-எல்லாம். உய்தானு-செலுத்தமாட்டானு. எண்ணிலவா-அளவுஇல்லாதனவாக. ஏவு-பாணம். இதுஒப்பு-இதைப்போல்.

(கூக) யுதகம் - இரண்டுபெண்களை. தனித்துஉடையாய் - தனிப்பட்டுவைத்துக் கொண்டிருக்கிருய். ஒஇலையோ - அவ்விருவரையும். நீங்குதலில்லையோ. கந்த-கந்தனே. நித்த-நித்தியப்பொருளாயுள்ளவனே. மதகந்தி-மதவாச

கண்டதும்பி யொப்பவஞ்ச கஞ்செய்பெண்கள் சொற்குடைந்து
கண்டதும்பி நிற்குமங்கை கா. (௯௧)

பூகந் தனைமதன்செய் யுத்தத்தைச் சொல்லழைத்து
வாகந்த னையென்று வாடுகின்ற—னாகந்
தனைப்பார் கடம்பா சகிப்பாரு முண்டோ
நினைப்பாவ தென்கூறு நீ. (௯௨)

யோசனையா வின்னமென்னை யுன்னைவரச் சொல்லென்றை
யோசனையாச் சொன்ன துணராயா—வாசனையார்
நீபத்தா மாகருப்பு நீள்விற்கோ வான்மகட்கிவ்
வாபத்தா மாவருத்தி யாள். (௯௩)

யௌவனந்தா னன்றிமங்கை யாசைகொண்ட துன்மேனிச்
செவ்வனத் தானுமன்றோ சேவகா—பௌவனத்தார்
கையார் பரவுமுரு கையா வெனைநிகர
மெய்யார் பகர்வரினி மேல். (௯௪)

வள்ளிக் கொடிக்குமண வாளமதன் வார்சிலைக்கு
வள்ளிக் கொடிக்குமண வாளிதொடுந்—துள்ளிக்கொள்
வந்துவந்து பாயுமந்த மங்கையங்க நோகுமுன்பு
வந்துவந்து சேரிதங்க மா. (௯௫)

---

னையுடையது: அஃது: எழிலம்பாலைமரம். கண்ட - (அவ்வாசனையா) லறிந்த. தும்பி-யானை. ஒப்ப-போல. வஞ்சகம்-கேடு. கண்டதும்பி-விழிநீருரும்பி. யானை தன் மதநாற்றத்தையுடைய மரத்தைத் தன்விரோதியென்று மோதிக்கெடுக்கின்றதுபோல மாதரும் தமக்கு விரோதியெனக்கருதி யிவளுக்குக்கேடுசெய்வரென்பது கருத்து.

(௯௨) பூகம்-படைவகுப்பை. என்-யாது.

(௯௩) இன்னம்யோசனையா,—ஐயா,—சன்னையா - சாடையாக. நீபத்தாமா-கடம்பமாலையுடையவனே. கருப்பு-கரும்பு. கோவால் - மன்மதனுகிய தலைவனால்-வருத்தி-வாவழைத்து.

(௯௪) யௌவனத்தான்-இளமைப்பருவத்தால். அன்று-அல்ல. செவ்வனத்தானும்-சிவந்தநிறத்தாலும். சேவகா-வீரத்தையுடையவனே. பௌவனத்து-கடலிலுள்ளசங்கு.

(௯௫) வார்சிலைக்கு-நீண்டவில்லுக்காக. வள்-வளந்தங்கிய. இக்கு-கரும்பை. ஒடிக்கும்-முறித்துக்கொண்டுவருவான். தொடும்-தொடுவோன். வந்து-தென்றல். உவந்து-மகிழ்ந்து. இது-(சோர்ந்திருக்கின்ற) இது. அங்கமா-(உனக்கு) (தாற்பரியம்) ஒழுங்கா.

வாசவனத் தாமன் மருகா முருகாவிண்
வாசவனத் தாமரையான் வாழ்த்துகந்தா—ஈசனரு
ணங்கந்த பெண்கண்ட நந்தங்கை செங்கஞ்ச
மங்கந்த குந்தங்க மாம். (௯௬)

வித்தகரை யோர்மயினூர் வேலரையல் லாதுபா
வித்தகரை யோமால் விலக்குமா—சித்தமதிற்
சந்தேகந் தானுண்டோ சந்தேதென் றுளன்பா
வந்தேகந் தாவின்றுள் வாய். (௯௭)

வீரவசந் தன்னையம்பு மேனிதுளைப் பக்களைத்தா
ளாரவசந் தன்னையவட் காற்றுவார்—சோரவச
மாகுமரா மாலைவரா தாவெனுமா னியுணரா
யாகுமரா மாகலவா யா. (௯௮)

வெல்லம்பு கட்டிவரும் வேள்கசக்கச் செய்யாமல்
வெல்லம்பு கட்டி விடலாமா—சொல்லம்பு
கட்டுகுடி லப்பரமர் கட்புடையு தித்தருளி
எட்டுகுடி யுற்றகுக னே. (௯௯)

வேலா வலையம்புள் வெற்பசுரர் பொற்பழித்த
வேலா வலையம்பு மென்மலரான்—மாலா
வலைக்கண்டான் வம்பா வளைக்கின்றான் வெம்போர்
விலைக்கொண்டான் வண்டாட வே. (௱)

---

(௯௬) வனத்தாமன் - துளபமாலை யுடையவிஷ்ணு. கண்டம்-கழுத்து. நந்து-சங்கு. தரும்-தக்க.

(௯௭) வித்தகரை-சதுரப்பாடுடையவரை. பாவி-பாவியாகிய. தகர்-ஆடு. சந்து-தூது.

(௯௮) வசந்தன்-மன்மதன். அவசம்-சோர்வை. ஆற்றுவார்-தீர்ப்பவர். சோர-சோர்ந்திருக்க. (காரணம்) வசமா-விதிவசமா. மாலை-மாலைக்காலம். எனும்-என்றுசொல்லுவாள். மான்-மான்போன்றவள். குமர்-புணர்ச்சிக்கலப்பில்லாதிருத்தல். கலவாயா-சேரமாட்டாயா.

(௯௯) வெல்-வெல்லுகின்ற. அம்பு-புட்பபாணம். வெல்லம்-கருப்பஞ்சாறு. ஆமா-முடியுமா. அம்பு-ஆகாயகங்கையை. கட்டு-உள்ளடைக்கின்ற. குடிலம்-சடை. கட்புடை-கண்ணிடத்தில். எட்டுகுடி-ஒருதகஸ்தலம்.

(௱) வேலாவலையம்-கடல். புள்வெற்பு-கிரௌஞ்சமலை. வல்-வலிய. மால்-மயக்கமாகிய. ஆவலை-ஆசையை. விலை-வில்லை. வண்டுஆட-வண்டென் (சுயிறுசு) அசைய.

வைவாள் பொருந்தாரை மான்மதியை மன்மதனை
வைவாள் பொருந்தாரை மாதரென்று—நைவாள்பின்
கோவிப்பாண் முற்பிரிவு கோலிச்சோ பத்திலணு
காவிப்பா வைக்கருள்கு கா. (௱௧)

வெளவாலை யன்னமட வார்சிலர்போ லன்றனையே
வெளவாலை யன்னமொழி மாதர்நடை—யிவ்வாலை
நாவுகந்த வாளிவந்து சாடுமுன்பு நீமகிழ்ந்து
மேவுகந்து வாழிகந்த வேள். (௱௨)

வாழியயி ராணிபெற்ற வாரணமான் வள்ளிமயில்
வாழியயி லார்கைம் மலர்வாழி—வாழிபொற்றாள்
வாழிவாழி கோழிதோகை வாழிவாழி வாகுவீரர்
வாழிவாழி சோதிவேல வன். (௱௩)

---

(௱௧) வை-கூரிய. வாள்-வாளாயுதம். பொரும்-ஒத்த. தாரை-கண்ணையுடைய. மான்-மான்போன்றவள். பொருந்தார்-சம்மதிக்கமாட்டார். ஐமாதர்-ஐந்து (தாயராகிய) பெண்கள்; தாயரைவராவார்: பாராட்டுந்தாய், ஊட்டுந்தாய் முலைத்தாய், கைத்தாய், செவிலித்தாய் எனப்படுபவர். முன்-முன்னைநாளில். பிரிவு-பிரிதல். கோலி-வளைக்கப்பட்டு. சோபம்-அயர்ச்சி. அணுகா-நெருங்காத.

(௱௨) வெளவாலை-வெளவாற்பறவையை. அன்ன-அத்த. வெளவு-பற்றுகின்ற. ஆலை-கரும்பு. அன்னம்-அன்னப்பறவை. மாதர்-அழகிய. இவ்வாலை-இந்தஇளம்பருவப்பெண். கந்தவாளி-வாசனையுடையபுட்பபாணம். உகந்து-மகிழ்ந்து. வெளவாலின் குணமாவது: தலைகீழாய்நிற்றல்; இதுமுறைதவறுதலென்றபடி.

(௱௩) அயிராணி-இந்திராணி. வாரணமான்-தெய்வயானை. வாகுவீரர்-வீரவாகுதேவர்.

முற்றிற்று.



இவ் வரும்பதவுரை யெழுதியவர்,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்,

☞ மு. ரா. அருணாசலக் கவிராயர்.

குமரன்றுணை.

## கந்தவருக்கச் சந்தவெண்பாப் பாடிய

# சரவணப்பெருமாட் கவிராயர் சரித்திரம்.

பாண்டிநாட்டிலே பரம்பக்குடி யூருக்குத் தென்பக்கத்திலுள்ள முதுகுளத்தூரில் வேளாளர் குலத்திலே அருணுசலக் கவிராயருக்குப் புத்திரராயும் அட்டாவதானஞ் *சரவணப்பெருமாட் கவிராயருக்குப் பௌத்திரராயும் பிறந்த சற்புத்திரரென்பார் அச்சரவணப்பெருமாட் கவிராயருக்குப் பேரனென்பதற்கிையைய அவர் பேரையே தரித்துக் கொண்டு தமிழ்க்கல்வியை நிரம்பக் கற்று இராமநாதபுரம் சம்ஸ்தான வித்துவான்களுக்குள்ளே தாமுமொருவராய் விளங்கித் துவாத்திரிம் சதாவதானஞ் செய்தலாற் பெரும்புகழ்பெற்றுப் பற்பல சம்ஸ்தான அரசர்களும் மதிக்குமாறு கற்பனை சிலேடை யமகம் திரிபு முதலிய பற்பல பாடல்களுஞ் சந்தப்பாக்களும் அதி விரைவிலே மதுரமாகப் பாடுந்திறமையுற்றனராய் மதுரைச் சிலேடைவெண்பா, திருச்சுழியல் ஓரெழுத்தந்தாதி, கழுகுமலை யோரெழுத்தந்தாதி, மகரவந்தாதி, பனசைத்திரிபந்தாதி, கயற்கண்ணிமாலை, புவனேந்திரனம்மானை முதலிய நூல்கள் பாடிப் பிரபல வித்துவானாக இருந்தனர்.

இம்மட்டோ ஒவ்வொரு சமயங்களிலும் ஆங்காங்குப்பாடிய சில்லறைப்பாட்டுக்களும் பற்பல. அப்பாட்டுக்களும் அவைகளைப் பாடும்போது அப்பாடல்களைக் கேட்டு, ஜமீந்தார்களும் பிரபுக்களும் பேரானந்தமுற்று, அருமைபாராட்டி யுபசரித்த வைபவங்களுந் தனிச்செய்யுட் சிந்தாமணியிலே யெழுதப்பட்டுள்ளன. ஆங்குக் காண்பார் காண்க.

இங்ஙனநிகழுங் காலத்தில் கலியுக வரதராகிய குமாரக்கடவுண்மீது பத்திமேலீட்டாற் பலதுறை நயங்கள் செறியக் கந்தவருக்கச் சந்தவெண்பா வென்னும் நூற்றுமூன்று பாடலடங்கிய நூலைப் பாடி, அவ் எம்பிரான் றிருச்செவிசாத்தித் திருவருள் பெற்றனர்.

* இவர், திருவாவடுதுறை யாதீனம் திராவிடமா பாஷ்ய கர்த்தாகிய மாதவச் சிவஞானயோகிகளது மாணக்கருட் சிறந்த சோமசுந்தரம் பிள்ளை யவர்களைத் தமக்கு வித்தியாகுருவாகப் பெற்றவர்.

இந்நூலைக் கற்க ஆசைப்படாதவரில்லையென்பது யாவருக்குந்தெரிந்த விஷயமே. இவ் அருமை பெருமை நோக்கியே மதுரைப் புதுமண்டபம் புத்தகக்கடை மகா-௱-௱-ஸ்ரீ இ. ராம. குருசாமிக்கோனாரவர்கள் திருச்செந்தூர்ப் பிரபந்தத் திரட்டுடன் சேர்க்கவேண்டு மென்று பரோபகாரங்கருதி வேண்டிக்கொண்டபடியே அப்பிரபந்தத் திரட்டி னிறுதியிலே அரும்பதஉரை யெழுதிச் சேர்த்து இந்நூல் அச்சிடப் பெற்றிருக்கிறது.

இந்நூலாசிரியராகிய சரவணப்பெருமாட்கவிராயர் இற்றைக்குச் சற்றேறக்குறைய இருபத்தைந்து வருடங்களுக்குமுன்னர்ச் சிவபத மடைந்தனர்.

இங்ஙனம்,

 மு. ரா. அருணாசலக் கவிராயர்,

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

குமரன்றுணை.

# பகழிக்கூத்தர் அருளிச்செய்த

# திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமிழ்.

## அரும்பதவுரை.



### சிறப்புப்பாயிரம்.

(க) அந்தோ - அதிசய விரக்கச் சொல்; அஃதாவது: இந்நூலாசிரியர் வைணவராயிருந்தும் மற்றையரைப் போலாது முருகக்கடவுளைப் பாடினு ரென்பது. தேர்ப்பாகற்கு - அருச்சுனன்தேர்ச்சாரதியாகிய விஷ்ணுவுக்கு.

(உ) புரக்கும்-காக்கும்.

(ங) மரு-வாசனை. வண்டல்இடும்-மகளிர்விளையாடும் எக்கர்-மணல்மேடு. கம்பீரன் - செருக்குடையவன். குறும்-சிறிய. முட்டாது - முட்டுப்படாது. பொதுவற-தனக்கேசொந்தமாக.

### முதலாவது: காப்புப்பருவம்.

(க) பூசரம்-மலை. புருகூதன்-இந்திரன். ககனவெளி-ஆகாயவெளி. முகடு-உச்சி. புத்தேள்-சிவபிரான். குடக்கு-மேற்குத்திசையாகிய திருச்செந்தூர். பொகுட்டு-தாமரைக்கொட்டை. படைக்கு - சிருட்டிக்கு முதல் - ஆதியாகிய பிரகிருதிமாயை. படைக்கும்-படைக்கப்படும். ஆம்ஆறு-விருத்தியாகும்விதம். அளிக்கும்-காக்கும. ஆழி-சக்கராயுதம்.

(உ) குழவி-இளமையுடைய. உரகம்-பாம்பு. ஒழுகு-ஒழுங்காகவிருக்கின்ற. உரைகொடு-சொற்களால். உமிழ்-வெளிப்படுகின்ற. சலதி-கடல். விடவடவை - விடமாகிய அக்கினியை. கண்டமட்டு - கழுத்தளவும். மணியுடை-மணிகளையுடைய. பரிபுரம்-பாதச்சிலம்பு. முரல-ஒலிக்க. பவுரி - கூத்தின்வேறுபாடு. வரிசிலையென-விரிந்துசட்டியவில்லாக. முறுவல்-பற்கள். இருள்வனம் - இருணடைகாடுபோலுந் திரிபுரம். பூத்தவர்-உண்டாக்கியவர். சகளவடிவனர் - காசரணுடிகளோடு சேர்ந்தவுருவமுடையவர். இரசதபொதுவர் - வெள்ளியம்பலத்தை யுடையவர். யுகங்கள்-இரண்டு, இடவிய-அகலமுள்ள. இடறிய - வழுக்கப்பட்ட. இமசலம்-பனிநீர். இடிபடும்-இடியோசையுண்டாகும். முதிய - வயதுசென்ற. கமுது-பேய். மொய்ம்பனை-வலியுடையவனை. கடம் - மதம். வழுவையானை. கொண்கனை - நாயகனை. குரிசில்-பெருமையிற் சிறந்தோன்.

(ங) சந்ததம்-எப்போதும். பாசு-மழு. அகிலம்-எல்லாம். ஆதரம்-அன்பு. அகளம்-கள்ளமின்மை. அனுபூதி-உண்மை. அபினம்-பின்னமில்லாத. ஐ-அழகிய. பணபந்தி - படத்தின்வரிசை. கங்கணி - கங்கணத்தை யுடையவள் மறலி-யமன். ப்ரசண்டம்-உக்கிரம். முரி-வளைந்த. கொந்தளம்-கூந்தல். மணிமவுலி - இரத்நகிரீடம் மண்டலஞ்சொள்-பூமியிற் படிந்த. இறும் இறும் - ஒடியும்ஒடியும். மருங்கு - இடை. இரங்க-வருந்த முறுவலாடிய-புன்சிரிப்புச்செய்த. கோமளம்-அழகு. சது-நான்கு. பரிந்து - விரும்பி. அஞ்சல் என்றவை-அஞ்சற்கவென்று சொல்லுதல். உடைமை-பொருள். உடுமுகடு - நட்சத்திர மண்டலத்தினுச்சி. தோகை -மயில்வால். தோற்றம்-வெளிப்படுதல். அசபையில் - வெளிப்படாமலுள்ளே செபித்தலில். மனோகாம்-மகிழ்ச்சி. தரியலர்-பகைவர். திசிரர் - அசுரர். பறந்தலை- யுத்தகளம். பாடல் - பரணிப்பாட்டு. இந்திரை- இலக்குமி போன்ற. மோகனம் - புணர்ச்சி. தோட்டுஇதழ்-தோடாகிய இத

ழ். பொதிமுகை- பொதிந்த அரும்பு. விண்டு- விரிந்து. தருணம் - யௌவன ம்- ஆகனை - திருமேனி யுடையவனை. கோட்டகத்து - இமையமலையினிடத் து. சமரமோகனை - யுத்தத்தில் மகி ழ்ச்சி யுடையவனை. முளரிநாண்மலர் புரைசெம்பதமெனக்கூட்டுக.

(ச) முதியவள்-வயதுசென்றஔவையார். நிறுவிய - நிறுவினற்போன்ற. கடுநுகர்-விடத்தையுண்ட. விரகு-நுட்பம். பிடி-பெண்யானை போன்ற பார்வதி. பொற்பு-அழகு மலரணை-(சரவணப் பொய்கையி லுள்ள) தாமரைப்பீடம். பொதுவற- சொந்தமாக. பவளம்-பவளம்(ஆக). புகர்முகம்-புள்ளிகள் பொருந்திய யானைமுகம். நிறுத்தி-சிறக்கச்செய்து; சேட்டு. இருமை-இம்மை மறுமைப்பயன். மூரல்-ஒலிக்கின்ற. மதுகரம்-வண்டு. பெடை-பெட்டைவண்டு. முகை- அரும்பு. செச்சை-வெட்சிப்பூ அரமகள் - தெய்வயானை. இகலிய- விரோதித்த மழுப்பனை-இங்கித நயம்பேசுபவனை. பர-அன்னிய. இடு-இடப்பட்ட. விட்ட - புகுத்திய. ஒழுகி-சென்று நித்தல்-எப்போதும். புரக்க-காக்க.

(ரு) பருகிய- உண்ட. தவளமுளரி-வெண்டாமரைப்பூ. பரிபுரம்-காற்சிலம்பு. உவரி - கடல். முதுதிடர் - பழைய மேடு. எறி - வீசுகின்ற. சுழல் மாருதம்-சூறைக்காற்று. உதறு - வீசுகின்ற. கவர்-வெடிப்பு நிலம். சமடம்- ஆமை. கதறு - முழங்குகின்ற. அலைவாய்-திருச்செந்தூர்.

(சு) வரியும்-வரிந்து கட்டும். சடிலத்து-சடையில். மகுடராசி- கிரீடக்கூட்டங்கள். துறை-துறைக்கு. உதவு-கருணைசெய்யும் பரிய - பருத்த. கருப்புவில் மதுரவாளி தொடுத்தவரென்றது மன்மதனை போன்றவரென்றபடி.

(எ) வேதா முடித்தலை - பிரமாவின் [illegible]மணி[illegible]த (ஐந்தாவது) தலையை. முடிக்கும்-கெடுக்கும். சடாடவி யள்-சடைக்காட்டையுடையவள். மடங்கல்-சிங்கம். சரோருகம் - தாமரை. உளையும்-வருந்தும். திமிரம் - பாரமாகிய. தமரம்-பேரொலி. குண்டு அகழி- ஆழமாகிய கிடங்கு. சுவறி-நீர் வற்றி. புலோமசை-இந்திராணி. பெருமாள்- பெருமையையுடையவன்.

(அ) தாருக விநாசனி-தாரகாசுரனைக்கொன்றவள். கலையூர்தி - மான் வாகனத்தையுடையவள். பரசுதான் - மழுவாயுதந்தரித்தசிவபிரான். இடும்- கொடுக்கும். முடி- தலையில். புக்கு-புகுந்து. கடல் மகளிர்-நெய்தல் நிலப்பெண்கள். நித்திலம் - முத்து. சேவகன்- வீரமுடைய குமாரக்கடவுள்.

(கூ) வெள்ளம் - மிகுதியாக. திரை-அலை. புரவி-குதிரை. ஆழி - சக்கரம். வேதபாரகர்-வேதங்களைப் படிப்பிப்போராகிய பிராமணர். ஊழியின்- நெடுங்காலத்து. இருட்படலம்-இருட் கூட்டம். பதங்கர் - சூரியர். ஓதிமம்-அன்னப்பறவை. உட்குட - உள்ளே குடம்போன்ற. கூன் - வளைந்த. உமிழ-சொரிய. குருகு - நாரைப் பறவை. கடைசியர்-உழத்தியர். நுளைச்சியர்-நெய்தல் நிலப்பெண்கள்.

(ய) பொதுவில்-சபையில். ஒப்பித்த - ஒப்பும்படிசெய்த. புணரிதோய் நகர்- கடலடுத்த நகர்; திருச்செந்தூர். கேள்வர்-உரியவர். குருதி - இரத்தம். கொற்றம் - வெற்றி. சொற்கத்தில் - சொக்கைகளில். ஒத்த-பொருத்தமாகிய. விற்பத்தி- அறிவு. வாழ்நர்- வாழ்கின்றவர். வேணி-சடை. முத்து உத்தரீசர்-மேலான அங்கவஸ்திரமுடையவர். மவுனமோனம் - மவுனமாகிய மோனத்தில். பத்தி- அன்பு. கலாபர்- மயிலினிடத்துச் செலுத்துவோராது. மனையில்-கிருகத்தில் வைப்பு-வைத்தலை. முதுமை-பழமை. வேள்வி - யாகத்தில் ஊணர்- அவிப்பாகமாகியவுணவுடையவர். சற்பத்தின் ஊழி - கற்பாந்தத்திலுள்ள ஊழிக்காலத்துக்கு.

## இரண்டாவது: செங்கீரைப் பருவம்.

(க) காளகூடவிடம்- (இருபெயரொட்டு) நஞ்சு. பகுவாய்-பிளர்ந்தவாய். மாசுணம்- பாம்பு. உமிழ்ந்த - கக்கிய. வெம் - விருப்பம். மணிக் கற்றைக்கதிர்-இரத்நத்தின் திரண்டபிரகாசம். ஊழி-யுகாந்தகாலம். வேய்-மூங்கில். கங்காளர்-முழுவெலும் பணிந்த சிவபிரான். கடுப்ப-ஒப்ப. கவை - பிளவு. கவரி-எருமைகள். கதிர்வெயில்-சூரியகிரணம். முரிந்து - பின்னப்பட்டு; ஆடைபடர்ந்து. இரசதத்தகடு-வெள்ளித்தகடு. ஏரு - எருவாக. சாரலில் - மலைப்பக்கத்தில். திரையெறியும் - அலையை வீசும். அலைவாய் - கடலிடம்; திருச்செந்தூர்.

(உ) சுறை-விஷம். முள்-முள்ளைப்போலுங்கூரிய. எயிற்று-பற்களையுடைய. துத்தி-படப்பொறி. கட்செவி-கண்ணே காதாகப்பெற்ற. பஃறலை - பலதலை. காகோதரம்-ஆதிசேடனுகியபாம்பு. வடபூதரம் - மகாமேருமலை. மகரம்-மகரமீனை. குண்டுஅகழ் மிக்க ஆழம். சலராசி - கடல். சுறுக்செழ - வற்ற. பொறை-பொறுத்தல். பொதிரெறிய-ஒட்டைபட. உட்க-பயப்பட. பூ - அழகிய. புருகூதன் - இந்திரன். வெருவி-பயர்து. திறை-கப்பம்.

(ந) பொய்கை-திருப்பரங்குன்றத்திலுள்ள சரவணப்பொய்கை. கயல்-கெண்டைமீன். சேல் - கெண்டைமீன். அது-அப்பறவை. (இது) இந்த மீன். அதிசயமென-(சரவணப்பொய்கைக் கரையிலிருக்கிற பஞ்சாக்கரப்பாறையிற் சிவபூசை செய்துகொண்டிருந்த நக்கீரர் பூசையை விடுத்து) ஆச்சரியமென்று சொல்ல. பேழ்வாய்-பிழந்தவாய். கொண்டுபோய்-(அந்நக்கீரரைப் பூசைதவறிய குற்றத்திற்காகக்) கொண்டுசென்ற. கீழ்-அடிப்பக்கமாகியகுகை. இச்சரிதம் திருப்பரங்கிரிப்புராணத்திலே விரிவாகக்காணலாம்.

(ச) குறுமுகை - சிறிய அரும்பு. கறித்து-கடித்து. குதட்டும்-அதக்கும். புனிற்று- இளமையுடைய. குழ-இளமை. அவிழ்- விரிந்த. குரம்பு - கரை. மடல்-இலையாகிய. கதலி-வாழை. அற-கெட. பந்தர்இடு-சாலையாகச்செய்யப்பட்ட. சூல்அடிப்பலவு- பழமாகிய கருவைத் தூரிலேயுடைய பலாமரம். இடறி-தட்டப்பட்டு. பணிலம்-சங்கு. மகராழி - மகர மீனையுடைய கடல். பொருத-மோதப்பட்ட. குடுமி-உச்சிப்பூ. பதாகை-கொடி. எருமை அலையொடு பொருத எனக்கூட்டுக.

(ரு) வீறு ஆட-பெருமைபாராட்ட. கதிர்ப்புசர் - சூரியனுடைய நிறம். இலை தகட்டுவடிவம். டாகினிகள்-துர்க்கையேவற்பெண்கள். கவந்தம்-உடற்குறைப்பிணங்கள். மாறு ஆட - விரோதமாகக் குதிக்க. முது - பழைய. பகடு - எருமைக்கடா. பிடர்- பிடரி. மறலி-யமன். மன்றாட-(போவைவிட்டு விடுகவென்று) யாசித்துவரங்கேட்க. உடல்விழிக்குரிசில் - சரீரத்திற் கண்களையுடைய இந்திரன். மாகமுகடே-ஆகாயத்தினுச்சியில். பாறு ஆட-பருந்துகள் விளையாட. பரித்து-(கையிலே) தாங்கி. விந்தாடவி - மலைக்காட்டில் வசிக்கும். சேறு-குழம்பு. ஆட-தோய. சிறுமுறுவல்ஆடும் - புன்சிரிப்புச்செய்யும்.

(சு) சலராசி-கடல். வடபூதரம்-மேருமலை. ஊடாட-நடுவேயசைய. தகரம்-மயிர்ச்சாந்து. முருகு - வாசனை. சிகை-குடுமியில். தவளம்-வெண்மை. தாளவெயர்வு-முத்துப்போன்ற வேர்வைத்துளி. பங்காளி - பங்கையாள்கின்றஉமாதேவி. பண்டி-வயிறு. புழுதியாட-தூளிபடிய. சிகரம்-உச்சி.

(எ) சசி- இந்திராணி. இந்திரை-இலக்குமி. அந்தணன்-பிரமா. அஞ்சேல்-அஞ்சற்க. உந்து - செலுத்தப்பட்ட. வலம்புரி-வலம்புரிச்சங்கு. முன்றில்-முற்றம். முந்து-முற்பட்டு. ஊர்-

நகரத்திலுள்ள. நந்து - சங்கம். ஊரும்-ஊர்ந்து திரியும். குன்று - பொதிகைமலை. புரந்தவ - (உக்கிரகுமாரபாண்டியனையிருந்து) காத்தவனே. செங்கோ செங்கீரை - செங்கீரையாடியருளே யென்பதன்மரூஉ-மேலுமதுவே.

(௮) புளகிதம் - இங்கிதத்தை. மலை-அணிந்த. மறி- சுழலுகின்ற. மது-தேன். உரை-சொற்பொருள்களால். பொரு-தமக்குத்தாமே சமானமாகிய. உரை-சொல்வாய். எமர் - எம்மவர். உளது-உள்ளது; மெய்ம்மை. திடரெழ - மேடுபட. கண்சாய் - நித்திரை செய்கின்ற. கானல்-கழிக்கரை நிலத்தில். திருநகர்-திருச்செந்தூர். செருவினில்-யுத்தகளத்தில். தினகர - சூரியன்போன்றவனே.

(௯) உரைசெய்-சோத்திரஞ் செய்கின்ற. வரைசெய்-மலையையொத்த. எழுவர்-சத்தகன்னிகள். கழி-கழிநிலம். கலம்-மரக்கலம்; கப்பல். சார்பு-சார்பான இடம். வலைஞர் - வலையையுடைய பரவர். வளை-சங்கு.

(௰) குறுமுகை - சிற்றரும்பு விண்ட-விரிந்த. குடக்காய் -குடம்போன்றகாய். குணலை - ஓர்கூத்து. சோலை-சோலை (போல) அளவர்-நெய்தல் நிலமனிதர்கள். குழு-கூட்டம். விட்டு-நிறுத்தி. துறை-நீர்த்துறை. மணல் - மண(லில்) வண்டல் - நீர்ச்சுழி. வண்டானம் - நாரைப்பறவை. குரவு-குராமரம். எக்கரில்-மணல்மேட்டில். கானல்-கழிநிலத்தில். பரம்பில் - சமஞ்செய்த நிலத்தில். ஊர்-செலுத்துகின்ற. குரும்பை - தென்னம் பிஞ்சு. பொன்-அழகிய. நகிலர் - கொங்கையையுடைய சிறுபெண்கள். வைப்பு-இருப்பாகிய. நிழல்- ஒளி. மணிதுன்று - இரத்நங்கள் பதிந்து நெருங்குகின்ற. நெற்றியில்-திண்ணையில். மகுடம் இடறு - கிரீடங்களொன்றோடொன்றுதட்டுகின்ற. பூமியில் (ஆலயத்தின் முற்றமாகிய) நிலத்தில். வணிகரின் - வியாபாரிகளால். வந்த-கொண்டுவந்த. எறியும் (மாதருடலிற் கழற்றி விட்டெறியும்) ஆரவடம் - முத்துமாலையில். பூணும் பூணில்-(ஊடல்மாதரைச் சமாதானஞ்செய்து ஆடவ) ரணியும் ஆபரணத்தில். ஞெண்டு-நண்டு. முக்குளித்து-அமிழ்ந்தி. ஊறும்-நனையும். அளறு-சேற்றையுடைய. வித்து-விதைகளையுடைய. வித்தாரம்-அகலமுள்ள. (தாவு- (ஆகுபெயர்) தோட்டத்தில். முறுக-மிக. எறு-உயர்ந்த. ஆலை-கரும்பு ஆட்டுகிறயந்திரம். முடியை - தலையில். விளம்பி (மூதற்குறை) கள்ளை. முட்டாது - முட்டுப்பாடின்றி. கடைசி-மருத நிலப்பெண்கள். சாலியில் - நெற்பயிரில். பூகம் - கமுகமரம். முருகு-தேன். கொத்து - பூங்கொத்து. பித்திகைப்பீடம்-சுவர்த்தலங்களையுடைய ஆசனம். மறுகு-தெரு. முதல்வர்-திரிமூர்த்திகள். பான்மை-தன்மை. கைச்சால்-சிறியநீர்ச்சால். மடுவில்-தடாகத்தில். மேதி - எருமை. வம்பே-புதுமையாகவே. செறு-வயல். செறியுர்-செருங்கும். ஏரி-குளம். மண்டூகம் - தவளை. பானல் - நீலோற்பலமலரில். செருமி - இருமி. கற்பிளப்பு-கல்வெட்டிப்பு. புடையில்-குழியில். தமரம் - பேரொலி. விறைப்பு; வலிமை. எங்கேயும் - இவ்விடங்களிலன்றி (இன்னும்) எவ்விடத்தானும். கணம் - கூட்டம். பணிலம் - சங்கம். பட்டினம்-திருச்செந்தூர். திகிரி (சக்க)ரத்தையுடைய. தினகரர்அஞ்ச - சூரியர்கள் (ஒளியால்) பயப்பட. விட்புலம்-ஆகாயத்தினிடம். குவித்த-குவிக்கப்பட்ட. மவுலி-கிரீடங்களை. திறை-கப்பமாக. சேவக-வீரத்தையுடையவனே.

## மூன்றாவது: தாலப் பருவம்.

(க) அடரும்-நெருங்கும். நீடு - நீண்ட. அளகை அளகாபுரி; குபேரன் பட்டணம். நாதி - அரசன். ஈரொன் பதின்மர் - பதினெட்டு வகைச்சிவக ணங்கள். சுடர்-பிரகாசம். இருசுடர்-சூரியசந்திரர். எழுவர் - சத்தமாதர். படரும் - விரியும். பரிதி - சூரியனு டைய. பகிரண்டம் - பேரண்டத்தில். பழுமரம் ஆலமரம். நிமிரும்-உயரும். பாழிக்கை - பருத்த துதிக்கை. புகர்-புள்ளி. தந்தி-விநாயகராகியயானை.

(உ) கங்குல்-இரவில். பொருந்திய (தாற்பரியம்) மலர்ந்த. கழி - கழிநிலம். பழனம்-வயல். கவை-பிளவுபட்ட. அலவன் - நண்டு. புளினத்திடர் - மணல் மேடு. கவர் - வெடிப்புநிலம். துரவு-கிணறு. கொங்கு-வாசனை. குறுமுள்-சிறியமுள். குடக்காய்-குடம் போன்ற தாழங்காய். புயல் - மேகம். கொழுதும்-கிண்டும். செய்குன்று-விளையாட்டுக்காகச் செய்யப்பட்டமலை. திமிரதிவாகர - இருளுக்குச் சூரியன் போன்றவனே.

(ங) தாமம் - பூமாலை. கொழுதி-கிண்டி. சுருண்டு-வளைந்து. இருண்டு-கருகி. தமரம்-பேரொலி. கிடந்து-கிடக்கப்பட்டு. நெறித்த - நெறிப்பையுடைய. மருங்குல்-இடை. குடிவாங்க-குடியிருப்பில்லாமற் போக; இற்றுப் போக. குழையில்-காதில். வெருவி-பயந்து. கயல்-கெண்டைமீன். மறுக-சுழற்சியடைய. வெயில் - பிரகாசம். உடுத்து-சூழப்பட்டு. ககனம் - ஆகாய மண்டலத்தை. வடவெற்பென - மகா மேருமலை யென்று. தெய்வக்களிறு-தெய்வயானை.

(ச) உததி-கடல். படரும்-விரியும். பரியவரை - பெரியகோவர்த்தன மலை. பதறுமல் - நடுங்காமல். காம்பு-மூங்கிற்குழல். தொனி-ஓசையால். க தறும்-முழங்கும். தமரம் - பேரொலி. காளிந்தி-தூர்ந்தி. நிரை-பசுக்கூட்டம். முகை-அரும்பை. அடை-இலை. புனிற்றுக்கவரி - இளமையுடைய எருமைகள். நெரித்து-(விகாரம்) உடைந்து; கட்டுவிட்டு. அமுதம் - பால். பேட்டு எகினம் - பெட்டையன்னம். உடைக்குங்கவரி யெனக்கூட்டுக.

(ரு) மங்கலம்-சுபமாகிய. மங்கல நூல்-வாழ்த்துநூல். ஏனோர்-மற்றவர். வார் - கச்சு. ஊடுஆடார்தே - நடுவே அசையப்படாமல். கூடாது ஊடாரோ-(கேட்டவாங்கலைக் கொடாவிட்டால் உன்னைச்) சேராமல் ஊடல் செய்ய மாட்டாரோ. கொண்ட - நினைத்தல் செய்த. நீகோமான்ஆமா - (கொடாவிட்டால்நீ) தலைவனாகுமா. வான்நாடா - பெரிய பாண்டிநாட்டையுடையவனே. வாழ்-வாழ்க்கையுடைய. சங்கு-எனைச்சங்குகளும். வலம்புரி - வலம்புரிச்சங்குகளும். மங்கையர் - வள்ளி தெய்வயானையம்மை மார்.

(சு) (உன்னைத் தேடித்திரிதலால்) மரகதம்-பச்சைநிறம். வாகாய்-ஒழுங்காய்; சிறிது சிறிதாயென்றபடி. வார்-நீண்ட. வேர்-வேர்வை. சோராதோ-ஒழுகாதோ. காமலர் அணை-கைமலராகிய மெத்தையை. மடவார்-பெண்களாகிய நாங்கள். காணுதே-காணமலே. போமோ - போவோமோ. பொருமிய-விம்மிய. முலை-மூலைப்பால். புரவலர் - காப்பாளர். போதாய்-வருவாய். போதும்ஆம் - பூக்கள் உண்டாம். போவோமா என்றது; போமோவெனக் குறைந்து நின்றது. மடவார்என்னும் படர்க்கை, ஓரிடம்பிற விடந்தழுவலுமுளவே யென்னும் விதியால் தன்மையிலே வந்தது. இம் மடவாரானவர்-கைத்தாயர்.

(எ) கூரும்-மிகும். இ[illegible] போரை. இபல்- ([illegible]) [illegible] மையை. மேருவரைநாடு-மகாமேரு மலையையுடைய பாண்டி நாட்டில். வேலைபென - (இந்து) [illegible]மென்று.

மீட்டு-திரும்ப (வும் வந்து) வீழ்வார்-விரும்புவாராய். ஆரும்-உண்ணும். இரை-உணவு. தாரா-ஒருவித பறவை. மே-மேய்தல். கழி-உவர்நிலத்தை. நாவாய்-மரக்கலம்; கப்பல். அலைவாய்-திருச்செந்தூர். ஒரு பாண்டியன் மீனக்கொடியை மேருமலையிலே கட்டியரசாண்டு வந்ததனாலே பாண்டி நாட்டைமேரு மலைநாடென்றார்.

(அ) மின்புரை - மின்னலையொத்த. கலன் அணி-மற்றைக்கலன்களாகிய ஆபரணமும். மாறு-நீங்காத. வீறு-பெருமை. தொங்கல் - கடப்பமாலை. விரை-வாசனை. பொரு - பொருந்தும். புழுதிஅலம்பிய குஞ்சியும்-மாசு கழுவப்பட்ட குடுமியும். பண்டியும் - வயிறும். மெலியும்-வாடும். மேலே-(உன்)னிடத்தே. வீழ்வார் - விரும்புவார். தவழ்ந்திடல் - (ஓரிடத்திராமல்) தவழ்ந்துகொண்டு திரிந்தால். கண்கள்-கண்களிடத்து. படும்பிழைவிளையும் - உண்டாகுங் குற்றம்பெருகும்; அஃதாவது: கண்ணீர் பெருகுதல். ஏதேன் ஏகாது-(இவற்றில) ஏதேனும் நீங்கமாட்டாது. வரை - மலையிலுள்ள. கனம்-மேன்மை. பரியங்கம் - கட்டில். கண்வளர - நித்திரைசெய்ய. மணிநகை-அழகிய குறுஞ்சிரிப்பு. விரலுமுதங்கொண்டு-காற்பெருவிரலைச் சுவைத்து. சிறுவா - புத்திரனே. ஏதேனுமென்பதில்; உம் விகாரத்தாற்றொக்கது.

(க) இதழி - கொன்றை. திரிபதகை-கங்கை. அருணம்-சிவப்பு. சுழல்-சுற்றிவருகின்ற. குரவர்-மாதாபிதாக்கள். கோடாய் - கோணுதலில்லாதவனே. தாடாளா-முயற்சியுள்ளவனே. இரவலர்-யாசகர். யாமேயாமே - நாங்களே நாங்களே. அடிமை-தொண்டு. வீழ்வார்-விரும்புவாராகி. பரசமயகுலகலக - அன்னியசமயக்கூட்டத்தோடு போர்செய்கின்றவனே. பணிலம்-சங்கு. உமிழ்-கக்குகின்ற.

(ம) மால் கூர்வாய் - ஆசைப்படுவாய். கடம்-மதம். கரி - திக்குயானைகள். வீணுள்காணுது-பயனற்ற நாளையறியாமல். மின் - பிரகாசிக்கின்ற. பரை-ஒத்த. வேய்வார்-தரிப்பார். வீறுலே-(இப்) பெருமையாலே. நகை-சிரிப்பாகியமகிழ்ச்சி. சிறுதே - கோபியாதே. திறல்-வலிமை. விரகா - இச்சையுடையவனே. சோரர் - பகைவர். சங்குஅரி-விஷ்ணு. சங்கரி - உமாதேவி. சந்ததம்-எப்போதும். இயல் - தமிழ்.



## நான்காவது: சப்பாணிப்பருவம்.

(க) பாவரிய - புகழ்தற்கருமையாகிய. கலன்-ஆபரணம். வீறு-பெருமை. குழை-காது. மட்க-மழுங்க. [illegible]ந்து-சந்திரன் போன்ற. புண்டரம்-விபூதியின் முக்குறித்தொகுதி. வெயர்வு-வேர்வை. சிதைந்திடாமல் - அழியாமல். கழி-உப்பளம். கானல் - கடற்கரைச் சோலை. தாளம்-முத்தாகிய. சமரமுகம்-யுத்தகளத்தினிடத்தில். ரணவீர- (பகைவர்கட்குப்) புண் செய்யும் வீரனே. திமிராரி-இருளைக் கெடுப்பவனே. சப்பாணி - இரண்டு கையுங்கொட்டி

(உ) ஆவலங்கொட்ட-வாயால் தோத்திரஞ்செய்து விளையாட. தேவர் அரசு-இந்திரன். புரை-ஒத்த. எயிற்று-வக்கிரதந் தங்களையுடைய. சூர்-சூரன். துண்ணென - நடுக்கமாக. பறை யடிக்க - படபடப்புக் கொள்ள. தூரியம்-வாச்சியம். பண்டு - முற்காலத்தில். அரு- (சிவ) பிரானது. பெருங்கவிப புலமை - பெருமை தங்கிய (இறையனாகப் பொருட்) பாட்டின் பொருள். நீ சொன்னபடி - நீயருளிச்செய்தவிதம். (என்று) திண்டிமம் - தப்பட்டை மென்னும் ஒருவாச்சியம். நிசாசரர்-அசுரர். நெய்தலம்பறை-நெய்தல் நிலத்துவாச்சியம்; அஃது-சாப்பறை. வளை-சங்கு. தாளம் - முத்து. நகர்-திருச்செந்தூர். புலமை-ஆகுபெ

யாாய்ப் பொருளையுணர்த்தியது. கு-சாரியை.

(ரு) பௌவம்-உப்புடைய. எறி-அலைவீசுகின்ற. வேடுவன் - வேடன். பறவைக்கு - புறாவின் பொருட்டு. நிறை-துலாத்தட்டில். புக்க (தன்சதையையறுத்துக் கொடுத்துத்தானும்) புகுந்த. பார்த்திவன்-அரசனாகிய சிபிச்சக்கரவர்த்தி வழிவந்த. பாவையும்-பெண்ணாகிய மங்கையர்க்கரசியாரும். இபல் - தமிழறிவிற் சிறந்த. குலச்சிறையும்-குலச்சிறைநாயனாரும். பணித்தருள - (வரவேண்டுமென்று) சொல்லியழைக்க. தெவ்வர் - பகைவராகிய சமணர். எரி-அக்கினி. முதுகூனும் - முதுகு வளைவும். திருத்தி-திருத்தஞ் செய்து. ஒக்க - ஒருமிக்க. குடக்கு - மேற்கு. மூகர் - ஊமையர். கவுணியக்குழவி-கவுணியர் கோத்திரத்திற் பிறந்த பிள்ளையாகிய திருஞானசம்பந்த மூர்த்தியே.

(சு) கானவாரணம் - காட்டுக்கோழி. பந்தர் இடும் - பந்தல் செய்யும். முல்லைவேலி- முல்லைக் கொடியாகிய வேலி. பாயும் உள் - விரியும் உள்ளிடமாகிய முல்லை நிலத்தில். பணை-பருத்த. மருப்பு - கொம்புகளை யுடைய. ஏறு-இடபங்களை. தழுவியும் - தழுவி விளையாடியும். முடை-முடை நாற்றம். கொந்து - கொத்து ஆக. குத்து-(சன்மார்பிலே) மோத. குருந்து-குருந்தமரத்தை. ஒசித்தும - ஒடித்தும். கழைத்துண்டம்-மூங்கிற்றடியாலாகிய. கருவி - புல்லங்குழலி சைபால். அழைக்கும்- (பசுக்கூட்டங்களை) வரவழைக்கும். விரல்கொடு - விரலால். துளை - (அக்குழலின) துவாரத்தை. புதைத்தும்-மூடியும். சுருதி-இராகத்தினொலி. தெரிய-வெளிப்பட. விரல்-மூடியவிரலை. முறையில் விட்டும்-கிரமப்படி திறந்தும். தேனு - பசுக்கூட்டம். கவுட்குழி - கன்னத்தின் துவாரம். தந்தாவளம்-கஜேந்திரனாகிய யானை. புதைத்தும் விட்டும் அழைக்குந் திருமாலெனக்கூட்டுக.

(ஞ) கார்கொண்ட-மேகங்களாற் சூழப்பட்ட. பருகூதன்-இந்திரன். சிகரம் - உச்சி. கனகாசலம் - மகாமேரு மலை. சேர்வை-சேர்த்தல்; வைத்தல். பேழை - பெட்டி. புலால் - மாமிசம். பொழில்-உலகம். ஒர்-ஒரு. பொலிவு-பிரகாசம். கலாபம்-தோகை. கைவயாளி-குதிரை நடந்துபோம்வழி.

(கூ) கவளம் - வாயளவு கொண்ட வுணவையுண்கின்ற. மதவெற்பு - மதத்தையுடையமலை; யானை. நிலையுலகு-(அந்த யானைகள் எட்டுத் திசையினுந் தாங்கலால்) நிற்றலையுடைய பூமியிலுள்ளார். கடகபூண்-கங்கணமாகிய ஆபரணம். கட்டு-கட்டப்பட்ட. ஆணிமுத்து-முதன்மையான முத்து. குழுநகையெழுப்பி-புன் சிரிப்புச்செய்து. இடு - (ஒளியைச்) செய்கின்ற. பை - படம். உச்சி-நடுத்தலை வரையும். சூழிபாய் - கிடங்கு பாய்ந்து செல்கின்ற. உவளகம்-குளம். வெடியுற்று-விசைகொண்டெழுந்து. வரியலவன்-கீற்றுக்களையுடைய நண்டு. அளை - சேற்றின்குழி. நெட்ட-நீண்ட. சழி-உப்பளம். சருவிய- அணுகிய.

(எ) தமனியம் - பொன். அரைவடம் - அரைஞாணில் கட்டுவடம் - கட்டுக்கயிறு. கழல் - திருவடியில். மணியுமிழ்-இரத்நங்கள் பெய்யப்பட்ட. கடகப்பூண-கங்கணமாகிய ஆபரணம். தளர் நடையிட்டு - தடுமாற்ற மாசநடந்து. புரை - ஒத்த. வெயர் - வேர்வையை. தாமம் - கடம்பமாலை. முகைஅவிழ்-அரும்புவிரிகின்ற. சிகை-குடுமி. நுதல்-நெற்றியில். இளையவர்-சிறுவர். குரு-நிறம். மழவிடை - இளமையுடையஇடபம்போல்பவனே

(அ) தொடி-தோள்வளை. இரு-பெரிய; நீண்ட. சிகை-குடுமி. போதின்-பூவால். விரைசெறி - வாசனைநெருங்கிய. விபதர் - தேவர். அரைமணி - அரைஞாணிற் கோத்த சதங்கைமணி. உடைமணி-மேகலாபரணத்திற் கோத்தமணி. அத்தி- யானை. அர்பு - அன்பு. குரை - ஒலிக்கின்ற.

(கூ) தகட்டின் - தகட்டைப்போலும். கடவுள் - பிரமனே. இச்சக்கரத்தில்-இந்தப்பிரணவ அக்ஷரத்தின். உரை - பொருளை. சற்பால் - (நீ) படித்தவிதச்சால். பகுதி-பகுப்பின். அந்தத்தினை-முடிவை. வெறுத்து- (சரியாகச் சொல்லாமையால்) வெறுப்புற்று. அஞ்சத்து - அன்னப் பறவையினிடத்து பந்தப்பிறப்பு-பாசத்தையுடைய சனனம். பற்று-ஆதாரம். முண்டம் - மொட்டைத்தலை. சிறுத்தமுனி-குறுமுனி; அகத்தியமுனி. சந்தப்பொருப்பு-சந்தனசலம். துங்கம்-உயர்ச்சி.

(ய) துர்புரு - யாழ்வாசித்தலிற் சிறந்த சந்தருவரிலுயர்ந்தவர். மதுகரம்-வண்டு. தொங்கல்மாலிகை-தொங்குதலாகிய கடம்பமாலை.மல்-வலிய. பூதரத்து-மலைபோன்ற தோளில். அலம்பு-ஒலிக்கின்ற. மட்டாய்-அளவுக்களவாகி.

## ஐந்தாவது: சப்பாணிப் பருவம்.

(க) கத்தும்-முழங்கும். சாங்கம்-அலை. கடுஞ்சூல் - முதிர்ந்த கருப்பத்தால். உளைந்து - வருந்தி. வாலுகம் - வெண்மணல். கான்ற - கக்கிய. கடம்-மதம். விகடம் - உன்மத்தமுடைய. தடம்-மலைபோன்ற. பிறை-மூன்றாம்பிறைச் சந்திரன்போல. கூன்-வளைந்த. கொத்து-கூட்டம். சாலி-நெற்கதிர். கொண்டல்-மேகம். நித்திலம்-முத்து.

(உ) சமரம்-பேரொலி. வளை-சங்கு. மணி-அழகிய. வடி-கூரிய. கறை-கறுப்பு. மாசு-குற்றம். துளைக்கும்-துளைக்கப்படும். கழை-மூங்கில். இதழ்-வாய். பருகி-கிரகித்து. தூற்றும்-வெளியே சொரியும். திவலை-எச்சிற்றுளி (யாக). திளைக்கும்-நெருங்கும். கவனம் - வேகத்தையுடைய. சிறையிற் சிறுதூள்-சிறகுகளிற்பட்ட சிறுதூசி. கடைசியர்-உழத்தியர்.

(ங) கலைப்பால் - கலையின்பகுதி. போகம்-இன்பமாகிய(அக்கினிப்பொறிகளை. கனலி - அக்கினிதேவன். மலைப்பால்-இமயமலையின்பக்கம். மாட்டாமல்-மாட்டாமையால். அறுமடவார்-கார்த்திகைமுதலிய ஆறுபெண்கள். சூல்உளைந்து - கருப்பதால் வருந்தி. பெற்று - (கிடைக்கப்)பெற்று. பால்-பகுப்பு. பாசுகான்-மழுவாயுதத்தைத் தரித்த பெபிரான். குன்றில்-திருக்கயிலாசமலையில். கோலம்-(ஆகுபெயர்) திருவுருவம். பால்-பாலை (கொடுக்க).

(ச) படவு-ஒருவிதகைத்தோணி. கழி-உப்பளம். கானல் - கடற்கரைச்சோலை. கைதைப்பொதும்ப-தாழைப்பொந்து. சுரும்பு-வண்டு. பொகுட்டு-தாமரைக்கொட்டை. சாலடி-உழுப்படைச் சாலின்கீழ். மடல் - மட்டை. தழை - குழை. முது - பழைய. குாம்பை-வரப்பை. கவர் - வெடிப்புநிலம். குடம்-குடம்போன்ற. கூன்-வளைந்த.

(ரு) கதலிவனம்-வாழைச்சோலை. கதலிவனம்-சொடிக்கூட்டம். தேன்-மது. நிரை - வரிசை. தேன் - வண்டு. புயலும்-மேகமும். செறிந்த - நெருங்கிய. கனக-கல்மலையாலாகிய. எயிற்புடையே - மதிவின் பக்கத்தே கனக வெயில்-பொன்மயமாகிய சூரியகிரணங்கள். பரந்த-வியாபித்தன. பொதும்பர்-சோலை. மோதுஇமம்-மோதுகின்றபனி. புளினம்-மணல்மேடு. ஒதிமம்-அன்னப்பக்ஷி. கட்கடையார் - கடைக்கண்களையுடைய பெண்கள். போர்கட்கு - சணடைக்கு. அடியார் - திருவடிபொருந்திய. காதல் - ஆசையை. சீர்-சீர்த்தியை. முயலும்படி-முயன்றுசெய்யும்விதம்.

(சா) சுரர் - தேவர். கடம்பாடவி-கடம்பவனமாகிய மதுரை. பொருளும்-பொருளிலக்கணத்தையும். புகறி-சொல்வாய். புகலும்ஆறு - சொல்லும் விதம். திணை அஞ்சிரட்டி பொருள்-(ஐந்து) நிலங்களிலுமுள்ள புணர்தலாதிய பத்து உரிப் பொருள்களையு

டைய. பொருள் - அருத்தம். பனுவல்-பாட்டு. இறையோன் பொருட்டு-இறையனாகப் பொருளென்னு நூலுக்கு. பகர்ந்த - (உருத்திரசன்மரா யிருந்து) சொல்லிய.

(எ) சிந்துரமருப்பின் - யானைக்கொம்பின். சாவை - அற்பம்; சிறிதாகிய ஒருவித குற்றமுடையது. பணிலம்-சங்கு. கழை-மூங்கில். காடு-சாசாப்புள்ளதாகிய ஒரு குற்றமுடையது. உடுமுகட்டு - நட்சத்திரங்களை யுச்சியிலுடைய. புயல்-மேகம். உமிழும்-சொரியும். சருகல்-சருகதலாகிய குற்றமுடையது. மடல்-இதழ். திறந்து-கொடுக்கப்பட்டு. திருகல் - முறுகுதலாகிய குற்றமுடையது. படு-உண்டாகிய. குண்டுஅகழி-ஆழமாகிய கிடங்கு. பாவை - கடலினின்று. எற்றும் - வீசும். கொழிக்கும்-ஒதுக்கும். படியின்-பூமியிற் (படிந்து கிடக்கும்). சிறுமகார்-சிறுபிள்ளைகள். கொடு - கைப்பற்றிக்கொண்டு. பதி-திருச்செந்தூர். குழவி-பிள்ளைப்பருவமுடைய குமாரக்கடவுளே.

(அ) முற்றும் - முதிரும். குடவயிறு - குடம்போன்ற வயிற்றையுடைய. ஒண்-ஒளிபொருந்திய. முரண்-வலிய. பட-படவுகளையுடைய. முந்நீர் - கடல். திடர்-மணல்மேடு. பறவு - புறாக்கள். புறவு-(அப்)புறாக்கள். புளினவெற்பு-மணல் மேடாகியமலை. நிரைக்கும்-வரிசைப்படும். புள்இனம் - பறவைக் கூட்டம். மடல் - இதழை. அளிகள்-வண்டுகள். அலவன்-நண்டு. கொழிக்கும்-(முத்துக்களை) ஒதுக்கும். குருகு-நாரைப்பறவை பதி - திருச்செந்தூர். படவு, என்பதிலிறுதி யுகரங்கெட்டது. முந்நீரொன்றதில்-இடைநகரவொற்றுக்கெட்டது.

(கூ) அரவில்-ஆதிசேடனாகியபாம்பினிடத்து. குழிய-குழிபட. குண்டு-ஆழ(மாக). அகழ்-தோண்டுதல் படு-உண்டாகின்ற. கழை - மூங்கில். உததி-கடல். வட்டத்திரை-வளைந்தஅலை. சம்பராரி-மன்மதன். பிணித்த-கட்டிய. வில்-வில்லாகிய கரும்பு. உடைக்கும் - உடைத்து வெளிப்படும். துகிரில் - பவளம்போன்ற வாயில். தோகை-மயில்வால்.

(ய) இறுகல்....காடு-இவையனைத்து முத்துக்களின் குற்றமாம்: இவற்றினிலக்கணங்களை இரத்நப் பரீக்ஷைநூலில் விசாரித்தறிந்துகொள்க.

(யக) கோதி-கிண்டி. உடைந்து-தோற்று. துளியின்-நீர்த்துளிபோலும். கால்-சாலமும். வள்ளை - வளப்பத்தினழகுடைய. தொல்லை-முன்னமே. கயம்-வாவி. சேல் - மீனது. நயவேம்-விரும்பமாட்டோம் போதில்-பூவொடு. பூகம்பொருந்து - கமுகுபோலும். கந்தரத்தை - கழுத்தை. பொருவுறு-ஒவ்வாத. வலம்புரி-வலம்புரிச்சங்கின. ஆரம்-முத்து. பொன் - அழகிய. சோதி-ஒளியுடைய. வேய்-மூங்கில்.



## ஆறுவது: வாரானைப் பருவம்.

(க) மூரி - வலிமை. பகடு - ஆண். வரி-கீற்று. வாளை-வாளைமீன். சடை பின்னி - ஒன்றோடொன்றுசுற்றி. முடங்கும்-வளையும். சேரி - மள்ளரிருப்பிடம். குயம்-அரிவாள். குடில் - குடிசை; சிறுவீடு. வேரி-தேன். ஈற்றுளைந்து-கருவுயிர்த்து. உகுத்த-சொரிந்த. ஓதிமம்-அன்னம்.

(உ) பகடு - எருமைக்கடா. வைவைக்கோல். போக-மிக. குவை-குவியல். குடகாற்று-மேல்காற்று. பதடி-பதர். போல் - ஒப்பாகக் (குவித்து). எறியும் - வீசும். கடைசி - உழத்தியர். பிரித்த-நெல்லைவிட்டுப் பிரித்தெடுத்த. மள்ளர்-உழவர். உழத்தியர் என்பதில், அர்விகுதி குறைந்தது.

(௩) அழி - மோதிரம். செறிக்க-நெருக்கிச் சேர்ப்பதற்கு. திலதம்-பொட்டு. நுதல் - நெற்றியில். தீட்ட-எழுத; இட்ட நெறித்த - கையால் நெறித்து மென்மைப்படுத்திய. தள்ளி-நெருக்கி. நடை-நடத்தல்.

(௪) குழை-காது. மீது-மேல். சிறுதும்-சிறிதாயிருக்கும் திருந்தேன்-அணியமாட்டேன் மறுகும்-சுழலும். அலைவாய்க்கரை-கடலிடத்துள்ள கரையில்.

(௫) இரங்கி-வருந்தி. பாந்து-கிடந்த இடத்தில் கிடவாமல் வேறிடமெல்லாம சென்று. பண்டி - வயிறு. குழைந்து-வாடி. மணித்துவர் - அழகிய பவளம்போன்ற. புடைபெயர்ந்து-பக்கத்திற்றிரும்பி. குறுமூரல் - புன்சிரிப்பு.

(௬) விரை-வாசனை. கேதகை-தாழை. மடல்-பூ. குழவி-பிள்ளை. தேறல்-தேன். துயிற்றி-நித்திரைசெய்வித்து. குருகு - நாரைப்பறவை. சேவல்-ஆண். கூர்-கூரிய. அலகு-மூக்கு. பெட்பின்-ஆசையுடன்.

(௭) உடைந்து-தளர்ந்து. புளினம்-மணன்மேடு. கமடம் - ஆமை. குடக்கூன்-குடம்போலவளைந்த. பணிலம் - சங்கு. பேடை-பெட்டை. ஒரு-ஒப்பற்ற. சேவல்-ஆணாகிய. புறத்து-இடத்து. பிரசம்-தேன். கேதகைப்பொதும்பு - தாழைச்சோலை.

(௮) விண்டு-காற்றால். தடம் - தடாகம். குருகினம் - பறவைக் கூட்டம். வெருவியிரிய பயந்தோட. வெருண்டு-பயந்து. வெடிபோய் - தாவி. மீள-திரும்பிவர. மண்டூகம் - தவளை. வாளை-வாளை மீன். கழிக்கு-உப்பளத்தில். கழி-களர்நிலம். கானல் - கடற்கரைச் சோலை. கம்புள்-சம்பங்கோழி. துண்ணென-நடுக்கமாக. பார்ப்பை-குஞ்சுகளை. குலைக்கே-குலையினிடத்தே. குடக்கனி-குடம்போன்றபழங்களையுடைய. குழிக்கே-சுழியினிடத்தே.

(௯) பேறும்-பிரயோசனமும். பேராளா - கீர்த்தியையுடையவனே. பாரா-பார்த்து. பரிந்து-அன்புற்று.

(௰) புகலி-சீகாழியில். கவுணிய-கவுணியர் கோத்திரத்தில் திருஞானசம்பந்தமூர்த்தியாக வந்தவதரித்தவனே. சிலை-வில். பொரு-ஒத்த. குதிகொள-சிந்த. விகடம் - அழகுள்ளதாகிய. நிருதர்-அசுரர். குரு - நிறம். இரு-பெரிய. சிகை-குடுமி. குழை-காதில். பொர-மோத. மழவிடை-இளைய இடபம் போன்றவனே. வளை-சங்கு. உமிழ்-சொரியப்பட்ட.

(௧௧) மவுலி-முடி. எறி - வீசுகின்ற. ஒழுக-நீண்டு தோன்ற. அடியிடும் அளவில்-அடியெடுத்து. வைக்குங் காலத்தில். மூரலும் - ஓசையும். ஆரொலி-அரகரவென்கிற ஓசையும். அரியணை-சிங்காதனம். பொரு-பொருந்திய. உகு-சொரிகின்ற. மதலை பொருள் புலப்படாச் சொல்லையுடைய. ஆரொலியும் என்றதில் உம்கெட்டது.

## ஏழாவது: அம்புலிப்பருவம்.

(௧) நிரம்பாதகலை - குறைந்த சந்திரகலை. நிறைகலை - நிறைந்த கல்விநூல். களங்கம்-குற்றம். அருகு-பக்கத்தில். உற-பொருந்த. மான்-முயலகனென்னுமான். குறமான் - குறப்பெண். கணம் - நக்ஷத்திரம். கணத்தொகை-சிவகணத்தின் கூட்டம். கொலையாடு-கொலை செய்கின்ற. அரா - பாம்பு. வழிப்பகை - தொன்றுதொட்ட விரோதம். கோள் - வலிமை. மேகாரம்-மயில். அம்புலீ-சந்திரனே. ஆட-விளையாட. அரவின்-ஆதிசேடனாகிய பாம்பின்.

(௨) மோகமண்டலம்-மோகபூமி. தொடுத்து - ஆரம்பித்து. வடவைமுகம் - ஊழித்தீமுகத்தைப் போலும்.

மண்டலத்தழலால். (மூலாதாரத்திலுள்ள) அக்கினிமண்டலத்துத் தீயால். இனன் மண்டலத்து - (இருதய கமலத்திலுள்ள) சூரியமண்டலத்தின். ஊடு-நடுவில். சோமோதயம்-சந்திரனுதித்தலையுடைய. கிரணம்-ஒளியுள்ள. சோதி மண்டலமென - சிவமண்டலமாக. விளக்குமவர் - பிரகாசப்படுத்து மெய்ஞ்ஞானிகள். எம் மயக்கம். ஓ - நீங்கிய. பெரும்-பெருமைதங்கிய. பரத்து-பிரமத்தின். என்றுகொண்டு-என்றுநினைத்து மண்டலம் - வட்டமாகிய. நிலை - நிற்றலையுடைய. ஈடேறுவர்-கடைத்தேறுவர்.

(௩) அலம்பு-முழங்குகின்ற. கமலாலயம்-தாமரையாகிய (மூலதாரக்) கோயிலில். முகிழ்க்கும் - தோன்றும். மலர்முகமண்டலம்-விரிந்த முகத்தை யுடைய (அக்கினி) மண்டலத்துக்கு. (மேலே) படலை - பரந்தவடிவை. தள்ளி - செடுத்து. இரவிமண்டலத்தில்-சூரியமண்டலத்தில். ஒளிக்கும் - (அமாவாசிநாளில்) மறைந்திருக்கும். வான் - ஆகாயத்திலுள்ள. உடுக்கள்-நக்ஷத்திரங்கள். அடு-கொல்லுகின்ற. செருவில் யுத்தகளத்தில். உகந்த-மகிழப்பட்ட. வெளி - ஆகாயம். இனும்-இன்னமும். அதிரும்-முழங்கும். மகராழி-மகரமீன்களை யுடைய கடல்.

(௪) வெறி - வாசனை. தொடை-மாலையணிந்த. பகல்-சூரியனுடைய. உகுத்து-உதிர்த்து. வெள்ளி - சுக்கிரன். அயிராவதப்பாகன் - இந்திரன். உரு - (குயில்) வடிவம். செறி-நெருங்கிய. ஆடகத்தகட்டு-பொற்றகட்டைப் போலும். வாணி-சரசுவதி. துண்டம்-மூக்கு. ஒருவழி-ஒருஇடத்தில். படுத்தி-படச்செய்து. விட்புலவர் - தேவர்.

(௫) பணைவி-படத்தின்காடு. அறு-கெடாத. பொறி-புள்ளி. அரா-பாம்பு. அடி-அடிவயிற்றில். வை-வைக்கப்பட்ட. கோடை - மேல்காற்று. குணக்கு-கிழக்கு. கொண்டல்-கீழ்காற்று. வாடை-வடகாற்று. கொழுங்கிரை - கொழுத்த கிரணங்களை. வல்லையல்லை-வல்லமையில்லாதவனையிருக்கிறாய். (ஆதலால்) அடல்பணையும்-(அப்பாம்பைவென்று) வீரத்தை அணியும்.

(௬) படர்-விரிந்த. குண்டு-ஆழமாகிய. அளறு-சேறு. திடர் - மேடு. அந்தகாரம்-இருள். நீடி - (தாற்பரியம்) மிகுந்து. நெட்டெயிற்று-நீண்டபற்களையுடைய. ஒரு ஒப்பற்ற. மதி - அறிவு. அரு - அருமையாகிய. கடலகழியெனக்கூட்டுக.

(௭) வட்டம்-பரிவேடம். ஆகத்துள்-சரீரத்துள். வெளிவடிவு - வெள்ளியின் அழகு. வட்டமாகததுள் - வட்டமாகிய ஆகாயத்தினிடத்து உள் - (உயர்வாகக்) கருதப்படும். வெளிவடிவு-(சி)தாகாசரூபம். தரித்திடுகை-தாங்குதல், (தரிககப்பட்ட கை). மந்தாகினி-கங்கைநதி. தரங்கத்து-அலையின். வளம்-(குளிர்ந்த)மாட்சிமை, (அழகு). கணம்-நட்சத்திரம், (சிவகணம்). இரவில்-இராத்திரியில், பிக்ஷாடனரூபங்கொண்டு (யாசித்தலால்). இடபம் - இடபராசி, (இடபவாகனம்). எமம்-பொன். முட்ட-முழுதும். உரித்து-உரிமையுடைய தன்மை. மூரி-பெரிய. அரவுக்குடைதலால்-பாம்பால்தளர்தலால்) தாருகாவனத்துமுனிவர்விட்ட பாம்புவலியற்றுக்கெடுதலால்). அட்டபோகம் - எண்வகைச் செல்வம். சிவபிரானுங் குமாரக் கடவுளும்அபேதமாதலால் சிவபிரானுக்குச் சமங்கூறினர்.

(௮) மகார்-பிள்ளைகள். கரு-சூல். வாய்-பொருந்திய. கண்டல் - தாழை. விண்ட-விரிந்த. சுண்ணத்தாது -வெள்ளியமகரந்தத்தின் மணம். அலர - விரிய. கானல் - கடற்கரைச்சோலையில். தன்னிலே -குமாரக்கடவுளுடைய இடத்திலே. ஈதலால்-கொடுத்தலால். இரவு-யாசகம். இரவு-இராத்திரி. கறை - களங்கம். நிலவெறிக்கு மாதலாலிராத்திரி யில்லையெனக்கூட்டுக.

(கூ) கடியவளி - கொடிய சாற்று. உகிர்-நகம். இகல்கூர் - வலிமைமிக்க. நாளம்-தாமரைத்தண்டு. கமலயோனி-(உந்தித்) தாமரையிற்பிறந்த பிரமன். (அவ்விருவருள்) வராகமெனை - பன்றியாக. நவலயம்-பூமி. இடந்து-பிளந்து. எகினமாய்-(மற்றொருவர்) அன்னமாகி. கொழுந்திக்குடைந்து-கிண்டிக் கிளைத்து; மிக ஆராய்ந் தென்றபடி. முடிய - முடிவாக. கண்டனை - பார்த்தாய்.

(ய) மாகத்துள் - ஆகாயத்தினிடத்து. வேலை-கடல். பார்பிளக்க -பூமியைப்பிளக்கும்படி (அவ்வேலையினிடத்து) குணவரை - கீழ்த்திசை யுதயமலை. குணவரை- குணத்தையுடையவர்களை. மா-பெரிய. முகிலின் - வருணனேவிய மேகங்களால். மறையான்-மறைக்கப் படான்; அஃதாவது: நான்மாடக்கூடலான திருவிளையாடலிற் காண்க.

(யக) சுளியும்-கோபிக்கும். தூறி-ஒடித்து. பாரிசாதம்-கற்பகம். குளகு-உணவு. குதட்டி-நையமென்று. எயில்விடுகபாடம் - கோட்டையிற் பூட்டிய கதவு. தருணம்-புதுமை. இடறி-மிதித்து. முறை முறை - வரிசை வரிசையாக. அழைக்கும் - (காற்றை) வரவழைக்கும். தழை-இலைபோல் விரிந்த. துடியடி-உடுக்குப்போன்றகால். புகர்-புள்ளி. ஒருத்தல்-யானை. மிமிர்த்து-உயர்த்தி. நாகம்-பாம்பு. வெருவல - பயப்படாதே.

## எட்டாவது: சிறுபறைப்பருவம்.

(க) வாகை-வெற்றிமாலை. பூபாலர்-அரசர். அக்குரோணி-சேனையிலொருதொகை. உருத்து-கோபித்து. பற்குனன்-அருச்சுனன். பட்டவர்த்தனர்-பட்டந்தரித்துக் கொள்ளுதற்கிருக்குமரசர். மகுடவர்த்தனர்-மகுடந் தரித்த அரசர்கள். விசையம்-வெற்றி. பாங்குருதர்-அன்னியராகிய அசுரர்.

(உ) முருந்து-மயிலிறகினடிமுள். ஆரும்-பொருதும். முளரிமுகை - தாமரையரும்பு. முற்றிய-முதிர்ந்த. கருந்தாரை-பெரியகூர்மை. புகர்-உயர்ச்சி. பங்கம்-சேறு (குற்றம்). அந்தரசாரி-ஆகாயத்திற் சஞ்சரிப் புடையதாகி. திருந்தார்-பகைவர். பறைமுழக்க - பறையடிக்க; நடிக்கமெடுக்க.

(ங) மறைக்கடவுளாலயம்-நீலோற்பல மலர்கள். அனைத்தும் - எல்லாவற்றிலும். கங்குல் கருங்கடல் - இருளாகிய கரியகடல். வைகறை-விடியற்காலம். கலித்த - ஒலித்த. முழக்கும்-ஓசையும். தேறல்-தேனை. சஞ்சரீகப்படலை - வண்டுக்கூட்டம். முழக்கும்-ஒலிக்கின்ற ஓசையும். முடக்கும் - வளைக்கும். பிளிறி-வீறிட்டு. முழக்கும்-(ஒலிக்கின்ற) ஓசையும். வெறி-வட்டவடிவாகிய. குண்டு அகழியில்-ஆழமாகிய கிடங்குகளில். முழக்கும்-ஓசையும் (உடைய).

(ச) குலம்-கூட்டமாகிய. கடவுள்-இந்திரன். சட்டு அவிழ்த்து-முறுக்கு விடுபட்டு. உடைக்கும் - நெகிழ்க்கும். குளிறும்-ஒலிக்கும். பொம்மென - விரைவாக. திண்டிமம்-ஒருவகை மங்கலவாத்தியம்.

(ரு) வரைவாய் - மலையினிடத்து. கடா-மதம். வேய்-மூங்கில். வராகம்-பன்றி. அண்டர்-இடையர். புறவில்-முல்லைநிலத்தில். உந்தி - காட்டாறு. மள்ளர்-உழவர். மருதவேலி-மருதநிலத்து வேலியாயிருக்கிற. கான்ற-கக்கிய. கொழித்து-ஒதுக்கி.

(சூ) முளரி- தாமரைப்பூ. பிணைமான். சக்கோரம் - சக்கரவாகப் பறவை. குழை-காதில். மடவார்-பெண்களுக்குள். நினைவு - நினைதலுடைய. ஆளை-மனிதரை. முறுவலாடி-புன்சிரிப்புச் செய்து. நெய்தல்-நெய்தற்பூ. அளக்காடவி-கூந்தலாகிய காடு. பிணித்து-கட்டி. நாள்-நல்லநாளில். முடி-

நாற்றமுடியை. விளம்பி - (தெய்வவணக்கம்) கூறி. பொலிவாளை - விளங்குகின்றவளை. நாடி - விரும்பி. விளை- (உப்பு) விளைகின்ற. போம்கழி - நீண்ட உப்பங்கழிநிலத்தை. சக்கரவாகப் பறவையைக் கண்ணுக்கு ஒப்பாக்கிய து புதியன புகுதல.

(எ) அறம்சரு - தருமத்தைச்செய்கின்ற. ஆடும் - விளையாடும். சிற்றில்- சிறுவீடு. கழங்கு-கழற்சிக்காய். தடம்- விசாலமாகிய. புறம்-வெளியில். புனிற்று-இளமையுடைய. அலைவாய்-திருச்செந்தூர். திருவாவினன்குடி-பழநி. ஏரகம்-சாமிமலை. குறம்கரு-குறிசொல்லுகின்ற. கொடிச்சியர்-குறத்திகள். குரவை-குலவை. கொண்மூ - மேகம். கடாம்-மதம். பிளிறும் அரவம்-ஒலிக்கும் ஓசை. புரந்த-காத்தருளிய.

(அ) மட்க-மழுங்க. குழை -காதுகளை. பிடித்த-பற்றிய. நடம்-நடனம். மகபதி-இந்திரன். விப்பர்-பிராமணர். புரவலர்-அரசர்.

(கூ) தவனன் - சூரியன். வலமுறையில் - வலப்பிரதக்ஷணஞ் செய்யுமுறையாக. வட்டமிடு-சுற்றிவருகின்ற. சருணம்-புதுமை. வடவெற்பு-மகாமேருமலை. தமரம்-பேரொலி. திமிரத்துமிதம்-கனத்த நீர்த்துளி. சலதி- கடல். ஒக்க -ஒருமிக்க. உரசன்-ஆதிசேடனாகிய பாமபு. புணிரி - கடல். உருமு- இடி. வெட்கியிட - வெட்கப்பட. பவனனும்-வாயுவும். படகம்-ஒருவிதவாச்சியம். துழனி-ஒலி.

(ய) சகரசலதி - சகரராலே தோண்டப்பட்ட கடல். சருவிய-மருவிய. அகரவுகரம்-ஓங்காரமாகிய பிரணவம். அடைவு-அமைதி. சிவா - சிவமாகிய. பரவெற்பில்- திருப்பரங்குன்றத்தில்.

—ooXoo—

## ஒன்பதாவது: சிற்றிற்பருவம்.

(க) பொன்னின் - பொன்போல; அருமையாக வென்றபடி. புடை-பக்கம். புறக்கோட்டு அகம்-பக்கத்திலே வளைந்த சிறுவீடு. தூதைக்கலம்-சிறு முட்டியாகிய பாத்திரம். கன்னி-இளமை; புதுமை. உலை - உலைநீர் (ஆக). கழை -கரும்பின். நித்தில வல்சியை- முத்தாகிய அரிசியை. பன்னி - பன்னீர். அடும்- சமைக்கும். அயிராவதப் பாகன்-இந்திரன். சிதையேல் - அழியாதே.

(உ) தையல்-அழகு. வண்டல்-விளையாடலாகிய சிறுவீட்டை. உறுத்தி- அழுத்தப்பட்டு. தடியாதோ-தடிப்படையாதோ. பாவை-பார்வதியம்மை. செறியாதோ-நெருங்காதோ.

(௩) தௌவும்- தத்தும். கடாம்- மதம். தந்திப்பகடு-தந்தியாகியயானை; அயிராவதம். பிடிபட்டு-பகைவர்கையிலகப்பட்டு. எவ்வம்-துன்பம். அயிராணி-இந்திராணி. பௌவம் -நீர்க்குழி. துயராழி- துன்பக்கடலில். பழுவத்து- (தாற்பரியம்) ஆழத்தில். தெவ்வர்புரம் - சூராகிய பகைவர் பட்டினம்.

(௪) அருணன்-சூரியன் தேர்ச்சாரதி. அகலிடம் - விரிந்த இடமாகிய ஆகாயம். கூடார்- பகைவர். குழாம்- கூட்டமாக. வண்டல்-விளையாட்டாக. இழைத்த-செய்த. அழிக்கை - அழித்தல். சிறியேம் - சிறுபிள்ளைகளாகிய எங்கள்.

(௫) திகிரிவாளகிரி - சக்கரவாள மலையாகிய. மாகமுகிலை - ஆகாயத்திலுள்ள மேகத்தை. விதானம் - மேற்கட்டி. சிற்றில்-சிறுவீடு. பெருமாட்டி-உமாதேவி.

(௬) தால் உமைத்து - தாலாட்டி- நிலவை - சந்திரனை. நித்தல் - தினந்தோறும். குலையேம் - தவறமாட்டோம். பிஞ்சு மதியின் -பிறைச் சந்திரன் போலும். கவுள்- கன்னத்தில். சுவடு [illegible] [illegible]

செருக்கினையுடைய. நால்வாய்-தொங்கியவாய். அஞ்சு கரம் - ஐந்துகை. அழியேல்-அழியாதே.

(எ) குண்டு - ஆழமாகிய. அகழ் - தோண்டப்பட்ட. மடுவில் - கடலில். தொல்லைப்பதி- பழையபட்டினம். துய்த்த-அநுபவித்த. வளமும் - செல்வமும். வேதா-பிரமன். விதிப்படியை- சிருட்டித்தன்மையை. அளித்தாய் - கொடுத்தாய். கன்றும்-வாடும். கட்டு- பெருமை. பொருது வென்று எனக் கூட்டுக.

(அ) விளிப்பார் -ஒருவரையொருவரழைப்பார். அங்குரித்த-முளைத்த. வேடப்பலிப்பை-வேஷத்தின் வாய்ப்பை. துளிப்பார்-கண்ணீர்த்துளிசெய்வார். தோற்றம்-சிருட்டி. ஒடுக்கம்- சங்காரத்துக்கு. அளிப்பாய்-காப்பாயாகிய (நீ). அழிக்கை - (எங்கள் சிறுவீட்டை) அழித்தல். கடன்-முறை.

(கூ) பரிந்து- அன்புற்று. முலைத்தாயர் - முலைப்பால்கொடுக்குந் தாய்மாராகிய ஆறு பெண்கள். குடுமிதிருத்தி - குடுமியைத் திருத்தமாகமுடித்து. கோலம்புனைந்து - அழகுசெய்து. கொண்டாடி - பாராட்டப்பெற்று. வண்டல்-மகளிர் விளையாட்டு. எயிலிற்புறத்தில்-மதிற்பகத்தில். தோட்டுஇதழ்-தோடாகிய இதழ். கண்ணி - மாலை. ஒச்சி-எறிந்து. கானல்-கடற்கரைச்சோலையில்.

(௰) கலன்-ஆபரணம். மறுகு-வீதி. கடனும் - முறையும். பாலை-பருக்கைக்கல்லை. கொழித்து-ஒதுக்கி. எடுத்து-(முத்துக்களை) வாரி.

---

பத்தாவது: சிறுதேர்ப்பருவம்.

(க) சதக்கிருது - இந்திரன். தருணம்-இளமை. மாதலி-இந்திரன் தேர்ச்சாரதி. உட்க-அஞ்ச. பரப்பு-பரந்ததாகிய பூமி. வடபூதரம்- மகாமேருமலை. வீறு-பெருமை. வில்-ஒளி. பரிவேடம்-ஒளிமண்டலமாகிய பரிவேடம். துளக்க-அசைய. அருண அருணன்-சிவந்த சூரியன்.

(உ) முடை - ஒருவித நாற்றம். பொதுவியர்-இடைச்சியர். பாராமல்- ஆலோசியாமல். சகடு - வண்டிவடிவமாய்வந்த அசுரன். ஆநாமை-அடங்காமை. நிசாசரர்-அசுரர். சிரக்குவடு-தலையாகிய மலைகளை.

(ங) கொந்து அவிழ் -பூங்கொத்துகள் மலர்கின்ற. மலயம் -பொதிகை. குடுமி-உச்சி. ஆடகம்-பொன். அரை- அடிப்பக்கம். பொதும்பர்-சோலை. முளி-விளைந்து முற்றிய. கறித்து-கடித்துண்டு. முலைசெறிக்கும்-பால்பொழுக்கும். புனிற்று- இளமையுடைய. பாந்தவழி-விரிந்த இடங்கள். எருமைவாயில் செந்தமிழ் மணத்தலாவது-செவ்விய இனிமை மணத்தலாம்.

(ச) மரபு-முறை. அதனின்-அவ்வுயிரின். நான்-ஆன்மா. லீலை-விளையாட்டு. இரவுபகல் அற்ற இடம்-மோக்ஷத்தானத்தை. ஒப்பிவித்து-சேரச்செய்து.

(௬) வித்தக - நன்மை யுடையவனே. போகபூஷண்- போகத்தையாபரணமாகவுடையவனே. சலம் - தணியாக்கோபம். குலாந்தக - குலத்துக்கு யமனையுள்ளவனே. கண்டீரவ-சிங்கம்போன்றவனே. புருகூதன்- தேவேந்திரன். உரகநாயகன்-ஆதிசேடன். பன்றலை பலதலை. சாதி-உயர்ந்த. ஓதிமம்-அன்னம்.

(அ) விரைத்தடம்- வாசனையுள்ள விசாலமாகிய. பொழில்-சோலைசூழ்ந்த. வரை-கயிலாசமலையில். போற்றி- துதிக்கப்பட்டு. வரைத்தடம்-மூங்கிலையுடைய மலை. புரை-ஒத்த. இசைத்த- முழங்கப்பட்ட இது-இப்பிரணவம்.

(கூ) நாயகம்-தலைமை. பொருப்பு நாயகன்-சிவபிரான்.

(ய) தானநாயகர்- தெய்வலோகத்தில் தலைமைவாய்ந்த இந்திரன் முதலியோர். எண் முதலிமையோர்-அட்டதிக்குப்பாலகர். தேவர் திருமேனி - கடவுளர் திருமேனிக்கு. மாலிகை - பூமாலை.

## திருச்செந்தூர்ப் பிள்ளைத்தமி ழரும்பதவுரை

முற்றிற்று.



இவ்வரும்பதவுரை யெழுதியவர்

மதுரைத் தமிழ்ச்சங்க வித்துவான்

ஸ்ரீ மு. ரா. அருணைசலக்கவிராயர்.

# பிழைதிருத்தம்.

அச்சேழுந்துப் பதியானம ிஞலே சிலபுள்ளிகள் தோன்றுமலிருத்தலே ஈண்டெடுத்துக் காட்டவில்லே. போருள்நோக்கிக் கண்டு கோள்க.

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| 3 | 13 | 3 | காற | கார |
| ,, | 14 | 4 | தந்த | தந்தி |
| 20 | 24 | 1 | கரணி | கரிணி, இங்கனம்வரு மிடந்தோறுங்கொள்க. |
| 24 | 58 | 2 | ருதை | குதை |
| 25 | 67 | ,, | கியே | குமே |
| 26 | 71 | 1 | யெடுத்த | யெடுத்து |
| ,, | 2 | 2 | மானமு | தானமு |
| 27 | 9 | 1 | ந்துற் | வுற் |
| ,, | 10 | 1 | ஞர்சு | னற்சு |
| ,, | ,, | 4 | வால் | தால் |
| 28 | 14 | 1 | சுந்தர | சுந்தரி |
| 30 | 12 | ,, | தேவரு | தேவக |
| 31 | 23 | 2 | றலேகொ | றலேக்கொ |
| 32 | 29 | 1 | யாவு | யரவ |
| ,, | 30 | ,, | ராடு | சூடு |
| 33 | 32 | 2 | பகப்பூ | பகம்பூ |
| 35 | 47 | 1 | லேந்து | னமைந்து |
| 37 | 64 | 2 | சொடை | குடை |
| 50 | 7 | 4 | தேற்றி | தேறி |
| ,, | 11 | 2 | பசைத் | பதைத் |
| ,, | ,, | 5 | நடந்து | கொண்டு |
| 56 | 53 | 4 | சருப்பு | கறுப்பு |
| 62 | 9 | ,, | கய | சைய |
| 64 | 19 | ,, | ராம | ராமா |
| 69 | 60 | 2 | யாய்த் | யாய்ச் |
| 70 | 72 | 3 | ராம | ராமா |
| 71 | 75 | 4 | தசெத்ழுமுமு | கெழூஉமுத் |
| ,, | ,, | ,, | லோன்தலேயேக | தலேவேலோன் |
| 78 | 11 | 3 | வெல்வ | வெவ்வ |
| 78 | 16 | 4 | துள்ள | துள்ளே |
| ,, | 20 | 2 | சட்ச | உடச |
| 92 | அத்திபாயம் | 1 | மூன்ரு | ஞலா |
| 93 | 7 | 3 | விளேந்த | விழைந்த |
| 98 | ,, | ,, | னருள | னருணா |

| | | | | |
|---|---|---|---|---|
| 105 | 45 | 1 | வரள்பும் | வரம்புள் |
| 107 | 62 | 3 | ப்பரி | ப்பக் |
| 121 | 20 | 2 | கூாம | கூர்ம |
| 126 | 60 | 3 | மயிற் | மயிர்க் |
| 128 | 77 | 1 | கார்ப | சார்ப் |
| 131 | 93 | 4 | லைய்ய | லைய |
| ,, | 95 | 3 | மிசை | மிசைத் |
| 132 | 101 | 1 | யோர்ர் | யோர் |
| 135 | 11 | 3 | துவசம்- | துவசம்; |
| 138 | 31 | 2 | உருவம் | உரும் |
| 147 | 60 | 2 | மகிழ்ந்தது | மகிழ்ந்து |
| 148 | 16 | 1 | பாக | யாக |
| 151 | 12 | 2 | சிறிமை | சிறுமை |
| 152 | 10 | 3 | அறையா ... தான். | |
| 153 | 32 | 4 | வன்ளி | வள்ளி |
| 155 | 77 | 2 | கியை | கிய |
| ,, | 88 | 1 | வான்-அரசு | வான்அரசு- |
| ,, | ,, | 2 | யம்- | யம். |
| 156 | 4 | 6 | வென்ணி | வெண்ணி |
| 159 | 65 | 3 | துவுமன் | துமன் |
| 160 | 84 | 1 | சந்தி | சந்நி |
| 178 | 23 | 4 | தால் | தலாஸ் |
| 181 | 66 | 4 | யௌன | யௌவன |
| 184 | 104 | 1 | கணம் | கனம் |
| 185 | 1 | 2 | தேர் | தேர |
| ,, | 3 | 3 | பாகங் | பாகக் |
| 190 | 1 | 2 | மிழிந்த | மிழ்ந்த |
| ,, | ,, | 8 | திறை | திரை |
| 195 | 4 | 1 | லுத்தி | லுததி |
| 196 | 10 | 4 | வேல் | மேல் |
| 200 | 1 | 1 | தெரிய | தெறிய |
| ,, | 4 | ,, | காண்ற | கானற் |
| 202 | 10 | 4 | கவிர்ப் | கவிர்ப்பூ |
| 205 | எட்டிங் | 1 | வார | வாரா |
| 206 | 1 | 2 | குறை | குற |
| ,, | ,, | 5 | லமுத் | லமுத |
| 208 | 8 | 6 | தீயுமி | நீயுமி |
| 216 | 4 | 5 | திரை | தரை |
| 223 | 7 | 5 | னுக்கு | னுக்கு |
| 227 | 13 | 2 | யிலொ | யிலொ |
| ,, | 20 | 1 | ருத்ரதி | ருத்திர |
| 240 | 7 | 2 | கிய | ழுகிய |
| 242 | 13 | 2 | தலைவின் | தலைவியின் |
| 243 | எட்டிங் | 1 | லர்தாதி | ற்சலம்பகம் |
| 245 | | 2 | தலைவீ ... ஞிளத்தல் | தலைவி ... கிளத்தல் |
| ,, | | ,, | ஆசீத்ய | ஆசிரியத் |

| | | | | |
|---|---|---|---|---|
| 256 | 64 | 1 | விழ | விழி |
| ,, | 66 | 2 | சொல | செல |
| ,, | 67 | 1 | நெருங்கு | விரும்பு |
| 259 | 74 | 1 | ரபிர | யிரா |
| 264 | 95 | 2 | விளங்கிய | காட்டாறு |
| ,, | 96 | ,, | க-பெற் | க-விளங்கியபெற் |
| 270 | 10 | 2 | டைதல்- | டைதல். |
| 276 | 74 | 1 | நாதத் | நாததத் |
| 281 | | 7 | வருணங் | வருங் |
| 285 | 1 | 15 | தாமயி | தாயி |
| 286 | 2 | 3 | அசவ | அவச |
| 287 | | 7 | விலில் | வில் |
| 291 | | 12 | யினிடை | யிடை |
| ,, | | 22 | நிருவி | நிருதி |
| 293 | 8 | 6 | புசத | புகத்த |
| 297 | 12 | 5 | திர்த் | திறக் |
| 302 | 17 | 13 | ம்பர | ம்பா |
| 303 | 19 | 3 | ரமன் | மான் |
| 306 | 22 | 6 | பெண் | ப்பெண் |
| 318 | 35 | 12 | மனி | மணி |
| 321 | 38 | ,, | தண்டக | தண்க |
| 322 | 39 | 5 | பள் | வள் |
| 330 | 47 | 9 | டமிழ்சொ | டமிழ்ச்சொ |
| 331 | 48 | 6 | வீழ் | வீழ |
| 344 | 62 | 4 | பூகங் | பூகந் |
| 356 | 80 | 6 | ந்துங் | ந்துக் |
| 360 | 84 | 3 | சூரை | சூறை |
| 366 | | 23 | தக்தர | தந்திர |
| 376 | | 19 | திரும்பு | திருப்பு |
| 380 | 12 | 5 | ஒகர | ஒகர |
| 381 | 19 | 3 | மன்மக் | மன்மக |
| 383 | 26 | 2 | எண்ணி | எண்ணு |
| 384 | 32 | 2 | மான் | மாட் |
| 385 | | 20 | என்தா | உன்தா |
| 387 | 45 | 1 | லர்மர் | லர்மா |
| 394 | | 17 | கொடு | கோடு |
| ,, | 75 | 1 | கைக்கொ | கைகொ |
| ,, | ,, | ,, | கைப்பற்றி | கையால் |
| 400 | 102 | 1 | அத்த | ஒத்த |
| 403 | 2 | 9 | விரிங் | வரிந் |
| 404 | | 3 | யௌன | யௌவன |
| 405 | 3 | 10 | பிழக்த | பிளந்த |
| 416 | 1 | 1 | வதுந்த | வருந்த - |
| ,, | 5 | 5 | ஒப்பி | ஒப்பு |
| ,, | 6 | 6 | பூஷன் | பூஷண |